மாகச் செலுத்தீர்களாக, ஏனெனில் அதுகளின் கேடும் பழுதும் அதுகளிலிருக்குது, அதுகள் உங்களுக்காகப் பிரியமாயிருப்பதில்லையென்று சொல்லென்றார்.

௨௬. பின்னையுங் கற்தர் மோசேயோடே பேசிச்சொன்னதாவது:

௨௭. ஒருகன்று, அல்லது ஆட்டுக்குட்டி அல்லது வெள்ளாட்டுக்குட்டி பிறந்தால் அது ஏழுநாள் தன் தாயின் கீழிருக்கக்கடவது, எட்டாம் நாள்முதல்க்கொண்டு அது கற்தருக்குத் தகனக் காணிக்கையாகச் செலுத்தப்பட்டப் பிரியமாயிருக்கும்.

௨௮. மாட்டையும் அதின் கன்றையும் அல்லது ஆட்டையும் அதின் குட்டியையும் ஒரேநாளிலே குரவறுக்கீர்களாக.

௨௯. இஸ்தோத்திரப் பெலியைக் கற்தருக்குச் செலுத்தினீர்களானால், உங்கள் மனட்பூறுவத்தால் அதைச் செலுத்துவீர்களாக.

௩௰. அந்நாளிலேதானே அது போசிக்கப்படுவதாக, விடியக்காலமட்டும் நீங்கள் அதிலொன்றும் மீதியாக வைக்கவேண்டாம்; நாம் கற்தர்.

௩௧. நமது கற்பினைகளைக் கைக்கொண்டு அதுகளின்படி செய்யக்கடவீர்கள்; நாம் கற்தர்.

௩௨. நாம் இஸ்றவேல்புத்திரர் நடுவே பரிசுத்தமாகப்பட நம்முடைய பரிசுத்த நாமத்தைப் பரிசுத்தக்குலைச்சலாக்காதிருப்பீர்களாக. நாமுங்களைப் பரிசுத்தமாக்கிற கற்தர்.

௩௩. நாம் உங்களுக்குப் பராபரனாயிருப்பதற்காக உங்களை எயிப்த்துத்தேசத்திலிருந்து புறப்படப்பண்ணினவர்; நாம் கற்தரென்று சொல்லென்றார்.

## ௨௩. அதிகாரம்.

பரிசுத்தப் பண்டிகைகளின் கட்டளை.

பின்னையுங் கற்தர் மோசேயோடே பேசிச்சொன்னதாவது:

௨. நீ இஸ்றவேல்புத்திரரோடே பேசிச்சொல்லவேண்டியதேதெனில், சபைகூடிவந்து பரிசுத்தநாள்களாக ஆசரிக்கும்படிக்கு நீங்கள் கூறவேண்டிய கற்தருடைய பண்டிகைநாள்களாவது:

௩. ஆறுநாள் வேலை செய்யப்படுவதாக, ஏழாம்நாளோவெனில் சபைகூடும் பரிசுத்த ஓய்வுநாள்; அதிலொருவேலையையுஞ் செய்யீர்களாக, அது உங்கள் வாசஸ்தலங்களிலெல்லாங் கற்தருக்கென்று ஓய்ந்திருக்கும் நாளாயிருப்பதாக.

௪. சபைகூடிவந்து பரிசுத்தமாய் ஆசரிக்கும்படிக்கு நீங்கள் திட்டமான காலத்திலே கூறவேண்டிய கற்தரின் பண்டிகைகளேதுகளெனில்,

௫. * முதலாம் மாதம் பதினாலாந்தேதி அந்திநேரமாகிற வேளையிலே கற்தருக்குப் பஸ்காவும்,

* ௨. மோசே. ௰௨, ௰௮.

௬. அந்த மாதம் பதினைந்தாந்தேதியிலே கற்தருக்குப் புளிப்பில்லா அப்பங்களின் பண்டிகையுமாயிருக்கும், ஏழுநாள் புளிப்பில்லா அப்பங்களைப் போசிப்பீர்களாக.

௭. முதலாம்நாள் உங்களுக்குச் சபைகூடும் பரிசுத்தநாள், அதிலேயாதொரு பணிவிடை வேலையைச் செய்யீர்களாக.

௮. ஏழுநாளுங் கற்தருக்குத் தகனஞ்செலுத்தக்கடவீர்கள். ஏழாம்நாள் சபைகூடும் பரிசுத்தநாள், அதில் யாதொரு பணிவிடை வேலையைச் செய்யீர்களாகவென்று சொல்லென்றார்.

௯. பின்னையுங் கற்தர் மோசேயோடே பேசிச்சொன்னதாவது:

௰. நீ இஸ்றவேல்புத்திரரோடே பேசிச்சொல்லவேண்டியதேதெனில் நாமுங்களுக்குக் கொடுக்குந் தேசத்தில் நீங்கள் வந்து அதின் வெள்ளாமையை அறுக்கும்போது, உங்கள் அறுப்பின் முதல்ப்பலனாகிய ஒரு கதிர்க்கட்டை யாசாரியனண்டை கொண்டுவரக்கடவீர்கள்.

௰௧. உங்கள்மேலே பிரியமுண்டாக ஆசாரியன் அந்தக் கதிர்க்கட்டை ஓய்வுநாளுக்குப் பின்னான மறுநாளிலே கற்தருக்கு முன்பாக அசைவாட்டுவானாக.

௰௨. நீங்கள் அதை யசைவாட்டுகிற அந்நாளிலே கற்தருக்குச் சறுவாங்கத்தகன பெலியாக ஒருவயதான பழுதற்ற ஒரு ஆட்டுக்குட்டியையும்,

௰௩. கற்தருக்கு ஆற்றுகிற வாசனையான தகனமாக ஒருமரக்காலிலே பத்திலிரண்டு பங்கான தும்மெண்ணெயிலே பிசைந்ததுமான மெல்லியமாவாகிய அதின் காணிக்கையையுந் திறாட்சிப்பழரசத்திலே காற்படியாகிய அதின் உள்றூற்றுதலையுஞ் செலுத்தக்கடவீர்கள்.

௰௪. உங்கள் பராபரனுடைய காணிக்கையை நீங்கள் கொண்டுவரும் அந்நாள்மட்டும் அப்பமுங் சுட்

டக்கதிரும் பச்சைக்கதிரும் பொசியீர்களாக. இது உங்கள் வாசஸ்தலங்களிலெல்லாம் உங்கள் தலைமுறைகளுக்குச் செல்லும் நித்திய கட்டளை.

௰௫. நீங்கள் அசைவாட்டுங் கதிர்க்கட்டைக் கொண்டுவந்த ஓய்வுநாளுக்குப் பின்னான அந்த மறுநாள் முதல்கொண்டு எண்ணத் துவக்கி, ஏழு வாரங்களைச் சரியாய்ப் போகவிட்டு,

௰௬. ஏழாம் ஓய்வுநாளுக்குப் பின்னான மறுநாளாகிய ஐம்பதாம் நாள்மட்டும் எண்ணி, கர்த்தருக்குப் புதுக்காணிக்கையைச் செலுத்தக்கடவீர்கள்.

௰௭. நீங்கள் ஒருமரக்காலிலே பத்திலிரண்டு பங்காகிய மெல்லிய மாவிலே புளிப்பாய்ச் சுட்ட அசைவாட்டுங் காணிக்கையாயிருக்கிற இரண்டு அப்பங்களையுங்கள் வாசஸ்தலங்களிலிருந்து கர்த்தருக்கு முதல்பலனாகக் கொண்டுவந்து,

௰௮. அப்பத்தோடே கூடக் கர்த்தருக்குச் சர்வாங்கத் தகனப்பலியாக ஒருவயதான பழுதற்ற ஏழு ஆட்டுக்குட்டிகளையும் ஒரு காளையேருதையும் இரண்டு ஆட்டுக்கிடாய்களையும், கர்த்தருக்காற்றுகிற வாசனையான தகனமாக அதுகளுக்கடுத்த காணிக்கைகளையும் ஊற்றுதல்களையுஞ் செலுத்தி,

௰௯. வெள்ளாடுகளில் ஒருகிடாயைப் பாவம் போக்கும் பலியும், ஒருவயதான இரண்டு ஆட்டுக்குட்டிகளைச் சமாதான பலியுமாக்கக்கடவீர்கள்.

௨௰. அதுகளை ஆசாரியன் முதல்பலனாகிய அப்பத்தோடும் இரண்டு ஆட்டுக்குட்டிகளோடுங் கூடக் கர்த்தருக்குமுன்பாக அசைவாட்டக்கடவான். கர்த்தருக்குப் பரிசுத்தமாகிய அதுகள் ஆசாரியனுடையதாம்.

௨௧. அந்த நாள்தானே உங்களுக்குச் சபைகூடும் பரிசுத்த நாளென்று கூறக்கடவீர்கள், யாதொரு பணிவிடை வேலையையதிலே செய்யீர்களாக. இது உங்கள் வாசஸ்தலங்களிலெல்லாம் உங்கள் தலைமுறைகளுக்குச் செல்லும் நித்திய கட்டளை.

௨௨. * உங்கள் தேசத்தின் வெள்ளாண்மையை நீங்கள் அறுக்கையில் உன் வயலின் ஓரத்திலிருக்கிறதைத் தீர அறுக்காமலும், சிந்திக்கிடக்கிற கதிர்களைப் பொறுக்காமலும், எளியவனுக்கும் பரதேசிக்கும் அதுகளை விட்டுவிடுவாயாக. நாமுங்கள் பராபரனாகிய கர்த்தரென்று சொல்லென்றார்.

* ௰௯, ௯.

௨௩. பின்னையுங் கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதாவது:

௨௪. நீ இஸ்றவேல் புத்திரரோடே பேசிச் சொல்லவேண்டியதேதெனில், உங்களுக்கு ஏழாம் மாதம் முதல்நந்தேதி கெம்பீர பிறஸ்தாபத்தின் பண்டிகையென்ற சபைகூடும் பரிசுத்த ஓய்வுநாளாயிருப்பதாக.

௨௫. அதிலே யாதொரு பணிவிடை வேலையைச் செய்யாமல், கர்த்தருக்குத் தகனஞ் செலுத்துவீர்களாகவென்று சொல்லென்றார்.

௨௬. பின்னையுங் கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதாவது:

௨௭. அந்த ஏழாம் மாதம் பத்தாந்தேதியோவென்றால் உங்களுக்குப் பாவநிவிறுதியாகுதலின் நாளுஞ் சபைகூடும் பரிசுத்த நாளுமாயிருக்கும். அப்போ நீங்கள் உங்கள் ஆத்துமங்களைத் தாழ்மைப்படுத்தி, கர்த்தருக்குத் தகனஞ் செலுத்தக்கடவீர்கள்.

௨௮. ஆகையால் அந்நாளிலே யாதொரு வேலையுஞ் செய்யீர்களாக, ஏனெனில் துவுங்கள் பராபரனாகிய கர்த்தரின் சன்னிதியில் உங்களுக்காகப் பாவநிவிறுதி செய்யப்படும் நாளாயிருக்குது.

௨௯. அந்நாளிலே தன்னைத் தாழ்மைப்படுத்தாதவனெந்த ஆத்துமாவுந் தன் சனத்தாரிலிராதபடிக்கு அறுப்புண்பான்.

௩௰. அந்நாளிலே யாதொரு ஆத்துமா யாதொரு வேலையைச் செய்தால் அந்த ஆத்துமாவை அவன் சனத்தின் நடுவிலே வைக்காமல் அழிப்போம்.

௩௧. நீங்கள் எந்த வேலையுஞ் செய்யாதிருப்பது உங்கள் வாசஸ்தலங்களிலெல்லாம் உங்கள் தலைமுறைகளுக்குச் செல்லும் நித்திய கட்டளை.

௩௨. அது உங்களுக்கு ஓய்வுக்கோய்வுநாள், அதிலே உங்களாத்துமங்களைத் தாழ்மைப்படுத்தக்கடவீர்கள். அந்த மாதத்தின் ஒன்பதாந்தேதி சாயுங்கால் துவக்கி மறுசாயுங்காலமட்டும் உங்கள் ஓய்வை ஆசரிக்கக்கடவீர்களென்றார்.

௩௩. பின்னையுங் கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதாவது:

௩௪. நீ இஸ்றவேல் புத்திரரோடே பேசிச் சொல்லவேண்டியதேதெனில், அந்த ஏழாம் மாதம் பதினைந்தாந்தேதி கர்த்தருக்கு ஏழுநாளாய் ஆசரிக்குங் கூடாரப்பண்டிகை.

௩௫. முதலாம் நாள் சபைகூடும் பரிசுத்த நாள், யாதொரு பணிவிடை வேலையைச் செய்யீர்களாக.

௩௬. ஏழு நாளுங் கர்த்தருக்குத் தகனஞ் செலுத்தக்கட

தக்கட

த்தக்கடவீர்கள். எட்டாம் நாளும் உங்களுக்குச் சபைகூடும் பரிசுத்த நாள், அதிலே கர்த்தருக்குத் தகனங்களைச் செலுத்தக்கடவீர்கள். அது ஆசரிக்கப்படும் நாள், அதிலே யாதொரு பணிவிடை வேலையைச் செய்யாதிருப்பீர்களாக.

௩௭. நீங்கள் கர்த்தருடைய ஓய்வு நாட்களிலே செலுத்துவதல்லாமலும், நீங்கள் கர்த்தருக்குப் படைக்கிற உங்கள் எல்லாக் காணிக்கைகளும் பொருத்தனைகளும் உச்சாயப் பலிகளுமல்லாமலும்,

௩௮. நீங்கள் அந்தந்த நாளுக்குத் தக்கபடி கர்த்தருக்குச் சர்வாங்கதகனங் காணிக்கைப் பலி உள்ளிறுதல்களும் முதலான தகனங்களைச் செலுத்தும்படிக்குச் சபைகூடி வந்து பரிசுத்தமாய் ஆசரியத் தக்கதாக நீங்கள் கூற வேண்டிய கர்த்தருடைய பண்டிகைகள் இதுகள்தானே.

௩௯. நிலத்தின் பலனை நீங்கள் சேர்த்திருக்கும் ஏழாம் மாதம் பதினைந்தாந் தேதியிலே வெனாருல் கர்த்தருடைய பண்டிகையை ஏழுநாளாக ஆசரிக்கக்கடவீர்கள். முதலாம் நாளிலும் ஓய்வு எட்டாம் நாளிலும் ஓய்வு.

௪௰. முதலாம் நாளிலே அலங்கார விருட்சங்களின் கனிகளையும் பேரீச்சை மட்டைகளையும் தழைத்திருக்கிற விருட்சங்களின் கிளைகளையும் ஆற்றலரிகளையுங் கொண்டுவந்து, உங்கள் பராபரனாகிய கர்த்தருக்கு முன்பாக ஏழுநாள் மகிழ்ச்சியாயிருந்து,

௪௧. வருஷந்தோறும் ஏழுநாள் கர்த்தருக்கிந்தப் பண்டிகையை யாசரிக்கக்கடவீர்கள். இது உங்கள் தலைமுறைகளுக்குச் செல்லும் நித்திய கட்டளை. ஏழாம் மாதத்தில் அதை யாசரிக்கக்கடவீர்கள்.

௪௨. நாம் இஸ்ருவேல் புத்திரரை யெகிப்துத் தேசத்திலிருந்து புறப்படப்பண்ணின போது அவர்களைக் கூடாரங்களிலே குடியிருக்கப்பண்ணினதை உங்கள் தலைமுறை தலைமுறையாய் அறியும்படிக்கு,

௪௩. ஏழுநாள் கூடாரங்களிலே குடியிருக்கக்கடவீர்கள் இஸ்ருவேலிலே பிறந்தவர்களெல்லாருங் கூடாரங்களிலே குடியிருப்பார்களாக. நாமுங்கள் பராபரனாகிய கர்த்தரென்று சொல்லென்றார்.

௪௪. அப்படியே மோசே கர்த்தருடைய பண்டிகைகளின் வர்த்தமானத்தை இஸ்ருவேல் புத்திரருக்குச் சொன்னான்.

௨௪. அதிகாரம்.

பொன்னான குத்துவிளக்கையுந் தெய்வசமுகத்தப்பங்களையுங் குறித்து இட்ட கட்டளைகள்.

பின்னையுங் கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதாவது:

௨. குத்துவிளக்கிலே எப்போதும் வெளிச்சமேற்றும்படிக்கு இஸ்ருவேல் புத்திரர் இடித்துப் பிழியப்பட்ட தெளிவான ஒலிவெண்ணெயை உன்னண்டைக்குக் கொண்டுவர, அவர்களுக்குக் கற்பி. * ௨. மோசே. ௨௭, ௨௰.

௩. ஆசரிப்புக் கூடாரத்திலே சாட்சியின் திரைக்கு வெளிப்புறமாக ஆரோன் அதை யெப்போதுஞ் சாயுங்கால் துவக்கி விடியற்காலமட்டுங் கர்த்தருக்கு முன்பாக எரியவைக்கக்கடவான், இதுவுங்கள் தலைமுறைகளுக்குச் செல்லும் நித்திய கட்டளை.

௪. அவனெப்போதுங் கர்த்தருக்கு முன்பாகச் சுத்தமான குத்துவிளக்கின் மேலிருக்கிற விளக்குகளை யெரியவைக்கக்கடவான்.

௫. மெல்லிய மாவை வாங்கி அதைப் பன்னிரண்டு அப்பங்களாகச் சுடுவாயாக, ஒவ்வொரு அப்பம் மரக்காலிலே பத்திலிரண்டு பங்குமாவினாலே செய்யப்படுவதாக.

௬. அதுகளை நீ கர்த்தருக்கு முன்பாகச் சுத்தமான மேசையின் மேல் இரண்டு அடுக்காக, ஒவ்வொரு அடுக்கில் அவ்வாறு இருக்கும்படிக்கு, வைத்து,

௭. ஒவ்வொரு அடுக்கினிடத்திலே சுத்தமான குந்திரிக்கம் போடக்கடவாய், அது அப்பத்தோடிருந்து நினைப்பூக்கென்று கர்த்தருக்குத் தகனமாயிருக்கும்.

௮. அதை நித்திய உடன்படிக்கையாய் இஸ்ருவேல் புத்திரர் கையிலே வாங்கி, ஓய்வு நாள்தோறுங் கர்த்தருக்கு முன்பாக அடுக்கிவைக்கக்கடவான்.

௯. அது ஆரோனையும் அவன் குமாரரையுஞ் சேரும், அதைப் பரிசுத்த இடத்திலே போசிக்கக்கடவார்கள். ஏனெனில் அது பரிசுத்தத்துக்குப் பரிசுத்தம். கர்த்தருடைய தகனங்களில் அது அவனுக்கு நித்திய கட்டளையென்றார்.

தெய்வநாமத்தைத் தூஷணித்தவனைக் கல்லெறிந்தது.

௰. இஸ்ருவேல் சாதியான இஸ்திரிகுமாரன் இ



ப்தி

ப்ததியபுருஷனுககுமமகனுகியஒருததன இஸ்ரு வேல்புததிரரோடே கூடபபுறபபட்டுவநதிருந தான; இவனும இஸ்ருவேலனுகியஒரு மனுஷ னுமபாளயததிலேசணடைபணணிஞர்கள.

௰௧. அபபோ இஸ்ருவேல்சாதியான அநத ஸ்திரியினமகனநாமததைசொல்லிததூஷணித தான. ஆகையால்அவனைமோசேயணடைககுக் கொணடுவநதார்கள. அவனதாயினபேர்சேலொ மீத், அவளதாண்கோததிரததானுகிய திபரியின குமாரததி.

௰௨. கறதரினவாககினுலேதஙகளுககுததரவு வருமமட்டும அவனைககாவலபபடுததிஞர்கள.

௰௩. அபபோகறதர் மோசேயோடேபேசிச சொனனதாவது:

௰௪. தூஷணிததவனைப பாளயததுககுப புறமபேகொணடுபோ, கேட்டவர்களெல்லாருந தஙகளகைகளை அவன தலையினமேல் வைபபார் களாக, பிறபாடுசபையெல்லாம அவனைககல்லெ றியககடவது.

௰௫. ஆனுல் இஸ்ருவேல் புததிரரோடே நீ சொல்லவேணடியதேதெனில், எவனுகிலுந தன பராபரனைத தூஷணிததால், அவன தன பாவத தைசசுமபபான.

௰௬. கறதரினநாமததைநிநதையாகசசொல் லுகிறவன கொலையுணகவேகொலையுணககட வான, சபையெல்லாம அவனைககல்லெறியவேண் டியககடவது. பரதேசியாகிலுஞசரி தேசததிலே பிறநதவனுகிலுஞசரி, நாமததை த தூஷணிததா னுனல், கொலையுண்ககடவான.

௰௭. யாதொருமனுஷசிவனையொருததன கொனறல், கொலையுணகவேகொலையுண்ககக டவான.

௰௮. மிருகசீவனைக கொனறவனசீவனுக குச்சீவனைசசெலுததககடவான.

௰௯. ஒருததன தனககடுததவனிலஉளளமூண டாககினுல்அவனசெயதபடி அவனுககுசசெய யபபடககடவது.

௨௰. நொறுககு நறுககுநொறுககு நறுஙக ணணுககுககணணும பல்லுககுபபல்லுந தானே, அவனமனுஷனில் உளளமூணடாககின டடியே அவனிலுமஉணடாககபபடககடவது.

௨௧. மிருகததைககொனறவன வதிலகொ டுக்ககடவான, மனுஷனைககொனறவனோ கொலையுண்ககடவான.

௨௨. உஙகளிலேபரதேசிககுநதேசததிலேபி றநதவனுககும ஏகமான நியாயமிருக்ககடவ து, ஏனெனில்நானுஙகளபராபரனுகிய கறதனெ னறுசொல்லெனருர்.

௨௩. அபபடியே தூஷணிததவனைப பாளயததுககுபபுறமபேகொணடுபோய அவனைகக ல்லெறிவதற்காக மோசே இஸ்ருவேல் புததிர ரோடேசொனனுன. கறதர்மோசேககுககற்பித தபடியேஇவர்களசெயதார்கள.

## ௨௫. அதிகாரம்.

தேசததினநிலஙகளுககுஒய்விருககவேண டியஏழாமவருஷததினகட்டளை.

கறதர்சீனய்பபருவததில் மோசே யோடே பேசிசசொனனதாவது:

௨. நீஇஸ்ருவேல்புததிரரோடேபேசிசசொ ல்ல வேணடிய தேதெனில், நாம உஙகளுககு க கொடுககுநதேசததுலேநீஙகளவநதிருககுமபோ து, தேசஙகறதருககெனறு ஒய்வுகளைக கொ ணடாடவேணும.

௩. * ஆறு வருஷம உனவயலில் விதைதது உனதிவிதாட்சிததோட்டததைககிளைநறுககி, அ தினபலனைசசேர்பபாயாக.

* ௨. மோசே. ௨௩, ௰. ௰௧.

௪. ஏழாம வருஷததிலோவெனருல் ககறத ருககெனறுஒய்நதிருககுமஒய்வுதேசததுககிருக கவேணும. உனவயலில் விதைககாமலும உனதிவி தாட்சிததோட்டததைககிளைநறுககாமலும,

௫. சுயமாய உனககு விளைநதபயிரானதை யறுததுககொளளாமலும நீகிளைநறுககாதேவி ட்ட திவிதாட்சியினபழஙகளைச சேர்ககாமலுமி ருபபாயாக. தேசததுககுஒய்நதிருககுமவருஷ மாயிருக்ககடவது.

௬. தேசததினஒய்விலேபயிராகிறது உஙக ளுககாகாரமாயிருபபதாக. உனககுமஉனவேலை ககாறனுககுமஉனவேலைககாறிககுமஉனகூலி யாளுககுமஉனனிடததிலேதஙகிறஉனனுடைய தேசிககும,

௭. உனமிருகசீவனுககுமஉனதேசததிலிருக கிறகாட்டுசசீவனுககும அதினபலனெல்லாம ஆகாரமாயிருபபதாக.

சீர்திருநதமஐம்பதாமவருஷததினகட்டளை.

௮. பினனையும ஏழுஒய்வு வருஷஙகளுளள

ஏழே

ஏழேழு வருஷங்களையெண்ணுவாயாக; அந்த ஏழேழ்வு வருஷங்களுள்ள நாட்கள் உனக்கு நாற்பத்தொன்பது வருஷமாகும்.

௯. அப்போ ஏழாம் மாதம் பத்தாந்தேதியிலே தொனிக்கிற எக்காளத்தைச் சத்திரியப்பண்ணுவாயாக. பாவநிவற்தியாகுதலின் நாளிலே அதையுங்கள் தேசமெங்குந் தொனிக்கப்பண்ணி,

௰. ஐம்பதாம் வருஷத்தைப் பரிசுத்தமாக்கித் தேசத்தில் அதின் குடிகளுக்கெல்லாம் விடுதலையைக் கூறக்கடவீர்கள். அதுவுங்களுக்குச் சீர்திருந்தும் வருஷம், அதிலே நீங்கள் அவரவர் தங்கள் காணியாட்சிக்கும் அவரவர் தங்கள் வங்கிஷத்துக்குந் திரும்புவீர்கள்.

௰௧. அந்த ஐம்பதாம் வருஷம் உங்களுக்குச் சீர்திருந்தும் வருஷமாயிருப்பதாக, அதிலே விதைக்காமலும் சுயமாய் விளைந்த பயிரானதை அறுத்துக்கொள்ளாமலுங் கிளைநறுக்காதே விடப்பட்ட திராட்சியின் பழங்களைச் சேர்க்காமலுமிருப்பீர்களாக.

௰௨. ஏனெனில் அது சீர்திருந்தும் வருஷம், அது உங்களுக்குப் பரிசுத்தமாயிருக்கவேணும், அதின் பலனை வயலிலெடுத்துப் போசித்துக்கொண்டிருப்பீர்களாக.

௰௩. சீர்திருந்தும் அந்த வருஷத்தில் நீங்களவரவர் தங்கள் காணியாட்சிக்குத் திரும்புவீர்கள்.

௰௪. ஆகையால் ஏதாகிலும் உங்களுக்கடுத்தவனுக்கு விற்று, அல்லது அவன் கையிலே கொண்டீர்களானால், ஒருத்தரையொருத்தர் இடுக்குச் செய்யீர்களாக.

௰௫. சீர்திருந்தும் வருஷத்துக்குப் பிறகு சென்ற வருஷங்களின் லெக்கத்துக்குத் தக்கதாக உனக்கடுத்தவன் கையிலே கொள்ளுவாயாக, பலனுள்ள வருஷங்களின் லெக்கத்துக்குத் தக்கதாக அவன் உனக்கு விற்பானாக.

௰௬. வருஷங்கள் அனேகமானால் அதின் விலையையுயர்த்தி, கொஞ்சமானால் அதைத் தாழ்த்துவாயாக, ஏனெனில் பலனுள்ள வருஷங்களின் லெக்கத்தைப் பார்த்து அவன் உனக்கு விற்கிறான்.

௰௭. உங்களிலொருத்தனுந் தனக்கடுத்தவனையிடுக்குச் செய்யவேண்டாம். உன் பராபரனுக்குப் பயப்படுவாயாக, ஏனெனில் நாமுங்கள் பராபரனாயிருக்கிறோம்.

௰௮. நம்முடைய கட்டளைகளின்படி செய்து, நம்முடைய நியாயங்களைக் கைக்கொண்டு அதுகளின்படி செய்யக்கடவீர்கள், அப்போ தேசத்திலே சுகமாய்க் குடியிருந்து,

௰௯. பூமிதன் கனியைத் தருகிறதினாலே திருப்தியாய்ச் சாப்பிட்டு அதிலே சுகமாய்க் குடியிருப்பீர்கள்.

௨௰. ஏழாம் வருஷத்திலே என்னத்தைச் சாப்பிடுவோம், இதோ நாங்கள் விதைக்காமலும் எங்கள் பலனைச் சேர்க்காமலுமிருக்கவேணுமே என்னீர்களேயானால்,

௨௰௧. ஆறாம் வருஷம் மூன்று வருஷங்களின் பலனைத் தரும்படிக்கு ஆசீர்வாதத்தையுங்களுக்காகக் கட்டளையிடுவோம்.

௨௰௨. ஆனதினாலே நீங்கள் எட்டாம் வருஷத்திலே விதைத்து, பழைய பலனிலே ஒன்பதாம் வருஷமட்டுஞ் சாப்பிடுவீர்கள், இதின் பலன் வருமட்டுக்கும் பழைய பலனைச் சாப்பிடுவீர்கள்.

௨௰௩. நீங்கள் நிலங்களை யறுதியாய் விற்கவேண்டாம், அதேனென்றால் தேசம் நம்முடையது, நீங்கள் நமக்கு முன்பாகப் பரதேசிகளுந் தங்கியிருக்கிறவர்களுந் தானே.

௨௰௪. ஆகையாலுங்கள் காணியாட்சியான தேசமெங்கும் நிலங்களின் மீட்புக்கு இடங்கொடுக்கக்கடவீர்கள்.

௨௰௫. உன் சகோதரன் தரித்திரப்பட்டுத் தன் காணியாட்சியிலே சிலதை விற்றால், அவனைச் சேர்ந்த மீட்பனவந்து, தன் சகோதரன் விற்றதை மீட்கக்கடவான்.

௨௰௬. மீட்பனில்லாதவனுக்கோவெனில் தன் மீட்புக்குத் தேவையான அவகாசம் அகப்பட்டால்,

௨௰௭. அவன் தன்னுடைய காணியாட்சிக்குத் திரும்பி வரும்படிக்கு, அதை விற்றபிறகு சென்ற வருஷங்களின் கணக்கைத் தள்ளி, மீதியானதை அதைக் கொண்டவனுக்குத் திருப்பிக்கொடுப்பானாக.

௨௰௮. இவனுக்குத் திருப்பிக்கொடுப்பதற்கான அவகாசம் அவனுக்கு அகப்படாமல் போச்சுதேயாகில், அவன் விற்றது கொண்டவன் கையிலே சீர்திருந்தும் வருஷமட்டுமிருந்து, சீர்திருந்தும் வருஷத்திலோவென்றால், அவன் தன் காணியாட்சிக்குத் திரும்பி வரும்படிக்கு அது நீங்கலாக்கக்கடவது.

௨௰௯. ஒருத்தன் மதிலுள்ள பட்டணத்தில் வாசஸ்தலமாகிய வீட்டை விற்றால், அதை விற்றபிறகு ஒரு வருஷமட்டும் அதின் மீட்புச் செல்லும், அதின் மீட்புக்கொரு முழு வருஷந்தவணையாயிருப்பதாக.

௩௰. ஒருமுழுவருஷகாலம் நிறைவேறுமட்டும் அது மீட்கப்படாதிருந்ததேயானால், அப்போ மதிலுள்ள பட்டணத்திலிருக்கும் அந்த வீட்டைக் கொண்டவனுக்கது தலைமுறை தலைமுறையாக நிலைத்திருக்கக்கடவது. சீர்திருந்தும் வருஷத்தில் அது நீங்கலாவதில்லை.

௩௧. சுற்றிலும் மதிலில்லாத கிராமங்களின் வீடுகளோவெனில் தேசத்தின் வயல்வெளிக்குச் சரியாக எண்ணப்படுவதாக, அதுகளுக்கு மீட்பிருக்கும், சீர்திருந்தும் வருஷத்தில் நீங்கலுமாகும்.

௩௨. லேவியரின் காணியாட்சியாகிய பட்டணங்களின் வீடுகளுக்கோவென்றால் லேவியருக்கென்றைக்கும் மீட்புகிட்டுமுண்டு.

௩௩. விற்றவனுடைய காணியாட்சிப் பட்டணமான ஊரின் வீடு லேவியரில் ஒருத்தரால் மீட்கப்படாதிருந்தாலும், சீர்திருந்தும் வருஷத்தில் நீங்கலாகவேணும், ஏனெனில் லேவியருடைய பட்டணங்களின் வீடுகள் இஸ்ரவேல் புத்திரரின் நடுவிலே அவர்களுக்கிருக்கிற காணியாட்சி.

௩௪. ஆனால் அவர்கள் பட்டணங்களுடைய பேட்டைகளின் வயல்வெளி விற்கப்படாதிருப்பதாக. ஏனெனில் அது அவர்களுக்கு நித்திய காணியாட்சியாயிருக்குது.

௩௫. உன் சகோதரன் உன்னிடத்திலே தரித்திரப்பட்டுக் கையிளைத்தவனானால், அவனைத் திடப்படுத்துவாயாக, பரதேசியையுந் தங்கவந்தவனையும்போலே அவன் உன்னோடே பிழைப்பானாக.

௩௬. நீ அவன் கையில் வட்டியையுஞ் சொச்சத்தையும் வாங்காமல், உன் சகோதரன் உன்னோடே பிழைக்கும்படிக்கு உன் பராபரனுக்குப் பயப்படக்கடவாய்.

௩௭. அவனுக்கு உன் பணத்தை வட்டிக்கும் உன் போசனத்தைச் சொச்சத்துக்குங் கொடாயாக.

௩௮. நானுங்களுக்குக் கானான் தேசத்தைக் கொடுத்து, உங்களுக்குப் பராபரனாயிருக்கும்படிக்கு உங்களை எகிப்து தேசத்திலிருந்து புறப்படப்பண்ணின உங்கள் பராபரனாகிய கர்த்தர்.

௩௯. உன் சகோதரன் உன்னிடத்திலே தரித்திரனாகி உனக்கு விலைப்பட்டுப்போனால், அவனை யடிமைவேலைகொள்ளாயாக.

௪௰. அவன் கூலிக்காறனைப்போலுந் தங்கவந்தவனைப்போலும் உன்னோடேயிருந்து சீர்திருந்தும் வருஷமட்டும் உன்னிடத்திலே சேவித்து,

௪௧. அப்போ தன் பிள்ளைகளோடுங் கூட உன்னை விட்டு நீங்கலாகி, தன் வங்கிஷத்தண்டைக்குந் தன் பிதாக்களின் காணியாட்சிக்குந் திரும்பிவருவானாக.

௪௨. ஏனெனில் அவர்கள் நாம் எகிப்து தேசத்திலிருந்து புறப்படப்பண்ணின எம்முடைய வேலைக்காறர், அடிமை விற்கப்படும்போலே அவர்கள் விற்கப்படவேண்டாம்.

௪௩. * நீ அவனைக் கொடூரமாய் ஆளாமல், உன் பராபரனுக்குப் பயப்படுவாயாக.

* எபேசி. ௬, ௯.

௪௪. உனக்கிருக்கும் அடிமையும் அடிமைப் பெண்ணும் உங்களைச் சுற்றிலுமிருக்கிற புறச்சாதிகளின் மனுஷராயிருக்கவேணும், அதுகளில் நீ அடிமையையும் அடிமைப் பெண்ணையுங் கொள்ளலாம்.

௪௫. உங்களிடத்தில் பரதேசிகளாய்த் தங்குகிற அன்னியரின் புத்திரரிலும் உங்கள் தேசத்தில் உங்களிடத்திலே பிறந்திருக்கிற அவர்களுடைய வங்கிஷத்தாரிலுங் கூட நீங்கள் உங்களுக்கு அடிமைகளைக் கொண்டு,

௪௬. அவர்களையுங்களுக்கும் உங்களுக்குப் பிறபாடு, உங்கள் பிள்ளைகளுக்குஞ் சொந்தசுதந்திரமாக்கி, என்றைக்கும் ஆண்டுகொண்டிருக்கலாம். ஆனால் இஸ்ரவேல் புத்திரராகிய உங்கள் சகோதரரில் ஒருத்தரை யொருத்தர் கொடூரமாய் ஆளவேண்டாம்.

௪௭. உன்னிடத்திலிருக்கிற பரதேசியும் அன்னியனும் அவகாசம் பெற்றிருக்கக் கொள்ள அவனிடத்திலிருக்கிற உன் சகோதரன் தரித்திரப்பட்டு, அவனுக்கும் அல்லது அவன் வங்கிஷகந்திக்கும் விலைப்பட்டுப்போனால்,

௪௮. விலைப்பட்டுப்போன பிற்பாடு அவனுக்கு மீட்புண்டாவதாக, அவன் சகோதரரிலொருத்தன் அவனை மீட்கக்கடவான்.

௪௯. அவனுடைய பெரியசிறிய தகப்பனும் பெரியசிறிய தகப்பன் குமாரனும், அவன் வங்கிஷத்தில் அவனைச் சேர்ந்தசதையாரில் ஒருத்தனும் அவனை மீட்பானாக, அல்லவென்று அவனுக்கவகாசங் கிடைத்தால் தன்னைத் தான் மீட்கலாம்.

௫௰. அவன் தன்னைக் கொண்டவன் கையிலே விலைப்பட்டுப்போன வருஷத்துக்குஞ் சீர்திருந்தும் வருஷத்துக்குமிருக்குங் காலத்தை அவனோடே கணக்குப்பார்ப்பானாக. அவனோடே ஒரு கூலிக்காறனாயிருந்தவின் நாளிருந்ததுபோலே அவ

னுடை

ஷுட்டவிலைக்கிறையமவருஷங்களின்படிக்கத்தக்கொத்துப்பார்க்கப்படக்கடவது.

௫க. இன்னமநேகமவருஷங்களிருந்தால், அவன்தன் விலைக்கிறையத்திலே அதுகளுக்குத் தக்கதைத்தன்னை மீட்கும்பொருளாகத் திருப்பக் கொடுக்கக்கடவான்.

௫௨. சீர்திருந்தும்வருஷமட்டும் மீதியாயிருக்கிற வருஷங்கள் கொஞ்சமேயானால், அவனோடே கணக்குப்பார்த்து, தன்வருஷங்களுக்குத் தக்கதைத்தன்னை மீட்கும்பொருளாகத் திருப்பக்கொடுக்கக்கடவான்.

௫௩. ஒருகூலிக்காறனைப்போல் அவனோடே வருஷத்துக்கு வருஷம் இருப்பானாக. அவனிவனையுன் பார்வைக்குக் கொடூரமாய் ஆள வேண்டாம்.

௫௪. இவ்விதங்களாய் அவன் மீட்டுக்கொள்ளப்படாதேபோனால், அவனும் அவன்பிள்ளைகளுங்கூட சீர்திருந்தும் வருஷத்திலே நீங்கலாவார்கள்.

௫௫. ஏனெனில் இஸ்றவேல்புத்திரர் நமக்கு வேலைக்காறர்; அவர்கள் நாமழைப்பித்துத் தேசத்திலிருந்து புறப்படப்பண்ணின நம்முடைய வேலைக்காறராயிருக்கிறார்கள். நாம உங்கள் பராபரனாகிய கற்தர்.

## உசு. அதிகாரம்.

தெய்வகற்பனைகளைக்கைக்கொள்ளுவதினால் இஸ்றவேலுக்கு வரும் ஆசீர்வாதமும், அதுகளை மீறினதினால் அதுக்கு வரும் சாபங்களும்.

௧. நீங்கள் உங்களுக்கு * விக்கிறகங்களையுஞ் சுரூபங்களையும் உண்டாக்காமலும் உங்களுக்குச் சிலையை நாட்டாமலும், சித்திரந்தீர்ந்தகல்லையதுக்குமுன்பாகப்பணிய உங்கள்தேசத்தில் வைக்காமலுமிருப்பீர்களாக; ஏனெனில் நாம உங்கள் பராபரனாகிய கற்தர். * உ. மோசே. உ௰, ச.

௨. நம்முடைய ஓய்வுநாள்களைக்கைக்கொண்டு நம்முடைய பரிசுத்தஸ்தலத்துக்கஞ்சியிருப்பீர்களாக; நாம கற்தர்.

௩. * நீங்கள் நம்முடைய கட்டளைகளில் நடந்து, நம்முடைய கற்பனைகளைக் கைக்கொண்டு, அதுகளின்படி செய்தால், * ரு. மோசே. உஅ, க. மீ.

௪. நாம ஏற்றகாலத்தில் உங்கள் மழைகளைத்தருவோம், பூமிதன்பலனையும் நிலத்தின் மரங்கள் தங்கள் கனியையுங்கொடுக்கும்.

௫. போரடிப்பு உங்களுக்குத் திராட்சப்பழ அறுப்பு மட்டும் வரும். திராட்சப்பழ அறுப்பு விளைப்புக்காலமட்டும் வரும். நீங்கள் உங்கள் அப்பத்தைத் திறித்தியாகச் சாப்பிட்டு உங்கள் தேசத்திலே சுகமாய்க் குடியிருப்பீர்கள்.

௬. தேசத்திலே சமாதானங் கட்டளையிடுவோம், தத்தளிக்கப்பண்ணுவாரில்லாமல் படுத்துக்கொண்டிருப்பீர்கள். துஷ்டமிருகங்களைத் தேசத்திலிராதபடிக்கு ஒழியப்பண்ணுவோம், பட்டையம் உங்கள் தேசத்தில் உலாவுவதில்லை.

௭. உங்கள் சத்துருக்களைத் துரத்துவீர்கள், அவர்கள் உங்கள் முன்பாகப் பட்டையத்தால் விழுவார்கள்.

௮. உங்களில் ஐந்துபேர் நூறுபேரைத் துரத்துவார்கள். உங்களில் நூறுபேர் பதினாயிரம் பேரைத் துரத்துவார்கள். உங்கள் சத்துருக்கள் உங்களுக்குமுன்பாகப் பட்டையத்தால் விழுவார்கள்.

௯. நாம உங்கள்மேலே நோக்கமாயிருந்து, உங்களைப் பலுகவும் பெருகவும் பண்ணி, உங்களோடிருக்கும் நம்முடைய உடம்படிக்கையைத் திடப்படுத்துவோம்.

௰. போன வருஷத்தின் பழைய தானியத்தைச் சாப்பிட்டு, புதியது வந்ததினாலே பழையதை விலக்குவீர்கள்.

௰க. நம்முடைய வாசஸ்தலத்தை உங்கள் நடுவிலே வைப்போம், நம்முடைய ஆத்துமம் உங்களை அரோசிப்பதில்லை.

௰௨. நாம உங்கள் நடுவிலே உலாவி உங்களுக்குப் பராபரனாயிருப்போம், நீங்கள் நமக்குச் சனமாயிருப்பீர்கள்.

௰௩. நீங்கள் எகிப்தியருக்கு அடிமைகளாயிராதபடிக்கு நாம உங்களை அவர்கள் தேசத்திலிருந்து புறப்படப்பண்ணி, உங்கள் நுகத்தடிகளையுடைத்து, உங்களை நிமிர்ந்து நடக்கப்பண்ணின உங்கள் பராபரனாகிய கற்தர்.

௰௪. நீங்கள் நம்முடைய சொற்கேளாமலும் இந்தக் கற்பனைகளின்படியெல்லாஞ் செய்யாமலும்,

௰௫. நம்முடைய கட்டளைகளை வெறுக்கிறதும் உங்கள் ஆத்துமம் நம்முடைய நியாயங்களை அரோசிக்கிறதும், நீங்கள் நம்முடைய கற்பனைகளின்படியெல்லாஞ் செய்யாதபடிக்கு நம்முடைய உடம்படிக்கையை முறித்துப்போடுகிறதுமுண்டேயாகில்;

௰௬. நாமும் உங்களுக்குச்செய்வதேதெனறால்,

ருல், கணகளைப்பூததுபபோகபபணணுகிறதும ஆததுமததைககலஙகபபடுததுகிற ஜுரமான திகிலியும, ஈளையையுஙகாசசலையுமஉஙகளமேலே வரபபணணுவோம, உஙகள விதையை விருதாவாகவிதைபபீர்கள, உஙகளசததுருககள அதைததின்பார்கள.

௰௭. நமதுமுகததையுஙகளுககுவிரோதமாகததிருபபுவோம, உஙகளசததுருககளுககுமுனபாகமுறியடிககபபடுவீர்கள, உஙகளபகைஞர் உஙகளையாணடு கொளளுவார்கள. உஙகளைததுரததுவாரிலலாமலஓடுவீர்கள.

௰௮. நீஙகளிததோடேஇனனமநமமுடசொற்கேளாதேபோனால்,நாமஉஙகளபாவஙகளினிமிததியம பினனையும எழததனையாய உஙகளைத்தெணடிதது,

௰௯. உஙகளவலலமையின பெருமையை முறிதது, உஙகளவானததையிருமபைபபோலுமஉஙகளபூமியை வெணகலததைபபோலுமிருககபபணணுவோம.

௨௰. உஙகளபெலன விருதாவிலேசெலவழியும, உஙகளதேசநதனபலனையுநதேசததின மரஙகளதஙகளகனியையுஙகொடாதேபோம.

௨௧. நீஙகளநமதுசொற்கேட்க மனதிலலாமல நமககெதிர்தது நடநதீர்களேயானால், நாம உஙகளபாவஙகளுககுததககதாகஇனனம ஏழததனைவாதையையுஙகளமேலேவரபபணணி,

௨௨. உஙகளுககுளளேவெளியின துஷடமிருகஙகளை வரவிடுவோம, அதுகளஉஙகளைப்பிளளைகளறறவர்களாககி, உஙகளமிருகஜீவனகளையழிதது, உஙகளைககுறைநதுபோகபபணணும, உஙகளவழிகளபாழ்ததுககிடககும.

௨௩. நீஙகளஇததோடுநமதுதெணடிவினையாலேகுணபபடாமல நமககெதிர்ததுநடநதால,

௨௪. நாமுமஉஙகளுககெதிர்ததுநடநது,நாமுமஉஙகளையுஙகள பாவஙகளினிமிததியம ஏழததனையாயவாதிதது,

௨௫. உடமபடிககையின நீதியைவிசாரிககிறதாகியசரிககுசசரி கடடுமபடடையததை யுஙகளமேலே வரபபணணி, நீஙகள உஙகள படடணஙகளிலவநதடைநதபிறகு பெருவாரி ககாசசலையுஙகளநடுவில அனுபபுவோம. சததுருவின கையிலேயொபபுககொடுககபபடுவீர்கள.

௨௬. நாமஅபபமெனற ஆதாரவுகோலையுஙகளுககுடைததிருககுமபோது;பததுஸதிரிகள ஒரேஅடுபபிலஉஙகளஅபபததைசசுடடு, அதைததிருமப உஙகளுககுநிறுததுககொடுபபார்கள, திருததியடையாமலசாபபடுவீர்கள.

௨௭. இததோடுமநீஙகளநமமுடசொற்கேளாமலநமககெதிர்ததுநடநதால,

௨௮. நாமுமஉககிரததோடேஉஙகளுககெதிர்ததுநடநது, உஙகளையுஙகளபாவஙகளினிமிததியமஏழததனையாய்த்தெணடிபபோம.

௨௯. உஙகள குமாரரின மாஙகிஷததையும உஙகளகுமாரததிகளின மாஙகிஷததையும புசிபபீர்கள.

௩௰. நாமஉஙகளமேடைகளையழிதது,உஙகளவிககிரகசசிலைகளை நிர்தூளியாககி, உஙகளஉடலகளையுஙகளநரகலான தேவர்களுடஉடலகளினமேலேபோடுவிபபோம, நமமுடஆததுமம்உஙகளையரோசிககும.

௩௧. நாமஉஙகள படடணஙகளை வனாநதரமுமஉஙகளபரிசுததஸ தலஙகளை பாழுமாககி, உஙகளுட ஆறறுகிற வாசனையைமுகராதிருபபோம.

௩௨. நாமதேசததையதிலேககுடியிருககபபோறஉஙகளசததுருககளவிறுமிககததககவிஸயாகபபாழாககி,

௩௩. உஙகளைசசாதிகளுககுளளேசிதறடிதது, உஙகள பிறகாலேபடடையததையுருவுவோம. உஙகளதேசமபாழுமஉஙகளபடடணஙகளவனாநதரமுமாம.

௩௪. நீஙகளஉஙகளசததுருககளினதேசததிலிருககுமஅபபோது தேசமானது பாழாய் ககிடககிறநாளெலலாநதனனுட ஓய்வுகளைரமமியமாயஅனுபவிககும, அபபொழுதது ஓய்வடைநதுதனஓய்வுகளைரமமியமாயஅனுபவிககும.

௩௫. நீஙகளதிலேகுடியிருக்ககொளளஅதுவஙகள ஓய்வுவருஷஙகளில ஓய்வடையாதபடியினாலே, அதுபாழாய் ககிடககுமநாளெலலாம ஓய்வடைநதிருககும.

௩௬. உஙகளிலமீதியாயிருபபவர்களின இருதயஙகளிலநாமஅவர்கள சததுருககளின தேசஙகளிலேமனததளர்ததியைவரபபணணுவோம,காறறடிககுமஇலையின இரைசசல அவர்களைபோடடும, அவர்களபடடையததுககுததபபிஓடுமாபபோலேஓடி, துரதது வாரிலலாமல விழுவார்கள.

௩௭. துரததுவாரிலலாமலஒருததர்மேலொருததர்படடையமபிறகாலேவருமாபபோலேஇடறிவிழுவார்கள. உஙகளசததுருககளுககுமுனபா

சஉங

களுங்களுக்குத்தரித்துக்கொள்ளுதலில்லாதிருக்கும்.

௩௮. புறச்சாதிகளுக்குள் ளழிவீர்கள், உங்களைச்சத்துருக்களின்தேசம் உங்களைப்பட்சிக்கும்.

தளருண்டுபோயிருக்கும் இஸ்ருவேலர் குணப்பட்டால், திரும்பயோர்த்துக்கொள்ளப்படுவது.

௩௯. உங்களில் மீதியாயிருப்பவர்கள் உங்கள் சத்துருக்களின் தேசங்களிலே தங்கள் அக்கிறமங்களினாலுந் தங்கள் பிதாக்களின் அக்கிறமங்களினாலுங் கூடவாடிப்போய்,

௪௰. தாங்கள் நமக்குவிரோதமாகத் துரோகம் பண்ணி, நடப்பித்த தங்கள் அக்கிறமத்தையுந் தங்கள் பிதாக்களின் அக்கிறமத்தையும்,

௪௧. தாங்கள் நமக்கெதிர்த்து நடந்தபடியினாலே நாமுந் தங்களுக்கெதிர்த்து நடந்து, தங்களைத் தங்கள் சத்துருக்களின் தேசத்திலே கொண்டுபோய் விட்டதையும் அறிக்கையிடுவார்கள். அப்போது விருத்தசேதனமில்லாத அவர்களிருதயந் தாழ்ந்துபோய், அவர்கள் தங்கள் அக்கிறமத்தின் ஆக்கினையை நல்லதென்று ஒத்துக்கொண்டால்,

௪௨. நாம் யாக்கோபோடே பண்ணின நம்முடம்படிக்கையையும் ஈசாக்கோடே பண்ணின நம்முடம்படிக்கையையும் ஆபிரகாமோடே பண்ணின நம்முடம்படிக்கையையும் நினைப்போம், தேசத்தையும் நினைப்போம்;

௪௩. அவர்கள் நிமித்தியம் வெறுமையேவிடப்பட்டதும், பாழாய்க்கிடக்கிறதினாலேதன் ஓய்வுகளோமமியமாய் அனுபவிக்கிறதுமான தேசத்தைத்தானே. அவர்களும் நம்முடநியாயங்களை வெறுத்தபடியினாலும் அவர்களுடைய ஆத்துமம் நம்முடைய கட்டளைகளை அரோசித்தபடியினாலும் அடைந்த தங்களுடைய அக்கிறமத்தின் தெண்டனையை நல்லதென்று ஒத்துக்கொள்ளுவார்கள்.

௪௪. ஆனதுகொண்டு அவர்கள் தங்கள் சத்துருக்களின் தேசத்திலிருந்தாலும் நாம் அவர்களை நிர்மூலமாக்கத்தக்கதாகவும் அவர்களோடிருக்கிற நம்முடம்படிக்கையை அவத்தமாக்கத்தக்கதாகவும் அவர்களைப்பிறக்கணிப்பதுமில்லை அரோசிப்பதுமில்லை, ஏனெனில் நாம் அவர்கள் பராபரனாகிய கர்த்தர்.

௪௫. அவர்களுடைய பராபரனாயிருக்கும்படிக்கு நாம் புறச்சாதிகளின் கண்களுக்கு முன்பாக எகிப்துத்தேசத்திலிருந்து புறப்படப்பண்ணின அவர்களுடைய மூதாக்களோடே நாம் பண்ணின உடம்படிக்கையை அவர்களுக்காக நினைவுகூருவோம்.

௪௬. தமக்கும் இஸ்ருவேல்புத்திரருக்கும் நடுவேயிருக்கும்படிக்குக் கர்த்தர் சீனாய்ப்பருவதத்திலே மோசேயைக்கொண்டு கொடுத்த கட்டளைகளும் நியாயங்களும் நியாயப்பிரமாணங்களும் இதுகள்தானே.

## ௨௭. அதிகாரம்.

பலவித பொருத்தனைகளின் நியாயங்கள்.

பின்னையுங் கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதாவது:

௨. நீ இஸ்ருவேல்புத்திரரோடே பேசிச் சொல்லவேண்டியதேதெனில், ஒருத்தன் ஒரு விசேஷித்த பொருத்தனையைப்பண்ணியிருந்தால், ஆத்துமாக்கள் உன் மதிப்பின்படி கர்த்தருடையவர்கள்.

௩. இருபதுவயது முதல்கொண்டு அறுபதுவயதுக்குள்ளிருக்கிற ஆண்பிள்ளையை நீ பரிசுத்தஸ்தலத்தின் சேக்கலாகிய ஐம்பது வெள்ளிச்சேக்கலாகவும்,

௪. பெண்சாதியை முப்பது சேக்கலாகவும் மதிப்பாயாக.

௫. ஐந்துவயதுமுதல்கொண்டு இருபதுவயதுக்குள்ளிருக்கிற ஆண்பிள்ளையை இருபது சேக்கலாகவும், பெண்பிள்ளையைப் பத்து சேக்கலாகவும்,

௬. ஒருமாதமுதல்கொண்டு ஐந்துவயதுக்குள்ளிருக்கிற ஆண்பிள்ளையை ஐந்து வெள்ளிச்சேக்கலாகவும், பெண்பிள்ளையை மூன்று வெள்ளிச்சேக்கலாகவும்,

௭. அறுபதுவயதும் அதிகமுமான ஆண்பிள்ளையைப் பதினைந்து சேக்கலாகவும் பெண்சாதியைப் பத்துச்சேக்கலாகவும் மதிக்கக்கடவாய்.

௮. உன் மதிப்பைச் செலுத்தக் கூடாத தரித்திரனாயிருந்தானேயாகில், அவன் ஆசாரியனுக்கு முன்பாகத் தன்னை மதிக்கும்படிக்கு வந்துநிற்கக்கடவான். பொருத்தனைபண்ணினவனுடைய கைக்கெட்டுகிறதுக்குத் தக்கதாய் ஆசாரியன் அவனை மதிப்பானாக.

௯. கர்த்தருக்குப் பலியிடப்படத்தக்க மிருகசீவனேயானால், அவன் கர்த்தருக்குக் கொடுக்கிறஅப்படிக்கொத்ததெல்லாம் பரிசுத்தமாயிருப்பதாக.

௰. அதை மாற்றாமலிருப்பானாக, இளப்பமானதுக்குவதிலாக நல்லதையும், நல்லதுக்குவதிலாக இளப்பமானதையுங் கொடாமலிருப்பானாக, அவன் மிருகத்துக்குவதிலாக மிருகத்தைக்கொ

 டுத்தா

டுத்தானேயாகில், அப்போ அதுவும் அதுக்கு வதிலானதும் பரிசுத்தமாயிருப்பதாக.

௰௧. அது கற்த்தருக்குப் பெலியிடப்பட்டத்தகாத தீட்டான யாதொரு மிருகமேயானால், அதை ஆசாரியனுக்கு முன்பாக நிறுத்தக்கடவான்.

௰௨. ஆசாரியன் அதையதின் நன்மைக்கும் இளப்பத்துக்குந் தக்கதாய் மதிப்பானாக, அவன் மதிக்கிறபடியேயிருக்கக்கடவது.

௰௩. அதை மீட்கமனதாயிருந்தானேயாகில், உன் மதிப்போடே ஐந்திலொரு பங்கைக் கூட்டக்கடவான்.

௰௪. ஒருத்தன் தன் வீட்டைக் கற்த்தருக்கென்று பரிசுத்தம் பண்ணினால், ஆசாரியன் அதையதின் நன்மைக்கும் இளப்பத்துக்குந் தக்கதாய் மதிப்பானாக, அவன் அதை மதிக்கிறபடியிருக்கக்கடவது.

௰௫. பரிசுத்தம் பண்ணினவன் தன் வீட்டை மீட்கமனதாயிருந்தானேயாகில் உன் மதிப்பான திரவியத்தோடே ஐந்திலொரு பங்கைக் கூட்டக்கடவான், அப்போ தவனுடையதாயிருக்கும்.

௰௬. ஒருத்தன் தன் காணியாட்சி வயல் வெளியிலே யாதாகிலுங் கற்த்தருக்கென்று பரிசுத்தம் பண்ணினால், உன் மதிப்பு அதின் விளைப்புக்குத் தக்கதாயிருக்கவேணும். ஒரு கல மவாற்கோதுமை விளைகிற வயல் ஐம்பது வெள்ளிச் சேக்கலாக மதிக்கப்படக்கடவது.

௰௭. சீர்திருந்தும வருஷமுதல்கொண்டே அவன் தன் வயலைப் பரிசுத்தம் பண்ணினால், உன் மதிப்பின்படியிருக்கக்கடவது.

௰௮. சீர்திருந்தும வருஷத்துக்குப்பிறபாடு அதைப் பரிசுத்தம் பண்ணினானேயாகில், அப்போ சீர்திருந்தும வருஷமட்டுமிருக்குங் குறைவருஷங்களின் படியே திரவியம் ஆசாரியனாலே கணக்குப்பார்க்கப்பட்டு, அதுக்குத்தக்கது உன் மதிப்பிலே தள்ளப்படக்கடவது.

௰௯. வயலைப் பரிசுத்தம் பண்ணினவன் அதை மீட்கமனதாயிருந்தானேயாகில், உன் மதிப்பான திரவியத்தோடே ஐந்திலொரு பங்கைக் கூட்டக்கடவான், அப்போ தவனுடையதாயிருக்கும்.

௨௰. அவன் வயலை மீட்காதேபோய், அதை வேறொருத்தனுக்கு விற்றுனேயானால், இனி மீட்கப்படக்கூடாமல்,

௨௧. அது சீர்திருந்தும வருஷத்தில் நீங்கலாகிறபோது, சாபத்தீடான வயலாகக் கற்த்தருக்குப் பரிசுத்தமாயிருக்கக்கடவது, அதின் காணியாட்சி ஆசாரியனைச் சேரும்.

௨௨. ஒருத்தன் தன் காணியாட்சி வயல் அல்லாத்தாகிய தான் கொண்ட ஒரு வயலைக் கற்த்தருக்கென்று பரிசுத்தம் பண்ணினானேயாகில்,

௨௩. அது சீர்திருந்தும வருஷமட்டும் உன் மதிப்பின்படி பெறும் விலையை ஆசாரியன் அவனோடே கணக்குப்பார்ப்பானாக, அந்த உன் மதிப்பையவன் அந்நாளிலே, கற்த்தருக்குப் பரிசுத்தமாயிருக்கும்படிக்குக் கொடுக்கக்கடவான்.

௨௪. ஆர் கையிலே அந்த வயலைக் கொண்டானோ, அந்தக் காணியாட்சிக்காறனவசமாய் அது சீர்திருந்தும வருஷத்திலே திரும்பும்.

௨௫. உன் மதிப்பெல்லாம் பரிசுத்தஸ்தலச் சேக்கல்க்கணக்காயிருக்கக்கடவது, சேக்கலானது இருபது கோரா.

௨௬. தலையீற்றுகளோவென்றால் கற்த்தருடையதானபடியினாலே தலையீற்றாகிய மிருகஜீவனை யொருவரும் பரிசுத்தம் பண்ணவொண்ணாது, அது மாடானாலும் ஆடானாலுங் கற்த்தருடையதாயிருக்குதே.

௨௭. தீட்டான மிருகத்தினுடையதேயானால், அவன் உன் மதிப்பின்படியதை மீட்டு, அதோடே ஐந்திலொரு பங்கைக் கூட்டக்கடவான், மீட்கப்படாமல் போச்சுதேயாகில் உன் மதிப்பின்படி விற்கப்படக்கடவது.

௨௮. ஒருத்தன் தனக்குண்டான நரஜீவன் மிருகஜீவன் காணியாட்சி நிலமுதலான தில்லதையாகிலுஞ் சாபத்தீடானதாகக் கற்த்தருக்குக் கொடுத்தானேயாகில், அது விற்கப்படவும் மீட்கப்படவும் வேண்டாம். சாபத்தீடானதாகக் கொடுபட்டதெல்லாங் கற்த்தருக்குப் பரிசுத்தத்துக்குப் பரிசுத்தம்.

௨௯. நரஜீவனில் சாபத்தீடாக நேமிக்கப்பட்டதெல்லாம் மீட்கப்படாமல், கொலையுண்கவே கொலையுண்ணக்கடவது.

பத்திலொன்று செலுத்துதலின் நியாயம்.

௩௰. தேசத்திலே நிலத்தின் விளைகளிலும் மரங்களின் கனியிலும் பத்திலொரு பங்காகிறதெல்லாங் கற்த்தருடையது. அது கற்த்தருக்குப் பரிசுத்தம்.

௩௧. ஒருத்தன் பத்திலொரு பங்காகிய அதிலே சிலதை மீட்கமனதாயிருந்தானேயானால், அததோடே ஐந்தில் ஒரு பங்கைக் கூட்டக்கடவான்.

௩௨. கோலின் கீழ்ப்போற ஆடுமாடுகளிலே பத்திலொரு பங்காகிறதெல்லாங் கற்த்தருக்குப் பரிசுத்தம்.

௩௩.

௩௩. அது நல்லதோ இளப்பமானதோவென்று அவன் பார்க்கவேண்டாம், அதற்கு வதில்கொடுக்கவும் வேண்டாம். வதில்கொடுத்தானேயாகில், அதுவும் அதற்குவதிலானதும் பரிசுத்தமாயிருக்கும், அது மீட்கப்படக்கூடாதென்று அவர்களோடே சொல்லென்றார்.

௩௪. இஸ்ரவேல்புத்திரருக்குச் சொல்லும்படிக்கு கர்த்தர் மோசேக்குச் சீனாய்ப்பருவதத்திலே கற்பித்த கற்பனைகள் இதுகள்தானே.

மோசேயெழுதின மூன்றும் ஆகமம் முகிந்தது.

---

# மோசேயெழுதின நாலாமாகமம்



## ௧. அதிகாரம்.

இஸ்ரவேல்புத்திரர் லெக்கம்பார்க்கப்பட்டதும் லேவியர் வாசஸ்தலத்தின் ஊழியத்துக்கும் காவலுக்கும் வைக்கப்பட்டதும்.

அவர்கள் எசிப்துதேசத்திலிருந்து புறப்பட்ட இரண்டாம் வருஷம் இரண்டாம் மாதம் முதல் தேதியிலே கர்த்தர் சீனாய் வனாந்தரத்திலிருக்கிற ஆசரிப்புக் கூடாரத்திலே மோசேயோடே பேசிச் சொன்னதாவது:

௨. நீங்கள் இஸ்ரவேல்புத்திரரின் முழுச்சபையாயிருக்கிற அவர்கள் பிதாக்களுடைய வீட்டு வம்சங்களிலுள்ள ஆண்பிள்ளைகளாகிய சகல தலைகளையும் பேர்பேராக வெண்ணித் தொகையேற்றுங்கோள்.

௩. இஸ்ரவேலிலே இருபது வயது முதற்கொண்டு யுத்தத்துக்குப் புறப்படத்தக்கவர்களெல்லாரையும் ஆரோனும் நீயும் அவர்கள் சேனைகளின்படியே லெக்கம்பார்ப்பீர்களாக.

௪. ஒவ்வொரு கோத்திரத்துக்கவர்களுடைய பிதாக்களின் வீட்டுத்தலைவனாகிய ஒவ்வொரு மனுஷன் உங்களோடிருப்பானாக.

௫. உங்களோடே நிற்கும் மனுஷரின் நாமங்களாவது: ரூபனின் கோத்திரத்திலே சேதேயூரின் குமாரன் எலிசூர்,

௬. சிமெயோன் கோத்திரத்திலே சூரிஷதாயின் குமாரன் செலூமியேல்.

௭. யூதா கோத்திரத்தில் அம்மினதாபின் குமாரன் நகசோன்.

௮. இசக்கார் கோத்திரத்திலே சூவாரின் குமாரன் நெதனெயேல்,

௯. செபுலோன் கோத்திரத்தில் எலோனின் குமாரன் எலியாப்,

௰. யோசேப்பின் குமாரராகிய எப்பிராயீம் கோத்திரத்தில் அம்மியூதின் குமாரன் எலிஷாமா, மனாசே கோத்திரத்திலே பெதாசூரின் குமாரன் கமாலியேல்,

௰௧. பென்யமீன் கோத்திரத்திலே கிதெயோனியின் குமாரன் அபீதான்.

௰௨. தாண் கோத்திரத்தில் அம்மிஷதாயின் குமாரன் அகியேசேர்,

௰௩. ஆசேர் கோத்திரத்தில் ஒகிரானின் குமாரன் பாகியேல்,

௰௪. காத் கோத்திரத்திலே தேகுவேலின் குமாரன் எலியாசாப்,

௰௫. நவ்தலி கோத்திரத்தில் ஏனானின் குமாரன் அகீரா,

௰௬. சபையில் அழைக்கப்பட்டு, தங்கள் பிதாக்களுடைய கோத்திரங்களின் பிரபுக்களும் இஸ்ரவேலில் ஆயிரங்களுக்குத் தலைவருமாயிருப்பவர்கள் இவர்கள்தானென்றார்.

௰௭. அப்படியே மோசேயும் ஆரோனும் பேர்பேராகக் குறிக்கப்பட்ட இந்த மனுஷரைக் கூட்டிக்கொண்டு,

௰௮. இரண்டாம் மாதம் முதல் தேதியிலே சபையையெல்லாங் கூட்டக்கூட்டினார்கள். அவர்கள் தங்கள் பிதாக்களுடைய வீட்டு வங்கிஷப் பிறப்புகளின்படியே பார்க்கப்பட்டு, இருபது வயது முதற்கொண்டிருந்த பேர்கள் தலைதலையாக எண்ணப்பட்டார்கள்.

௰௯. கர்த்தர் மோசேக்குக் கற்பித்தபடியே இவன் அவர்களைச் சீனாயின் வனாந்தரத்தில் லெக்கம் பார்த்தான்.

௨௰. இஸ்ரவேலின் மூத்தவனாகிய ரூபேனின் புத்திரருடைய பிதாக்களின் வீட்டு வங்கிஷப் பிறப்புகளில் இருபது வயது முதற்கொண்டு யுத்தத்துக்குப் புறப்படத்தக்க ஆண்பிள்ளைகளெல்லாந் தலைதலையாக எண்ணப்பட்டபோது,

௨௧. ரூபேன் கோத்திரத்தில் லெக்கம் பார்க்கப்பட்டவர்கள் நாற்பத்தாறாயிரத்தைஞ்ஞூறு பேர்.

௨௨. சிமெயோன் புத்திரருடைய பிதாக்களின் வீட்டு வங்கிஷப் பிறப்புகளில் இருபது வயது முதற்கொண்டு யுத்தத்துக்குப் புறப்படத்தக்க ஆண்பிள்ளைகளெல்லாந் தலைதலையாக எண்ணி லெக்கம் பார்க்கப்பட்டபோது,

௨௩. சிமெயோன் கோத்திரத்தில் லெக்கம் பார்க்கப்பட்டவர்கள் ஐம்பத்தொன்பதினாயிரத்து முந்நூறு பேர்.

௨௪. காத் புத்திரருடைய பிதாக்களின் வீட்டு வங்கிஷப் பிறப்புகளில் இருபது வயது முதற்கொண்டு யுத்தத்துக்குப் புறப்படத்தக்க ஆண்பிள்ளைகளெல்லாம் எண்ணப்பட்டபோது,

௨௫. காத் கோத்திரத்தில் லெக்கம் பார்க்கப்பட்டவர்கள் நாற்பத்தையாயிரத்தறுநூற்றைம்பது பேர்.

௨௬. யூதா புத்திரருடைய பிதாக்களின் வீட்டு வங்கிஷப் பிறப்புகளில் இருபது வயது முதற்கொண்டு யுத்தத்துக்குப் புறப்படத்தக்க ஆண்பிள்ளைகளெல்லாம் எண்ணப்பட்டபோது,

௨௭. யூதா கோத்திரத்தில் லெக்கம் பார்க்கப்பட்டவர்கள் எழுபத்து நாலாயிரத்தறுநூறு பேர்.

௨௮. இசக்கார் புத்திரருடைய பிதாக்களின் வீட்டு வங்கிஷப் பிறப்புகளில் இருபது வயது முதற்கொண்டு யுத்தத்துக்குப் புறப்படத்தக்க ஆண்பிள்ளைகளெல்லாம் எண்ணப்பட்டபோது,

௨௯. இசக்கார் கோத்திரத்தில் லெக்கம் பார்க்கப்பட்டவர்கள் ஐம்பத்து நாலாயிரத்து நானூறு பேர்.

௩௰. செபுலோன் புத்திரருடைய பிதாக்களின் வீட்டு வங்கிஷப் பிறப்புகளில் இருபது வயது முதற்கொண்டு யுத்தத்துக்குப் புறப்படத்தக்க ஆண்பிள்ளைகளெல்லாம் எண்ணப்பட்டபோது,

௩௧. செபுலோன் கோத்திரத்தில் லெக்கம் பார்க்கப்பட்டவர்கள் ஐம்பத்தேழாயிரத்து நானூறு பேர்.

௩௨. யோசேப்பின் குமாரரில் எப்பிராயீம் புத்திரருடைய பிதாக்களின் வீட்டு வங்கிஷப் பிறப்புகளில் இருபது வயது முதற்கொண்டு யுத்தத்துக்குப் புறப்படத்தக்க ஆண்பிள்ளைகளெல்லாம் எண்ணப்பட்டபோது,

௩௩. எப்பிராயீம் கோத்திரத்தில் லெக்கம் பார்க்கப்பட்டவர்கள் நாற்பதினாயிரத்தைஞ்ஞூறு பேர்.

௩௪. மனாசே புத்திரருடைய பிதாக்களின் வீட்டு வங்கிஷப் பிறப்புகளில் இருபது வயது முதற்கொண்டு யுத்தத்துக்குப் புறப்படத்தக்க ஆண்பிள்ளைகளெல்லாம் எண்ணப்பட்டபோது,

௩௫. மனாசே கோத்திரத்தில் லெக்கம் பார்க்கப்பட்டவர்கள் முப்பத்தீராயிரத்திருநூறு பேர்.

௩௬. பென்யமீன் புத்திரருடைய பிதாக்களின் வீட்டு வங்கிஷப் பிறப்புகளில் இருபது வயது முதற்கொண்டு யுத்தத்துக்குப் புறப்படத்தக்க ஆண்பிள்ளைகளெல்லாம் எண்ணப்பட்டபோது,

௩௭. பென்யமீன் கோத்திரத்தில் லெக்கம் பார்க்கப்பட்டவர்கள் முப்பத்தையாயிரத்து நானூறு பேர்.

௩௮. தாண் புத்திரருடைய பிதாக்களின் வீட்டு வங்கிஷப் பிறப்புகளில் இருபது வயது முதற்கொண்டு யுத்தத்துக்குப் புறப்படத்தக்க ஆண்பிள்ளைகளெல்லாம் எண்ணப்பட்டபோது,

௩௯. தாண் கோத்திரத்தில் லெக்கம் பார்க்கப்பட்டவர்கள் அறுபத்தீராயிரத்தெழுநூறு பேர்.

௪௰.

௪௰. ஆசேர்புத்திரருடைய பிதாக்களின் வீட்டு வம்சவழிப் பிறப்புகளிலிருபது வயது முதற்கொண்டு யுத்தத்துக்குப் புறப்படத்தக்க ஆண் பிள்ளைகளெல்லாம் எண்ணப்பட்ட போது,

௪௧. ஆசேர்கோத்திரத்தில் லெக்கம்பார்க்கப்பட்டவர்கள் நாற்பத்தோராயிரத்தைஞ்ஞூறு பேர்.

௪௨. நப்தலிபுத்திரருடைய பிதாக்களின் வீட்டு வம்சவழிப் பிறப்புகளிலிருபது வயது முதற்கொண்டு யுத்தத்துக்குப் புறப்படத்தக்க ஆண் பிள்ளைகளெல்லாமெண்ணப்பட்ட போது,

௪௩. நப்தலிகோத்திரத்தில் லெக்கம்பார்க்கப்பட்டவர்கள் ஐம்பத்து மூவாயிரத்து நானூறு பேராயிருந்தார்கள்.

௪௪. மோசேயும் ஆரோனும் இஸ்ரவேலுடைய பிதாக்களின் வீடுகளிலொவ்வொன்றுக்கொவ்வொரு பிரபுக்களான பன்னிரண்டு பேரும் லெக்கம்பார்த்தவர்களிவர்கள் தான்.

௪௫. இஸ்ரவேல்புத்திரருடைய பிதாக்களின் வீட்டாரிலிருபது வயது முதற்கொண்டு இஸ்ரவேலிலே யுத்தத்துக்குப் புறப்படத்தக்கவர்களாகிய லெக்கம்பார்க்கப்பட்ட பேர்களெல்லாம்:

௪௬. அறுநூற்று மூவாயிரத்தைஞ்ஞூற்றைம்பது பேராயிருந்தார்கள்.

௪௭. ஆனால் லேவியர் தங்கள் பிதாக்களுடைய கோத்திரத்தின்படியே அவர்களுக்குள்ளே லெக்கம்பார்க்கப்படவில்லை;

௪௮. ஏனெனில் கர்த்தர் மோசேயோடே பேசிச்சொன்னதாவது:

௪௯. லேவிகோத்திரத்தாரை மாத்திரம் நீ இஸ்ரவேல்புத்திரருக்குள்ளே லெக்கம்பாராமலும் அவர்கள் தொகையையேறாமலும்,

௫௰. லேவியரை நீ சாட்சியின் வாசஸ்தலத்துக்கும் அதினுடைய எல்லாப் பணிமுட்டுகளுக்கும் அதிலுள்ள தெல்லாத்துக்கும் விசாரிப்புக்காறராக வை; அவர்கள் வாசஸ்தலத்தையும் அதின் எல்லாப் பணிமுட்டுகளையுஞ் சுமந்து, அதினிடத்தில் ஊழியஞ்செய்து, வாசஸ்தலத்தைச் சுற்றிலும் பாளையமிறங்கக்கடவார்கள்.

௫௧. வாசஸ்தலம் பயணப்படுகையில் லேவியர் அதை இறக்கிவைத்து, அது பாளையமிறங்குகையில் லேவியர் அதையெடுத்து நிறுத்தக்கடவார்கள், சேருகிற அந்நியன் கொலையுண்பானாக.

௫௨. இஸ்ரவேல் புத்திரர் அவரவர் தங்கள் பாளையத்தோடும் அவரவர் தங்கள் சேனையின் கொடியோடுங்கூடாரம் போட்டுக்கடவார்கள்.

௫௩. இஸ்ரவேல்புத்திரருடைய சபையின்மேலே கடுங்கோபம் வராதபடிக்கு லேவியர் வாசஸ்தலத்தைச் சுற்றிலும் பாளையமிறங்கி, லேவியர் சாட்சியினுடைய வாசஸ்தலத்தின் காவலைக் காப்பார்களாக வென்றார்.

௫௪. கர்த்தர் மோசேக்குக் கற்பித்தபடியெல்லாம் இஸ்ரவேல்புத்திரர் செய்தார்கள்.

## ௨. அதிகாரம்.

இஸ்ரவேலருடைய பாளையத்தின் ஒழுங்குக்காகப் பாரபரன் கட்டளையிட்ட திட்டம்.

கர்த்தர் மோசேயோடும் ஆரோனோடும் பேசிச் சொன்னதாவது:

௨. இஸ்ரவேல்புத்திரர் அவரவர் தங்கள் பிதாக்களுடைய வீட்டின் அடையாளமாகிய தங்களுடைய கொடியண்டையிலே தங்கள் கூடாரங்களையடித்து, ஆசரிப்புக் கூடாரத்துக்கெதிராகச் சுற்றிலும் பாளையமிறங்கக்கடவார்கள்.

௩. யூதாவுடைய பாளையத்துக் கொடியின் கீழிருக்கிற சேனைகள் சூரியனுதிக்குங் கீழ்ப்புறத்திலே பாளையமிறங்குவது; யூதாபுத்திரரின் பிரபு அம்மினதாபின் குமாரனாகிய நகசோன்.

௪. லெக்கம்பார்க்கப்பட்ட அவனுடைய சேனை எழுபத்துநாலாயிரத்தறுநூறு பேர்.

௫. அவனண்டையிலே பாளையமிறங்குபவர்கள் இசக்கார் கோத்திரத்தார்; இசக்கார்புத்திரரின் பிரபு சூவாரின் குமாரன் நெதனெயேல்.

௬. லெக்கம்பார்க்கப்பட்ட அவனுடைய சேனை ஐம்பத்துநாலாயிரத்து நானூறு பேர்.

௭. பிறபாடு செபுலோன் கோத்திரத்தாருந்தானே; செபுலோன் புத்திரரின் பிரபு ஏலோனின் குமாரன் எலியாப்.

௮. லெக்கம் பார்க்கப்பட்ட அவனுடைய சேனை ஐம்பத்தேழாயிரத்து நானூறு பேர்.

௯. லெக்கம்பார்க்கப்பட்ட யூதாவின் பாளையத்தாரெல்லாரும் தங்கள் சேனைகளின்படியே லட்சத்தெண்பத்தாறாயிரத்து நானூறு பேர். இவர்கள் பயணத்திலே முதற்பாளையமாய்ப் போகக்கடவார்கள்.

௰. ரூபேனுடைய பாளையத்துக் கொடியின் கீழிருக்கிற சேனைகள் தென்புறத்திலிறங்குவது;


ரூபே

ரூபென்புத்திரரின்பிரபு சேதேயூரின்குமாரன் எலிசூர்.
௰௧. லெக்கம்பார்க்கப்பட்ட அவனுடைய சேனை நாற்பத்தாறாயிரத்தைந்நூறுபேர்.
௰௨. அவன் கிட்டப்பாளயமிறங்குபவர்கள் சிமெயோன்கோத்திரத்தார்; சிமெயோன்புத்திரரின்பிரபு சூரிஷதாயின்குமாரன் செலூமியேல்.
௰௩. லெக்கம்பார்க்கப்பட்டஅவனுடையசேனை ஐம்பத்தொன்பதினாயிரத்துமுந்நூறுபேர்.
௰௪. பிறபாடு காத்கோத்திரத்தாருந்தானே; காத்புத்திரரின்பிரபு ரெகுவேலின் குமாரன் எலியாசாப்.
௰௫. லெக்கம்பார்க்கப்பட்டஅவனுடையசேனை நாற்பத்தையாயிரத்தறுநூற்றைம்பதுபேர்.
௰௬. லெக்கம்பார்க்கப்பட்டரூபெனின் பாளயத்தாரெல்லாந்தங்கள்சேனைகளின்படியே நூற்றைம்பத்தோராயிரத்து நானூற்றைம்பது பேர். இவர்கள்பயணத்திலிரண்டாம்பாளயமாய்ப்போபவர்கள்.
௰௭. பிறபாடு ஆசரிப்புக்கூடாரம் லேவியரின்சேனையோடே பாளயங்களின்நடுவே பயணப்பட்டுப்போம்; எப்படிபாளயமிறங்குகிறார்களோ அப்படியவரவர் தங்கள்வரிசையிலே தங்கள் கொடிகளின்படியே பயணப்படுவார்களாக.
௰௮. எப்பிராயீமுடைய பாளயத்துக்கொடியின்சேனைகள்மேற்புறத்திலிறங்குவது; எப்பிராயீம்புத்திரரின் பிரபுஅம்மியூதின்குமாரன் எலிஷாமா.
௰௯. லெக்கம்பார்க்கப்பட்ட அவனுடைய சேனை நாற்பதினாயிரத்தைந்நூறுபேர்.
௨௰. அவன் கிட்டப் பாளயமிறங்குபவர்கள் மனாசேகோத்திரத்தார்; மனாசேகோத்திரத்தாரின்பிரபுபெதாசூரின்குமாரன் கமாலியேல்.
௨௧. லெக்கம் பார்க்கப்பட்டஅவனுடைய சேனை முப்பத்திரண்டாயிரத்திருநூறுபேர்.
௨௨. பிறபாடு பெனியமீன் கோத்திரத்தாருந்தானே; பெனியமீன்புத்திரரின்பிரபு கிதெயோனியின்குமாரன் அபிதான்.
௨௩. லெக்கம்பார்க்கப்பட்ட அவனுடைய சேனை முப்பத்தையாயிரத்துநானூறுபேர்.
௨௪. லெக்கம்பார்க்கப்பட்ட எப்பிராயீமின் பாளயத்தாரெல்லாந் தங்கள்சேனைகளின்படியே நூற்றெண்ணாயிரத்தொருநூறுபேர். இவர்கள் பயணத்தில் மூன்றாம் பாளயமாய்ப்போபவர்கள்.

௨௫. தாணுடையபாளயத்துக்கொடியின்சேனைகள்வடக்கேயிறங்குவது; தாண்புத்திரரின்பிரபு அம்மிஷதாயின்குமாரன் அகியேசேர்.
௨௬. லெக்கம்பார்க்கப்பட்ட அவனுடைய சேனை அறுபத்திரண்டாயிரத்தெழுநூறுபேர்.
௨௭. அவன் கிட்டப்பாளய மிறங்குபவர்கள் ஆசேர்கோத்திரத்தார்; ஆசேர் கோத்திரத்தாரின்பிரபு ஒகிரானின்குமாரன் பாகியேல்.
௨௮. லெக்கம்பார்க்கப்பட்டஅவனுடைய சேனை நாற்பத்தோராயிரத்தைந்நூறுபேர்.
௨௯. பிறபாடு நவ்தலிகோத்திரத்தாருந்தானே; நவ்தலி புத்திரரின் பிரபு ஏனானின் குமாரன் அகிரா.
௩௰. லெக்கம்பார்க்கப்பட்ட அவனுடைய சேனை ஐம்பத்துமூவாயிரத்துநானூறுபேர்.
௩௧. லெக்கம்பார்க்கப்பட்டதாணின்பாளயத்தாரெல்லாம் நூற்றைம்பத்தேழாயிரத்தறுநூறுபேர். இவர்கள்தங்கள்கொடிகளின்படியே பின்பாளயமாய்ப்போபவர்களென்றார்.
௩௨. இவர்கள்இஸ்ரவேல்புத்திரருடையபிதாக்களின்வீட்டாரில்லெக்கம்பார்க்கப்பட்டவர்கள். பாளயங்களிலேதங்கள் தங்கள் சேனைகளின்படியேலெக்கம்பார்க்கப்பட்டவர்களெல்லாம் அறுநூறு மூவாயிரத்தைந்நூற்றைம்பதுபேராயிருந்தார்கள்.
௩௩. லேவியரோவெனில்கர்த்தர்மோசேக்குக்கற்பித்தபடி, இஸ்ரவேல் புத்திரருக்குள்ளே லெக்கம்பார்க்கப்பட்டதில்லை.
௩௪. கர்த்தர்மோசேக்குக்கற்பித்தபடியெல்லாம் இஸ்ரவேல்புத்திரர்செய்து, அப்படியே தங்கள் கொடிகளின்கீழ்ப்பாளயமிறங்கி, அப்படியவரவர்தங்கள் பிதாக்களுடையவீட்டுவங்கிஷங்களின்படியே பயணப்பட்டுப்போனார்கள்.

## ௩. அதிகாரம்.

கர்த்தர்இஸ்ரவேல்புத்திரரில்முதற்பேறானவர்களுக்குப்பதிலாகலேவியரைப்பரிசுத்தஸ்தலத்தின்பணிவிடைவேலைக்குங்காவலுக்குமாயெடுத்துக் கொண்டது.

சீனாய்ப்பருவதத்திலே கர்த்தர்மோசேயோடே பேசினநாளிலே ஆரோன்மோசேயென்பவர்களுடைசந்ததிகளின்படியாவது:
௨. ஆரோனுடையகுமாரர் ஆரோனுக்குமுதற்பிறந்தவனாகிய நாதாபும்அபியூவும் எலெயாசா

ரும

ருமித்தாமாருமென்னப்பட்டவர்கள்.

௩. ஆசாரியவூழியஞ்செய்கிறதற்குக்கைகள் நிரப்பப்பட்டு அபிஷேகம்பெற்ற ஆசாரியரான ஆரோனுடைய குமாரரின் நாமங்களிவைகள்தான்.

௪. ஆனாலுநாதாப்பும் அபியூவுஞ் சீனாயின் வனாந்தரத்தில் அன்னிய அக்கினியை கற்தருக்கு முன்பாகக்கொண்டுவருகையில் கற்தருக்கு முன்பாகச் செத்தார்கள். அவர்களுக்குப் பிள்ளைகளில்லை. எலெயாசாருமித்தாமாரும் மோசேயினிடத்தில் தங்கள் தகப்பனாகிய ஆரோனுக்கு முன்பாக ஆசாரியவூழியஞ்செய்தார்கள்.

௫. கற்தர் மோசேயோடே பேசிச்சொன்னதாவது:

௬. நீ லேவிகோத்திரத்தாரைச்சேர்த்து, ஆசாரியனாகிய ஆரோனுக்கு முன்பாக அவனுக்குப் பணிவிடைசெய்யும்படிச்செய்.

௭. அவர்கள் வாசஸ்தலத்தின் பணிவிடைவேலையைச்செய்யும்படிக்கு, ஆசரிப்புக்கூடாரத்துக்கு முன்பாக அவனுடைய காவலையும் எல்லாச்சபையின் காவலையுங்காத்து,

௮. வாசஸ்தலத்தின் பணிவிடைவேலையைச் செய்யும்படிக்கு ஆசரிப்புக்கூடாரத்தின் எல்லாத்தட்டுமுட்டுகளையும் இஸ்றவேல்புத்திரரின் காவலையுங்காக்கக்கடவார்கள்.

௯. ஆகையால் லேவியரை ஆரோனுக்கும் அவன் குமாரருக்குங் கொடுப்பாயாக. இஸ்றவேல்புத்திரரில் இவர்கள் அவனுக்குக்கொடுக்கவே கொடுக்கப்பட்டவர்கள்.

௰. ஆரோனையும் அவன் குமாரரையும் நீ வைத்து, தங்கள் ஆசாரிய வூழியத்தை விசாரிப்பதற்காக வைக்கக்கடவாய். சேருகிற அன்னியன் கொல்லப்படக்கடவனென்றார்.

௰௧. பின்னையுங் கற்தர் மோசேயோடே பேசிச்சொன்னதாவது:

௰௨. இதோ இஸ்றவேல்புத்திரரில் கெற்பந்திறந்து பிறக்கிற முதற்பேறான யாவுக்கும் பதிலாக நாம் லேவியரை இஸ்றவேல் புத்திரரின் நடுவில், அவர்கள் நம்முடையவர்களாயிருக்க, எடுத்துக்கொண்டோம்.

௰௩. ஏனெனில் முதற்பேறானதெல்லாம் நம்முடையது, நாம் எகிப்துதேசத்தில் முதற்பேறான யாவையுஞ் சங்கரித்தநாளிலே இஸ்றவேலில் மனுஷன் முதற்கொண்டு மிருகமட்டுமுள்ள முதற்பேறுகளையெல்லாம் நமக்குப் பரிசுத்தமாக்கினதினாலே அதுகள் நம்முடையதாயிருக்கும், நாம் கற்தரென்றார்.

௰௪. பின்னையுங் கற்தர் சீனாயின் வனாந்தரத்தில் மோசேயோடே பேசிச்சொன்னதாவது:

௰௫. லேவிபுத்திரரை யவர்கள் பிதாக்களின் வீட்டு வங்கிஷங்களின்படியே லெக்கம்பார், அவர்களிலொரு மாதம் முதற்கொண்டு மேற்பட்ட வயதுள்ள ஆண்பிள்ளைகளையெல்லாம் லெக்கம்பார்ப்பாயாகவென்றார்.

௰௬. அப்போ கற்தருடைய வாக்கின்படி மோசே அவர்களைத் தனக்குக் கற்பிக்கப்பட்டபிறகாரமாக லெக்கம்பார்த்தான்.

௰௭. லேவியின் குமாரர் தங்கள் நாமங்களின்படியே கெர்சோன், கேகாத், மேறாரி என்னப்பட்டவர்கள்.

௰௮. தங்கள் வங்கிஷங்களாய்ப் பிரிந்த கெர்சோனுடைய குமாரரின் நாமங்கள் லிப்னியுஞ் சீமேயியுந்தானே.

௰௯. தங்கள் வங்கிஷங்களாய்ப் பிரிந்த கேகாத்துடைய குமாரர் அம்ராம், இத்செயார், எபிரோன், ஊசியேல்,

௨௰. தங்கள் வங்கிஷங்களாய்ப் பிரிந்த மேறாரியினுடைய குமாரர் மகெலியும் மூசியுந்தானே; இதுகளே லேவியருடைய பிதாக்களின் வீட்டு வங்கிஷங்கள்.

௨௧. கெர்சோனால் லிப்னீயரின் வங்கிஷமுஞ் சீமேயியர் வங்கிஷமுமிருந்தது; இதுகளே கெர்சோனியரின் வங்கிஷங்கள்.

௨௨. அவர்களிலொருமாதமுதற்கொண்டு மேற்பட்ட வயதுள்ள ஆண்பிள்ளைகளெல்லாம் எண்ணப்பட்டபோது, லெக்கம்பார்க்கப்பட்டவர்கள் ஏழாயிரத்தைஞ்ஞூறுபேராயிருந்தார்கள்.

௨௩. கெர்சோனியரின் வங்கிஷங்கள் வாசஸ்தலத்தின் பிறகாலே மேற்கேபாளையமிறங்குவது.

௨௪. கெர்சோனியருடைய தகப்பன்வீட்டுப் பிரபு லாயேலின் குமாரனாகிய எலியாசாப்.

௨௫. ஆசரிப்புக்கூடாரத்திலே கெர்சோன் புத்திரரின் காவலாவது: வாசஸ்தலமுங் கூடாரமும் அதின்மூடியும் ஆசரிப்புக்கூடார வாசல்மறைவும்,

௨௬. வாசஸ்தலத்தண்டையிலும் பெலிபீடத்தண்டையிலுஞ் சுற்றிலுமிருக்கிற பிறகாரத்தின் வெளியாடைகளும் பிறகார வாசல் மறைவும் அதின் வேலைக்கெல்லாம் அடுத்த அதின் கயறுகளுந்தானே.

௨௭. கேகாத்தினால் அம்ராமியரின் வங்கிஷ



மும

மும் இத்செயாரின வங்கிஷமும் எபிரோனியரின வங்கிஷமும் உசியேலரின வங்கிஷமுமிருந்தது; இதுகளே கேகாத்தியரின வங்கிஷங்கள்.

௨௮. ஒருமாதமுதற்கொண்டுமேல்பட்ட வயதுள்ள ஆண்பிள்ளைகளெல்லாம் எண்ணப்பட்டபோது, பரிசுத்தஸ்தலத்தின காவலைக்காப்பவர்கள் எண்ணாயிரத்தறுநூறுபேராயிருந்தார்கள்.

௨௯. கேகாத்புத்திரரின வங்கிஷங்கள் வாசஸ்தலத்தின தென்புறமான பக்கத்திலே பாளையமிறங்குவது.

௩௰. அவர்களின பிரபு உசியேலின குமாரனாகிய எலிசாப்பான்.

௩௧. அவர்களுட காவலாவது: பெட்டியும் மேசையுங் குத்துவிளக்கும் பீடங்களும் ஆராதனை செய்யும் பரிசுத்த ஸ்தலத்தின முட்டுகளும், மறைவும் அதினுட எல்லாவேலையுந்தானே.

௩௨. லேவியருட பிரபுக்களின பிரபு ஆசாரியனாகிய ஆரோனின குமாரன எலெயாசார்தானே; அவன பரிசுத்த ஸ்தலத்தின காவலைக்காக்கிறவர்களின விசாரிப்புக்காறனாயிருப்பவன.

௩௩. மெறாரியிலே மகேலியரின வங்கிஷமும் மூசியரின வங்கிஷமுமிருந்தது; இதுகளே மெறாரியரின வங்கிஷங்கள.

௩௪. அவர்களிலொருமாத முதற்கொண்டு மேல்பட்டவயதுள்ள ஆண்பிள்ளைகளெல்லாம் எண்ணப்பட்டபோது, லெக்கம்பார்க்கப்பட்டவர்கள ஆறாயிரத்திருநூறுபேராயிருந்தார்கள.

௩௫. அவர்கள பிரபு அபியாயெலின குமாரனாகிய சூரியெல், இவர்கள வாசஸ்தலத்தின வடபுறமான பக்கத்திலே பாளையமிறங்குவது.

௩௬. அவர்களுட காவல்விசாரிப்பாவது: வாசஸ்தலத்தின பலகைகளுந் தாப்பாள்களுந் தூண்களுங் கால்களும், அதினுட எல்லா முட்டுகளும் அதினுடைய எல்லாவேலையும்,

௩௭. சுற்றுப்பிறகாரத்தின தூணகளும் அதுகளின கால்களுங் கூச்சுகளுங் கயறுகளுந்தானே.

௩௮. ஆசரிப்புக்கூடாரமாகிய வாசஸ்தலத்துக்கு முன்பாக சூரியனுதிக்குங் கீழ்புறத்திலே மோசேயும் ஆரோனும் அவன குமாரருங் கூடாரங்களைப்போட்டிறங்கி, இஸ்றுவேல்புத்திரரின காவலுக்கு வதிலாகப்பரிசுத்தஸ்தலத்தின காவலைக்காப்பவர்கள், சேருகிற அன்னியன கொல்லுண்பானாக.

௩௯. மோசேயும் ஆரோனுங் கற்தருடவாக்கினபடியே லேவியரில் அவர்களுட வங்கிஷங்களின்படியே லெக்கம்பார்த்தவொருமாதமுதற்கொண்டிருந்த ஆண்பிள்ளைகளெல்லாம் இருபத்தீராயிரம்பேராயிருந்தார்கள்.

௪௰. அதினபிறகு கற்தர் மோசேயோடே சொன்னதாவது: நீ இஸ்றுவேல் புத்திரரிலொருமாதமுதற்கொண்டு மேல்பட்ட வயதுள்ள முதல்பேறான ஆண்பிள்ளைகளையெல்லாம் லெக்கம்பார்த்து, அவர்கள நாமங்களின தொகையையேற்றி,

௪௧. லேவியரை இஸ்றுவேல்புத்திரரிலுள்ள முதல்பேறானயாவுக்கும் வதிலாகவும், லேவியரின மிருகசீவனகளை இஸ்றுவேல்புத்திரரின மிருகசீவனகளிலுள்ள தலையீற்றான யாவுக்கும் வதிலாகவும் நமக்கெடுத்துக்கொள்; நாம கற்தரென்றார்.

௪௨. அப்போ மோசே, கற்தர் தனக்குக்கற்பித்தபடியே, இஸ்றுவேல்புத்திரரிலுள்ள முதல்பேறானயாவரையும் லெக்கம்பார்த்தான.

௪௩. ஒருமாதமுதற்கொண்டுமேல் பட்ட வயதாயிருந்து பேர்பேராக எண்ணப்பட்ட முதல்பேறான ஆண்பிள்ளைகளெல்லாம் இருபத்தீராயிரத்திருநூற்றெழுபத்துமூன்றுபேராயிருந்தார்கள.

௪௪. அப்போ கற்தர் மோசேயோடே பேசிச்சொன்னதாவது:

௪௫. நீ லேவியரை இஸ்றுவேல்புத்திரரிலுள்ள எல்லாமுதல்பேறுக்கு வதிலாகவும், லேவியரின மிருகசீவனகளை யவர்களுட மிருகசீவனகளுக்கு வதிலாகவுமெடுத்துக்கொள், லேவியர் நம்முடையவர்களாயிருப்பார்கள்; நாம கற்தர்.

௪௬. இஸ்றுவேல்புத்திரருடைய முதல்பேறுகளில் லேவியரின லெக்கத்துக்கதிகமாயிருந்து மீட்கப்படவேண்டிய இருநூற்றெழுபத்துமூன்றுபேருக்கோவெனில்,

௪௭. நீ ஒவ்வொரு தலைக்கிடாக அவ்வைந்து சேக்கலைப்பரிசுத்தசேக்கல் கணக்காக வாங்குவாயாக, அந்தச்சேக்கல் இருபதுகேரா.

௪௮. அவர்களுட லெக்கத்துக்கதிகமாயிருந்து மீட்கப்பட்டவர்களுடைய அந்தத்திரவியத்தை ஆரோனுக்கும் அவன குமாரருக்குங் கொடுப்பாயாகவென்றார்.

௪௯. அப்படியே லேவியராலே மீட்கப்பட்டவர்களின லெக்கத்துக்கதனமாயிருந்து இன்னமும் மீட்கப்பட வேண்டியவர்களுக்கிடாக மோசே இஸ்றுவேல் புத்திரருடைய முதல்பேறானவர்களின கையிலே,

௫௰. ஆயிரத்துமுந்நூற்றறுபத்தைந்துசேக

கலை

கன்னிகைதிரவியத்தைப்பரிசுத்தஸ்தலத்துச்சேக்கல்கணக்காக வாங்கி,

௫௧. அதைக்கற்தருடையவாக்கின்படியே ஆரோனுக்கும்அவன்குமாரருக்குங்கற்தர்தனக்குக்கற்பித்தபிறகாரமாகக்கொடுத்தான்.

## ௪. அதிகாரம்.

பிரயாணப்படுகிறபோதெல்லாம்லேவியர்செய்யவேண்டியவேலையின்கட்டளை.

கற்தர்மோசேயோடும் ஆரோனோடும் பேசிச்சொன்னதாவது:

௨. லேவியின்புத்திரருக்குளிருக்கிறகோகாத்புத்திரருடபிதாக்களின் வீட்டுவங்கிஷங்களில்,

௩. முப்பதாம்வயது முதற் கொண்டு ஐம்பதாம்வயது மட்டுமிருந்து ஆசரிப்புக்கூடாரத்திலேவேலைசெய்யுஞ்சேவிக்குள்பட்டத்தக்களெல்லாரையுமெண்ணித்தொகையேற்று.

௪. ஆசரிப்புக்கூடாரத்திலேகோகாத்புத்திரரின் பணிவிடை பரிசுத்தத்துக்குப்பரிசுத்தமானதாக்கடுத்தது.

௫. பாளியம்பயணப்படுகையில்ஆரோனும் அவன்குமாரரும்வந்துமறைவானதிரையையிறக்கி, சாட்சியின்பெட்டியையதினால்மூடி,

௬. அதின்மேலே தகசுத்தோல்மூடியைப் போட்டு, அதின் மீதில்சுத்தநீலமான துப்பட்டியைவிரித்து, அதின்வாரைகளைப்பாய்ச்சி,

௭. சமுகத்தப்பங்களுடமேசையின்மேலேஇளநீலத்துப்பட்டியைவிரித்து,கலங்களையுந்தூபக்கிண்ணிகளையுங் கரகங்களையும் மூடுகிறதட்டுகளையுமதின்மேலேவைப்பார்களாக. எப்போதுமவைக்கும்அப்பமும் அதின்மேலிருக்கக்கடவது.

௮. அவர்கள அதுகளின்மேலே சிவப்புத்துப்பட்டியைவிரித்து,அதைத்தகசுத்தோல்மூடியினால் மூடி, அதின்வாரைகளைப்பாய்ச்சி,

௯. இளநீலத்துப்பட்டியைவாங்கி,வெளிச்சத்தின்விளக்குத்தண்டையும்அதின் விளக்குகளையுமதின்கத்திரிகளையும் விளக்கணைக்கிறஎற்றினங்களையும்,அதுக்கெண்ணெய்வார்க்கிறக்கல்பாத்திரங்களையுமமூடி,

௰. அதையுமதினுடஎல்லாமுட்டுகளையுந்தகசுத்தோல்மூடியிலேபோட்டு, அதைவாரைகளின்மேலேவைத்து,

௰௧. பொற்பீடத்தின்மேலேஇளநீலத்துப்பட்டியைவிரித்து, அதைத்தகசுத்தோல் மூடியினால்மூடி, அதின்வாரைகளைப்பாய்ச்சி,

௰௨. தாங்களபரிசுத்தஸ்தலத்தில்ஆராதனைசெய்யுமஎல்லாப்பணிமுட்டுகளையுமெடுத்து,இளநீலத் துப்பட்டியிலே போட்டு, தகசுத்தோல்மூடியினாலேமூடி,வாரைகளின்மேலேவைத்து,

௰௩. பலிபீடத்தைச்சாம்பலறவிளக்கி, அதின்மேலொத்தாம்பாரத்துப்பட்டியைவிரித்து,

௰௪. தாங்கள அதின்மேலேஆராதனைசெய்யுமஅதினுடசகலபணிமுட்டுகளாகிய கலசங்களையுமமுள்த்தறடுகளையுஞ்சாம்பலெடுக்குங்கரண்டிகளையுங் கலங்களையும பலிபீடத்தினெல்லாமுட்டுகளையுமஅதின்மேலேவைத்து, அதின்மேலே தகசுத்தோல் மூடியைவிரித்து, அதின்வாரைகளைப்பாய்ச்சக்கடவார்கள.

௰௫. பாளியம பயணப்படுகையில் ஆரோனுமஅவன குமாரருமபரிசுத்தஸ்தலத்தையுமஅதினுடஎல்லாமுட்டுகளையுமமூடித்தீர்ந்தத்துக்குப்பிறபாடு,கோகாத்புத்திரரெடுத்துப்போறத்துக்கு வரக்கடவார்கள, அவர்களசாகாதபடிக்குப்பரிசுத்தமானதைத்தொட வேண்டாம, ஆசரிப்புக்கூடாரத்திலேகோகாத்புத்திரரின்சுமைஇதுதான.

௰௬. ஆசாரியனாகிய ஆரோனின்குமாரனாகிய எலெயாசார்விசாரிப்பதேதென்றால், விளக்கின்னெண்ணெயையுஞ்சுகந்தங்களின் தூபவற்கமும அனுடக்காணிக்கையும அபிஷேகத்தெண்ணெயையுமவாசஸ்தலமனைத்துமஅதிலேபரிசுத்தஸ்தலத்திலுமஅதின்பணிமுட்டுகளிலுமிருக்கிறதவைத்துமஅவனவிசாரிப்பாயிருப்பதாகவென்றார்.

௰௭. கற்தர்மோசேயோடுமஆரோனோடும பேசிச்சொன்னதாவது:

௰௮. கோகாத்வங்கிஷத்தாரின் கோத்திரத்தைலேவியருக்குளளேசங்காரமாகப்பண்ணீர்களாக.

௰௯. அவர்களபரிசுத்தத்துக்குப்பரிசுத்தமானதைக்கிட்டுகையில் சாகாமல உயிரோடிருக்கும்படிக்குநீங்கள அவர்களுக்காகச்செய்யவேண்டியதேதெனில்,

௨௰. பரிசுத்தமானதைமூடக்கொள்ள, அவர்கள பார்க்கிறதுக்குள்பிறவேசித்துச்சாகாதபடிக்குஆரோனும அவன்குமாரரும வந்து, அவர்களில் அவனவனை அவன வேலைக்குமஅவனசுமைக்குமவைக்கக்கடவார்களென்றார.

௨௩. பெலிஸ்தரின் பாளையமோவென்றால் மிக்மாசிலிருந்து போகிற வழியாய்ப் புறப்பட்டு வருகிறதாயிருந்தது.

## ௰௪. அதிகாரம்.

### இஸ்ரவேல் பெலிஸ்தரைச் ஜெயங்கொண்டது.

ஒருநாளிலே சம்பவித்ததேதெனில், சவுலின் குமாரனாகிய யோனத்தான் தன் ஆயுதங்களைப் பிடிக்கிற பிள்ளையாண்டானுடனே: நமக்கெதிராக அந்தண்டையிலிருக்கிற பெலிஸ்தரின் தாவளையத்துக்குக் கடந்துபோவோம் வா என்று சொல்லி, அதைத் தன் தகப்பனுக்கு அறிவிக்காதிருந்தான்.

௨. சவுலோவென்றால் கிபேயாவின் கடைசியிலே மிக்ரோனிலே ஒரு மாதளமரத்தின் கீழிருந்தான், அவனோடேகூட இருந்த சனம் ஏறக்குறைய அறுநூறுபேராயிருந்தார்கள்.

௩. சீலோவிலே கர்த்தருடைய ஆசாரியனாயிருந்த ஏலியின் குமாரனாகிய பினேகாசுக்குப் பிறந்த இக்கபோத்தின் சகோதரனும் அகித்தோபின் குமாரனுமாகிய அகியா என்கிறவன் ஆசாரியசால்வையை அணிந்தவனாயிருந்தான். யோனத்தான் போனதைச் சனம் அறியாதிருந்தது.

௪. யோனத்தான் பெலிஸ்தரின் தாவளையத்துக்குக் கடந்துபோகப் பார்த்த வழிகளின் நடுவே இந்தண்டை ஒரு கன்மலைக்குன்றும் அந்தண்டை ஒரு கன்மலைக்குன்றுமிருந்தது. ஒன்று போத்சேஸ் என்றும் மற்றொன்று சேனே என்றும் பேர்கொண்டது.

௫. அந்தக் குன்றுகளில் ஒன்று வடக்கே மிக்மாசுக்கெதிராகவும் மற்றொன்று தெற்கே கிபேயாவுக்கெதிராகவுமிருந்தது.

௬. யோனத்தான் தன் ஆயுதங்களைப் பிடிக்கிற பிள்ளையாண்டானோடே: சுன்னத்தில்லாதவர்களின் அந்தத் தாவளையத்துக்குக் கடந்துபோவோம் வா, ஒருவேளை கர்த்தர் நமக்காக ஒரு காரியஞ்செய்வார், ஏனென்றால் அநேகம்பேரைக் கொண்டாகிலுங் கொஞ்சம்பேரைக் கொண்டாகிலும் ரட்சிக்கக் கர்த்தருக்குத் தடையில்லையென்றான்.

௭. அப்போதவன் ஆயுதங்களைப் பிடிக்கிறவன் அவனுடனே: உம்முடைய இருதயத்திலிருக்கிறதையெல்லாஞ் செய்யும், அப்படிப் போம், இதோ உம்முடைய மனதுக்கேற்றபடி நானும் உம்மோடேகூட வருகிறேனென்றான்.

௮. அப்போ யோனத்தான் சொன்னதாவது: இதோ நாங்கடந்து அந்த மனுஷரண்டைக்குப் போகிறவர்களாய் அவர்களுக்கு நம்மைக் காண்பிப்போம்,

௯. நாங்கள் உங்களண்டைக்கு வருமட்டும் நில்லுங்கோளென்று நம்மோடே சொன்னார்களானால், நாம் அவர்களண்டைக்கேறிப்போகாமல் நம்முட நிலையிலே நிற்போம்;

௰. எங்களண்டைக்கேறி வாருங்கோளென்றார்களேயாகில், ஏறிப்போவோம், ஏனென்றால் கர்த்தர் அவர்களை நம்முடைய கையிலே ஒப்புக்கொடுத்தார், இது நமக்கடையாளமென்றான்.

௰௧. அப்படியே அவர்களிருவரும் பெலிஸ்தரின் தாவளையத்துக்குத் தங்களைக் காண்பித்தார்கள். அப்போ பெலிஸ்தர்: இதோ எபிரேயர் ஒளித்துக்கொண்டிருந்த வளைகளைவிட்டுப் புறப்படுகிறார்களென்று சொல்லி,

௰௨. தாவளையமிருக்கிற மனுஷர் யோனத்தானையும் அவன் ஆயுதங்களைப் பிடிக்கிறவனையும் பார்த்து: எங்களண்டைக்கேறி வாருங்கோள், உங்களுக்குப் புத்திகற்பிப்போமென்றார்கள். அப்போ யோனத்தான் தன் ஆயுதங்களைப் பிடிக்கிறவனோடே: என் பிறகாலே ஏறிவா, ஏனென்றால் கர்த்தர் அவர்களை இஸ்ரவேலின் கையிலே ஒப்புக்கொடுத்தாரென்று சொல்லி,

௰௩. யோனத்தான் தன் கைகளாலுந் தன் கால்களாலுந் தவழ்ந்தேறினான், அவன் ஆயுதங்களைப் பிடிக்கிறவன் அவன் பிறகாலே ஏறினான். அப்போதவர்கள் யோனத்தானுக்கு முன்பாக விழுந்தார்கள், அவன் ஆயுதங்களைப் பிடிக்கிறவன் அவன் பிறகாலே வெட்டிக்கொண்டே போனான்.

௰௪. யோனத்தானும் அவன் ஆயுதங்களைப் பிடிக்கிறவனும் அடித்த அந்த முந்தின அடியிலே ஏறக்குறைய இருபதுபேர் அரையேர்நிலமான விஸ்தாரத்தில் விழுந்தார்கள்.

௰௫. அப்போ வெளியிலிருந்த பாளையத்திலும் சகல சனத்திலும் பயங்கரமுண்டாய், தாவளையமிருந்தவர்களுங் கொள்ளையிடப்போனதண்டுங்கூடத் திகிலடைந்ததினாலே பூமியதிர்ந்தது, ஏனெனில் அது பராபரனாலுண்டான பயங்கரமாயிருந்தது.

௰௬. இதோ அந்த ஏராளமான கூட்டங்கலைந்து ஒருத்தர்மேலொருத்தர் விழுகிறதைப் பென்யமீன் கிபேயாவிலே சவுலுக்கிருந்த சாமக்காரர் கண்டார்கள்.

௰௭.

யஎ. அப்போ சவுல் தன்னோடே கூட இருக்கிற சனத்துடனே: நம்மிடத்திலிருந்து போனவர்கள் ஆரென்று லெக்கம் பாருங்கோளேனென்றான். அவர்கள் லெக்கம் பார்க்கிறபோது, இதோ யோனத்தானும் அவன் ஆயுதங்களைப் பிடிக்கிறவனுமில்லாதிருந்தார்கள்.

யஅ. அப்போ சவுல் அகியாவுடனே: பராபரனுடைய பெட்டியைச் சேரக் கொண்டுவாவென்றான்; ஏனென்றால் பராபரனுடைய பெட்டி அந்நாளில் இஸ்ருவேல் புத்திரரிடத்திலிருந்துது.

யகூ. இப்படிச் சவுல் ஆசாரியனோடே பேசுகையில், பெலிஸ்தரின் பாளயத்திலுண்டான கலக்கம் வெகுவதிகமாச்சுது. அப்போ சவுல் ஆசாரியனோடே: இருக்கட்டுமென்றான்.

உய. சவுலும் அவனோடிருந்த சனமும் ஒருத்தரையொருத்தர் கூப்பிட்டு யுத்தகளத்துக்கு வந்தார்கள், இதோ ஒருத்தர் பட்டயம் ஒருத்தருக்கு விரோதமாயிருந்தும் மகா பெரிய அமளியாச்சுது.

உக. முந்நாளிலே பெலிஸ்தரிடத்திலிருந்து, அவர்களோடே கூடப் பாளயத்திலே திரிந்து வந்தேறின எபிரேயருஞ் சவுலோடும் யோனத்தானோடுமிருக்கிற இஸ்ருவேலரோடே கூடிக்கொண்டார்கள்.

உஉ. எப்பிராயீம் மலைகளிலொளித்துக்கொண்டிருந்த சகல இஸ்ருவேலரும் பெலிஸ்தர் முறிந்தோடுகிறதைக் கேட்டபோது, இவர்களும் யுத்தத்திலே அவர்களையோட்டித் தொடர்ந்தார்கள்.

உங. இப்படிக் கர்த்தர் அன்றையத்தினம் இஸ்ருவேலை ரட்சிக்கிறதினாலே அந்த யுத்தம் பெத்தாவேன் மட்டுக்கும் நடந்துது.

உச. ஆனால் இஸ்ருவேலர் அன்றையத்தினம் வெகு வருத்தமடைந்தார்கள், ஏனென்றால் நானென் சத்துருக்களைக் கையிலே பழிவாங்கும்படிக்கு, எவன் சாயங்கால மட்டும் பொறுக்காமல் போசனஞ் சாப்பிடுகிறானோ அவன் சபிக்கப்பட்டவனென்று சவுல் சனத்தையாணையிட்டான், ஆகையால் சனமெல்லாம் போசனம் ருசிக்காதிருந்தார்கள்.

உரு. தேசத்தின் சனமெல்லாம் ஒரு காட்டிலே வந்தார்கள், அங்கே வெளியிலே தேன் கட்டியிருந்துது.

உசு. சனங் காட்டிலே வந்தபோது, இதோ தேனொழுகிக்கொண்டிருந்துது, ஆனால் ஒருத்தரும் அதைத் தன் கையினாலே தொட்டுத் தன் வாயைக் கெடுத்துக்கொண்டதில்லை, ஏனென்றால் சனம் அந்த ஆணையினிமித்தியம் பயப்பட்டுது.

உஎ. யோனத்தானோவென்றால் தன் தகப்பன் சனத்தையாணையிட்டதைக் கேழ்விப்படாதிருந்து, தன் கையிலிருந்த கோலை நீட்டி அதின் முனையினாலே தேன் கூண்டிலே குத்தி அதையெடுத்துத் தன் வாயிலே போட்டுக்கொண்டான், அதினாலவன் கண்கள் தெளிவாச்சுது.

உஅ. அப்போ சனத்திலொருவன்: இன்றைக்குப் போசனஞ் சாப்பிடுகிறவன் சபிக்கப்பட்டவனென்றும் உம்முடைய தகப்பனார் சனத்தை யாணையிட்டே இட்டார், ஆகையினாலே சனம் விடாய்த்திருக்குதென்றான்.

உகூ. அப்போ யோனத்தான் சொன்னதாவது: என் தகப்பன் தேசத்தின் சனத்தைக் கலக்கமாக்கினார், நானிந்தத் தேனிலே கொஞ்சம் ருசித்ததினாலே என் கண்கள் தெளிவாச்சுதென்று பாருங்கோளேன்.

நய. இன்றையத்தினஞ் சனந்தங்களுக்ககப்பட்ட தங்கள் சத்துருக்களின் கொள்ளையிலேதாகிலும் போசிக்கவே போசித்திருந்தால் எத்தவிணக்கமாயிருக்கும், இப்போதோவென்றால் பெலிஸ்தரை முறியடிக்குதல் அத்தனை பெரியதாயிராதேயென்றான்.

நக. அவர்கள் அன்றையத்தினம் மிக்மாசிலிருந்து ஆயலோன் மட்டும் பெலிஸ்தரை முறியடித்தபோது சனம் மெத்தவும் விடாய்த்திருந்துது.

நஉ. அப்போ சனங் கொள்ளையின் மேல் பறப்பாகி, ஆடுகளையும் மாடுகளையுங் கன்றுக்குட்டிகளையும் பிடித்துத் தரையிலே போட்டடித்து, இரத்தத்தோடிருக்கிறதாகப் போசித்தார்கள்.

நங. அப்போ: இதோ இரத்தத்தோடிருக்கிறதைப் போசிக்கிறதினாலே சனங்கள் கர்த்தருக்குக் கோரத பாவஞ் செய்கிறார்களென்று சவுலுக்கறிவித்தார்கள். அப்போதவன்: நீங்கள் துரோகம் பண்ணினீர்கள், இன்னேரமே ஒரு பெரிய கல்லை என்னண்டைக்கு உருட்டிக்கொண்டுவாருங்கோளென்றும்,

நச. நீங்கள் சனத்துக்குள்ளே சிதறித் திரிந்து: இரத்தத்தோடேயிருக்கிறதைச் சாப்பிடுகிறதினாலே கர்த்தருக்குக் கோரத பாவஞ் செய்யாதபடிக்கு அவரவர் தங்கள் மாட்டையும் அவரவர் தங்கள் ஆட்டையும் என்னண்டைக்குக் கொண்டுவந்து, இங்கே அடித்து, பிறபாடு சாப்பிடவேணுமென்றவர்

களு

ளுக்குச் சொல்லுங்கோளென்று சொன்னான். ஆகையால் சனமெல்லாம் அவரவர் தங்கள் மாடுகளையன்று இராத்திரி தங்கள் கையினாலே கொண்டுவந்து, அங்கே அடித்தார்கள்.

௩௫. பிற்பாடு சவுல் கர்த்தருக்கு ஒரு பீடத்தைக் கட்டினான், அது அவன் கர்த்தருக்குக் கட்டின முந்தின பீடமானது.

௩௬. அதற்குப்பிறகு சவுல்: நாமிந்த இராத்திரியிலே பெலிஸ்தரின் பின்னாலே இறங்கிப் போய் விடியக்காலம் வெளிச்சமாகுமட்டும் அவர்களைக் கொள்ளையிட்டு, அவர்களில் ஒருத்தனையும் மீதியாக வைக்காதிருப்போமாக வென்றதற்கு அவர்கள்: உம்முடைய கண்களுக்கு நல்லமானபடியெல்லாஞ் செய்யுமென்றார்கள். ஆனால் ஆசாரியன்: இங்கே பராபரன் சந்நிதிக்குச் சேரக்கடவோமென்றான்.

௩௭. அப்படியே, பெலிஸ்தருக்குப் பின்னாக இறங்கிப்போவேனோ, அவர்களை இஸ்ரவேலின் கையிலே ஒப்புக்கொடுப்பீரோ வென்று சவுல் பராபரனைக் கேட்டான், ஆனால் வரந்த நாளிலே அவனுக்கு மறுவுத்தரவு அருளினதில்லை.

௩௮. அப்போ சவுல் சொன்னதாவது: சனத்தின் சகல சேனைகளே, நீங்களிங்கே சேர்ந்து, எதினாலே இன்று இந்தக் குற்றமிருக்குதென்று அறிந்து பாருங்கோள்.

௩௯. ஏனெனில் அது என் குமாரனாகிய யோனத்தான் பேரிலிருந்தாலும் அவன் சாகவே சாகவேணுமென்று இஸ்ரவேலை இரட்சிக்கிற கர்த்தருடைய சீவனைக் கொண்டு சொல்லுகிறேனென்றான். ஆனால் சகல சனத்திலும் ஒருத்தனும் அவனுக்குப் பிரத்தியுத்தாரஞ் சொல்லவில்லை.

௪௰. அதற்குப்பிறகு அவன் இஸ்ரவேலரெல்லாம்: நீங்கள் அந்தப்புறத்திலே இருங்கோள், நானும் என் குமாரனாகிய யோனத்தானும் இந்தப் புறத்திலிருப்போமென்றான். சனஞ் சவுலுடனே: உம்முடைய கண்களுக்கு நல்லமானபடி செய்யுமென்றார்கள்.

௪௧. அப்போ சவுல் இஸ்ரவேலின் பராபரனை நோக்கி: நிதானமாய்க் கட்டளையிடுவீராகவென்றான். அப்போ யோனத்தானுஞ் சவுலும் பிடிபட்டார்கள். சனமோ தப்பிப்போச்சுது.

௪௨. என்னுக்கும் என் குமாரனாகிய யோனத்தானுக்கும் சீட்டுப் போடுங்கோளென்று சவுல் சொன்னபோது யோனத்தான் பிடிபட்டான்.

௪௩. அப்போது சவுல் யோனத்தானோடே: நீ செய்ததென்னவென்று எனக்கறிவியென்றான். யோனத்தான் அவனுக்கறிவித்தது: என் கையிலிருக்கிற கோலின் முனையினாலே நான் கொஞ்சந் தேனெடுத்து ருசிக்கவே ருசித்தேன், இதோ அதுக்காக நான் சாகவேணுமென்றான்.

௪௪. அப்போது சவுல்: யோனத்தானே நீ சாகவே சாகவேணும், இல்லாவிட்டால் பராபரன் எனக்கிப்படியும் அப்படியுஞ் செய்யக்கடவாரென்றான்.

௪௫. சனமோ வென்றால் சவுலுடனே: இஸ்ரவேலிலே இந்தப் பெரிய இரட்சிப்பைச் செய்த யோனத்தான் கொலை செய்யப்படலாமோ; அது வேண்டாம், அவன் தலையிலிருக்கிற ஒரு மயிருந் தரையிலே விழப்போகிறதில்லையென்று கர்த்தருடைய சீவனைக் கொண்டு சொல்லுகிறோம். ஏனெனில் பராபரன் துணையாய் அவன் இன்று காரியம் நடப்பித்தானென்றார்கள். அப்படியே யோனத்தான் சாகாதபடிக்குச் சனம் அவனை மீட்டுக்கொண்டது.

௪௬. சவுல் பெலிஸ்தரைத் தொடருகிறதை விட்டுவந்தேறினான். பெலிஸ்தர் தங்கள் தலத்துக்குப் போய் விட்டார்கள்.

௪௭. இப்படி சவுல் இஸ்ரவேலையாளுகிற இராச்சியபாரத்தைக் கட்டிக்கொண்டது முதல், சுற்றிலுமிருக்கிற தன்னுடைய எல்லாச் சத்துருக்களுமாகிய மோவாபியருக்கும் அம்மோன் புத்திரருக்கும் ஏதோமுக்கும் சோபாவின் இராசாக்களுக்கும் பெலிஸ்தருக்கும் விரோதமாகவும் யுத்தம்பண்ணி, எவர்கள் மேலே திரும்பினானோ அவர்களையெல்லாம் ஆக்கினையிட்டான்.

௪௮. அவன் பெலத்துக்கொண்டு, அமலேக்கியரை முறியடித்து, இஸ்ரவேலைக் கொள்ளையிடுகிறயாவர் கைக்கும் அதை நீங்கலாக்கி விடுவித்தான்.

௪௯. சவுலுவுக்கிருந்த குமாரர் யோனத்தான், இஸ்வி, மல்கியா, சூவா, என்றவர்கள். அவனுடைய இரண்டு குமாரத்திகளின் நாமங்களேதென்றால், மூத்தவளுக்கு மேராப் என்ற நாமமும், இளையவளுக்கு மீகாளென்ற நாமமுமிருந்தது.

௫௰. சவுலுடைய பெண்சாதியின் பேர் அகினோவாம், அவள் அகிமாத்சின் குமாரத்தியாயிருந்தாள். அவனுடைய சேனாபதியின் பேர் அப்னேர், இவன் சவுலுடைய சிறிய தகப்பனாகிய நேரின் குமாரனாயிருந்தான்.

௫௧. கீசவுலுவின தகபபனானவன, அப்னே ரின தகபபனாகிய நேரோவெனறுல் ஆபியேலின குமாரனாயிருநதான.

௫௨. சவுலிருநதநாளெல்லாமபெலிஸ்ததரின மேலேகடினமான உயிததமநடநதது, சவுலொரு பிராககிறமமனுஷனையுமொருபெலசாலியையுங காணகிறபோது, அவர்களையெல்லாந தனனிட மாகசசேர்ததுககொணடான.

௰௫. அதிகாரம.

சவுல் ஆமலேககியரோடேபணணினஉயித்த திலேகறதருககுககீழ்பபடியாதேபோன தினிமித்தியமஅவராலேபிறககணிக கபபடடது.

பிறபாடுசாமுவேல்சவுலோடே சொனனதாவது: இஸ்றுவேலாகிய தமமுட சனததின மேலஉமமைஇராசாவாக அபிஷேகமபணணுகிறதறகு கறதரெனனை யனுபபினுரே. இபபோதுஙகறதருடைய வாறதைகளின சததததை ககேளும.

௨. சேனைகளுடையகறதர் சொல்லுகிறதேதெனில், இஸ்றுவேல்ளகிப்ததிலிருநது வநதேறுகிறபோதுஆமலேக் அதககுவழியை மறிததஅதினசெய்கையைமனதிலேவைததோம.

௩. இபபோதுமநீபோய, ஆமலேககைமடங்கடிததுஅவனுககுணடானதெல்லாததையுஞ சஙகரிததது, அவனமேலிரககம வைககாமல், புருஷரையுமபெணசாதிகளையும பிளளைகளையுஙகுழநதைகளையுமமாடுகளையுமஆடுகளையுமஒடடகஙகளையுஙகழுதைகளையுங கொனறுபோடககடவாயெனகிறுரெனறுசொனனுன.

௪. அபபோது சவுல்இதை சசனததுககறியபபடுததி, தெலாயிமிலேஅவர்களைததொகைபார்ததான, அவர்களஇருநூறுயிரஙகாலாளககளும, யூதாமனுஷரில்பபதினுயிரம பேருமாயிருநதார்கள.

௫. சவுல்ஆமலேககுபபடடணமமடடுமவநது,பளளததாககிலொருபதிவிடையை வைததான.

௬. ஆனுல்சசவுல்கேனியருடனே: நானஆமலேககியரோடேகூட உஙகளையுமவாரிககொளளாதபடிககுநீஙகள அவர்கள நடுவிலிருநதுபுறபபடடுவிலகி வாருஙகோள, ஏனெனில் இஸ்றுவேல்ளகிப்ததிலிருநதுவநதேறுகிறபோதுநீஙகளஅவர்களெல்லாருககுநதயவுசெயதீர்களெனறுன. அபபடியேகேனியர்ஆமலேககியரின நடுவிலிருநதுவிலகிபபோனுர்கள.

௭. அபபோசவுல்ஆவிலாததுவககிளகிப்ததுககெதிரேயிருககிறசூருககுபபோகுமளவுமட்டுமிருநதஆமலேககியரைமடஙகடிததது,

௮. ஆமலேககியரினஇராசாவாகிய ஆகாகை உயிரோடேபிடிததான, ஆனுல்சசனமவனைததையும படடையக கருககினுலே சஙகாரமபணணினுன.

௯. ஆனுல்சசவுலுஞ சனமுமஆகாகையுமஆடுமாடுகளில்முதல்ததரமானதையுமஇரணடாநதரமானததையுமஆடடுககுடடிகளையும நல்மானதெல்லாததையுஞ சஙகாரமபணணமனதில்லாமல் ததபபவைதது பபிறககணிககபபடடதககதுமஆகாததுமானசகலவஸ்ததுவையுமேசஙகாரமபணணினுர்கள.

௰. அபபோகறதருடையவாறதை சாமுவேலுககுணடாய, அவர்சொனனதாவது:

௰௧. நாமசவுலஇராசாவாககினதுநமககுமனஸ்ததாபமாயிருககுது, ஏனெனில்அவனநமமைவிடடுததிருமபி நமமுடவாறதைகளை நிறைவேறறுமல்பபோனுனெனறுர். அபபோ சாமுவேல்மனஎரிசசலாகிராமுழுதுஙகறதரை நோககிககூபபிடடான.

௰௨. மறுநாளஅதிகாலமேசாமுவேல்சவுலைச்சநதிககபபோனுன. அபபோசவுல் கற்மேலுககுவநது,இதோதனககொருவெறறிவிருதைநாடடினுனெனறுமபிறகுசுறறிககொணடு கடநதுகில்காலுககிறஙகிபபோனுனெனறுஞசாமுவேலுககறிவிககபபடடுது.

௰௩. சாமுவேல்சவுலணடைககுவநதபோது, சவுல்அவனுடனே: நீர்கறதருககாசீர்வதிககபபடடவர், கறதருடையவாறதையைநிறைவேறறினேனெனறுன.

௰௪. அதறகுசசாமுவேல்: ஆனுல்என காதுகளில்விழுகிறஆநதஆடுகளின சததமுமநானகேட்கிறமாடுகளின சததமுமெனனவெனறுன.

௰௫. அபபோதுசவுல்: ஆமலேககியரிடததிலிருநதுஅதுகளைககொணடுவநதார்கள, ஏனெனில்ச்சனம ஆடுமாடுகளில்நல்மானதையுமமுடபராபனுகிய கறதருககுபபெலியிடுமபடிககுததபபவைததார்கள, ஆனுல்மறறதைச சஙகாரமபணணினேமெனறுன.

௰௬. அபபோசாமுவேல்அநதபபேசசை விடும, கறதர்இநதராததிரியிலேஎனனேடே சொனன

னதையும் உமக்கறிவிப்பேனென்று சவுலோடே சொன்னான். இவன் அவனுடனே: சொல்லுமென்றான்.

௰௭. அப்போ சாமுவேல் சொன்னதாவது: நீர் உம்முடைய பார்வைக்குச் சின்னவராயிருக்கிறபோதல்லோ இஸ்ரவேல் கோத்திரங்களுக்குத் தலைவரானீர், அப்போ கர்த்தர் உம்மை இஸ்ரவேலின் மேல் இராசாவாக அபிஷேகம் பண்ணுவித்தார்.

௰அ. இப்போதுங் கர்த்தர் உம்மை யந்த வழியாய் அனுப்பி: நீ போய் அமலேக்கியராகிய அந்தப் பாவிகளைச் சங்கரித்து, அவர்களை நிர்மூலமாக்கித் தீருமட்டும் அவர்களோடே யுத்தம் பண்ணென்றாரே;

௰௯. இப்படியிருக்கக்கொள்ள நீர் கர்த்தருடைய சொற்கேளாமல், கொள்ளையின் மேல் பறந்து, கர்த்தருடைய பார்வைக்குப் பொல்லாப்பானதைச் செய்ததென்னவென்றான்.

௨௰. அப்போது சவுல் சாமுவேலோடே சொன்னதாவது: நான் கர்த்தருடைய சொற்கேட்டு, கர்த்தர் என்னை யனுப்பின வழியாய்ப் போய், அமலேக்கின் இராசாவாகிய ஆகாகைக் கொண்டுவந்து, அமலேக்கியரைச் சங்காரம் பண்ணினேனே;

௨௧. சனமோவென்றால் உம்முடைய பராபரனாகிய கர்த்தருக்குக் கில்காலிலே பலியிடுகிறதுக்காகக் கொள்ளையிலே சாபத்திட்டாகும் ஆடுமாடுகளிலே பிறதானமானதைப் பிடித்து ஓட்டிவந்தார்களென்றான்.

௨௨. ஆனால் சாமுவேல் சொன்னதாவது: கர்த்தருடைய சத்தத்துக்குக் கீழ்ப்படிகிறதைப் பார்க்கிலுஞ் சறுவாங்கத்தகனங்களும் பலிகளுங் கர்த்தருக்குப் பிரியமாயிருக்குமோ, இதோ பலியைப் பார்க்கக் கீழ்ப்படியுதலும், ஆட்டுக்கிடாய்களின் கொழுப்பைப் பார்க்கக் கவனித்திருக்குதலுந் தாவிலை.

௨௩. ஏனென்றால் இரண்டகம் பண்ணுதல் பில்லிசூனியப் பாவத்துக்கும், முரட்டாட்டம் பண்ணுதல் மாய்கையானதையுஞ் சுரூபங்களையுங் கும்பிடுகிறதுக்குஞ் சரியாயிருக்குது, நீர் கர்த்தருடைய வார்த்தையைப் பிறக்கணித்தபடியினாலே அவர் உம்மையும் நீர் இராசாவாயிராதபடிக்குப் பிறக்கணித்தாரென்றான்.

௨௪. அப்போது சவுல் சாமுவேலோடே சொன்னதாவது: நான் கர்த்தருடைய வாக்கையும் உம்முடைய வார்த்தைகளையும் மீறுகிறதினாலே பாவஞ் செய்தேன், ஏனெனில் நான் சனத்துக்குப் பயந்து அவர்கள் சொற்கேட்டேன்.

௨௫. இப்போதும் நீர் என் பாவத்தை மன்னித்து, நான் கர்த்தரைப் பணிந்துகொள்ளும்படிக்கு என்னோடே கூடத் திரும்பிக்கொண்டுவாருமென்றான்.

௨௬. ஆனால் சாமுவேல் சவுலுடனே: நான் உம்மோடே கூடத் திரும்புவதில்லை, ஏனெனில் கர்த்தருடைய வார்த்தையைப் பிறக்கணித்தீர், நீர் இஸ்ரவேலின் மேல் இராசாவாயிராதபடிக்குக் கர்த்தர் உம்மையும் பிறக்கணித்தாரென்றான்.

௨௭. போகிறதுக்காகச் சாமுவேல் திரும்புகிறபோதோவெனில், இவன் அவன் சால்வையின் நுனியைப் பிடித்துக்கொண்டான், அது கிழிந்து போச்சுது.

௨அ. அப்போது சாமுவேல் அவனோடே சொன்னதாவது: உம்மிடத்திலிருந்த இஸ்ரவேலின் ராச்சியபாரத்தை யின்று கர்த்தர் கிழித்துப்போட்டு, உம்மைப் பார்க்க நல்லவனாயிருக்கிற உம்முடைய தோழனுக்கதைக் கொடுத்தார்.

௨௯. இஸ்ரவேலின் செய்பெலனானவர் பொய்சொல்லுகிறதுமில்லை, தானுஞ் சொன்னதுக்கு மனஸ்தாபப்படுகிறதுமில்லை, ஏனென்றால் அதுக்கு மனஸ்தாபப்பட அவர் மனுஷனல்லவென்றான்.

௩௰. அதற்கவன்: நான் பாவஞ்செய்தேன், இப்போதும் என் சனத்தின் மூப்பருக்கு முன்பாகவும் இஸ்ரவேலுக்கு முன்பாகவும் நீரென்னைக் கனம்பண்ணி, நான் உம்முடைய பராபரனாகிய கர்த்தரைப் பணிந்துகொள்ளும்படிக்கு என்னோடே கூடத் திரும்பிக்கொண்டுவாருமென்றான்.

௩௧. அப்போது சாமுவேல் திரும்பிக்கொண்டு சவுலைப் பின்சென்றான், சவுல் கர்த்தரைப் பணிந்துகொண்டான்.

௩௨. பிறபாடு சாமுவேல்: அமலேக்கின் இராசாவாகிய ஆகாகை என்னண்டைக்குக் கொண்டுவாருங்கோவென்றான், ஆகாக் சந்தோஷமயக்கமாய் அவனண்டைக்குப் போய்: மரணத்தின் கசப்பு அற்றுப்போனது நிச்செயமென்றான்.

௩௩. சாமுவேலோவென்றால்: உன்னுடைய பட்டயம் ஸ்திரிகளைப் பிள்ளைகளற்றவர்களாக்கினதுபோலே ஸ்திரிகளுக்குள்ளே உன்னுடைய தாயாரும் பிள்ளைகளற்றவளாவாளென்று சொல்லி, சாமுவேல் கில்காலிலே கர்த்தருக்கு முன்பாக ஆகாகைத் துண்டித்துப்போட்டான்.

௩௪. பிறபாடு சாமுவேல் ராமாவுக்குப் போனான்,

னான், சவுலோவென்றால் தன் ஊராகிய கிபெயாவிலிருக்கிற தன் வீட்டுக்குப் போயேறினான்.

௩௫. சவுல் மரணமடையுமளவும் சாமுவேல் அப்புறம் அவனைக் காணப் போகவில்லை, ஏனென்றால் இஸ்ரவேலின்மேல் சவுலை இராசாவாக்கினதற்குக் கர்த்தர் மனஸ்தாபப்பட்ட நிமித்தியம் சாமுவேல் சவுலுக்காகத் துக்கித்துக்கொண்டிருந்தான்.

## ௰௬. அதிகாரம்.

### தாவீதுமுதல்விசை அபிஷேகம்பண்ணப்பட்டது.

கர்த்தர் சாமுவேலுடனே: இஸ்ரவேலின்மேல் இராசாவாயிராதபடிக்கு நாம் பிறக்கணித்த சவுலுக்காக நீயெந்தமட்டும் துக்கமாயிருப்பாய். நீயுன் கொம்பையெண்ணெயால் நிரப்பிவா, பெத்லெகேமியனாகிய ஈசாயண்டைக்கு உன்னையனுப்புவோம், ஏனெனில் அவன் குமாரரிலொருத்தனை நமக்கிராசாவாகத் தெரிந்துகொண்டோமென்றார்.

௨. அதற்குச் சாமுவேல்: நானெப்படிப் போவேன், சவுல் அதைக் கேட்டு என்னைக் கொன்றுபோடுவானேயென்றான். அப்பொழுது கர்த்தர் சொன்னதாவது: நீயொரு கிடாரிக்கன்றைக் கையோடே கொண்டுபோய், கர்த்தருக்குப் பலியிட வந்தேனென்று சொல்லி,

௩. ஈசாயைப் பலிவிருந்துக்கழைப்பாயாக, அப்பொழுது நீ செய்ய வேண்டியதை நாமுனக்கறிவிப்போம், நாமுனக்குச் சொல்லப்போகிறவனை நமக்கபிஷேகம்பண்ணுவாயாகவென்றார்.

௪. கர்த்தர் சொன்னபடியே சாமுவேல் செய்து பெத்லெகேமுக்கு வந்தான், அப்பொழுது ஊரின் மூப்பர் திகைத்தவர்களாய் அவனுக்கெதிர்கொண்டு வந்து: நீர் வருகிறது சமாதானமோவென்றார்கள்.

௫. அதற்கவன்: சமாதானந்தானே, கர்த்தருக்குப் பலியிட வந்தேன், நீங்கள் உங்களைப் பரிசுத்தம்பண்ணிக்கொண்டு என்னுடனே கூடப் பலிவிருந்துக்கு வாருங்கோளென்று சொல்லி, ஈசாயையும் அவன் குமாரரையும் பரிசுத்தம்பண்ணி, அவர்களைப் பலிவிருந்துக்கழைத்தான்.

௬. அவர்கள் உள்ப்பிரவேசிக்கையில், அவன் எலியாபைப் பார்த்து: கர்த்தருடைய பார்வைக்கு முன்பாக அபிஷேகம்பண்ணப்படுபவன் இவன்றானென்றெண்ணினான்.

௭. ஆனால் கர்த்தர் சாமுவேலுடனே: நீயிவனுடைய ரூபத்தையும் அவனுடைய வளர்த்தியின் நெட்டையென்பதையும் நோக்காயாக, ஏனெனில் அவனைப் பிறக்கணித்தோம், அதேதென்றால் மனுஷன் பார்க்கிறபடி பாரோம், ஏனெனில் மனுஷன் கண்களுக்கு முன்பாகவிருக்கிறதைப் பார்ப்பான், கர்த்தரோவென்றால் இருதயத்தைப் பார்க்கிறாரென்றார்.

௮. அப்பொழுது ஈசாய் அபினதாபையழைத்து அவனைச் சாமுவேலுக்கெதிராகக் கடந்து போகப்பண்ணினான். அவனோவென்றால், இவனையுங் கர்த்தர் தெரிந்துகொண்டதில்லையென்றான்.

௯. ஈசாய் சம்மாவையுங் கடந்து போகப்பண்ணினான், ஆனால் அவன்: இவனையுங் கர்த்தர் தெரிந்துகொண்டதில்லையென்றான்.

௰. இப்படி ஈசாய் தன் ஏழு குமாரரைச் சாமுவேலுக்கெதிராகக் கடந்துபோகப்பண்ணினான். ஆனால் சாமுவேல் ஈசாயுடனே: கர்த்தர் இவர்களிலொருத்தனையுந் தெரிந்துகொண்டதில்லையென்று சொல்லி,

௰௧. இருக்கிற பிள்ளைகள் இத்தோடே சரியோவென்று ஈசாயைக் கேட்டான். அதற்கவன் இன்னமொருத்தனின்னமிளையனாயிருக்கிறான், இதோ அவன் ஆடுகளை மேய்த்துக்கொண்டிருக்கிறானென்றான். அப்பொது சாமுவேல் ஈசாயுடனே: அவனையழைத்தனுப்பு, ஏனெனில் அவன் இங்கே வருமட்டும் நாம் பந்தியிருப்பதில்லையென்றான்.

௰௨. அவனையழைத்தனுப்பி வரப்பண்ணினான், அவன் சிவந்தமேனியும் அழகான கண்களுள்ளவனும் நல்ல ரூபுள்ளவனுமாயிருந்தான். அப்பொது கர்த்தர்: நீயெழுந்து அவனையபிஷேகம்பண்ணு, அவனேயென்றார்.

௰௩. அப்பொது சாமுவேல் எண்ணெயிருக்கிற கொம்பையெடுத்து, அவனையவன் சகோதரர் நடுவிலே அபிஷேகம்பண்ணினான். அந்நாள் முதற்கொண்டு கர்த்தருடைய ஆவி தாவீதின்மேலே பெலனாயிறங்கியிருந்தார், சாமுவேல் எழுந்திருந்து ராமாவுக்குப் போய்விட்டான்.

### தாவீது சவுலுவுக்குச் செய்த ஊழியம்.

௰௪. கர்த்தருடைய ஆவி சவுலைவிட்டு விலகி, கர்த்தராலே விடப்பட்ட ஒரு பொல்லாத ஆவி அவனைக் கலங்கப்பண்ணிக்கொண்டிருந்தது.



௰௫.

௰௫. அப்போது சவுலுவின் ஊழியக்காறர் அவனோடே சொன்னதாவது: இதோ பராபரனால் விடப்பட்ட ஒரு பொல்லாத ஆவி உம்மைக் கலங்கப்பண்ணுகுதே,

௰௬. சரமண்டலத்தை வாசிக்க அறிந்த ஒருத்தனைத் தேடும்படிக்கு, எங்களாண்டவனாகிய நீர் உமக்கு முன்பாக நிற்கிற உமதடியாருக்குச் சொல்லுமேன், அப்போ பராபரனால் விடப்பட்ட பொல்லாத ஆவி உம்முடைமேலிறங்கையில் அவன் தன் கையினாலதைக் கொட்டுகிறதினாலே உமக்குத் தாவிளையாமென்றார்கள்.

௰௭. ஆகையால் சவுல் தன் ஊழியக்காறருடனே: நன்றாய்க் கொட்டத்தக்க ஒருத்தனை எனக்காகப் பார்த்து, என்னண்டைக்குக் கொண்டுவாருங்கோளேன் என்றான்.

௰௮. அப்போதந்த வேலைக்காறரிலொருத்தன் பிறத்தியுத்தாரமாக: இதோ கொட்டவறிந்திருக்கிற பெத்லேகேமியனாகிய ஈசாயின் குமாரனை ஒருத்தனைக் கண்டேன், அவன் பராக்கிரமசாலியும் கல்லசேவகனும் காரியங்களிலே புத்திமானும் சுந்திரியனுமாயிருக்கிறான், கர்த்தர் அவனோடே கூடவிருக்கிறாரென்றான்.

௰௯. அப்போது சவுல் ஈசாயண்டைக்காள்க்களையனுப்பி: ஆடுகளண்டையிலிருக்கிற உன் குமாரனாகிய தாவீதை என்னண்டைக்கனுப்பென்று சொல்லிச் சொன்னான்.

௨௰. அப்போ ஈசாய் அப்பத்தையும் ஒரு துருத்தி திராட்சிப்பழரசத்தையும் ஒரு வெள்ளாட்டுக்குட்டியையுங் கழுதை மேலேற்றி அதையுந் தன் குமாரனாகிய தாவீதின் கையிலே சவுலுக்கனுப்பினான்.

௨௧. அப்படியே தாவீது சவுலண்டைக்குவந்து அவனுக்கு முன்பாக நின்றான். அவன் இவனை மிகவுநேசித்தான், அவனுக்கிவன் ஆயுதம்பிடிக்கிறவனானான்.

௨௨. சவுல் ஈசாயண்டைக்காளனுப்பி: தாவீதென்னக்கு முன்பாக நிற்கட்டுமேன், ஏனென்னில் என் கண்களில் அவனுக்குத் தயவு கிடைத்ததென்று சொல்லிச் சொன்னான்.

௨௩. அப்படியே பராபரனால் விடப்பட்ட ஆவி சவுல்ப்பிடிக்கும்போது தாவீது சரமண்டலத்தையெடுத்துக்கொண்டு தன் கையினாலே கொட்டுவான், அதினாலே சவுலுவுக்கு மூசிப்பாறுதலுண்டாகி, அவனுக்குத் தாவிளையாய்ப்போய், பொல்லாத ஆவி அவனை விட்டு நீங்கும்.

## ௰௭. அதிகாரம்.

இராட்சதனாகிய கோலியாத்தென்ற பெலிஸ்தனைத் தாவீது செயித்த அதிசயம்.

பெலிஸ்தரோவென்றால் யுத்தம்பண்ணுகிறதுக்குத் தங்கள் ராணுவங்களைச் சேர்த்து, யூதாவிலிருக்கிற சொக்கோவிலே கூடி, சொக்கோவுக்கும் அசெக்காவுக்கும் நடுவேயிருக்கிற தம்மிமினெல்வஸ்ஸிலே பாளையமிறங்கினார்கள்.

௨. ஆனால் சவுலும் இஸ்ரவேல் மனுஷரும் கூடிக்கொண்டு கர்வாலியுப்பள்ளத்தாக்கிலே பாளையமிறங்கி, பெலிஸ்தருக்கெதிராக யுத்தத்துக்காயித்தம்பண்ணினார்கள்.

௩. பெலிஸ்தர் அந்தண்டையொரு மலையின் மேலும் இஸ்ரவேலர் இந்தண்டையொரு மலையின் மேலும் நின்றார்கள், பள்ளத்தாக்கு அவர்களுக்கு நடுவேயிருந்தது.

௪. அப்போ காத்தூரானாகிய கோலியாத்தென்று பேருள்ள ஒரு மனுஷன் பெலிஸ்தரின் பாளையங்களிலிருந்து புறப்பட்டு நடுவே நிற்பான், அவனுயர்த்தி ஆறுமுழமும் ஒரு சாணுமானது.

௫. அவன் தன் தலையின் மேலே பஞ்சலோகமான தலைச்சொட்டைப்போட்டு, சொறிசொறியான ஒரு சீராவைத் தரித்துக்கொண்டிருந்தான், அந்தச் சீராவின் நிறை ஐயாயிரஞ்சேக்கலான பஞ்சலோகமாயிருந்தது.

௬. அவன் தன் கால்களிலே பஞ்சலோகமான தொப்பாரத்தையுந் தன் தோள்களின் மேலே பஞ்சலோகமான கேடயத்தையும் போட்டுக்கொண்டிருந்தான்.

௭. அவனுடைய ஈட்டித்தாங்கு நெய்கிறவர்களின் படைமரத்தின் கனதியும் அவன் ஈட்டியின் அலகு அறுநூறு சேக்கலான இரும்புமாயிருந்தது, பரிசைபிடிக்கிறவன் அவனுக்கு முன்னே நடப்பான்.

௮. அவன் நின்றுகொண்டு, இஸ்ரவேலுட ராணுவப்படவுஞ்சுகளுக்கெதிராகக் கூப்பிட்டு அவர்களுக்குச் சொன்னதாவது: நீங்கள் யுத்தத்துக்காயித்தமாகப் புறப்பட்டுவந்து நிற்கிறதென்ன, நான் பெலிஸ்தனும் நீங்கள் சவுலின் வேலைக்காறருமல்லவோ, என்னண்டைக்கிறங்கிவர உங்களிலொருத்தனைத் தெரிந்தெடுங்கோள்.

௯. அவன் என்னோடே யுத்தம்பண்ணச் சமர்த்தனாயிருந்து, என்னை மடங்கடித்தால், உங்களுக்கு

குவே

க்குவேலைக்காறராயிருப்போம், நான் அவனைமேற்கொண்டு அவனை மடங்கடித்தால், நீங்கள் எங்களுக்கு வேலைக்காறராயிருந்து எங்களைச் சேவிக்கவேணுமென்று சொல்லி,

௰. பின்னையும்: நான் இன்றையிற்தினம் இஸ்றவேலுடைய ராணுவப்பவுஞ்சுகளை நிந்தித்தேன், நாமொருவரோடொருவர் யுத்தம்பண்ண ஒருத்தனை யெனக்கு விடுங்கோளென்று அந்தப் பெலிஸ்தன் சொல்லுவான்.

௰௧. சவுலும் இஸ்றவேலனைத்தும் அந்தப் பெலிஸ்தனுடைய வார்த்தைகளைக் கேட்கிறபோது மிகவுங் கலங்கிப் பயப்பட்டார்கள்.

௰௨. தாவீதோவென்றால் யூதாவுக்கடுத்த பெத்லேகேம் ஊரானாகிய ஈசாயென்று பேருள்ள எப்பிறத்திய மனுஷனுடைய குமாரனானவன், இவனுக்கெட்டுக்குமாரரிருந்தார்கள். இந்த மனுஷன் சவுலின் நாள்களிலே மற்றச்சனங்களுக்குள்ளே வயது சென்ற கிழவனாயிருந்தான்.

௰௩. ஈசாயினுடைய மூன்று மூத்தகுமாரர் சவுலின் பிறகாலே யுத்தத்துக்குப் போயிருந்தார்கள், யுத்தத்துக்குப் போயிருந்த அவனுடைய மூன்று குமாரரில் தலைச்சனுக்கு எலியாபென்றும் இரண்டாங்குமாரனுக்கு அபினதாபென்றும் மூன்றாங்குமாரனுக்குச் சம்மாவென்றும் பேரிருந்தது.

௰௪. தாவீதென்றவன் எல்லாரிலும் இளையவனாயிருந்தான். மூத்தவர்களாகிய அந்த மூன்றுபேருஞ் சவுலின் பிறகாலே போகிறபோது,

௰௫. தாவீது பெத்லேகேமிலிருக்கிற தன் தகப்பனுடைய ஆடுகளை மேய்க்கும்படிக்குச் சவுலை விட்டுத்திரும்பிப்போனான்.

௰௬. அந்தப் பெலிஸ்தனோவென்றால் காலமே யும் அந்திமாறுமநாற்பது நாளாகச் சேர்ந்து வந்து நின்றுகொண்டிருப்பான்.

௰௭. ஈசாயோவென்றால் தன் குமாரனாகிய தாவீதோடே சொன்னதாவது: உன் சகோதரருக்காக இந்த ஒருமரக்கால் வறுத்த பயறையும் இந்தப் பத்து அப்பங்களையும் எடுத்து, ஓடி, பாளையத்திலிருக்கிற உன் சகோதரருக்குக் கொண்டுபோய்,

௰௮. இந்தப் பத்துக் கேஸ்க்கட்டிகளை ஆயிரத்துச்சேர்வைக்காறனுக்குக் கொடுத்து உன் சகோதரர் சுகமாயிருக்கிறார்களோவென்று விசாரித்து, அவர்களுடைய அடையாளம் வாங்கிக்கொண்டுவாவென்றான்.

௰௯. அப்போ சவுலும் இவர்களும் இஸ்றவேல் மனுஷரெல்லாருங் கர்வாலியு பள்ளத்தாக்கிலே பெலிஸ்தரோடு யித்தம்பண்ணியிருந்தார்கள்.

௨௰. தாவீது அதிகாலமே எழுந்திருந்து ஆடுகளைக் காக்கிறவன் வசமாய் விட்டு ஈசாய் தனக்குக் கற்பித்தபடியே எடுத்துக்கொண்டுபோய் ரதங்களிருக்கிற இடத்திலே வந்தான். ராணுவமோவெனில் பவுஞ்சாக நிற்கப் புறப்பட்டு யித்தத்துக்கென்று ற்பரித்தார்கள்.

௨௧. இஸ்றவேலரும் பெலிஸ்தருமொன்றுக்கொன்று எதிராகப் பவுஞ்சுகளை நிறுத்தினார்கள்.

௨௨. அப்போ தாவீது தான் சுமந்து வந்ததுகளை யிறக்கி, ரஸ்த்துக்களைக் காக்கிறவன் வசமாக வைத்துவிட்டு ராணுவத்தினிடத்திலோடி, அங்கே வந்தபோது, சுகமாயிருக்கிறீர்களோவென்று தன் சகோதரரைக் கேட்டான்.

௨௩. அவன் இவர்களோடே பேசிக்கொண்டிருக்கையில், இதோ காத்தூரானாகிய கோலியாதென்று பேருள்ள அந்தப் பெலிஸ்தன் பெலிஸ்தருடைய ராணுவங்களிலிருந்தெழும்பிவந்து நின்று, அந்த வார்த்தைகளுக்குச் சரியாகப் பேசினான், அதைத் தாவீது கேட்டான்.

௨௪. இஸ்றவேல் மனுஷரெல்லாரும் அந்த மனுஷனைக் காணும்போதோவெனில் அவனை விலகியோடி மிகவும் பயப்படுவார்கள்.

௨௫. அன்னேரத்திலே இஸ்றவேல் மனுஷர் சொன்னதாவது: எழும்பின அந்த மனுஷனைக் கண்டீர்களோ, ஏனென்றால் இஸ்றவேலை நிந்திக்கவெழும்பி நிற்கிறான், எவன் அவனை மடங்கடிக்கிறானோ அவனை இராசா மிகவும் ஐசுவரியமுள்ளவனாக்கி, அவனுக்குத் தம்முடைய குமாரத்தியைக் கொடுத்து, அவன் தகப்பன் வீட்டை இஸ்றவேலிலே இஷ்டமாக்குவாரென்றார்கள்.

௨௬. அப்போ தாவீது தன்னண்டையிலே நிற்கிற மனுஷருடனே: இந்தப் பெலிஸ்தனை மடங்கடித்து நிந்தையை இஸ்றவேலை விட்டு விலக்குகிறவனுக்கென்ன செய்யப்படும், ஏனெனில் சீவனுள்ள பராபரனுடைய ராணுவங்களை நிந்திக்கிறதுக்கு சுன்னத்தில்லாத இந்தப் பெலிஸ்தனானவனெம்மாத்திரமென்றான்.

௨௭. அப்போ சனம்: அவனை மடங்கடிக்கிறவனுக்கின்னின்னபடி செய்யப்படுமென்று அந்த வார்த்தைகளுக்குச் சரியாக அவனுக்குச் சொன்னார்கள்.

௨௮. அந்த மனுஷரோடே அவன் பேசிக்கொண்டிருக்கிறதை அவன் மூத்த சகோதரனாகிய எலியாப் கேட்கிறபோது, அவன் தாவீதின் பேரிலே கோபமாயெரிந்து: நீயிங்கே இறங்கி வந்ததென்ன, வனாந்தரத்திலிருக்கிற அந்தக் கொஞ்ச ஆடுகளை நீ ஆர் வசமாய் விட்டாய், யுத்தத்தைப் பார்க்கயிறங்கி வந்தாயென்று, உன்னுடைய துணிகரத்தையும் உன் இருதயத்தின் ஆங்காரத்தையும் நான் அறிவேனென்றான்.

௨௯. அதற்குத் தாவீது: நான் இப்போ செய்ததென்ன, நான் வகத்துக்கு முகாந்தரமில்லையோவென்று சொல்லி,

௩௰. அவனை விட்டு வேறொருத்தனுக்கு நேராகத் திரும்பிக்கொண்டு அந்தப் பிரகாரமாகச் சொன்னான். அப்போது சனம் முந்தின சொல்லுக்குச் சரியாக அவனுக்கு மறுமொழி கொடுத்தார்கள்.

௩௧. தாவீது சொன்ன வார்த்தைகளை அவர்கள் கேட்டபிறபாடு அதைச் சவுலுக்கு முன்பாக அறிவித்தார்கள், அப்போதவனை அழைப்பித்தான்.

௩௨. தாவீது சவுலுடனே: அவன் நிமித்தியமாக ஒருத்தனுடைய இருதயமுந் திடனற்றுப்போகவேண்டாம், உமதடியான் போய் இந்தப் பெலிஸ்தனோடு யுத்தம்பண்ணுவானென்றான்.

௩௩. அப்போது சவுல் தாவீதுடனே: நீ இந்தப் பெலிஸ்தனோடு யுத்தம்பண்ண அவனுக்கெதிராகப் போகக்கூடாது, என்னென்றால் நீ இளைஞன், அவனோ தன் சிறுவயதிலே துவக்கி யுத்தசேவகனாயிருக்கிறானென்றான்.

௩௪. ஆனால் தாவீது சவுலோடே சொன்னதாவது: உமதடியானானவன் தகப்பனுடைய ஆடுகளை மேய்த்துக்கொண்டிருக்கிறபோது ஒருவிசை ஒரு சிங்கமும் ஒருவிசை ஒரு கரடியும் வந்து மந்தையிலிருக்கிற ஒரு ஆட்டை யெடுத்துக்கொண்டுபோம்.

௩௫. ஆனால் அதின் பிறகாலே நான் புறப்பட்டுப்போய் அதையடித்து இதை அதின் வாய்க்குத் தப்புவித்தேன். அப்போது அது என்மேலே பாய்கிறபோது நான் அதின் தாடியைப் பிடித்துக்கொண்டு அதையடித்துக் கொன்றுபோட்டேன்.

௩௬. அந்தச் சிங்கத்தையும் அந்தக் கரடியையும் உமதடியான் மடங்கடித்தான், சுன்னத்தில்லாத இந்தப் பெலிஸ்தனும் அதுகளிலொன்றைப்போலிருப்பான், என்னென்றால் அவன் சீவனுள்ள பராபரனுடைய ராணுவங்களை நிந்தித்தானென்றான்.

௩௭. பின்னையுந் தாவீது: என்னைச் சிங்கத்தின் கைக்கும் கரடியின் கைக்குந் தப்புவித்த கர்த்தரானவர் இந்தப் பெலிஸ்தனுடைய கைக்கும் என்னைத் தப்புவிப்பாரென்றான். அப்போது சவுல் தாவீதுடனே: போ கர்த்தர் உன்னுடனே கூட இருப்பாராகவென்று சொல்லி,

௩௮. சவுல் தாவீதுக்குத் தன் வஸ்திரங்களை உடுத்துவித்து, பஞ்சலோகமான ஒரு தலைச்சோட்டை அவன் தலையின் மேல் போட்டு ஒரு சீராவை அவனுக்குத் தரிப்பித்தான்.

௩௯. தாவீது அவனுடைய பட்டயத்தைத் தன் வஸ்திரங்களின்மேல் கட்டிக்கொண்டு, நடக்கத் தொடங்கினான், ஏனெனில் அதை அவன் பரிட்சை பார்த்திருந்ததில்லை. அப்போது தாவீது சவுலுடனே: நான் இதோடே போகக்கூடாது, என்னென்றால் நான் இப்படி அற்பியாசம்பண்ணினதில்லையென்று சொல்லி அதுகளைக் களைந்துபோட்டு,

௪௰. தன் தடியைத் தன் கையிலே பிடித்து ஆற்றிலிருக்கிற ஐந்து கூழாங்கல்லுகளைத் தெரிந்தெடுத்து, அதுகளைத் தனக்கிருக்கிற மேய்ப்பரின் அடப்பமான பையிலே போட்டு, தன் கவணைத் தன் கையிலே பிடித்துக்கொண்டு, அந்தப் பெலிஸ்தனண்டை சேரப்போனான்.

௪௧. பெலிஸ்தனும் நடந்துநடந்து தாவீதினண்டைக்குக் கிட்டிவந்தான். அவன் பரிசையைப் பிடிக்கிறவன் அவனுக்கு முன்னாக நடந்தான்.

௪௨. பெலிஸ்தனானவன் தாவீதை நோக்கிப் பார்த்து, அவன் இளைஞனும் சவுந்தரியரூபனும் சிவந்தமேனியுமாயிருந்தபடியினாலே அவனை அசட்டைபண்ணி,

௪௩. தாவீதுடனே: நீ தடிகளோடே என்னண்டையிலே வர நான் நாயோவென்று சொல்லி, அந்தப் பெலிஸ்தன் தன்னுடைய தேவர்களைக்கொண்டு தாவீதைச் சபித்தான்.

௪௪. பின்னையும் அந்தப் பெலிஸ்தன் தாவீதுடனே: என்னண்டைக்கு வா, நான் உன் மாம்சத்தை யாகாசத்துப் பறவைகளுக்கும் வெளியின் மிருகங்களுக்குங் கொடுப்பேனென்றான்.

௪௫. ஆனால் தாவீது பெலிஸ்தனோடே சொன்னதாவது: நீ பட்டயத்தோடும் ஈட்டியோடும் கேடயத்தோடும் என்னண்டைக்கு வருகிறாய், நானோவென்றால் நீ நிந்தித்த இஸ்ரவேலுடைய ராணுவங்களின் பராபரனாகிய சேனைகளுடைய கர்த்தரின் நாமத்திலே உன்னண்டைக்கு வருகிறேன்.

௪௬. இன்றையத்தினங் கர்த்தர் உன்னையென்

ஐந்

கையிலொப்புக்கொடுப்பதினால் நானுன்னை மடங்கடித்து உன் தலையை யுன்னைவிட்டுவாங்கி, பெலிஸ்தருடைய பாளயத்தின் பிணங்களை யின்றையத்தினம் ஆகாசத்துப் பறவைகளுக்கும் பூமியின் காட்டுமிருகங்களுக்குங் கொடுப்பேன். அப்படியே இஸ்ரவேலுக்குப் பராபரனுண்டென்று பூலோகத்தாரெல்லாமறிந்து,

௪௭. கறதர்ப்பட்டையத்தினாலுமீட்டியினாலும் ரட்சிக்கிறதில்லையென்றிந்தச்சவையெல்லாமறிந்துகொள்ளும், ஏனென்றால் யுத்தமானது கர்த்தருடையது, அவர் உங்களையெங்கள் கையிலொப்புக்கொடுப்பாரென்றான்.

௪௮. அப்போசம்புவித்ததேதென்றால் அந்தப் பெலிஸ்தனெழும்பித் தாவீதுக்கெதிராகச்சேர்ந்துவருகிறபோது, தாவீது தீவிரமாய் அந்தராணுவத்துக்கும் அந்தப்பெலிஸ்தனுக்குமெதிராகவோடி,

௪௯. தன்கையைப் பைப்பத்திலேபோட்டு, அதிலொருகல்லையெடுத்து, கவண்டியிலேவைத்துச்சுழட்டிப் பெலிஸ்தனுடைய நெற்றியிலேபடப்போட்டான். அந்தக்கல்லு அவன் நெற்றிக்குள்ளுருவிப்போனதினால் அவன் முகங்குப்புறத்தரையிலேவிழுந்தான்.

௫௰. அப்படியே தாவீதொரு கவண்டியினாலுமொருகல்லினாலும் பெலிஸ்தன் மேலே பெலன்கொண்டு, பெலிஸ்தனை மடங்கடித்து அவனைக் கொன்றுபோட்டான். ஆனால் தாவீதின் கையிலொரு பட்டையமில்லை.

௫௧. ஆகையால் தாவீது பெலிஸ்தனண்டையிலோடிநின்றவன் பட்டையத்தைப்பிடித்து அதையதின் உறையை விட்டுருவி அவனைக் கொன்று, அதினாலே அவன் தலையை வெட்டிப்போட்டான், அப்போது தங்கள் பராக்கிரமசாலி செத்துப்போனானென்று பெலிஸ்தர் கண்டோடிப்போனார்கள்.

௫௨. அப்போ இஸ்ரவேல் மனுஷருமியூதமனுஷருமெழும்பி ஆர்ப்பரித்துப் பள்ளத்தாக்கின் எல்லைமட்டுக்குமெக்கிரோனின் வாசல்கள் மட்டுக்கும் பெலிஸ்தனைத் துரத்தினார்கள். சாராயீமின் வழியிலுங் காத்பட்டணமட்டுக்குமெக்கிரோன் பட்டணமட்டுக்கும் பெலிஸ்தர் வெட்டுண்டுவிழுந்தார்கள்.

௫௩. இஸ்ரவேல் புத்திரர் பெலிஸ்தரையத்த வினூற்கமாய்த் துரத்தின பிறபாடவர்கள் திரும்பிவந்து அவர்களுடைய பாளயங்களைக் கொள்ளையிட்டார்கள்.

௫௪. தாவீது பெலிஸ்தனுடைய தலையையெடுத்து அதை யெருசலேமுக்குக் கொண்டுவந்தான், அவனாயுதங்களையோ தன் கூடாரத்திலே வைத்தான்.

௫௫. தாவீது பெலிஸ்தனுக்கெதிராகப்புறப்பட்டுப் போகிறதைச்சவுல் காணுகிறபோது: அவன் அப்னேரென்ற சேனாபதியோடே: அப்னேரோ, இந்தவாலிபன் ஆருடைய குமாரனென்றான்; அதற்கு அப்னேர்: இராசாவே, நானறியேனென்றும்முடைய சீவனைக்கொண்டு சொல்லுகிறேனென்றான்.

௫௬. அப்போதுராசா: அந்தப்பிள்ளையாண்டானாருடைய குமாரனென்று நீவிசாரியென்றான்.

௫௭. ஆகையால் தாவீது பெலிஸ்தனை மடங்கடித்துத்திரும்பினபோது, அப்னேர் அவனையழைத்து, சவுலுக்குமுன்பாகக்கொண்டுவந்துவிட்டான். பெலிஸ்தனுடைய தலையவன் கையிலுமிருந்தது.

௫௮. அப்போது சவுல்: வாலிபனே, நீயாருடைய குமாரனென்றவனைக்கேட்டதற்குத்தாவீது: உம்முடைய அடியானாகிய பெத்லெகேமூரானாயிருக்கிற ஈசாயின் குமாரன் தானென்றான்.

## ௰௮. அதிகாரம்.

தாவீது யோனத்தானுடைய பிராணசினேகத்துக்குள்ளாகி, சனத்தினால் மிகவும் புகழப்பட்டது.

அவன் சவுலோடே பேசித்தீர்ந்தபிறபாடோவென்றால் யோனத்தானுடைய ஆத்துமம் தாவீதின் ஆத்துமத்தோடே ஒன்றாயிணைக்கப்பட்டது, யோனத்தான் அவனைத் தன்னுடைய ஆத்துமத்தைப்போல்ச்சினேகித்தான்.

௨. சவுல் அவனையவன் தகப்பன் வீட்டுக்குத் திரும்பிப்போகவொட்டாமல் அந்நாளிலே தன்னிடத்தில் வைத்துக்கொண்டான்.

௩. யோனத்தான் தாவீதைத் தன்னாத்துமத்தைப் போல்சினேகிக்கிறதினால் அவனுமிவனும் உடம்படிக்கைபண்ணிக்கொண்டு,

௪. யோனத்தான் போர்த்துக்கொண்டிருந்த சால்வையைக்கழட்டி அதையுந் தன் வஸ்திரத்தையுந் தன் பட்டையத்தையுந் தன் வில்லையுந் தன் கச்சையையுங்கூடத் தாவீதுக்குக்கொடுத்தான்.

௫. சவுல் தாவீதையனுப்புமெவ்விடத்துக்காகிலும் அவன் புறப்பட்டுப் புத்தியாய்க் காரியத்தை நடப்பிக்கிறபடியால் சவுல் அவனை யுத்த மனுஷர்

ஷீர்பேரில் அதிகாரியாக்கினான். அவனெல்லாச் சனத்தின் கண்களுக்கும் சவுலுடைய ஊழியக்காறரின் கண்களுக்குங் கூடப் பிரியமாயிருந்தான்.

௬. ஆனால் தாவீது பெலிஸ்தனை மடங்கடித்துத் திரும்பின தற்கு அவர்கள் திரும்ப வந்தத்துக்குப் பிற்பாடு சம்பவித்ததென்னவெனில், இஸ்திரீகள் இஸ்ரவேலின் சகல பட்டணங்களிலுமிருந்து பாடிக்கொண்டாடிப் புறப்பட்டு மேளங்களோடுங் களிப்போடும் வீணைகளோடும் இராசாவாகிய சவுலுக்கெதிர்க்கொண்டு வந்தார்கள்.

௭. அந்த இஸ்திரீகளோ ஒன்றுக்கொன்று மாறிப் பாடி வீணை வாசித்து: சவுல் ஆயிரம் பேரையுந் தாவீது பதினாயிரம் பேரையும் மடங்கடித்தார்களென்றார்கள்.

௮. அந்த வார்த்தை சவுலின் பார்வைக்குக் காரியமாய்க் கண்டு, அவன் மிகவும் எரிந்துகொண்டு: தாவீதுக்குப் பதினாயிரம் பேரைக் கொடுத்தது, எனக்கு ஆயிரம் பேரைக் கொடுத்தார்கள், இன்னமும் இராசாங்கந் தானும் அவனுடையதாகுமென்று சொல்லி,

௯. அந்நாள் முதற்கொண்டு சவுல் தாவீதைக் காய்மகாரமாய்ப் பார்த்தான்.

௰. மறுநாளிலே பராபரனால் விடப்பட்ட பொல்லாத ஆவி சவுல் மேலிறங்கினது, அவன் வீட்டின் நடுவே தீர்க்கதெரிசனஞ் சொல்லியிருந்தான்; அப்போது தாவீது தினஞ் செய்கிறபடி தன் கையினாலே சுரமண்டலத்தைக் கொட்டிக்கொண்டிருந்தான், ஆனால் சவுலின் கையில் ஈட்டியிருந்தது.

௰௧. அப்போது சவுல் தாவீதைச் சுவரோடுருவக் குத்திப்போடுவேனென்று ஈட்டியை யவன்மேலெறிந்தான், ஆனால் தாவீது இரண்டுதரஞ் சுழண்டு அவனுக்கு விலகிப்போனான்.

௰௨. ஆகையால் கர்த்தர் தாவீதோடே கூடவிருக்கிறாரென்றுந் தன்னைவிட்டு விலகினாரென்றுஞ் சவுல் தாவீதுக்குப் பயந்திருந்து,

௰௩. அவனைத் தன்னைவிட்டப் பிறப்படுத்தி, அவனை யாயிரம் பேருக்குத் தலைவனாக வைத்துக்கொண்டான், அப்படியே அவன் சனத்துக்கு முன்பாகப் போக்கும் வரத்துமாயிருந்தான்.

௰௪. ஆனால் தாவீது தன் வழிகளிலெல்லாம் புத்திமானாய் நடந்தான், ஏனென்றால் கர்த்தர் அவனோடே கூடவிருந்தார்.

௰௫. அவன் மகா புத்திமானாய் நடக்கிறதைச் சவுல் கண்டு அவனுக்கு ஐயமாயிருந்தான்.

௰௬. இஸ்ரவேல்ச் சனமும் யூதச் சனமுமெல்லாந் தாவீதைச் சிநேகித்தார்கள், ஏனெனில் அவர்களுக்கு முன்பாகப் போக்கும் வரத்துமாயிருந்தான்.

தாவீதின் விவாகம்.

௰௭. சவுல் தாவீதோடே: இதோ, என் மூத்த குமாரத்தியாகிய மேராபையுனக்கு இஸ்திரீயாகக் கொடுப்பேன், நீ யெனக்கு நல்ல சேவகனுமாத்திரமிருந்து கர்த்தருடைய யுத்தங்களை நடத்துவென்றான், ஏனென்றால் என் கையல்ல, பெலிஸ்தரின் கையவனுக்கு விரோதமாயிருப்பதாகவென்று சவுல் நினைத்துக்கொண்டான்.

௰௮. அப்போது தாவீது சவுலுடனே: நான் இராசாவுக்கு மருமகனாகிறதுக்கு நானெம்மாத்திரம், என் சீவனும் இஸ்ரவேலில் என் தகப்பன் வங்கிஷமும் எம்மாத்திரமென்றான்.

௰௯. சவுலின் குமாரத்தியாகிய மேராப் தாவீதுக்குக் கொடுக்கப்படுங்காலம் வந்தபோதோவெனில், அவள் மேகோலாத்தியனாகிய ஆதரியேலுக்கு இஸ்திரீயாகக் கொடுக்கப்பட்டாள்.

௨௰. ஆனாற் சவுலின் குமாரத்தியாகிய மீகாள் தாவீதைச் சிநேகித்தாள், அது சவுலுக்கறிவிக்கப்பட்டபோது, அது அவனுக்கு நல்லதாய்க் கண்டது.

௨௧. அவளவனுக்குக் கண்ணியாயிருக்கவும் பெலிஸ்தரின் கையவன்மேல் வரத்தக்கதாகவும் அவளையவனுக்குக் கொடுப்பேனென்று சவுல் நினைத்துத் தாவீதுடனே: நீ யென்னுடைய இரண்டாங் குமாரத்தியினாலின்றைக்கு மருமகனாகுவாயென்றான்.

௨௨. பிற்பாடு சவுல் தன்னூழியக்காறருக்கு: நீங்கள் தாவீதோடே ரகசியமாய்ப் பேசி, இதோ இராசா உம்மேலே பிரியமாயிருக்கிறார், அவருடைய எல்லா வூழியக்காறரும் உம்மைச் சிநேகிக்கிறார்கள், இப்போதும் நீர் இராசாவுக்கு மருமகனாகுமென்று சொல்லுங்கோளென்று கற்பித்தான்.

௨௩. சவுலினூழியக்காறர் இந்த வார்த்தைகளைத் தாவீதின் செவிகளிலேபடப் பேசினார்கள்; அப்போது தாவீது: நானிராசாவுக்கு மருமகனாகிறது உங்கள் பார்வைக்குக் கொஞ்சக் காரியமோ, ஏனென்றால் நான் தரித்திர வானுங் கொஞ்ச எண்ணிக்கையான மனுஷனுமாயிருக்கிறேனென்றான்.

௨௪. இன்னின்ன வார்த்தைகளைத் தாவீது சொன்னானென்று சவுலினூழியக்காறர் அவனுக்கறிவித்தார்கள்.

௨௫. அப்பொழுது சவுல் சொன்னதாவது: இராசா வானவர் பரிசத்தின் மேலல்ல, இராசாவின் சத்துருக்களுக்குச் சரிக்குச் சரிகட்டும்படிக்குப் பெலிஸ்தரின் நூறு நுனித்தோல்களின் மேலே விருப்பமாயிருக்கிறாரென்று தாவீதுக்குச் சொல்லுங்கோளென்றான், ஏனென்றால் சவுல் தாவீதைப் பெலிஸ்தரின் கையினால் விழப்பண்ண நினைத்தான்.

௨௬. அவனூழியக்காரர் தாவீதுக்கிந்த வார்த்தைகளை அறிவிக்கிறபோது, இராசாவுக்கு மருமகனாகிறது தாவீதுக்கு நல்லதாய்க் கண்டது.

௨௭. அதுக்குக் குறித்த நாள் நிறைவேறுமுன்னே தாவீதெழுந்து தன் மனுஷரைக் கூட்டிக்கொண்டுபோய், பெலிஸ்தரில் இருநூறு பேரை வெட்டி, அவர்கள் நுனித்தோல்களைக் கொண்டுவந்து, தான் இராசாவுக்கு மருமகனாகும்படிக்கு அவைகளை இராசாவுக்கு ஆதிக்கமாகச் செலுத்தினான், அப்பொழுது சவுல் தன் குமாரத்தியாகிய மீகாளை அவனுக்கு ஸ்திரீயாகக் கொடுத்தான்.

௨௮. கர்த்தர் தாவீதோடிருக்கிறாரென்று சவுல் கண்டறிந்துகொண்டான், சவுலின் குமாரத்தியாகிய மீகாளும் அவனைச் சிநேகித்துக்கொண்டிருந்தாள்.

௨௯. ஆகையால் சவுல் பின்னையும் அதிகமாய்த் தாவீதுக்குப் பயந்தானுயிரோடிருந்த நாளெல்லாந் தாவீதுக்குச் சத்துருவாயிருந்தான்.

௩௰. ஆனால் பெலிஸ்தருடைய பிரபுக்கள் புறப்படுகிறபோதெல்லாந் தாவீது சவுலுடைய எல்லா ஊழியக்காரரைப் பார்க்கப் புத்தியாய்ச் செய்தான். அவன் பேர் மெத்தவும் விளங்கினது.

## ௰௯. அதிகாரம்.

யோனத்தான் தாவீதுக்காகத் தன் தகப்பனை மன்றாடுகிறது.

தாவீதைக் கொன்றுபோடும்படிக்குச் சவுல் தன் குமாரனாகிய யோனத்தானோடுந் தன்னுடனெல்லா ஊழியக்காரரோடும் பேசினான். சவுலின் குமாரனாகிய யோனத்தானோ வென்றால் தாவீதின் மேல் மிகவும் பிரியமாயிருந்தான்.

௨. ஆகையால் யோனத்தான் தாவீதுக்கதை யறிவித்து: என் தகப்பனாகிய சவுல் உன்னைக் கொன்றுபோடவகை தேடுகிறார். இப்பொழுது நீ நாளைக் காலமே எச்சரிக்கையாயிருந்து மறைவான இடத்திலே ஒளித்துக்கொண்டேயிரு:

௩. நானோவென்றால் புறப்பட்டு வந்து, நீ வெளியிலிருக்குமிடத்திலே என் தகப்பன் பக்கத்திலே நின்று, உனக்காக என் தகப்பனோடே பேசி நடக்கும் வயணத்தைக் கண்டு உனக்கறிவிப்பேனென்றான்.

௪. அப்படியே யோனத்தான் தன் தகப்பனாகிய சவுலோடே தாவீதுக்காக நன்மையாய்ப் பேசி, அவனோடே சொன்னதாவது: இராசா தம் அடியானாகிய தாவீதுக்கு விரோதமாய்ப் பாவஞ் செய்யாராக, ஏனெனில் உமக்கு விரோதமாக அவன் பாவஞ் செய்ததில்லை, அவன் செய்கைகள் உமக்கு வெகு பிரயோசனமுமாயிருக்குதே.

௫. அதேதென்றால் அவன் தன் பிராணனைத் தன் கையிலே வைத்து அந்தப் பெலிஸ்தனை மடங்கடித்ததினாலே கர்த்தர் இஸ்ரவேலுக்கெல்லாம் பெரிய ரட்சிப்பைக் கட்டளையிட்டதை நீர் கண்டு சந்தோஷப்பட்டீரே, இப்பொழுது முகாந்திரமில்லாமல் தாவீதைக் கொல்லுகிறதினாலே குற்றமில்லாத ரத்தத்துக்கு விரோதமாக நீர் பாவஞ் செய்வானேனென்றான்.

௬. அப்பொழுது சவுல் யோனத்தானுடைய சொல்லைக் கேட்டு, அவன் கொலைசெய்யப்படுவதில்லையென்று கர்த்தருடைய சீவனைக்கொண்டாணையிட்டான்.

௭. ஆனதுகொண்டு யோனத்தான் தாவீதை யழைத்து, அந்த வார்த்தைகளையெல்லாம் அவனுக்கறிவித்து, அவனைச் சவுலண்டையிலே கூட்டிக்கொண்டுவந்துவிட்டான், அப்படியே அவன் முன்போலே அவனுக்கு முன்பாகவிருந்தான்.

சவுல் தாவீதைக் கொல்லப்பார்த்தபடியினாலே இவன் சாமுவேலண்டைக்கோடிப்போனது.

௮. திரும்ப ஒரு யுத்தமுண்டாச்சுது, அப்பொழுது தாவீது புறப்பட்டுப்போய்ப் பெலிஸ்தரோடே யுத்தம்பண்ணி அவர்களை வெகுவாய் மடங்கடித்ததினாலே அவர்கள் அவனுக்கு முன்பாக முறிந்தோடிப்போனார்கள்.

௯. ஆனால் கர்த்தரால் விடப்பட்ட பொல்லாத ஆவி சவுலின் மேலே வந்தது, அவன் தன் வீட்டிலுட்கார்ந்து, தன் ஈட்டியைத் தன் கையிலே பிடித்துக்கொண்டிருந்தான், தாவீது தன் கையினாலே சுரமண்டலங் கொட்டினான்.

௰. அப்பொழுது சவுல் தாவீதை ஈட்டியினாலே சுவரோடுருவக் குத்திப்போடப்பார்த்தான். ஆனால் இவன்

இவன் சவுலுக்கு விலகினதினாலே அவன் எறிந்த ஈட்டி சுவரிலே பட்டது. தாவீதோவென்றால் ஓடிப்போய் அன்று ராத்திரி தப்பிவித்துக்கொண்டான்.

௰௧. ஆனால் தாவீதைக் காவல்பண்ணி மறுநாள் காலமே அவனைக் கொன்றுபோடும்படிக்குச் சவுல் அவன் வீட்டுக்குச் சேவகரை யனுப்பினான், இதைத் தாவீதுக்கு அவன் பெண்சாதியாகிய மிகால் அறிவித்து: நீர் இன்று ராத்திரியிலும் உம்முடைய பிராணனைத் தப்பிவித்துக்கொள்ளாவிட்டால், நாளைக்கு நீர் கொன்றுபோடப்படுவீரென்று சொல்லி,

௰௨. மிகால் தாவீதைப் பலகணிவழியா யிறக்கிவிட்டாள், அவன் தப்பிவித்துக்கொண்டோடிப்போனான்.

௰௩. மிகாலோவென்றால் ஒரு சிலையை யெடுத்துக் கட்டிலின் மேல் வைத்து அதின் தலைமாட்டிலே ஒரு வெள்ளாட்டுத் தோலைப் போட்டுப் புடவையினாலே மூடி வைத்தாள்.

௰௪. தாவீதைக் கொண்டுவரச் சவுல் சேவகரை யனுப்பினபோது, அவர் வியாதியா யிருக்கிறாரென்றாள்.

௰௫. அப்போ தாவீதைப் பார்க்கிறதுக்குச் சவுல் சேவகரை யனுப்பி: அவனைக் கொன்றுபோடும்படிக்குக் கட்டிலோடேகூட அவனை யென்னண்டைக்குக் கொண்டுவாருங்கோளென்றான்.

௰௬. சேவகர் வந்தபோதோவென்றால் இதோ சிலை கட்டிலின் மேலும் வெள்ளாட்டுத் தோல் அதின் தலைமாட்டிலுங் கிடந்தது.

௰௭. அப்போ சவுல்: நீ யிப்படி என்னை ஏய்த்து என் பகைஞனைத் தப்பவிட்டனுப்பினதென்னவென்று மிகாலைக் கேட்டான். அப்போ மிகால் சவுலுடனே: நான் உன்னைக் கொல்லாதபடிக்கு என்னை யனுப்பி விடுவென்றவ னென்னோடே சொன்னானென்றாள்.

௰௮. தாவீது தப்பியோடிப்போய், ராமாவிலிருக்கிற சாமுவேலண்டைக்கு வந்து: சவுல் தனக்குச் செய்ததெல்லாத்தையு மவனுக்கறிவித்தான், பிற்பாடு அவனுஞ் சாமுவேலும் போய், நாயோதிலே தரித்திருந்தார்கள்.

௰௯. ஆனால் இதோ தாவீது ராமாவுக்கடுத்த நாயோதிலே யிருக்கிறானென்று சவுலுக்கறிவிக்கப்பட்டது.

௨௰. அப்போ சவுல் தாவீதைக் கொண்டுவரச் சேவகரை யனுப்பினான். அவர்கள் தீர்க்கதெரிசனஞ் சொல்லுகிற தீர்க்கதெரிசிகளின் கூட்டத்தையுஞ் சாமுவேல் அவர்களின் தலைவனாக நிற்கிறதையுங் கண்டார்கள், அப்போ சவுலுடைய சேவகரின் மேலே பராபரனுடைய ஆவியிறங்கினதினாலே அவர்களுந் தீர்க்கதெரிசனஞ் சொன்னார்கள்.

௨௰௧. இது சவுலுக்கறிவிக்கப்பட்டபோது அவன் வேறே சேவகரை யனுப்பினான், அவர்களுந் தீர்க்கதெரிசனஞ் சொன்னார்கள். மூன்றந்தரமுஞ் சவுல் சேவகரை யனுப்பினான். அவர்களுந் தீர்க்கதெரிசனஞ் சொன்னார்கள்.

௨௰௨. அப்போ தவன் தானும் ராமாவுக்குப் போய், சேக்குவிலிருக்கிற பெரிய கிணற்றண்டையிலே வந்து: சாமுவேலுந் தாவீதுமெங்கேயிருக்கிறார்களென்று கேட்டான். அதோ ராமாவுக்கடுத்த நாயோதிலிருக்கிறார்களென்று சொல்லப்பட்டது.

௨௰௩. அப்போ ராமாவுக்கடுத்த அந்த நாயோத்துக்குப் போனான், ஆனால் பராபரனுடைய ஆவி அவன் மேலும் இறங்கினதினாலே அவன் ராமாவுக்கடுத்த நாயோதிலே சேருமட்டுந் தீர்க்கதெரிசனஞ் சொல்லிக்கொண்டே நடந்துவந்து,

௨௰௪. தானுந் தன் வஸ்திரங்களைக் கழட்டிப்போட்டு, தானுஞ் சாமுவேலுக்கு முன்பாகத் தீர்க்கதெரிசனஞ் சொல்லி, அன்று பகல் முழுதும் ராமுழுதும் வஸ்திரமில்லாமல் விழுந்து கிடந்தான். ஆகையினாலே: சவுலுந் தீர்க்கதெரிசிகளிலொருத்தரோவென்பார்கள்.

## ௨௰. அதிகாரம்.

யோனத்தான் தாவீதோடே பண்ணின உடம்படிக்கையைப் புதிதாக்கி, தாவீதுக்காக மிகவும் பிறையாசப்பட்டது.

தாவீதோவென்றால் ராமாவுக்கடுத்த நாயோதிலிருந்தோடிப்போய், யோனத்தான் முன்பாக வந்து: உம்முடைய தகப்பன் என் பிராணனை வாங்கத் தேடுகிறதுக்கு நான் செய்ததென்ன, என் அக்கிரமமென்ன, அவருக்கு முன்பாக என் பாவமென்னவென்றான்.

௨. அவன் இவனுடனே: அப்படியொருக்காலும் வராது, நீர் சாவதில்லை, இதோ என் செவிகளுக்கு வெளிப்படுத்தாமல் என் தகப்பன் பெரிய காரியமானாலுஞ் சின்னக்காரியமானாலுஞ் செய்கிறதில்லை, இந்தக்காரியத்தை என் தகப்பன் எனக்கொளிப்பானேன், அது இல்லையென்றான்.

௩. அப்போ தாவீது: உம்முடைய கண்களில் எனக்

ருததயவுகிடடததென றுமமுடதகபபனநன று
யறிவார், ஆகையாலயோனததானுககுமனநோ
வுணடாகாதபடிககவனிதை யறியபபோகா தெ
னபார்; ஆனால மெயயாகவேஎனககும மரணத
துககுமஒருஅடி தூரமாததிரமிருககுதெனறுக
றதருடைய சீவனையுமஉமமுடசீவனையுங கொ
ணடு சொலலுகிறேனெனறுமறுமொழியாக
சசொலலிஆணையிடடான.

௪. அபபோயோனததான தாவீதுடனே: உ
னனுததுமமளபபடிக்கேட்குதோ அபபடி யுன
ககுசசெய்வேனெனறான.

௫. தாவீதுயோனததானோடே சொனனதா
வது: இதோநாளைககுஅமாவாசையானபடியினா
லேநானிராசாவோடேசாபபிடபபநதியிருககவே
ணடியதாயிருககும, ஆனாலநான மூனறுமநாளச்
சாயஙகால மடடும வெளியிலே யொளிததிருகக
வெனனைபபோகவிடும.

௬. நானஙகேயெனறுமமுடதகபபன கே
டடால்: தனனூராகியபெதலகேமிலே வருஷந
தோறும பெலியிடுகிற நாளவநதிருஷததுககெல
லாமிருககிறபடியினாலேதாவீது அவவிடததுக
கோடஎனனையுததரவுகேடகவேகேடடானென
றுநீர்சொலலும.

௭. அதற்கவர்நலலதெனறால், உமதடியானு
ககுசசமாதான மிருககும, அவர்கோபமாய எரிந
தாரேயானால அவராலேபொலலாபபுததீர்மான
பபடடிருககுதெனறதினாலறிநதுகொளளுவீர்.

௮. ஆகையாலுமதடியானுககுததயவுசெய்
வீராக, ஏனெனிலகறததருககுமனபாகவுமதடியா
னையுமமோடே உடம படிக்கைககுளளாக கிக
கொணடீர், எனனிலேயொரு அககிரமமிருந ததே
யானாலநீரேஎனனைககொனறுபோடும. நீரெ
னையுமமுடதகபபன னிடைககுககொணடுபோ
வதெனனவெனறான.

௯. அபபோயோனததான: அபபடியுனககு
வராதிருபபதாக, பொலலாபபுனமேல வரபபண
ணஎனதகபபனாலே தீர்மானபபடடு தெனறுநா
னறியவேயறிநதால், நானதையுனககறிவிககாதி
ருபபேனோவெனறான.

௰. தாவீதுயோனததானுடனே: உமமுடதக
பபன உமககு கடின மான பிறததியுததரஞ
சொனனானோ எனகிறதையெனககறிவிபபவனா
ரெனறான.

௰௧. அபபோ யோனததான தாவீதுடனே:
உளருககுவெளியேபோவோமவாவெனறான. இ
ருவருமவெளியேபுறபபடடுபபோனார்கள்.

௰௨. அபபோயோனததானதாவீதோடேசொ
னனதாவது: நானநாளைநாளையனறைககுளளே
எனதகபபனையறிநதுகொணடு, இதோதாவீதின
மேலேதயவாயிருககிறானெனறுகணடும, அதைய
பபோதுனசெவிகளுககுவெளிபபடுததும படிக
குனககுசசொலலியனுபபாதிருநதால்,

௰௩. இஸ்ருவேலின பராபரனாகிய கறதர்
யோனததானுககிபபடியுமபபடியுஞ செயயக
கடவார். ஆனாலஉனககுததீஙகுசெயயஎனதகப
பனுககுநனறாய்ககணடாலதையுனசெவிகளுககு
வெளிபபடுததி, நீசமாதானததோடே போகுமப
டிககுனனைபபோகவிடுவேன, கறதர்எனதகபப
னோடிருநததுபோலஉனனோடேயிருபபாராக.

௰௪. அபபோநானினனமுயிரோடிருநதால்,
நானசாகாதபடிககுநீகறதரின நிமிததியமாயெ
னககுததயவுசெயயாவிடடாலகறதர் உனககும
அபபடிசெயயககடவார்.

௰௫. கறதாதாவீதினசததுருககளாகிய அவ
ரவனைபபூமியினமேலிராதபடிககுவேரறுககும
போதும, நீயெனறைககுமெனதயவையெனவீட
டைவிடடகறறிபபோடாயாகவெனறான.

௰௬. இபபடியோனததான தாவீதின வீட
டோடேஉடமபடிககைபணணி: தாவீதுடசதது
ருககளின கையிலே கறதர்கணககு ககேட்பாராக
வெனறுசொலலி,

௰௭. யோனததானதாவீதைமிகவுஞசினேகி
ததபபடியினாலேபினனையுமவனுககாணையிட
டான, ஏனெனிலதனனுததுமதைசசினேகிதத
துபோலஅவனைசசினேகிததான.

௰௮. பிறபாடு யோனததான அவனுககுச
சொனனதாவது: நாளையமாவாசையானபடியி
னாலேநீயுளககாரவேணடிய இடததிலேநீயிலலை
யெனறுகாணபபார்களே.

௰௯. மூனறுமநாளிலேநீதீவரமபபணணி, இந
தகடபடியினநாளாகிய இனறுநீயொளிததிருநத
ஸதலததுககிறஙகிவநது, ஏசேலெனறகலலண
டையிலுளுககார்நதிரு.

௨௰. அபபோநானகுறிபபு வைததெய்கிறப
போலேஅதுககுபபககமாகமூனறு அமபுகளை
யெய்து,

௨௰௧. இதோநீபோய, அநதஅமபுகளைததேடி
வாவெனறு பிளளையாணடாளையனுபபுவேன.
இதோஅமபுகளுனககிபபாலேகிடககுது அதுக
ளையெடுததுவாவெனறு பிளளையாணடானோ

டே நான் சொல்லவே சொன்னால், நீ வா, ஏனென்றால் அப்போ தொன்றுமில்லாமல் உனக்குச் சமாதானமாயிருக்குமென்று கர்த்தருடைய சீவனைக் கொண்டு சொல்லுகிறேன்.

௨௨. இதோ அம்புகள் உனக்கப்பாலே கிடக்குதென்று நான் பிள்ளையாண்டானோடே சொன்னேனேயாகில் நீ போய்விடுவாயாக, ஏனெனில் அப்போ கர்த்தர் உன்னை அப்பாலே அனுப்பச் சொல்லுகிறார்.

௨௩. ஆனால் நானும் நீயும் பேசிக்கொண்ட காரியத்துக்கு இதோ கர்த்தர் எனக்கும் உனக்கும் என்றைக்கும் சாட்சியானவரென்றான்.

௨௪. அப்படியே தாவீது வெளியிலே ஒளித்துக்கொண்டிருந்தான், அமாவாசையானபோது இராசா அசனம் பண்ண உளுக்கார்ந்தான்.

௨௫. இராசா சுவரண்டையிலிருக்கிற தன்னுட இஸ்தலத்திலே அப்போதும் போலே உளுக்கார்ந்தபோது யோனத்தானெழுந்திருந்தான். அப்னேரோவெனில் சவுலுடப் பக்கத்திலுளுக்கார்ந்தான், தாவீதிருக்குமிடம் வெறுமையாயிருந்தது.

௨௬. ஆனால் அவன் சுத்தமாயிராதபடிக்கு அவனுக்கேதாகிலுஞ் சம்புவித்தது, சுத்தமில்லாதிருக்கிறானென்றன்றையத்தினஞ் சவுலொன்றுஞ் சொல்லவில்லை.

௨௭. அமாவாசைக்கு மறுநாளிலுந் தாவீதிருக்குமிடம் வெறுமையாயிருந்தது, அப்போது சவுல்: ஈசாயின் மகன் நேற்றுமின்றுஞ் சாப்பாட்டுக்கு வராதே போனதென்னவென்று தன் குமாரனாகிய யோனத்தானைக் கேட்டான்.

௨௮. யோனத்தான் சவுலுக்குப் பிரத்தியுத்தாரமாக: பெத்லெகேமமட்டும் போகத் தாவீதென்னை வினயத்தாவு கேட்கவே கேட்டு,

௨௯. அங்கே நான் போகட்டுமே, ஏனெனில் எங்கள் வங்கிஷத்துக்கு ஊரிலே பலியிடுதலிருக்குது, என்னை வரச்சொல்லி என் சகோதரன் தானே எனக்குக் கற்பித்தான்; இப்போதும் உம்முடைய கண்களிலே எனக்குத் தயவு கிடைத்ததானால் நானென் சகோதரரைப் பார்க்கிறதுக்குத் தப்பிப் போகட்டுமேயென்றான். ஆகையினாலேயவன் இராசாவின் பந்திக்கு வாராதே போனானென்று சொன்னான்.

௩௰. அப்போது சவுல் யோனத்தான் பேரிலே கோபமூண்டவனாகி அவனுக்குச் சொன்னதாவது: இரண்டகத்தினாலே மாறுபாடானவளின் மகனே, நீயுனக்கு வெட்கமாகவும் உன் தாயாரின் அவமானத்துக்கு வெட்கமாகவும் ஈசாயின் மகனைத் தெரிந்துகொண்டிருக்கிறதை நானறியேனோ?

௩௧. அதேனென்றால் ஈசாயின் மகன் பூமியின் மேலுயிரோடிருக்கும் நாளெல்லாம் நீயானாலும் உன் இராச்சிய பாரமானாலும் நிலைப்படுவதில்லை; இப்போதும் அவனை அழைத்தனுப்பி என்னண்டைக்குக் கொண்டுவா, ஏனெனில் அவன் மரணத்துக்குள்ளானவனென்றான்.

௩௨. யோனத்தான் தன் தகப்பனாகிய சவுலுக்குப் பிரத்தியுத்தாரங் கொடுத்து அவனுடனே: அவனென்னத்துக்காகக் கொல்லச் செய்யப்படவேணும், அவனென்ன செய்தானென்றான்.

௩௩. அப்போது சவுல் அவனைக் குத்திப்போட ஈட்டியையவன்மேலெறிந்தான். ஆகையால் தாவீதைக் கொன்றுபோடத் தன் தகப்பனிடத்திலே தீர்மானமாச்சுதென்கிறதை யோனத்தானறிந்து கொண்டு,

௩௪. கோபதாபமாய்ப் பந்தியை விட்டெழுந்திருந்துபோய் அமாவாசையின் மறுநாளாகிய அன்றையத்தினம் அசனம் பண்ணாதிருந்தான், ஏனென்றால் தன் தகப்பன் தாவீதை நிந்தித்துச் சொன்னது அவனுக்கு மனநோவாயிருந்தது.

௩௫. மறுநாள் காலமே யோனத்தான் தாவீதுக்குக் குறித்த நேரத்திலே ஒரு சின்னப் பிள்ளையாண்டானைக் கூட்டிக்கொண்டு வெளியே புறப்பட்டு வந்து,

௩௬. நீ ஓடி, நானெய்கிற அம்புகளைத் தேடென்று பிள்ளையாண்டானுக்குச் சொல்லி, அந்தப் பிள்ளையாண்டானோடக்கொள்ள அவனுக்கப்பாலே போகும்படி ஒரு அம்பையெய்தான்.

௩௭. யோனத்தானெய்த அம்பிருக்குமிடமட்டும் பிள்ளையாண்டான் வந்தபோது: அம்பு உனக்கின்னமுன்னாலேயில்லையோவென்று யோனத்தான் பிள்ளையாண்டானுக்குப் பிறகாலேயிருந்து கூப்பிட்டான்.

௩௮. நீ தரித்து நிற்காமல் தீவிரித்துப் போட்டென்ப்போவென்றும் யோனத்தான் பிள்ளையாண்டானுக்குப் பிறகாலேயிருந்துக் கூப்பிட்டான். அப்படியே யோனத்தானின் பிள்ளையாண்டான் அம்புகளைப் பொறுக்கித் தன் எசமானண்டைக்குக் கொண்டுவந்தான்.

௩௯. அந்தப் பிள்ளையாண்டான் ஒன்றுமறியாதிருந்தான், யோனத்தானுந் தாவீதுமே அந்தக் காரியத்தையறிந்திருந்தார்கள்.

௪௰. அப்போ யோனத்தான் தன்னாயுதங்களைத் தன்னுடப் பிள்ளையாண்டானுக்குக் கொடுத்து, அவனுடனே: அதுகளைப் பட்டணத்துக்குள்ளே

கொ

கொணடுபோவென்றான.

சக. பிளளையாணடான போனபிறபாடு தாவீது தென்புறமான இடத்திலிருநதெழுநது வநது முகங்குப்புறத் தரையிலேவிழுநது மூனறு விசைவணங்கிக்கொணடான. அவர்களொருததனை யொருததர் முத்திசெயது, ஒருததனை யொருததர் பார்த்தழுதார்கள. தாவீது மிகுதியும அழுதான.

சஉ. அபபோ யோனததான தாவீதுடனே: நீ சமாதானத்தோடேபோய, கர்த்தர் என்னைறககும என்னுடைய சநததிக்கும உன் சநததிக்கும நடுவான சாட்சியென்று கர்த்தருடைய நாமத்தைக் கொண்டு நாமிருவருஞ் சொல்லி ஆணையிட்டுக் கொணடதை நினைத்துக் கொளளென்றான.

சங. பிறபாடு அவனெழுநது புறப்பட்டுப்போனான, யோனததானோவெனில் பட்டணத்திலே பிறவேசித்தான.

உக. அதிகாரம.

தாவீது அகிமேலேக்கின கையிலே தெய்வசமுகத்தப்பங்களை வாங்கிக்கொணடுபோனது.

தாவீதோவென்றால் நோபிலிருக்கிற ஆசாரியனாகிய அகிமேலேக்கண்டைக்குவநதான, அகிமேலேக் நடுக்கத்தோடே தாவீதுக்கெதிர்கொணடுபோய: ஒருததரும உமமோடே கூடவராமல் நீ ஒண்டியாய்வருகிறதென்னவென்று அவனைக்கேட்டான.

உ. தாவீது ஆசாரியனாகிய அகிமேலேக்குக்குச்சொன்னது: இராசா என்க்கொரு காரியத்தைக் கறபிதது: நானுன்னை அனுப்பின காரியமும உனக்குக் கறபிததுமிதின்னதென் றொருததரும அறியாதிருக்கவேணுமென்றெனனோடே சொன்னார், இவ்விடத்துக்கு வரனான வேலைக்காறருக்குக் குறித்திருக்கிறேன.

ங. இபபோது உமமுடைய கையின கீழிருக்கிறதென்ன ஐநதப்பமானாலும எமமாத்திரம அகப்பட்டுதோ அமமாத்திரமாகிலும என்கையிலே கொடுமென்றான.

ச. ஆசாரியன தாவீதுக்குப் பிறததியுத்தரமாக: பரிசுதத அப்பமிருக்கிறதேயொழிய பொது அப்பமென் கையின கீழில்லை, வேலைக்காறர் இஸ்திரிகளோடாகிலுஞ் சேராதிருநதால்கொடுப்பேனென்றான.

ரு. தாவீது ஆசாரியனுக்குப் பிறததியுத்தரமாக: நானபுறப்படுகிறதுக்குமுன நேறறும மூன்றாநாளும இஸ்திரிகளோங்களுக்கு விலகியிருநதார்கள, வேலைக்காறருடைய அசமபிகளும சுததமாயிருக்குது, இநதவழிபலவேலைக்கடுத்த வழியாயிருநதாலும அநத அப்பம அசமபிகளில் இன்றைக்குப் பரிசுததமாயிருக்குமென்றான.

சா. அபபோ கர்த்தருக்குமுனபாக இருநது வாங்கப்பட்ட சமுகத்தப்பங்களைததவிர வேறே அப்பம அங்கேயிராதபடியினாலே ஆசாரியன அவனுக்குப் பரிசுததமான அப்பத்தைக் கொடுத்தான, ஏனென்றால் அதுகள வாங்கப்படுகிற நாளிலே அதுக்குவதிலாகச் சூடான அப்பம வைக்கப்படும.

எ. ஆனாலசவுலுடைய வேலைக்காறரில் ஏதோமியனாகிய தோவேகென்றுபேருளள ஒருததன அன்றையிறதினம அங்கே கர்த்தருக்குமுனபாக அடைக்கப்பட்டிருநதான, அவன சவுலுக்கிருக்கிற மேயப்பரில் மகா வல்லவனாயிருநதான.

அ. தாவீது அகிமேலேக்குடனே: இங்கே உமமுடைய கையின கீழொருஈட்டியாகிலும பட்டையமாகிலுமில்லையோ, ஏனெனில் இராசாவின காரியம அவசரமானபடியினாலே நானென பட்டயத்தையாகிலும என ஆயுதங்களையென்கிலும என கையிலேபிடித்துவரவில்லையென்றான.

கூ. அதற்கு ஆசாரியன: இதோ நீர் ஏலாவியு பளளத்தாக்கிலே மடங்கடித்தபெலிஸ்ததனாகிய கோலியாத்தினபட்டையம ஆசாரியசால்வைக்குப் பினனே ஒருபிடவையிலே சுறறிவைத்திருக்குது, அதை நீர் வாங்கமனதானால் வாங்குமென்றால அதுவேயல்லாமல் வேறொன்றுமிங்கேயில்லையென்றான. அபபோ தாவீது அதைப்போலொத்ததில்லை, அதையெனக்குத் தாருமென்றான.

தாவீது காத்தூரிலிருக்கிற இராசாவாகிய ஆகீஸ்வசமாய ஓடிவநதபோது அவனுக்கு வநத இக்கட்டு.

ய. பிறகு தாவீதெழுநது அன்றையிறதினஞ் சவுலுக்குத் தப்பியோடி, காத்தின இராசாவாகிய ஆகீஸண்டைக்குவநதான.

யக. ஆனால் ஆகீசின ஊழியக்காறர் அவனுடனே: இவன தேசத்தின இராசாவாகிய தாவீதல்லவோ, சவுல் ஆயிரமபேரையுந தாவீது பதினாயிரமபேரையும மடங்கடித்தார்களென்றிவனைக்



குறி

களும அவன செயதவைகளும யூதாவுட இராசாககளின நாளாகமபபுஸதகததிலல்லோ எழுதியிருககுது.

௩௰. ரெகாபெயாமுககும யெரோபெயாமுககும அவர்களிருநதநாளககளெல்லாம யுததமாயிருநதது.

௩௧. ரெகாபெயாம தனபிதாககளோடே நிததிரையடைநது தாவீதின பட்டணததில் தனபிதாககளணடையிலே அடககம பணணப பட்டான; அம்மோன சாதியான அவன தாயககு நாமாளெனறுபேரிருநதது. அவன குமாரனாகிய அபீயாம அவன ஸ்தலததிலிராசாவானான.

## ௰ரு. அதிகாரம.

*அபீயாம ஆசா வென றயூதாவுட இராசாககளின நடபடிகள.*

நெபாததின குமாரனாகிய யெரொபெயாமென ற இராசாவின பதினெட்டாம வருஷததிலே அபீயாம யூதாவின மேலிராசாவாகி,

௨. மூன றுவருஷமாய யெருசலேமில ராச்சியபாரமபணணினான, அப்சலோமின குமாரததியாகிய அவனுட தாயின பேர் மாகாள.

௩. தன தகப்பன தனககுமுனனே செயதவெல்லாப்பாவங்களிலும இவன நடநதான, அவனிருதயம அவன தகப்பனாகிய தாவீதினிருதயததைப போல அவனபராபரனாகிய கர்தருககுமுனபாக உததமமாயிருநததில்லை.

௪. ஆனாலதாவீதினிமிததியம அவனுடபராபரனாகிய கர்தர் அவனுககுப்பிறபாடு அவனகுமாரனையெழுமடபபணணுகிறதினாலும யெருசலேமை நிலைநிறுததுகிறதினாலும அவனுககு யெருசலேமிலொருவிளககைககட்டளையிடடுவநதார்.

௫. ஏனெனிலதாவீது எததியனாகிய உரீயாவின வர்ததமானமே யொழிய, கர்தர் தனககு கற்பித்ததிலே தானுயிரோடிருநதநாளெல்லாம ஒனறையுமவிடடுவிலகாமல அவர்பார்வைககுச செம்மையானதைச செயதிருநதான.

௬. ரெகாபெயாமுககும யெரோபெயாமுககுமிருநத போர் அவனுயிரோடிருககிற நாளெல்லாம நடநதது.

௭. அபீயாமினமறறவர்ததமானஙகளும அவன செயததவைகளும யூதாவுட இராசாககளின நாளாகமபபுஸதகததிலல்லோ எழுதியிருககுது. அபீயாமுககும யெரோபெயாமுககும போருணடாயிருநதது.

௮. அபீயாம தனபிதாககளோடே நிததிரையடைநதபின அவனைத்தாவீதின பட்டணததில அடககமபணணினார்கள், அவன குமாரனாகிய ஆசா அவன ஸ்தலததிலிராசாவானான.

௯. இஸ்ரவேலின இராசாவாகிய யெரோபெயாமின இருபதாமவருஷததிலே ஆசா யூதாவின மேலிராசாவாகி,

௰. நாற்பத்தொருவருஷமாக யெருசலேமில ராச்சியபாரமபணணினான, அப்சலோமின குமாரததியாகிய அவனுட தாயின பேர் மாகாள.

௰௧. ஆசா தன தகப்பனாகிய தாவீதைப்போல கர்தரின பார்வைககுச செம்மையானதைச் செய்தான.

௰௨. அவன புணர்ச்சிககாறரை தேசததிலிருநதகற்றி, தனபிதாககளுககுணடுபணணின நரகலான விககிரகஙகளையெல்லாமவிலககி,

௰௩. தோப்பிலே யருவருப்பான விககிரகததையுணடுபணணின தன தாயாகிய மாகாளையும இராசாததியாயிராதபடிககு விலககிப் போட்டான. அவளுடைய விககிரகததையும ஆசா நிறமூலமாககிகீதரோன ஆற்றணடையிலேசுடடெரிததுப்போடடான.

௰௪. மேடைகளோவெனறால தள்ளிப்போடப்பட்டதில்லை, எனறாலும ஆசா உயிரோடிருநத நாளெல்லாம அவனிருதயங கர்தரோடே உததமமாயிருநதது.

௰௫. தன தகப்பனும தானும நேமககம பணணின வெள்ளியையும பொனனையும பணிமுடடுகளையும அவன கர்தருடைய வீடடிலே கொணடுவநதான.

௰௬. ஆசாவுககும இஸ்ரவேலின இராசாவாகிய பாசாவுககும அவர்களுடைய எல்லா நாளுகளிலும போருணடாயிருநதது.

௰௭. ஏனெனிலஒருததரும புறப்படடு யூதாவின இராசாவாகிய ஆசாவின வசமாய சேராதபடிககு இஸ்ரவேலின இராசாவாகிய பாசா யூதாவுககுவிரோதமாக எழுநதுவநது, ராமாவைககட்டியெழுப்பினான.

௰௮. அப்போது ஆசா கர்தருட வீடடின பொககிஷஙகளில மீதியான எல்லா வெள்ளியையும பொனனையும இராசாவுடவீடடின பொககிஷஙகளையுமெடுதது, அதுகளைத் தன ஊழியககாறர்

காறர்கையிலேதமஸ்குவிலேவாசமாயிருக்கிற எசியோனின் மகனாகிய தபேரிமோனின் குமாரன் பெனாதாத்தென்ற சூரியாவின் இராசாவுக்குக் கொடுத்தனுப்பி:

௰௯. எனக்குமுனக்குமென் தகப்பனுக்குமுன் தகப்பனுக்கும் உடம்படிக்கையுண்டே, இதோ உமக்குக் காணிக்கையாய் வெள்ளியையும் பொன்னையும் அனுப்பினேன், இஸ்ருவேலின் இராசாவாகிய பாசா என்னைவிட்டுப்போகும்படிக்கு நீர் வந்து அவனோடிருக்கும் உம்முடைய உடம்படிக்கையைத் தள்ளிப்போடுமென்று சொல்லியனுப்பினான்.

௨௰. பெனாதாத் இராசாவாகிய ஆசாவுக்குக் கேள்விகொடுத்து, தனக்குண்டான இராணுவங்களின் தலைவரை இஸ்ருவேலின் பட்டணங்களுக்கு விரோதமாக அனுப்பி, ஈயோனையுந் தாணையும் பெத்மாக்காவென்ற ஆபேலையுங் கின்னரோத்தனைத்தையும் நப்தலியின் முழுத்தேசத்தோடுங் கூட இடறவடித்தான்.

௨௧. பாசா அதைக்கேட்டபோது ராமாவைக் கட்டுகிறதை விட்டு, திறசாவிலிருந்து விட்டான்.

௨௨. அப்போதிராசாவாகிய ஆசா: ஒருத்தருந்தப்பாமலெல்லாரும்போய், பாசாகட்டின ராமாவின் கல்லுகளையுமதின் மரங்களையுமெடுத்துவரக் கடவார்களென்று யூதாவிலெங்கும் பறைமுறையிடுவித்து, அதுகளால் பென்யமீன் கோத்திரத்துக் கேபாவையும் மிஸ்பாவையுங் கட்டினான்.

௨௩. ஆசாவின் மற்றேயெல்லா வர்த்தமானங்களும் அவனுடைய வல்லமையும் அவன் செய்ததனைத்தும் அவன் கட்டின பட்டணங்களின் செய்திகளும் யூதாவுடைய இராசாக்களின் நாளாகமப்புஸ்தகத்திலல்லோ எழுதியிருக்குது, அவன் முதிர்வயதின் காலத்திலேயோவென்றால் கால்களில் நோய்கொண்டிருந்தான்.

௨௪. ஆசா தன்பிதாக்களோடே நித்திரையடைந்தபின் தன் தகப்பனாகிய தாவீதின் பட்டணத்திலே தன்பிதாக்களண்டையில் அடக்கம்பண்ணப்பட்டான். அவன் குமாரனாகிய யோசபாத் அவனிஸ்தலத்திலிராசாவானான்.

நாதாப்பாசாவென்ற இஸ்ருவேலின் இராசாக்களுடைய நடபடிகள்.

௨௫. யூதாவின் இராசாவாகிய ஆசாவின் இரண்டாம் வருஷத்திலே யெரோபெயாமின் குமாரனாகிய நாதாப் இஸ்ருவேலின் மேலிராசாவாகி, இரண்டு வருஷமாய் இஸ்ருவேலின் மேலிராச்சியபாரம்பண்ணினான்.

௨௬. அவன் கர்த்தருடைய பார்வைக்குப் பொல்லாப்பானதைச் செய்து, தன் தகப்பன் வழியிலும் அவன் இஸ்ருவேலைப் பாவஞ்செய்யப்பண்ணின அவனுடைய பாவத்திலும் நடந்துகொண்டான்.

௨௭. ஆனாலிசக்கார் வீட்டானாகிய அகியாவின் குமாரனான பாசா அவனுக்கு விரோதமாய் ஒப்பந்தம் பண்ணி, நாதாபும் இஸ்ருவேலனைத்தும் பெலிஸ்தருக்கிருக்கிற கிபெத்தோனை முத்திக்கைப்போட்டிருக்கையில் பாசா அவனைக் கிபேத்தோனிலே வெட்டிப்போட்டான்.

௨௮. பாசா யூதாவின் இராசாவாகிய ஆசாவின் மூன்றாம் வருஷத்திலே அவனைக் கொன்றுபோட்டபின் அவன் இஸ்தலத்திலிராசாவானான்.

௨௯. அப்போது யெரோபெயாஞ் செய்ததும் இஸ்ருவேலைச் செய்யப்பண்ணினதுமான பாவங்களினிமித்தியும் அவன் இஸ்ருவேலின் பராபரனாகிய கர்த்தருக்குண்டாக்கின கோபத்தினிமித்தியுங் கர்த்தர் சீலோனியனாகிய அகியாவென்ற தம்முடைய ஊழியக்காறனைக்கொண்டு சொல்லியிருந்த வார்த்தையின்படியே சம்பவித்ததென்றால்,

௩௰. அவன் இராசாவானபின் அவன் யெரோபெயாமின் வீட்டாரையெல்லாம் வெட்டிப்போட்டான், யெரோபெயாமுக்கிருந்த சுவாசமுள்ளதொன்றையும் அவன் அழிக்காமல் வைத்துவைத்ததில்லை.

௩௧. நாதாபின் மற்றவர்த்தமானங்களும் அவன் செய்ததனைத்தும் இஸ்ருவேல் இராசாக்களின் நாளாகமப்புஸ்தகத்திலல்லோ யெழுதியிருக்குது.

௩௨. ஆசாவுக்கும் இஸ்ருவேல் இராசாவாகிய பாசாவுக்குமோவெனில் அவர்கள் நாளக்களெல்லாம் போருண்டாயிருந்தது.

௩௩. யூதாவின் இராசாவாகிய ஆசாவின் மூன்றாம் வருஷத்திலே அகியாவின் குமாரனாகிய பாசா இஸ்ருவேலனைத்தின் மேலே திறசாவிலே இராசாவாகி, இருபத்துநாலு வருஷமாய் ஆண்டு,

௩௪. கர்த்தரின் பார்வைக்குப் பொல்லாப்பானதைச் செய்து, யெரோபெயாமின் வழியிலும் அவன் இஸ்ருவேலைப் பாவஞ்செய்யப்பண்ணின அவனுடைய பாவத்திலும் நடந்துவந்தான்.

௰௬. அதி

## ௰௬. அதிகாரம்.

பாசாவின் குறை நடபடிகளும், ஏலா, சிமிறி, உமிறீயென்ற இஸ்ருவேலிராசாக்களின் நடபடிகளும்.

அனுல்ப்பாசாவுக்கு விரோதமாகக் கர்த்தருடைய வார்த்தை அனனியின் குமாரனாகிய யெகூவுக்குண்டாய், அவர் சொன்னதாவது:

௨. நாமுன்னைத் தூளிலிருந்துயர்த்தி, உன்னை நமது சனமாகிய இஸ்ருவேலின் மேலே தலைவனாக வைத்திருக்கக்கொள்ள நீ யெரொபெயாமின் வழியிலே நடந்து, நமது சனமாகிய இஸ்ருவேலைத் தங்கள் பாவங்களால் நமக்குக் கோபமுண்டாக்கும்படிக்கவர்களைப் பாவஞ்செய்யப்பண்ணுகிறபடியினாலே,

௩. இதோ, நாம் பாசாவின் பின்னடியாரையும் அவன் வீட்டாரின் பின்னடியாரையுமெடுத்துப் போட்டு, உன்னுடைய வீட்டை நேபாத்தின் குமாரனாகிய யெரொபெயாமின் வீட்டைப்போலாக்குவோம்.

௪. பாசாவின் சந்ததியிலே பட்டணத்திற்சாகிறவனை நாய்களுந்தின்னும், வெளியிலே அவனுக்குச் சாகிறவனை ஆகாசத்துப் பறவைகளுந்தின்னும்.

௫. பாசாவின் மற்றவர்த்தமானங்களும் அவன் செய்ததும் அவனுடைய வல்லமையும் இஸ்ருவேல் இராசாக்களின் நாளாகமப் புஸ்தகத்திலல்லோ எழுதியிருக்குது.

௬. பாசா தன் பிதாக்களோடே நித்திரையடைந்தபின், திற்சாவில் அடக்கம்பண்ணப்பட்டான். அவன் குமாரனாகிய ஏலா அவன் இஸ்தலத்திலிராசாவானான்.

௭. பாசா தன் கைகளின் செய்கையால் கர்த்தருக்குக் கோபமுண்டாக்கி, அவர் பார்வைக்குச் செய்தவெல்லாப் பொல்லாப்பின் நிமித்தியமும் அவன் யெரொபெயாமின் வீட்டாரை வெட்டிப்போட்டதின் நிமித்தியமும் இவர்களைப்போல ஆவானென்று, அவனுக்கும் அவன் வீட்டுக்கும் விரோதமாக அனனியின் குமாரனாகிய யெகூவென்ற தீர்க்கதெரிசியினாலே கர்த்தருடைய வார்த்தை பின்னையுமுண்டாச்சுது.

௮. ஆசா யூதாவின் இராசாவான இருபத்தாறாம் வருஷத்திலே பாசாவின் குமாரனாகிய ஏலா இஸ்ருவேலின் மேலே திற்சாவிலே இராசாவாகி இரண்டு வருஷமாண்டான்.

௯. அனுல்ப்பாதிரதங்களின் மேலே தலைவனாகிய சிமிறியென்ற அவனூழியக்காரன் அவனுக்கு விரோதமாயுபாயந்தப்பண்ணி, அவன் திற்சாவிலே தன் வீட்டத்து அரமனை உக்கிராணக்காரனாகிய அற்சாவின் வீட்டிலே குடித்து வெறித்துயிருக்கக்கொள்ள,

௰. சிமிறி உள்ப்பிரவேசித்து, யூதாவின் இராசாவாகிய ஆசாவின் இருபத்தேழாம் வருஷத்திலே அவனை வெட்டிக்கொன்றுபோட்டு, அவன் இஸ்தலத்திலிராசாவானான்.

௰௧. அவன் இராசாவாகித் தன் ஆசனத்தின் மேலே உட்கார்ந்தபோது அவன் பாசாவின் வீட்டாரையெல்லாம் வெட்டிப்போட்டான், அவனுக்கொரு நாயையாகிலும் அவன் இனத்தானையாகிலும் அவன் சிநேகிதனையென்கிலும் அவன் உயிரோடே வைத்ததில்லை.

௰௨. அப்படியே பாசாவும் அவன் குமாரனாகிய ஏலாவுந் தங்கள் விக்கிரகங்களினாலே இஸ்ருவேலின் பராபரனாகிய கர்த்தருக்குக் கோபமுண்டாக்கிச் செய்ததும் இஸ்ருவேலைச் செய்யப்பண்ணினதுமான அவர்களுடைய எல்லாப் பாவங்களின் நிமித்தியம்,

௰௩. கர்த்தர் தீர்க்கதெரிசியாகிய யெகூவினாலே பாசாவைக்குறித்துச் சொல்லியிருந்த அவருடைய வார்த்தையின்படியே சிமிறி பாசாவின் வீட்டாரையெல்லாம் அழித்துப்போட்டான்.

௰௪. ஏலாவின் மற்றவர்த்தமானங்களும் அவன் செய்ததனைத்தும் இஸ்ருவேல் இராசாக்களின் நாளாகமப் புஸ்தகத்திலல்லோ எழுதியிருக்குது.

௰௫. யூதாவின் இராசாவாகிய ஆசாவின் இருபத்தேழாம் வருஷத்திலே சிமிறி திற்சாவிலே ஏழுநாள் இராசாவாயிருந்தான், சனமப்போ பெலிஸ்தருக்கிருக்கிற கிபேத்தோனுக்கெதிராகப் பாளயமிறங்கியிருந்தது.

௰௬. சிமிறி உபாயந்தப்பண்ணி, இராசாவைக் கொன்றுபோட்டானென்பதை அங்கே பாளயமிறங்கின சனங்கேட்டபோதேவெனில், இஸ்ருவேலெல்லாம் அந்நாளிலே தானே பாளயத்திலே படைத்தலைவனாகிய உமிறீயை இஸ்ருவேலின் மேலிராசாவாக்கினார்கள்.

௰௭. அப்போது உமிறீயும் அவனோடேகூட இஸ்ருவேலனைத்துங் கிபேத்தோனிலிருந்தேறி வந்து, திற்சாவை முத்திக்கைபோட்டார்கள்.

௰௮. பட்டணம் பிடிபட்டதைச் சிமிறி கண்ட

போதோவென்றால், அவன் இராசாவின் வீடாகிய அரமனைக்குள் பிறவேசித்து, தானிருக்கிற இராசாவின் வீட்டைப் பக்கினியினாலே கொளுத்தி அழிவுசெய்தான்.

௰௯. அவன் கர்த்தரின் பார்வைக்குப் பொல்லாப்பானதைச் செய்து, யெரொபெயாமின் வழியிலும் அவன் இஸ்ரவேலைப் பாவஞ்செய்யப் பண்ணின அவன் பாவத்திலும் நடக்கிறதினாலே கட்டிக்கொண்ட அவனுடைய பாவங்களின் நிமித்தியம் அப்படி வந்தது.

௨௰. சிமிரியின் மற்ற வர்த்தமானங்களும் அவன் பண்ணின அவனுடைய ஒப்பந்தமும் இஸ்ரவேல் இராசாக்களின் நாளாகமப் புஸ்தகத்தில் எழுதியிருக்குது.

௨௧. அப்போது இஸ்ரவேல் சனம் இரண்டு வகுப்பாய்ப் பிரிந்து, பாதிச்சனங் கினாத்தின் குமாரனாகிய திபினியை இராசாவாக்க அவனைப் பின்பற்றி, பாதிச்சனம் உமிரியைப் பின்பற்றிப் போனார்கள்.

௨௨. ஆனால் கினாத்தின் குமாரனாகிய திபினியைப் பின்பற்றின சனத்தைப் பார்க்க உமிரியைப் பின்பற்றின சனம் பெலத்துப்போச்சுது. திபினி செத்துப்போனான், உமிரியோவென்றால் அரசாண்டான்.

௨௩. யூதாவின் இராசாவாகிய ஆசாவின் முப்பத்தோராம் வருஷத்தில் உமிரி இஸ்ரவேல் மேல் இராசாவாகி, பன்னிரண்டு வருஷமாய் இராச்சியபாரம் பண்ணினான்; அவன் திற்சாவிலே ஆறு வருஷமாய் அரசாண்டு,

௨௪. பிறபாடு சேமேரின் கையிலே சமாரியா மலையை இரண்டு தாலந்து வெள்ளிக்குக் கொண்டு அந்த மலையின் மேலே பட்டணத்தைக் கட்டி, சமாரியா மலையினுடைய இசமானாயிருந்த சேமேருடைய நாமத்துக்கொத்த பேரை அதுக்குத் தரித்தான்.

௨௫. ஆனால் உமிரி கர்த்தரின் பார்வைக்குப் பொல்லாப்பானதைச் செய்து, தனக்கு முன்னிருந்தனெல்லாரையும் பார்க்கக் கேடாய் நடந்து,

௨௬. நேபாத்தின் குமாரனாகிய யெரொபெயாமின் சகல வழியிலும், இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தருக்குத் தங்கள் விக்கிரகங்களாலே கோபமுண்டாக்கும்படியாய் இஸ்ரவேலைப் பாவஞ்செய்யப்பண்ணின அவனுடைய பாவங்களிலும் நடந்துகொண்டான்.

௨௭. உமிரி செய்த அவனுடைய மற்ற வர்த்தமானங்களும் அவன் காண்பித்த வல்லமையும் இஸ்ரவேல் இராசாக்களின் நாளாகமப் புஸ்தகத்தில் எழுதியிருக்குது.

௨௮. உமிரி தன் பிதாக்களோடே நித்திரையடைந்த பின் சமாரியாவிலே அடக்கம் பண்ணப்பட்டான், அவன் குமாரனாகிய ஆகாப் அவன் இஸ்தலத்தில் இராசாவானான்.

## இஸ்ரவேலின் இராசாவாகிய ஆகாபுடைய நடபடிகளின் துவக்கம்.

௨௯. யூதாவின் இராசாவாகிய ஆசாவின் முப்பத்தெட்டாம் வருஷத்தில் உமிரியின் குமாரனாகிய ஆகாப் இஸ்ரவேலின் மேல் இராசாவாகி, சமாரியாவில் இஸ்ரவேல் மேல் இருபத்திரண்டு வருஷமாக இராச்சியபாரம் பண்ணினான்.

௩௰. உமிரியின் குமாரனாகிய இந்த ஆகாப் தனக்கு முன்னிருந்த எல்லாரையும் பார்க்கக் கர்த்தரின் பார்வைக்குப் பொல்லாப்பானதைச் செய்தான்.

௩௧. நேபாத்தின் குமாரனாகிய யெரொபெயாமின் பாவங்களில் நடந்துகொள்ளுகிறது அவனுக்குக் கொஞ்சக்காரியமாய்க் கண்டு, அவன் சீதோனியரின் இராசாவாகிய எத்பாகாலின் குமாரத்தி யேசபேலை விவாகம் பண்ணி, போய்ப் பாகாலைச் சேவித்து அதைப் பணிந்துகொண்டு,

௩௨. தான் சமாரியாவிலே கட்டின பாகாலின் வீட்டில் பாகாலுக்குப் பலிபீடத்தை எடுப்பித்தான்.

௩௩. ஆகாப் ஒரு தோப்பையும் வைத்து, இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தருக்குக் கோபமுண்டாக்கும்படிக்குத் தனக்கு முன்னிருந்த இஸ்ரவேலின் இராசாக்களெல்லாரையும் பார்க்க அதிகஞ் செய்துவந்தான்.

௩௪. அவன் நாட்களிலே பெத்தேல் ஊரானான ஈயேல் யெரிகோவைக் கட்டினான், கர்த்தர் நூனின் குமாரனாகிய யோசுவாவைக்கொண்டு சொல்லியிருந்தவார்த்தையின்படியே, அவன் அதின் அஸ்திவாரத்தைப் போடுகிறபோது அபிராமென்ற தன் மூத்த குமாரனையும், அதின் வாசல்களை வைக்கிறபோது சேகூபென்ற தன் இளைய குமாரனையும் சாகக்கொடுத்தான்.

## ௰௭. அதிகாரம்.

எலியா தீர்க்கதரிசியினுடைய சொல்ப்படி வந்த பஞ்சத்தில் அவன் அதிசயமாய்ப் போஷிக்கப்பட்டது.

கிலேயாத்தின் குடிகளிலே திஸ்பி ஊரானாகிய எலியா ஆகாபுடனே: என் வாக்கின்படியே ஒழிய இந்த வருஷங்களிலே பனியும் மழையும் பெய்யாதிருக்குமென்று இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தருக்கு முன்பாக நிற்கிற நான் அவருடைய ஜீவனைக் கொண்டு சொல்லுகிறேனென்றான்.

௨. பிற்பாடு கர்த்தருடைய வார்த்தை யவனுக்கு உண்டாகி அவர் சொன்னதாவது:

௩. நீ யிவ்விடத்தை விட்டுக் கிழக்கே நோக்கிப் போய், யோர்தானுக்கு நேராயிருக்கிற கேரீத் ஆற்றண்டையிலே ஒளித்துக் கொண்டிரு.

௪. அந்த ஆற்றின் தண்ணீரைக் குடிப்பாய், அங்கே உன்னைப் பராமரிக்கக் காக்காய்களுக்குக் கற்பித்தேனென்றார்.

௫. அவன் போய்க் கர்த்தருடைய வார்த்தையின்படியே செய்தான், அவன் போய், யோர்தானுக்கு நேராயிருக்கிற கேரீத் ஆற்றண்டையிலே தங்கியிருந்தான்.

௬. காக்காய்கள் அவனுக்கு விடியுங் காலத்தில் அப்பமும் இறைச்சியுஞ் சாயுங் காலத்தில் அப்பமும் இறைச்சியுங் கொண்டுவந்தது, தாகத்துக்கு அந்த ஆற்றின் தண்ணீரைக் குடித்தான்.

௭. சில நாளைக்குப் பிற்பாடு சம்பவித்ததேதென்றால் அந்த ஆறு வற்றிப்போச்சுது, ஏனென்றால் தேசத்தில் மழை பெய்ந்ததில்லை.

௮. அப்போது கர்த்தருடைய வார்த்தையவனுக்கு உண்டாகி அவர் சொன்னதேதெனில்,

௯. நீ யெழுந்து, சீதோனுக்கடுத்த சற்பாத் ஊருக்குப் போய் அங்கே தங்கியிரு, இதோ, உன்னைப் பராமரிக்கும்படிக்கு அங்கே யிருக்கிற ஒரு கைம்பெண்சாதிக்குக் கற்பித்தேனென்றார்.

௰. அப்படியே அவனெழுந்து, சற்பாத்துக்குப் போனான். அந்தப் பட்டணத்தின் ஒலிமுகவாசலுக்கவன் வந்தபோது, இதோ அங்கே ஒரு கைம்பெண்சாதி விறகு பொறுக்கிக் கொண்டிருந்தாள், அவளைப் பார்த்துக் கூப்பிட்டு: நான் குடிக்கிறதுக்குக் கொஞ்சந் தண்ணீர் ஒரு பாத்திரத்திலே எனக்குக் கொண்டுவாவென்றான்.

௰௧. கொண்டுவர அவள் போகிறபோது அவன்: ஒரு அப்பத்தின் துணிக்கையையும் உன் கையிலே எனக்குக் கொண்டுவாவென்று அவளைப் பார்த்துக் கூப்பிட்டான்.

௰௨. அவளோவென்றால்: பானையிலே ஒரு பிடிமாவும், கலயத்திலே கொஞ்சம் எண்ணெயுமேயல்லாமல் எனக்கொரு அடையுமில்லையென்று உம்முடைய பராபரனாகிய கர்த்தருடைய ஜீவனைக் கொண்டு சொல்லுகிறேன், இதோ நானும் என் குமாரனுஞ் சாப்பிட்டுச் செத்துப் போக அதை யெனக்கும் அவனுக்குஞ் சேகரம் பண்ணப் போய்க் கொண்டு விறகு பொறுக்குகிறேனென்றாள்.

௰௩. அப்போது எலியா அவளோடே சொன்னதாவது: நீ பயப்படாதே, நீ போய் உன் வார்த்தையின்படி சேகரம் பண்ணு, ஆனால் முதலிலே எனக்கொரு சின்ன அடையைச் செய்து வெளியே எனக்குக் கொண்டுவா, பிற்பாடு உனக்கும் உன் குமாரனுக்குஞ் செய்வாயாக.

௰௪. ஏனென்றால் கர்த்தர் சீமையின் மேல் மழையைக் கட்டளையிடும் நாள் மட்டும் பானையின் மாச் சிலவழிந்து போவதுமில்லை, கலயத்தின் எண்ணெய் குறையப்படுவதுமில்லையென்று இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர் சொல்லுகிறாரென்றான்.

௰௫. அவள் போய் எலியாவுடைய வார்த்தையின்படி செய்தாள், அவளும் இவனும் அவள் வீட்டாரும் அனேக நாள்ச் சாப்பிட்டார்கள்.

௰௬. கர்த்தர் எலியாவைக் கொண்டு சொன்ன வார்த்தையின்படியே பானையிலே அந்த மாச் சரிப்பட்டுப் போனதுமில்லை, கலயத்தில் அந்த எண்ணெய் குறைப்பட்டதுமில்லை.

சற்பாத்து ஊளர் கைம்பெண்சாதி சாகக்கொடுத்த மகனை எலியா வெழுப்பினது.

௰௭. இந்த வர்த்தமானங்களுக்குப் பிற்பாடு சம்பவித்ததேதென்றால் வீட்டுக்காறியான அந்தப் பெண்சாதியின் குமாரன் வியாதியாய் விழுந்தான், அவனிலே சுவாசமில்லாதே போகும் மட்டும் அவனுடைய வியாதி அதிகரித்துக் கொண்டேயிருந்தது.

௰௮. அப்போதவள் எலியாவுடனே: பராபரனுடைய மனுஷனே, எனக்கும் உமக்கும் என்ன, என் அக்கிரமத்தை நினைக்கப் பண்ணவும் என் குமாரனைச் சாகப் பண்ணவும் என்னண்டைக்கு வந்தீரோவென்றாள்.

௰௯. அவன் அவளுடனே: உன் குமாரனை

யெனககுததாவென றுசொலலி, அவவனையவளம டியிலிருநதெடுததுததான தஙகியிருககிற மேல வீட்டிலே அவவனைககொணடுபோய,தன கட்டி லினமமேலவைதது:

௨௰. என பராபரனாகிய கறததாவே,நான தங கியிருககிற இநதககைமபெண சாதியின குமார வனைமுதலாய் கொனறுபோடுங கலிதியையவ ளுககுவருததிவிததீரோவென றுசறததை நோக கிககூபபிடடு,

௨௧. அநதபபிளளையினமேலமூனறு தரங குபபுறவிழுநது:என பராபரனாகிய கறததாவே,இ நதபபிளளையின ஆததுமமஅதுககுளளே திருமபிவரபபணணுமே யெனறு கறததை நோககிக கூபபிடடான.

௨௨. கறதர் எலியாவின சத்ததததைக கேட டார், பிளளையிழைககுமபடிககவனுட ஆதது மம அவன உளளததிலே திருமபிவநதது.

௨௩. அபபோது எலியா பிளளையை யெடுதது,மேலவீட்டிலிருநதவனைததாழவிருககுமவீ டடுககுள்ககொணடுவநது,அவவனையவன தாயக குககொடுதது: பார், உனபிளளையுயிரோடிருக குதெனறுஎலியா சொனனான.

௨௪. அபபோதநதபபெண சாதி எலியாவு டனே: நீர் பராபரனுடைமனுஷனெனறுமமுட வாயிலிருககிறகறததாவின வாறததையுணமையெ னறும இதினாலிபபோ தறிநதிருககிறே னென ருள.

௰அ. அதிகாரம.

பாகாலின பூசாரிகளை எலியா சஙகாரமப ணணிவிததது.

அனேகநாள்சசெனறபிறபாடு மூனறுமவ ருஷததிலேசமபுவிததததேதெனறல்,கறத ருடைய வாறததைஎலியாவுககுணடாகி, நீபோய ஆகாபபுககுனனைககாண்பி,ஏனெனறல்நாஞசீ மையினமேலமழையைககட்டளையிடுவோமெ னறர்.

௨. அபபோதுஎலியாஆகாபபுககுததனனைக காணபிககபபோனான. பஞசமோவெனில சமாரி யாவிலேகடினமாயிருநதது.

௩. ஆனபடியால்ஆகாப்அரமனைவிசாரிப புககாறனாகியஒபதியாவையழைததனுபபினான, ஒபதியாவோவெனில்ககறதருககுமிகவுமபயநது நடககிறவனாயிருநதான.

௪. ஆகேபெனிலேயசபெலகறததரின தீர்ககத தெரிசிகளைசசங்கரிககிறபோது,ஒபதியா நூறு தீரககதெரிசிகளைசசேர்ததுககொணடு அவர் களைககெபிககுஜமபதுபோரகவொளிததுவைத தவர்களுககபபமுந தணணீருங கொடுததவர்களை பபராமரிததுவநதான.

௫. ஆகாப்ஒபதியாவுடனே:நீதேசததிலிருக கிறவெலலாநீரூறறுகளிடத்திலுமஎலலாஆறுக ளிடததிலுமபோ,நாம அதிகமிருசசீவனகளைசசா கககொடாமல், குதிரைகளையுங கோவேறு கழு தைகளையுமஉயிரோடேகாபபாறறுமபடிககுந மககுபபுல்லகபபடுமாககுமெனறன.

௬. அபபடியேதேசததைசசுறறிபார்ககஅதை த்தங்களுககுததிட்டமபணணிககொணடார்கள, ஆகாப்ஒருவழியிலேதனிததுபபோனான, ஒபதி யாவேறொருவழியிலேதனிததுபபோனான.

௭. ஒபதியாவழியிலிருககககொளள,இதோ எலியா அவனுககெதிர்பபட்டான, அவனிவனை யிநநானெனறறிநது,முகங்குபபுறவிழுநது நீர் என னாணடவனாகியஎலியாவோவெனறுகேட்ட தறகு,

௮. இவன அவனுடனே: நான தானே, நீ போய, இதோ எலியாவநதிருககிறானெனறுன னாணடவனுககுசசொலலெனறன.

௯. ஆனாலஅவன சொனன தாவது: ஆகாப் எனனைககொனறுபோடுமபடிககுநீர் உமதடி யாளையவனகையிலேயபபுககொடுகக நானென னபாவஞ்செயதேன?

௰. உமமைததேடிவிககஎனனாணடவனமனு ஷனையனுபபாதசாதியுமராச்சியமுமிலலையெ னறுமமுட பராபர னாகிய கறதரின சீவனைக கொணடுசொலலுகிறேன,அவர்களநீர் இலலை யெனறு சொனன போது அவனநத ராச்சியத தையுமஅநதசசாதியையுமஉமமைககணடதிலலை யெனறுசததியங்கேட்டுககொணடான.

௰௧. இபபோதும,நீபோயஉனனாணடவனு ககு:இதோஎலியாவநதிருககிறானெனறு சொல லெனறுநீர்சொலலுகிறீரோ.

௰௨. ஆனால நான உமமைவிட்டுபபோகக் கொளளஒருவேளை கறதருடைய ஆவி உமமை யெடுததுநானறியாதிடததுககுககொணடுபோ வார், அபபோதுநான ஆகாப்புககறிவிககவநத பிறபாடு, அவன உமமைககாணா விட்டால், என னைககொனறு போடுவானே. உமதடியானோ வெனறல் என சிறுவயதுதுவககிககறதருககுப பயநதுநடககிறவன.

௰௩.

௰௩. யேசபேல்கறதரின தீர்க்கததெரிசிகளை க்கொன்றுபோடுகிறபோது,நான கறதருடைய தீர்க்கததெரிசிகளில் நூறுபேரை ஒவவொரு கெபியிலேஐமபதைமபது பேராக ஒளித்து வைததுஅவர்களுககப்பமுந தணணீருங கொடுததுப பராமரிததுவநதனனுடைய செய்கை என ஆணடவனுக கறிவிககபபடடதில்லையோ?

௰௪. இபபோதுமஎன ஆணடவனஎனனைக கொனறுபோடுமபடியாகநீர்: இதோஎலியாவநதிருககிறுனென றுநீபோய அவனுககுச சொல்லென றுசொல்லுகிறீரெனறுன.

௰௫. அதுகெலலியா: இனறைககெனனைய வனுககுககாணபிபபேனென று சேனைகளின கறதருககுமுனபாகநிறகிறநான அவருடைய சீவனைககொணடுசொல்லுகிறேனெனறுன.

௰௬. அபபோ ஒபதீயாபோய ஆகாப்புககெதிர்பபடடு அவனுககதையறிவிததததுககு ஆகாப எலியாவுககெதிராகபபோனுன.

௰௭. ஆகாப் எலியாவைககணடபோது, ஆகாப் அவனுடனே: இஸ்ருவேலைககலககமபணணுகிறவனநீயோவெனறுன.

௰௮. அதறகவனசொனனதாவது: இஸ்ருவேலைக கலககமபணணினவன நானலல, கறதரினகறபிவனைகளைவிடடதினுலும, நீர்பாகாலகளைப பினபறறினதினுலும அதைக கலககமபணணினவர்கள நீருமஉமமுடைய தகபபன வீடடாருந தானே.

௰௯. இபபோதுங கற்மேல்பபருவதத்திலேஇஸ்ருவேலனைததையுமபாகாலின நானூறறைமபது தீர்ககததெரிசிகளையும ஏசபேலினபநதியிலேசாபபிடுகிறதோபபினுடையநானூறு தீர்ககததெரிசிகளையுமஎனனணடைககுககூடடிககொணடுவர ஆளககளையனுபபுமெனறுன.

௨௰. அபபடியேஆகாப் இஸ்ருவேல புததிரரெல்லாரிடததிலும ஆள ககளையனுபபி, கற்மேல்பருவதத்திலே அநதத தீர்ககததெரிசிகளைககூடடிவிததான.

௨௧. அபபோஎலியாசகல்சனததணடைககுஞசேர்நது: நீஙகளஎநதமடடுமஇரணடு நினைவுகளாலகுநதிககுநதிநடபபீர்கள, கறதர்தெயவமானுல அவரைபபினபறறுஙகோள, பாகாலதெயவமானுல அதைபபினபறறுஙகோளளெனறுன; சனமபிறததியுததாரமாக அவனுககொனறுஞ சொல்லவிலலை.

௨௨. அபபோஎலியா சனததோடேசொனனதாவது: கறதரின தீர்ககததெரிசியாயமீதமாயிருககபபடடவன நானொருததன, பாகாலின தீர்ககததெரிசிகளோவெனறுல நானூறறைமபது பேர்.

௨௩. இபபோதும இரணடுகாளைகளையெஙகளுககுககொடுக்ககககடவார்கள, ஒருகாளையை அவர்கள தெரிநதுகொணடு,அதைசசநதுசநதாகததுணடிததது நெருபபுபபோடாமல விறகுகளினமேல வைக்கககடவார்கள, நான மறறக்காளையையபபடியே செயது, நெருபபுபபோடாமலவிறகுகளினமேலவைபபேன.

௨௪. நீஙகள உஙகளதேவனுடைநாமததைச சொல்லிககூபபிடுஙகோள,நான கறதருடையநாமததைசசொல்லிககூபபிடுவேன, அபபோதககினியினுல உததரவுசொல்லுந தெயவமே தெயவமெனறுன,அபபோதுசனமெல்லாம பிறததியுததாரமாக: அதுநலலவாறதையெனறுர்கள.

௨௫. அபபோதுஎலியாபாகாலின தீர்ககததெரிசிகளுடனே: நீஙகளொருகாளையைததெரிநது கொணடு அதைஆயிததமபணண முநதிககொளளுஙகோள, ஏனெனில நீஙகளஅனேகர், பிறபாடு நெருபபுபபோடாமல உஙகள தேவனுடைநாமததைசசொல்லிககூபபிடுஙகோளளெனறுன.

௨௬. அவனதஙகளுககுககொடுததகாளையையவர்களவாஙகிஆயிததமபணணி: பாகாலே எஙகளுககுககேழ்வி கொடுமெனறுகாலமேதுவககிமததியானமடடுமபாகாலினநாமததைசசொல்லிககூபபிடடார்கள; ஆனுல ஒருசததமுமமறுவுததரங கொடுககிறவனுமிலலாதிருநதது. அவர்களபணணினபெலிபீடததுககெதிரேநடனமாய்க்குதிததார்கள.

௨௭. மததியானததிலேயெனறுல எலியா அவர்களைப பரியாசமபணணி: உரததசததமாயக்கூபபிடுஙகோள, ஏனெனில அவனதேவன, அவன தியானததிலிருககிறுன,அலலவெனறு அலுவலாயிருககிறுன,அலலவெனறுவழிபபயணததிலிருககிறுன, அலலவெனறுஅவனையெழுபபிவிடவேணடிய தாயததூஙகிறுனுககுமெனறுன.

௨௮. அவர்களஉரததசததமாய்ககூபபிடடுததஙகளபழககததினபடியேரததநதஙகளமேலேவடியுமடடுஙகததிகளாலும ஊசிகளாலுநதஙகளைககீறிககொணடார்கள.

௨௯. மததியானநேரமபினனிடடுபபோன



பிற

பிறபாடு; அவர்கள் அந்திக்காணிக்கை செலுத்தப்படுமட்டாக்ச் சன்னதங்கொண்டிருந்தார்கள், ஆனாலொரு சத்தமவாமலும் மறுவுத்தரங்கொடுக்கிறவனுங்கவனிக்கிறவனுமில்லாமலுமிருந்தது.

௩௰. அப்போது எலியா எல்லாச் சனத்தோடும்: என்னண்டையிலே சேருங்கோளென்றான், எல்லாச் சனமும் அவனண்டையிலே சேர்ந்தபோது, அவன் தகர்க்கப்பட்ட கர்த்தருடைய பலிபீடத்தைச் செப்பனிட்டு,

௩௧. உனக்கிஸ்ரவேலென்ற பேரிருப்பதாகவென்று கர்த்தருடைய வார்த்தை வந்த யாக்கோபுடைய குமாரரால் உண்டான கோத்திரங்களுடைய லெக்கத்தின்படியே பன்னிரண்டு கல்லுகளை யெடுத்துக்கொண்டு,

௩௨. அந்தக் கல்லுகளாலே கர்த்தருடைய நாமத்துக்கென்று பலிபீடத்தைக் கட்டி, பலிபீடத்தைச் சுற்றிலுந் தானியம் அளக்கிற இரண்டு மரக்காலிலிருக்கத்தக்கவிடமான ஒருவாய்க்காலியுண்டாக்கி,

௩௩. விறகுகளையடுக்கி, ஒருகாளையைச் சந்துசந்தாகத் துண்டித்து விறகுகளின் மேலே வைத்தான்.

௩௪. பிறபாடவன்: நீங்கள் நாலுகுடங்களைத் தண்ணீரால் ரொப்பி வந்து சருவாங்கத்தகனப்பலியின் மேலும் விறகுகளின் மேலும் ஊற்றுங்கோளென்றான், பிறபாடு இரண்டாம் விசையும் அப்படி யூற்றுங்கோளென்றான், இரண்டாம் விசையும் ஊற்றினார்கள், அதற்குப்பிறகு மூன்றும் விசையும் அப்படி யூற்றுங்கோளென்றான், மூன்றும் விசையும் ஊற்றினார்கள்.

௩௫. அப்போ தண்ணீர் பலிபீடத்தைச் சுற்றிலு மோடினது தவிர வாய்க்காலுந் தண்ணீரால் ரொம்பித்து.

௩௬. அந்திக்காணிக்கை செலுத்தப்படும் நேரத்திலே தீர்க்கதரிசியாகிய எலியா சேர்ந்து சொன்னதாவது: ஆபிரகாமுக்கும் ஈசாக்குக்கும் யாக்கோபுக்கும் பராபரனாகிய கர்த்தாவே, இஸ்ரவேலிலே தேவரீர் பராபரனென்றும் நானும்முடைய ஊழியக்காரனென்றும் நானிந்தக் காரியங்களையெல்லாம் உம்முடைய வார்த்தையின்படி செய்தேனென்றும் இன்றைக்குத் தெரியவரப்பண்ணும்.

௩௭. கர்த்தாவே தேவரீர் பராபரனாகிய கர்த்தனென்றும், தேவரீர் தங்களிருதயத்தைப் பின்னிட மறுபடியுந் திருப்பினீரென்றும் இந்தச்சனம் அறியும்படிக்கெனக்குக் கேட்டருளும், எனக்குக் கேட்டருளுமென்றான்.

௩௮. அப்போது கர்த்தருடைய அக்கினி இறங்கி, அந்தச் சருவாங்கத்தகனப் பலியையும் விறகுகளையுங் கல்லுகளையும் மண்ணையும் பட்சித்து வாய்க்காலிலிருந்த தண்ணீரையும் நக்கிப்போட்டது.

௩௯. சனமெல்லாம் இதைக் கண்டபோது, முகங்குப்புற விழுந்து: கர்த்தரே தெய்வம் கர்த்தரே தெய்வமென்றார்கள்.

௪௰. அப்போது எலியா அவர்களோடே: நீங்கள் பாகாலின் தீர்க்கதரிசிகளை, அவர்களிலொருத்தனுந் தப்பிப்போகாதபடிக்குப் பிடியுங்கோளென்றான், அவர்களைப் பிடித்தபோது, எலியா அவர்களைத் தாழ கிசோன் ஆற்றங்கரையிலே கொண்டுபோய் அங்கே அவர்களை வெட்டிவித்தான்.

௪௧. பிறபாடு எலியா ஆகாப்புடனே: நீர் ஏறிப்போய்ப் போசித்துக் குடியும், ஏனெனில் மிகுந்த மழையின் முழக்கமுண்டாமென்றான்.

௪௨. ஆகாப் போசித்துக் குடிக்கிறதற்கேறிப்போன பிறபாடு, எலியா கற்மேல் பருவதத்தினுடைய சிகரத்தின் மேலேறி, தரையிலே விழுந்து தன் முகத்தைத் தன் முழங்கால்களினடுவே குனியப்பண்ணி,

௪௩. தன் வேலைக்காறனுடனே: நீயேறிப்போய்ச் சமுத்திரமுகமாய்ப் பாரென்றான். அவன் ஏறிப்போய்ப் பார்த்து: ஒன்றுமில்லையென்றான். ஏழுவிசை திரும்பப்போய்ப் பாரென்றான்.

௪௪. ஏழாம்விசையிலே இவன்: இதோ சமுத்திரத்திலிருந்து ஒருமனுஷனுடைய உள்ளங்கையத்தனை சின்ன மேகம் எழும்புகுதென்றான். அப்போதவன்: நீ போய் ஆகாப்புடனே: மழை உம்மை நிறுத்திக்கொள்ளாதபடிக்கு ரதத்தைப் பூட்டி எறிப்போய் இறங்குமென்று சொல்லென்றான்.

௪௫. அத்தறுவாயிலே வானம் மேகங்களினாலுங் காற்றினாலுங் கறுத்து, பெருமழையுண்டாச்சுது, ஆகாப்போவெனில் ரதத்திலேறி எஸ்ரேயேலுக்குப்போனான்.

௪௬. ஆனால் கர்த்தருடைய கை எலியாவின் மேல் வந்ததினால் அவன் தன் அரையைக் கட்டிக்கொண்டு, எஸ்ரேயேலுக்கு வருமட்டாக ஆகாப்புக்கு முந்திக்கொண்டோடினான்.

௰௯. அதி

## ௰௯. அதிகாரம்.

*எசபேலுக்குத் தப்பிவனாந்தரத்துக்கோடிப்போன எலியாவுக்குக் கட்டளையிடப்பட்ட தெய்வதெரிசனை.*

எலியா செய்ததெல்லாவற்றையும் அவன் தீர்க்கதரிசிகளையெல்லாம் பட்டயத்தாலே கொன்றுபோட்ட செய்தியனைத்தையும் ஆகாப் எசபேலுக்கறிவித்தான்.

௨. அப்போது எசபேல் எலியாவண்டைக்கு ஆளனுப்பி: நான் நாளையிந்நேரத்திலுன் பிராணனை அவர்களிலொவ்வொருத்தன் பிராணனுக்குச் செய்யப்பட்டதுபோலே செய்யாதேபோனால், தேவர்களென்கிறபடியும் அப்படியும் செய்யக்கடவார்களென்று சொல்லச்சொன்னாள்.

௩. அவனதைக் கண்டபோதெழுந்து தன் பிராணனைக் காக்க யூதாவைச்சேர்ந்த பெயெர்செபாவுக்குப் புறப்பட்டுப்போய், அங்கே தன் வேலைக்காரனை வைத்தான்.

௪. அவனோ வெளிவனாந்தரத்திலொருநாள் வழிபோய் ஒருசூரைச்செடியின் கீழ்வந்திருக்கக் கார்ந்து தனக்கு மரணத்தைக் கேட்டு: இப்போது போதும், கர்த்தாவே, என்னுயிரை வாங்கிக்கொள்ளும், என் பிதாக்களைப்பார்க்க நானல்லவனல்லவென்று சொல்லி,

௫. ஒருசூரைச்செடியின் கீழ்ப்படுத்துக்கொண்டு நித்திரைபண்ணினான். அப்போது, இதோ ஒருதூதன் அவனைத் தட்டி அவனோடே: எழுந்து போசனம்பண்ணென்றான்.

௬. அவன் முழித்துப்பார்க்கிறபோது, இதோ தணலில் சுடப்பட்ட அடையும் ஒருபாத்திரந்தண்ணீரும் அவன் தலைமாட்டிலிருந்தது. அப்போதவன் போசித்துக் குடித்துத் திரும்பப் படுத்துக்கொண்டான்.

௭. கர்த்தருடைய தூதன் திரும்ப இரண்டாம் விசைவந்து, அவனைத் தட்டி: எழுந்து போசனம்பண்ணு, என்னென்றால் வழிப்பயணமுனக்கு வெகுதூரமாயிருக்குமென்றான்.

௮. அப்போதவனெழுந்திருந்து, போசித்துக் குடித்து, அந்தப் போசனத்தின் பெலத்தினாலே இரவுபகல் நாற்பதுநாளளவோரேபென் என்கிற பர்வதமட்டும் நடந்தான்.

௯. அங்கேயவனொருகெபிக்குள்ப்பிரவேசித்து, அங்கே ராத்தங்கினான். இதோ கர்த்தருடைய வார்த்தையவனுக்குண்டாகி, அவர் அவனுடனே: எலியாவே இங்கேயுனக்கென்னவேலையென்னவென்றார்.

௰. அதற்கவன்: சேனைகளின் பராபரனாகிய கர்த்தருக்காக வெகுபத்திவைராக்கியமாயிருந்தேன், ஏனென்றால் இஸ்ரவேல்புத்திரருமது உடன்படிக்கையைவிட்டார்கள், உம்முடைய பீடங்களையிடித்து, உம்முடைய தீர்க்கதரிசிகளைப் பட்டயத்தாலே கொன்றுபோட்டார்கள், நானொருத்தனே மீந்திருக்கிறேன், என் பிராணனையும் வாங்கத் தேடுகிறார்களென்றான்.

௰௧. அப்போதவர்: நீ வெளியே வந்து, கர்த்தருக்குமுன்பாகப் பர்வதத்தில் நில்லென்றார், அப்போது, இதோ கர்த்தர் கடந்துபோனார், கர்த்தருக்கு முன்பாகப் பர்வதங்களைக் கிழிக்கிற துங்கன்மலைகளையுடைக்கிறதுமான பெலத்த பெருங்காற்றடித்தது, ஆனால் அந்தக் காற்றிலே கர்த்தர் இருந்ததில்லை, காற்றுக்குப்பிறகு பூமியதிர்ச்சல் வந்தது, அந்தப் பூமியதிர்ச்சலிலுங் கர்த்தரிருந்ததில்லை.

௰௨. பூமியதிர்ச்சலுக்குப்பிறகு அக்கினி வந்தது, அக்கினியிலுங் கர்த்தரிருந்ததில்லை, அக்கினிக்குப்பிறகு அமர்ந்த மெதுவான இரைச்சல் வந்தது.

௰௩. அதையெலியா கேட்டபோதோ வெனில் அவன் தன் சால்வையினாலே தன்முகத்தை மூடி, வெளியேவந்து, கெபியின் வாசலில் நின்றான், அப்போது இதோ: எலியாவே, இங்கேயுனக்கு என்னவேலையென்கிற சத்தம் அவனுக்குண்டாகிறது.

௰௪. அதற்கவன்: சேனைகளின் பராபரனாகிய கர்த்தருக்காக வெகுபத்திவைராக்கியமாயிருந்தேன், ஏனெனில் இஸ்ரவேல்புத்திரர் உமது உடன்படிக்கையைவிட்டார்கள், உம்முடைய பீடங்களையிடித்து உம்முடைய தீர்க்கதரிசிகளைப் பட்டயத்தாலே கொன்றுபோட்டார்கள், நானொருத்தனே மீந்திருக்கிறேன், என் பிராணனையும் வாங்கத்தேடுகிறார்களென்றான்.

௰௫. அப்போது கர்த்தர் அவனோடே சொன்னதாவது: நீ போய் உன் வழிப்பயணத்திலே தமஸ்குவின் வனாந்தரத்துக்குத் திரும்பிக்கொண்டு, உள்ப்பிரவேசித்து ஆசகேலைச் சீரியாவின் மேலே ராசாவாக அபிஷேகம்பண்ணி,

௰௬. பிறபாடு நிம்சியின் குமாரனாகிய யெகூவை இஸ்ரவேலின் மேலே ராசாவாக அபிஷேகம்பண்ணி,

பண்ணி, ஆபேல்மேகொலா ஊரானான சாப்பாத்தின் குமாரனாகிய எலிசாவையும் இஸ்ரவேலிலே தீர்க்கதரிசியாக அபிஷேகம்பண்ணுவாயாக.

௰௭. சம்பவித்ததேதெனில், ஆசகேலின் பட்டயத்துக்குத் தப்பினவனை யேகூ கொன்றுபோடுவான், யேகூவின் பட்டயத்துக்குத் தப்பினவனை எலிசா கொன்றுபோடுவான்.

௰௮. ஆனால் பாகாலுக்கு முடங்காதிருக்கிற சகல முழங்கால்களும் அதை முத்திசெய்யாதிருக்கிற சகல வாய்களுமாகிய ஏழாயிரம் பேரை இஸ்ரவேலிலே மீதத்துவைத்தேனென்றார்.

௰௯. அப்படியே அவன் அவ்விடம்விட்டுப் புறப்பட்டு, சாப்பாத்தின் குமாரனாகிய எலிசாவைக் கண்டுபிடித்தான், இவன் பன்னிரண்டேரோட்டியுழுதான், தானே அந்தப் பன்னிரண்டேரோடுங்கூடவிருந்தான். அப்போது எலியா அவனிருக்குமிடமட்டும் போய்த் தன் சால்வையை யவன் மேலேபோட்டான்.

௨௰. அப்போதவன் மாடுகளைவிட்டு எலியாவின் பிறகாலே ஓடி: நான் என் தகப்பனையும் என் தாயையும் முத்திசெய்யட்டுமே, அதற்குப்பிறகும் உம்மைப் பின்செல்லுவேனென்றான். அவனிவனுடனே: போய்த் திரும்பிவா, என்னில் நான் உனக்குச் செய்ததைச் சிந்தித்துக்கொள்ளென்றான்.

௨௧. அப்போதிவனவனைவிட்டுத் திரும்பிக்கொண்டு, ஒருஏர் மாடுகளைப் பிடித்தடித்து அந்தக் குண்டைகளுக்கடுத்த மரமுட்டுகளால் அதுகளின் இறைச்சியைச் சமைத்துச் சனத்துக்குக் கொடுத்தான், அவர்கள் சாப்பிட்ட பிற்பாடு அவனெழுந்து எலியாவைப் பின்சென்று அவனுக்கூழியஞ்செய்தான்.

## ௨௰. அதிகாரம்.

ஆகாப் சூரியாவின் இராசாவாகிய பெனாதாத்தைச் செய்த செய்தி.

௧. சூரியாவின் இராசாவாகிய பெனாதாத் தன் சேனையெல்லாங் கூட்டிக்கொண்டெழும்பிப்போய் சமாரியாவை முத்திக்கை போட்டதின்மேல் யுத்தம்பண்ணினான், அவனோடேகூட முப்பத்திரண்டு இராசாக்களுங் குதிரைகளும் இரதங்களுமிருந்தது.

௨. அவன் இஸ்ரவேலின் இராசாவாகிய ஆகாப்பண்டைக்குத் தானாபதிகளைப் பட்டணத்துக்குள்ளனுப்பி:

௩. உன்னுடைய வெள்ளியும் உன்னுடைய பொன்னும் என்னுடையது, உன்னுடைய ஸ்திரீகளும் உன் குமாரர்களிலே சமர்த்தராயிருக்கிறவர்களும் என்னுடையவர்களென்று பெனாதாத் சொல்லுகிறானென்றதை யவனுக்குச் சொல்லச்சொன்னான்.

௪. இஸ்ரவேலின் இராசா பிரத்தியுத்தரமாக: இராசாவாகிய என்னுடையவனே, உம்முடைய வார்த்தையின்படியே நானும் எனக்குண்டான யாவும் உம்முடையதுதானென்று சொல்லியனுப்பினான்.

௫. அந்தத் தானாபதிகள் திரும்பி வந்து சொன்னதாவது: பெனாதாத் சொல்லுகிறதேதெனில் உன் வெள்ளியையும் உன் பொன்னையும் உன் ஸ்திரீகளையும் உன் குமாரர்களையும் நீ எனக்குக் கொடுக்கவேணுமென்றுனக்குச் சொல்லியனுப்பினேனே;

௬. ஆனால் நாளையிந்நேரத்தில் என் ஊழியக்காரரை யுன்னண்டைக்கனுப்புவேன், அவர்கள் உன் வீட்டையும் உன் ஊழியக்காரரின் வீடுகளையுஞ்சோதித்து, உன் பார்வைக்குப் பிரியமானதெல்லாத்தையுந் தங்கள் கைகளிலெடுத்துக்கொண்டுவருவார்களென்றானென்று சொன்னார்கள்.

௭. அப்போது இஸ்ரவேலின் இராசா தேசத்தின் மூப்பரையெல்லாம் அழைப்பித்து: இவன் பொல்லாப்புத்தேடுகிற விதத்தைக் கவனித்துப்பாருங்கோளேன், அதேதென்றால் என் ஸ்திரீகளையும் என் குமாரர்களையும் என் வெள்ளியையும் என் பொன்னையுங் கேட்க அவன் என்னண்டைக்காளனுப்பினபோது, நான் அவனுக்குக் கொடுப்பதில்லையென்று சொன்னதில்லையேயென்றான்.

௮. அப்போது எல்லா மூப்பரும் எல்லாச்சனமும் அவனுடனே: நீர் அவனுக்குக் கேள்விகொடுக்கவும் அவனுக்குச் சம்மதிக்கவும் வேண்டாமென்றார்கள்.

௯. ஆகையால் அவன் பெனாதாத்தின் தானாபதிகளுடனே: நீங்கள் இராசாவாகிய என்னுடையவனுக்குச் சொல்லவேண்டியதேதெனில், நீர் முதல் விசை யும்மடியானுக்குச் சொல்லியனுப்பின யாவையுஞ்செய்வேன், ஆனால் இந்தக் காரியத்தை நான் செய்யக்கூடாதென்று சொல்லுங்கோளென்றான். தானாபதிகள் போய் இந்த மறுமொழியை யவனுக்குச் சொன்னார்கள்.

௰. அப்போது பெனாதாத் அவனண்டைக்

காள

காளனுப்பி: என் அடிகளைப்பின்செல்லுகிற சனமெல்லாங் கைக்கொரு பிடிவாரச்சமாரியாவின் தூள்போதுமானால், தேவர்கள் எனக்கிப்படியும் அப்படியுஞ்செய்யக்கடவார்களென்று சொல்லச்சொன்னான்.

௰௧. அதற்கு இஸ்றவேலின் இராசா பிறத்தியுத்தாரமாக: பட்டையத்தைப்பின் கட்டிக்கொள்ளுகிறவன் அதை அவிழ்த்துப்போடுகிறவனைப்போல் பெருமை பாராட்டலாகாதென்றவனுக்குச் சொல்லுங்கோளென்றான்.

௰௨. அவன் தானும் மற்ற இராசாக்களுங் கூடாரங்களிலே குடித்துக்கொண்டிருக்கையிலே இந்த வார்த்தையைக் கேட்டபோதேயெனில் தன் ஊழியக்காறருடனே: சண்டைக்காயித்தம் பண்ணுங்கோளென்றான், அப்படியே பட்டணத்தின்மேல் சண்டைக்காயித்தம்பண்ணினார்கள்.

௰௩. அப்போது, இதோ ஒரு தீர்க்கதெரிசி இஸ்றவேலின் இராசாவாகிய ஆகாப் அண்டையிலே சேர்ந்து அந்தப் பெரிய ஏராளத்தையெல்லாங் கண்டாயோ, இதோ நாமே கற்த்தனென்று நீயறியும்படிக்கு, இன்றைக்கதையுன் கையிலொப்புக்கொடுப்பேனென்று கற்த்தர் சொல்லுகிறாரென்றான்.

௰௪. ஆரைக்கொண்டென்று ஆகாப் கேட்டான்; அதற்கவன் மாகாணங்களுடைய துரைகளின் சேவகரைக்கொண்டென்று கற்த்தர் சொல்லுகிறாரென்றான். யுத்தத்தை யார் துவக்கவேணுமென்றவன் கேட்டதற்கு, அவன்: நீர்தானென்றான்.

௰௫. அவன் மாகாணங்களுடைய துரைகளின் சேவகரையெண்ணிப்பார்க்கிற போது அவர்கள் இருநூற்று முப்பத்திரண்டு பேர் அவர்களுக்குப் பிற்பாடு இஸ்றவேல் புத்திரராகிய சகல சனத்தையெண்ணுகையில் ஏழாயிரம்பேரென்றுகண்டான்.

௰௬. அவர்கள் மத்தியான நேரத்திலே வெளியேபுறப்பட்டார்கள்; ஆனால் பெனாதாதும் அவனுக்கொத்தாசை செய்கிற முப்பத்திரண்டு இராசாக்களாகிய மற்ற இராசாக்களுங் கூடாரங்களில் வெறியெடுக்கக்குடித்திருந்தார்கள்.

௰௭. மாகாணங்களுடைய துரைகளின் சேவகர் முன்னணியாகப் புறப்படுகிற போது, பெனாதாத் அனுப்பின மனுஷர்: சமாரியாவிலிருந்து மனுஷர் புறப்படுகிறார்களென்றவனுக்கறிவித்தார்கள்.

௰௮. அப்போதவன்: அவர்கள் சமாதானத்துக்காகப் புறப்பட்டு வந்தாலும் அவர்களை உயிரோடே பிடியுங்கோள், அவர்கள் யுத்தத்துக்காகப் புறப்பட்டு வந்தாலும் அவர்களை உயிரோடே பிடியுங்கோளென்றான்.

௰௯. மாகாணங்களுடைய துரைகளின் சேவகரான அவர்களும் அவர்கள் பிறகாலே வருகிற சேனையும் பட்டணத்திலிருந்து வெளியே வந்த போதோவெனில்,

உ௰. அவர்கள் அவரவர் தங்களுக்கெதிர்ப்படுகிறவர்களை வெட்டினார்கள் சூரியர் முறிந்தோடிப்போனார்கள், இஸ்றவேலர் அவர்களைத் துரத்தினார்கள், சூரியாவின் இராசாவாகிய பெனாதாத்தோவெனில் குதிரையின் மேலேறி சில குதிரைக்காறரோடுங்கூடத் தப்பினான்.

உ௧. இஸ்றவேலின் இராசா புறப்பட்டு, குதிரைகளையும் இரதங்களையும் முறியடித்துச் சூரியரில் மகா மடிவுண்டாக வெட்டினான்.

உ௨. பிற்பாடு அந்தத் தீர்க்கதெரிசி இஸ்றவேலின் இராசாவண்டைக்குச் சேர்ந்து, அவனுடனே சொன்னதாவது: நீர் போய் பெலத்துக்கொண்டு, நீர் செய்யத்தக்கதைக் கவனித்துப்பாரும், ஏனெனில் மறுவருஷத்திலே சூரியாவின் இராசா உமக்கு விரோதமாக எறிவருவானென்றான்.

உ௩. சூரியாவின் இராசாவோடே அவனுடைய ஊழியக்காறர் சொன்னதாவது: அவர்களுடைய தேவர்கள் மலைகளின் தேவர்களானதினால் அவர்கள் நம்மை மேற்கொண்டார்கள், நாம் அவர்களோடே ஒத்தத்தரையிலே யுத்தம்பண்ணினாலே தாவிளையம் அவர்களை மேற்கொள்ளோமோ?

உ௪. அதுக்காக நீர் செய்யவேண்டியதேதெனில், அந்த இராசாக்களில் அவரவரை யவர்கள் தலத்திலிருந்து மாற்றி அவர்களுக்கு பதிலாகச் சேனைக்காறரை வைத்து,

உ௫. நீர் மடியக்கொடுத்த சானுவத்தைப்போலொத்த சானுவத்தாரையும் அந்தக் குதிரைகளைப் போலொத்த குதிரைகளையும் இரதங்களைப் போலொத்த இரதங்களையும் எண்ணிப்பார்த்துக்கொள்ளும், பிற்பாடு அவர்களை மேற்கொள்ளோமோவென்று ஒத்தத்தரையிலே அவர்களோடு யுத்தம் பண்ணுவோமென்றார்கள். அவன் இவர்கள் சொற்கேட்டு அப்படியே செய்தான்.

உ௬. ஆகையால் மறுவருஷத்திலே பெனாதாத் சூரியரை யெண்ணிப்பார்த்து, இஸ்றவேலோடு யுத்தம்பண்ண ஆப்பேக்குக்கு எறிவந்தான்.

உ௭. இஸ்றவேல் புத்திரருமெண்ணிப்பார்க்கப்பட்டு தேவையானதைப் பராமரித்துக்கொண்டு

அவர்களுக்கெதிராகப் புறப்பட்டு அவர்களுக்கெதிரே இரண்டு சின்ன வெள்ளாட்டுக் கிடைகளைப்போல் பாளையமிறங்கினார்கள், ஆனால் சூரியரால் தேசம் நிரம்பியிருந்தது.

௨௮. அப்போது பராபரனுடைய மனுஷன் ஒருத்தன் சேர்ந்துவந்து, இஸ்ரவேலின் இராசாவுடனே: கர்த்தர் பள்ளத்தாக்குகளின் தேவனாயிராமல் மலைகளின் தேவனாயிருக்கிறவரென்று சூரியர் சொன்னபடியினாலே நான் இந்தப் பெரிய யேராளத்தையெல்லாம், நாமே கர்த்தரென்று நீங்கள் அறியும்படிக்கு, உன் கையில் ஒப்புக்கொடுத்தேனென்று கர்த்தர் சொல்லுகிறாரென்றான்.

௨௯. ஏழுநாள் இவர்கள் அவர்களுக்கெதிராகப் பாளையமிறங்கியிருந்த போதோவெனில் ஏழாம் நாளிலே யுத்தங்கலந்து, இஸ்ரவேல் புத்திரர் ஒரே நாளிலே சூரியரில் நூறாயிரங் காலாட்களை வெட்டங்கடித்தார்கள்.

௩௰. மீதியானவர்கள் அப்பேக்பட்டணத்துக்குள் ஓடிப்போனார்கள், ஆனால் மீதியான இருபத்தேழாயிரம் பேரின்மேல் அலங்கம் இடிந்துவிழுந்தது. பெனாதாதும் ஓடிப்போய்ப் பட்டணத்துக்குட்பிரவேசித்து அறைவீடு அறைவீடாகப் பதுங்கினான்.

௩௧. அப்போதவன் ஊழியக்காரர் அவனுடனே: இதோ இஸ்ரவேல் வீட்டு இராசாக்கள் தயவுள்ள இராசாக்களென்று கேட்டிருக்கிறோம், நாங்கள் ரெட்டுகளையெங்கள் அரையிலே கட்டி, கயிறுகளை யெங்கள் தலைகளில் சுற்றிக்கொண்டு இஸ்ரவேலின் இராசாவண்டைக்கு வெளியே போவோமே, ஒருவேளை யும்மை உயிரோடே வைப்பானென்று சொல்லி.

௩௨. ரெட்டுகளைத் தங்கள் அரையிலே கட்டிக் கயிறுகளைத் தங்கள் தலைகளிலே சுற்றிக்கொண்டு, இஸ்ரவேலின் இராசாவண்டைக்கு வந்து என்னை யுயிரோடே வையுமேயென்று உமதடியானாகிய பெனாதாத் விண்ணப்பம் பண்ணுகிறானென்றார்கள். அதற்கவன்: அவன் இன்னம் உயிரோடிருந்தானானால், அவன் என் சகோதரனென்றான்.

௩௩. அந்த மனுஷர் நன்றாய்க் கவனித்து, அவன் வாயின் சொல்லை யுடனே பிடித்து: உம்முடைய சகோதரனாகிய பெனாதாத் இருக்கிறானென்றார்கள். அப்போதவன் நீங்கள் போய் அவனை யழைத்து வாருங்கோளென்றான். பெனாதாத் அவனண்டைக்கு வெளியே வந்தபோது அவன் இவனை ரதத்திலேறிவரப்பண்ணினான்.

௩௪. அப்போதிவன் அவனுடனே: என் தகப்பன் உம்முடைய தகப்பனார் கையிலே பிடித்த பட்டணங்களைத் திரும்பக் கொடுக்கிறேன், என் தகப்பன் சமாரியாவிலே வைத்ததுபோலே நீர் தமஸ்கருவிலே உமக்குத் தெருவீதிகளை வைத்துக்கொள்ளுமென்றதற்கவன்: இந்த உடம்படிக்கையாய் நானும்மை யனுப்பிவிடுகிறேனென்று சொல்லி, அவனோடுடம்படிக்கைபண்ணி, அவனை யனுப்பிவிட்டான்.

௩௫. அப்போது தீர்க்கதெரிசிகளின் புத்திரரிலொருத்தன் கர்த்தருடைய வார்த்தையாய்த் தன் தோழனுடனே: நீ என்னை யடியேயென்றான்; ஆனால் அந்த மனுஷன் அவனை யடிக்க மனதில்லாதிருந்தான்.

௩௬. அப்போதவன் இவனுடனே: நீ கர்த்தருடைய சத்தத்துக்குக் கீழ்ப்படியாதே போனபடியினாலே, இதோ ஒரு சிங்கம் நீ என்னைவிட்டுப் புறப்பட்டபின் உன்னைக் கொல்லுமென்றான். அப்படியேயிவன் அவனை விட்டுப் புறப்பட்டபின் ஒரு சிங்கம் அவனைக் கண்டு பிடித்து அவனைக் கொன்றுபோட்டது.

௩௭. அதின்பிறகு அவன் வேறொருத்தனைச் சந்தித்து: என்னை யடியேயென்றதற்கு அந்த மனுஷன் அவனைக் காயமுண்டாக அடித்தான்,

௩௮. அப்போது அத்தீர்க்கதெரிசி போய், தன் கண்களின்மேல் சாம்பலைப் போட்டு வேஷமாறினவனாய் வழியிலே இராசாவுக்குக் காத்திருந்து நின்றான்.

௩௯. இராசா கடந்துவருகிறபோது இவன் இராசாவைப் பார்த்துக் கூப்பிட்டுச் சொன்னதாவது: உமதடியான் யுத்தத்துக்குள்பட்டிருக்கிறபோது, இதோ ஒருத்தன் விலகி என்னண்டைக்கு ஒரு மனுஷனைக் கொண்டுவந்து: இந்த மனுஷனைப் பத்திரம்பண்ணு, இவன் இல்லாதே போகவே போனால் உன் பிராணன் அவன் பிராணனுக்கு வதிலாயிருக்கும், அல்லது ஒரு தாலந்து வெள்ளியை நீ நிறுத்துக்கொடுக்கவேணுமென்றான்.

௪௰. ஆனால் உமதடியான் இங்குமங்கும் அலுவலாயிருக்கிறபோது, அவனில்லாதே போனானென்றான். இஸ்ரவேலின் இராசா அவனுடனே: நீதானே சொன்ன உன் தீர்ப்பின்படியாகுமென்றான்.

௪௧. அப்போதவன் சீக்கிரமாய்த் தன் கண்களின்மேலிருக்குஞ் சாம்பலைத் துடைத்துப்போட்டதினால், இஸ்ரவேலின் இராசா அவன் தீர்க்கதெரிசிகளிலொருத்தனென்றவனை யறிந்தான். ௪௨.

௰௫. நாபோத் கல்லெறியுண்டு செத்ததை யேசபேல் கேட்டபோது ஆகாபுடனே: நீர் எழுந்திருந்து இஸ்ரெயேலனாகிய நாபோத் உமக்கு விலைக்குக் கொடுக்கமாட்டேனென்ற அவன் திராட்சத் தோட்டத்தைச் சுதந்திரமாக எடுத்துக்கொள்ளும், ஏனெனில் நாபோத் உயிரோடிராமல் செத்தானென்றாள்.

௰௬. நாபோத் செத்ததை ஆகாப் கேட்டபோது அவன் இஸ்ரெயேலனாகிய நாபோதின் திராட்சத் தோட்டத்தைச் சொந்தமாயெடுத்துக்கொள்ள அதில் இறங்கிப் போகிறதற்கு எழுந்திருந்தான்.

௰௭. ஆனால் கர்த்தருடைய வார்த்தை திஸ்பியனாகிய எலியாவுக்கு உண்டாகி அவர் சொன்னதாவது:

௰௮. நீ எழுந்து, சமாரியாவிலிருக்கிற இஸ்ரவேலின் இராசாவாகிய ஆகாபுக்கு எதிர்ப்பட இறங்கிப்போ இதோ அவன் நாபோதின் திராட்சத்தோட்டத்தில் அதைச் சொந்தமாயெடுத்துக்கொள்ள இறங்கிப்போனான்.

௰௯. நீ அவனுடனே: நீ கொலைசெய்ததுமல்லாமல் எடுத்துங்கொண்டதுமில்லையோவென்று கர்த்தர் சொல்லுகிறார்; நாய்கள் நாபோதின் இரத்தத்தை நக்கின ஸ்தலத்திலே நாய்கள் உன்னுடைய இரத்தத்தையும் நக்குமென்று கர்த்தர் சொல்லுகிறாரென்பாயாகவென்றார்.

௨௰. அப்பொழுது ஆகாப் எலியாவுடனே: என் பகைஞனே, என்னைக் கண்டுபிடித்தாயோ வென்றான். அதற்கவன் சொன்னதாவது: கண்டுபிடித்தேன், ஏனென்றால் கர்த்தரின் பார்வைக்குப் பொல்லாப்பானதைச் செய்ய உம்மை விற்றுப்போட்டீர்.

௨௧. இதோ நாம் உன்மேலே பொல்லாப்பு வரப்பண்ணி, உன் சந்ததியையெடுத்துப் போட்டு ஆகாபுக்குச் சுவரில் நீர் விடும் ஒரு நாயாகிலும் மீராதபடிக்கு இஸ்ரவேலில் அடைக்கப்பட்டவனையும் விட்டுவிடப்பட்டவனையும் சங்கரித்து,

௨௨. நீ நமக்குக் கோபமுண்டாக்கி இஸ்ரவேலைப் பாவஞ்செய்யப் பண்ணினதின் நிமித்தியம் உன்னுடைய வீட்டை நேபாத்தின் குமாரனாகிய யெரொபெயாமின் வீட்டுக்கும் அகியாவின் குமாரனாகிய பாஷாவின் வீட்டுக்கும் சமானமாக்குவோமென்றாரென்று சொன்னான்.

௨௩. யேசபேலையுங் குறித்துக் கர்த்தர் சொன்னது: நாய்கள் யேசபேலை இஸ்ரெயேலின் மதிலருகே தின்னும்.

௨௪. ஆகாபினச் சந்ததியிலே பட்டணத்திலே சாகிறவனை நாய்களும் வெளியிலே சாகிறவனை ஆகாசத்துப் பறவைகளும் தின்னுமென்றார்.

௨௫. ஆனால் ஆகாபை அவன் பெண்சாதியாகிய யேசபேல் ஏவிவிட்டபடியே கர்த்தரின் பார்வைக்குப் பொல்லாப்பானதைச் செய்யத் தன்னை விற்றுப்போட்ட அவனைப்போலொருத்தனுமில்லை.

௨௬. கர்த்தர் இஸ்ரவேல் புத்திரருக்கு முன்பாகத் துரத்திவிட்ட எமோரியர் செய்தபடியெல்லாம் அவன் விக்கிரகங்களைப் பின்பற்றிப்போய் மகா அருவருப்பாய் நடந்துகொண்டான்.

௨௭. ஆகாப் இந்த வார்த்தைகளைக் கேட்டபோதோவெனில், அவன் தன் வஸ்திரங்களைக் கிழித்துத் தன் சரீரத்தின் மேல் இரட்டைப் போர்த்துக்கொண்டு உபவாசம்பண்ணி, இரட்டிலே படுத்துக்கொண்டு அசந்துநடந்தான்.

௨௮. அப்பொழுது கர்த்தருடைய வார்த்தை திஸ்பியனாகிய எலியாவுக்கு உண்டாகி, அவர் சொன்னதாவது:

௨௯. ஆகாப் நமக்கு முன்பாகத் தன்னைத் தாழ்த்தினதைக் கண்டதில்லையோ? அவன் நமக்கு முன்பாகத் தன்னைத் தாழ்த்தினபடியினாலே நாம் அவன் நாட்களில் அந்தப் பொல்லாப்பை வரப்பண்ணாமல் அவன் குமாரன் நாட்களில் அதை அவன் வீட்டின்மேல் வரப்பண்ணுவோமென்றார்.

## ௨௨. அதிகாரம்.

ஆகாப் சூரியரோடு பண்ணின யுத்தத்திலே செத்தது.

சீரியருக்கும் இஸ்ரவேலுக்கும் மூன்று வருஷமாய் யுத்தமில்லாதபடிக்கமர்ந்திருந்தார்கள்.

௨. மூன்றாம் வருஷத்திலோ சம்பவித்ததேதென்றால் யூதாவின் இராசாவாகிய யோசபாத் இஸ்ரவேலின் இராசாவண்டைக்கு இறங்கிப்போயிருக்கிறபோது,

௩. இஸ்ரவேலின் இராசா தன்னூழியக்காரருடனே: கிலேயாத்திலிருக்கிற ராமோத் நம்முடையதென்றறியீர்களோ, நாம் அதைச் சீரியாவுடைய இராசாவின் கைக்குள்ளே பிடிக்காமல் சும்மாயிருப்பானேனென்று சொல்லி,

௪. யோசபாத்துடனே: கிலேயாத்திலிருக்கிற ரா

ராமோத்தின்மேல் யுத்தம்பண்ண என்னோ
டேகூட வருகிறீரோ வென்றான். யோசபாத் இ
ஸ்ரவேலின் இராசாவுடனே: உம்மைப்போலே
நானுமிருப்பேன், உம்முடைய ஜனத்தைப்போலே என்
ஜனமும் உம்முடைய குதிரைகளைப்போலே என்
னுடைய குதிரைகளுமிருக்குமென்றான்.

௫. பின்னையும் யோசபாத் இஸ்ரவேலின் இ
ராசாவுடனே: கர்த்தருடைய வார்த்தையை இன்
றைக்குக் கேட்டறியுமென்றான்.

௬. அப்பொழுது இஸ்ரவேலின் இராசா ஏறக்
குறைய நானூறுபேராகிய தீர்க்கதரிசிகளைக்
கூட்டி: நான் கிலெயாத்திலிருக்கிற ராமோத்தின்
மேல் யுத்தம்பண்ணப் போகலாமோ அதைநிறு
த்துவேனோ என்றவர்களைக் கேட்டதற்கு, அவர்
கள் ஏறிப்போம், ஆண்டவர் அதை இராசாவின்
கையிலே ஒப்புக்கொடுப்பாரென்றார்கள்.

௭. ஆனாலும் யோசபாத்: இனிக் கர்த்தருடைய தீ
ர்க்கதரிசி ஒருத்தனும் நாம் அவனிடத்திலே கே
ட்டு விசாரிக்கிறதுக்கு, இங்கே யில்லையோ
வென்றுகேட்டான்.

௮. அப்பொழுது இஸ்ரவேலின் இராசா யோ
சபாத்துடனே: கர்த்தரைக் கேட்கிறதுக்கு இம்லா
வின் குமாரனாகிய மிகாயா வென்ற இன்னமொ
ருத்தனிருக்கிறான், ஆனால் நான் அவனைப் பகைக்கி
றேன், ஏனெனில் அவன் என்பேரில் நன்மையாக
அல்லத் தின்மையாகத்தானே தீர்க்கதரிசனஞ்
சொல்லுகிறவன் என்றதற்கு யோசபாத்: இரா
சாவாகிய நீர் அப்படிச் சொல்லவேண்டாமென்
றான்.

௯. அப்பொழுது இஸ்ரவேலின் இராசா பிர
தானிகளிலொருத்தனை யழைத்து: இம்லாவின் கு
மாரனாகிய மிகாயாவைச் சீக்கிரமாய் வரவழையெ
ன்றான்.

௰. இஸ்ரவேலின் இராசாவும் யூதாவின்
இராசாவாகிய யோசபாத்தும் சமாரியாவினுடைய ஒ
லிமுக வாசலுக்குமுன்னான விசாலத்திலே அவர
வர் தங்கள் ஆசனத்தின்மேல் தங்கள் வஸ்திரங்களைத்
தரித்துக்கொண்டவர்களாய் உட்கார்ந்திருந்
தார்கள், சகல தீர்க்கதரிசிகளும் அவர்களுக
்குமுன்பாகத் தீர்க்கதரிசனஞ் சொன்னார்கள்.

௰௧. கெனானாவின் குமாரனாகிய சிதேக்கியா த
னக்கு இருப்புக்கொம்புகளை யுண்டாக்கி: இதுக
ளால் நீர் சீரியரை யவர்களை நிர்மூலமாக்குமட்
டும் முட்டிப்போடுவீரென்கிறதைக் கர்த்தர்
சொல்லுகிறாரென்றான்.

௰௨. சகல தீர்க்கதரிசிகளும் அதற்கிசை
வாய்த் தீர்க்கதரிசனஞ்சொல்லி: கிலெயாத்திலி
ருக்கிற ராமோத்துக்கு ஏறிப்போம், உமக்கு வாய்
க்கும், கர்த்தர் அதை இராசாவின் கையிலே ஒப்புக்
கொடுப்பாரென்றார்கள்.

௰௩. மிகாயாவை யழைக்கப்போன ஆள் அ
வனுடனே பேசி: இதோ, தீர்க்கதரிசிகளுடை
ய வார்த்தைகள் ஏகவாக்காய் இராசாவுக்கு நன்மை
யாயிருக்குது, உம்முடைய வார்த்தையும் அவர்களிலொ
வ்வொருத்தன் வார்த்தையைப்போலிருக்கும்படி
க்கு நன்மையாய்ச் சொல்லுமென்றான்.

௰௪. மிகாயாவோவெனில்: கர்த்தர் என்னோடே
சொல்வதையே பேசுவேனென்று கர்த்தருட சீவ
னைக்கொண்டு சொல்லுகிறேனென்றான்.

௰௫. அவன் இராசாவண்டைக்கு வந்தபோது
இராசா அவனுடனே: மிகாயாவே நாங்கள் கிலே
யாத்திலிருக்கிற ராமோத்தின்மேல் யுத்தம்பண்ணப்
போகலாமோ அதை நிறுத்துவோமோ வென்
றான். இவன் அவனுடனே: ஏறிப்போம், உமக்கு
வாய்க்கும், கர்த்தர் அதை இராசாவின் கையிலே ஒப்
புக்கொடுப்பாரென்றான்.

௰௬. இராசா அவனுடனே: நீர் கர்த்தருடைய
நாமத்திலே மெய்யல்லாமல் வேறொன்றும் என்
னோடே சொல்லாதபடிக்கு நான் எத்தனை விசை
உன்னை ஆணையிட்டுக் கொள்ளவேணுமென்
று சொன்னான்.

௰௭. அப்பொழுதவன்: மேய்ப்பனில்லாத ஆடு
களைப்போல் இஸ்ரவேலெல்லாம் பர்வதங்களி
லே சிதறப்பட்டதைக் கண்டேன், அப்பொழுது கர்
த்தர்: இவர்களுக்கு ஆண்டவன் இல்லை, அவரவர் தன்
தன் வீட்டுக்குச் சமாதானத்தோடே திரும்பக்கட
வார்களென்றாரென்று சொன்னான்.

௰௮. அப்பொழுது இஸ்ரவேலின் இராசா யோ
சபாத்துடனே: இவன் என்பேரில் நன்மையாயல்ல
தின்மையாய்த்தானே தீர்க்கதரிசனஞ் சொல்
லுகிறவனென்று நானும்மோடே சொல்லவில்
லையோவென்றான்.

௰௯. அப்பொழுதவன் சொன்னதாவது: இப்
பொழுது கர்த்தருடைய வார்த்தையைக் கேளும், கர்
த்தர் தம்முடைய ஆசனத்தின்மேல் உட்கார்ந்திருக்கி
றதையும், பரமண்டலத்தின் சேனையெல்லாம் அ
வரண்டை அவர் வலதுபக்கத்திலும் அவரிடதுபக்
கத்திலும் நிற்கிறதையுங் கண்டேன்.

௨௰. அப்பொழுது கர்த்தர்: ஆகாப் ஏறிப்போய்
கிலெயாத்திலிருக்கிற ராமோத்தில் விழும்படிக்கவ

ஙகளின் தேவர்களின் பிறகாலே சோரம்போனார்கள்.

௨௬. ஆகையால் இஸ்ரவேலின் பராபரன் அசூரின் இராசாவாகிய பூலின் ஆவியையும் அசூரின் இராசாவாகிய தில்காத் பில்னேசரின் ஆவியையும் எழுப்பினார், இவன் ரூபேனியரும் காதியரும் மனாசேயின் பாதிக்கோத்திரத்தாருமாகிய அவர்களைச் சிறைபிடித்து, இந்நாள்வரைக்கும் இருக்கிறதுபோல் ஆலாகுக்கும் ஆபோருக்கும் ஆராவுக்கும் கோசான் நதிப்புறங்களுக்கும் கொண்டுபோனான்.

## ௬. அதிகாரம்.

### லேவிபுத்திரரின் சந்ததியும் உத்தியோகமும் வாசஸ்தலங்களும்.

லேவியின் குமாரர்: கேர்சென், காகாத், மோராரியென்றவர்கள்.

௨. காகாதின் குமாரர்: அம்ரும், இஸ்கார், எபிரோன், ஊசியேலென்றவர்கள்.

௩. அம்ருமின் குமாரர்: ஆரோனும் மோசேயும் மிரியாமென்றவர்களுந்தானே. ஆரோனின் குமாரர்: நாதாப், அபிகூ, எலெயாசார், இத்தாமாரென்றவர்கள்.

௪. எலெயாசார் பினேகாசைப் பெற்றான், பினேகாஸ் அபிசூவாவைப் பெற்றான்.

௫. அபிசூவா புக்கியைப் பெற்றான், புக்கி ஊசியைப் பெற்றான்.

௬. ஊசி சேராகியாவைப் பெற்றான், சேராகியா மெராயோத்தைப் பெற்றான்.

௭. மெராயோத் அமரியாவைப் பெற்றான், அமரியா அகித்தூபைப் பெற்றான்.

௮. அகித்தூப் சாதோக்கைப் பெற்றான், சாதோக் அகிமாசைப் பெற்றான்.

௯. அகிமாஸ் அசரியாவைப் பெற்றான், அசரியா யோகனானைப் பெற்றான்.

௰. யோகனான் அசரியாவைப் பெற்றான், சாலோமோன் யெருசலேமில் கட்டின வீட்டிலே ஆசாரியப்பணிவிடையைச் செய்தவன் இவன்தான்.

௰௧. அசரியா அமரியாவைப் பெற்றான், அமரியா அகித்தூபைப் பெற்றான்.

௰௨. அகித்தூப் சாதோக்கைப் பெற்றான், சாதோக் சல்லூமைப் பெற்றான்.

௰௩. சல்லூம் இல்க்கியாவைப் பெற்றான், இல்க்கியா அசரியாவைப் பெற்றான்.

௰௪. அசரியா செராயாவைப் பெற்றான், செராயா யோத்சதாக்கைப் பெற்றான்.

௰௫. கர்த்தர் நேபுகாத்நேசாரைக் கொண்டு யூதாவையும் யெருசலேமியாரையுஞ் சிறைபிடித்துக்கொண்டுபோகப்பண்ணுகிறபோது யோத்சதாக்கும் போனான்.

௰௬. லேவியின் குமாரர்: கெர்சோம், காகாத், மோராரியென்றவர்களாமே.

௰௭. கெர்சோமுடைய குமாரரின் நாமங்கள்: லிப்னீ, சீமேயியென்றதுகள்.

௰௮. காகாத்தின் குமாரர்: அம்ரும், இஸ்கார், எபிரோன், ஊசியேலென்றவர்கள்.

௰௯. மோராரியின் குமாரர்: மகேலி, மூசியென்றவர்கள். லேவியருக்குள் அவர்கள் பிதாக்களின்படி உண்டான வம்சங்களாவது:

௨௰. கெர்சோமின் குமாரன் லிப்னீ, இவன் குமாரன் யாகாத், இவன் குமாரன் சிம்மா,

௨௧. இவன் குமாரன் யோவாக், இவன் குமாரன் இத்தோ, இவன் குமாரன் சேராக், இவன் குமாரன் யாத்திராயி,

௨௨. காகாதின் குமாரரில் ஒருத்தன் அம்மினதாப், இவன் குமாரன் கோராக், இவன் குமாரன் ஆசீர்,

௨௩. இவன் குமாரன் எல்க்கானா, இவன் குமாரன் எபியாசாப், இவன் குமாரன் ஆசீர்,

௨௪. இவன் குமாரன் தாகாத், இவன் குமாரன் ஊரியேல், இவன் குமாரன் ஊசீயா, இவன் குமாரன் சவுல்.

௨௫. எல்க்கானாவின் குமாரர்: அமாசாயி, அகிமோத்தென்றவர்கள்.

௨௬. எல்க்கானாவின் குமாரரில் ஒருத்தன் சோபாயுந்தானே, இவன் குமாரன் நாகாத்,

௨௭. இவன் குமாரன் எலியாப், இவன் குமாரன் யெரோகாம், இவன் குமாரன் எல்க்கானா.

௨௮. சாமுவேலின் குமாரர்: வஸ்னீயென்ற அவனுடைய முதற்பேறானவனும் அபியாவுமென்றவர்கள்.

௨௯. மோராரியின் குமாரரில் ஒருத்தன் மகேலி, இவன் குமாரன் லிப்னீ, இவன் குமாரன் சீமேயி, இவன் குமாரன் ஊசா.

௩௰. இவன் குமாரன் சீமேயா, இவன் குமாரன் அகியா, இவன் குமாரன் அசாயா.

௩௧. கர்த்தருடைய பெட்டிக்கிடம் அமர்க்கையானபோது தாவீது அவருடைய வீட்டிலே பாட

பாடடுபபாடுகிறஉததியோகததுககிஸ்தாபிதத வர்களும,

௩௨. சாலோமோன யெருசலேமிலே கறத்ருடையவீடடைககடடித்தீருமடடுமஆசரிபபுக கூடாரததின வாசஸ்தலத்துககுமுனபாகபாடடு பபாடிசசேவிததுதஙகளமுறைமையினபடியே பணிவிடைசெயது நிறகிறவர்களுமாகிய மனுஷருமஅவாகளகுமாரருமாவது:

௩௩. காகாதியரின குமாரரிலெமானெனற பாடடகன, அவனயோவேலின குமாரன, இவனசாமுவேலின குமாரன,

௩௪. இவனஎல்ககானாவின குமாரன, இவனயெரோகாமின குமாரன, இவனஎலியேலின குமாரன, இவனதோவாகின குமாரன,

௩௫. இவனசூபபின குமாரன, இவனஎல்ககானாவின குமாரன, இவனமாகாதின குமாரன, இவனஅமாசாயின குமாரன,

௩௬. இவன எல்கானாவின குமாரன, இவனயோவேலின குமாரன, இவனஅசரீயாவின குமாரன, இவனசெபபனியாவின குமாரன,

௩௭. இவனதாகாதின குமாரன, இவனஆசீரின குமாரன, இவனஎபியாசாபபின குமாரன, இவனகோராகின குமாரன,

௩௮. இவன இஸ்க்காரின குமாரன, இவன காகாதின குமாரன, இவன இஸ்ருவேலின குமாரனாகிய லேவியின குமாரனானவன.

௩௯. இவன சகோதரனாகிய ஆசாப் அவன வலதுபககததிலே நிற்பான; ஆசாப் பெரகியாவின குமாரன, இவனசீமேயாவின குமாரன,

௪௰. இவனமிகவேலின குமாரன, இவனபாசெயாவின குமாரன, இவனமலகீயாவின குமாரன,

௪௧. இவனஎத்னீயின குமாரன, இவனசேராகின குமாரன, இவன அதாயாவின குமாரன,

௪௨. இவனஏததானின குமாரன, இவனசிமமாவின குமாரன, இவன சிமேயின குமாரன,

௪௩. இவனயாகாதின குமாரன, இவனகெர்சோமின குமாரன, இவன லேவியின குமாரனதானே.

௪௪. மெராரியினபுததிரராகிய அவர்களுடைய சகோதரர்இடதுபககததிலேநிறபார்கள. அவர்களிலஏதானெனறவன கிசியின குமாரனானவன, இவனஅப்தியின குமாரன, இவன மலலூகின குமாரன,

௪௫. இவனஅஸபியாவின குமாரன, இவன அமத்சியாவின குமாரன, இவன இல்கியாவின குமாரன,

௪௬. இவன அம்சின குமாரன, இவனபானியின குமாரன, இவனசேமேரின குமாரன,

௪௭. இவனமாகேலியின குமாரன, இவனமூசியின குமாரன, இவனமெராரியின குமாரன, இவனலேவியின குமாரனதானே.

௪௮. அவாகள சகோதராராகிய மறறலேவியர் பராபரனுடைய வீடடுவாசஸ்தலததின பணிவிடைககெல்லாமவைககபபடடிருநதாாகள.

௪௯. ஆரோனுமஅவன குமாரருமோவெனிலசருவததகன பலிபீடததினமேலுந தூபஙகாடடுமபீடததினமேலுங கொளுததி, பரிசுததததுககுப பரிசுததமான இஸ்தலததின எல்லாவேலைககும, பராபரனுடைதாசனாகிய மோசேகறபிததபடியெல்லாமஇஸ்ருவேலுககாகபாவநிவாறதிபணடாககிறததுககுமவைககபபடடிருநதார்கள.

௫௰. ஆரோனின குமாரரிலஎலெயாசாரெனறவனுடைய குமாரனபினெகாஸ், இவனகுமாரன அபிசூவா,

௫௧. இவனகுமாரன புககி, இவனகுமாரன ஊசி, இவனகுமாரனசெரகியா,

௫௨. இவனகுமாரனமெராயோத், இவனகுமாரன அமரீயா, இவனகுமாரன அகித்தூப்,

௫௩. இவனகுமாரனசாதோக், இவனகுமாரன அகிமாஸ்.

௫௪. அவர்கள அரமனைகளினபடியேஅவர்களஎலலைககுளளான அவர்களவாசஸ்தலஙகளாவது: காகாதியரின வஙகிஷமான ஆரோனினபுததிரருககுவிழுநதசீடடினபடியே,

௫௫. யூதாதேசததிலிருககிறஎபிரோனையுமஅதின சுறறுப பேடடைகளையுங கொடுததார்கள.

௫௬. ஆனால அநதபபடடணததின வெளியையுமஅதின கிருமஙகளையும யெபபுனனேயின குமாரனாகிய காலேபபுககுககொடுததார்கள.

௫௭. இபபடியே ஆரோனினபுததிரருககுஅடைககலபபடடணஙகளிலொனறாகிய எபிரோனையும லிப்னாவையும அதின பேடடைகளையும, யததீரையும எஸ்தெமோபாவையுமஅதின பேடடைகளையும,

௫௮. ஈலேனையுமஅதினபேடடைகளையும தெபீரையுமஅதினபேடடைகளையும,

௫௯. ஆசானையுமஅதினபேடடைகளையும பெத

பெத்சேமேசையும் அதின பேட்டைகளையும்,

௬௰. பென்யமீன கோத்திரத்திலே கேபாவையும் அதின பேட்டைகளையும், அல்லேமேத்தையும் அதின பேட்டைகளையும், ஆனதோத்தையும் அதின பேட்டைகளையுங் கொடுத்தார்கள்; இவர்களவங்கிஷங்களுக்குக் கொடுத்தது அவர்கள பட்டணங்களெல்லாம பதின்மூன்று.

௬௧. ஆனால் காகாதின மற்றப் புத்திரருக்குப் வேறுகோத்திரவங்கிஷத்திலும் பாதிக்கோத்திரமாகிற மனாசேயின பாதியிலும் விழுந்த சீட்டின்படியே பத்துப்பட்டணங்களிருந்தது.

௬௨. கெர்சோமின புத்திரருக்கு அவர்களவங்கிஷங்களின்படியே இசக்கார் கோத்திரத்திலும் ஆசேர்கோத்திரத்திலும் நவ்தலிகோத்திரத்திலும் பாசானிலிருக்கிற மனாசே கோத்திரத்திலும் பதின்மூன்றுபட்டணங்களிருந்தது.

௬௩. மெராரியின புத்திரருக்கு அவர்களவங்கிஷங்களின படியே ரூபேன கோத்திரத்திலுங் காத்கோத்திரத்திலுஞ் செபுலோன கோத்திரத்திலும் விழுந்தசீட்டின்படி பனிரெண்டுபட்டணங்களிருந்தது.

௬௪. அப்படியே இஸ்ரவேல்புத்திரர் லேவியருக்குக் கொடுத்த பட்டணங்களும அதுகளின பேட்டைகளுமென்னவென்றால்,

௬௫. சீட்டுப்போட்டுச்சிலருக்கு யூதாபுத்திரரின கோத்திரத்திலுஞ்சிமேயோன புத்திரரின கோத்திரத்திலும் பென்யமீன புத்திரரின கோத்திரத்திலும் பேர் பேராகச் சொல்லப்பட்ட அந்தப்பட்டணங்களைக்கொடுத்தார்கள்.

௬௬. காகாத்புத்திரரில் மற்றவங்கிஷங்களுக்கோவென்றால் அவர்களெல்லையானப்பட்டணங்கள அவர்களுக்குளெப்பிறாயீங்கோத்திரத்திலேயிருந்தது.

௬௭. அதேதெனில் அடைக்கலப்பட்டணங்களில் அவர்களுக்குளெப்பிறாயீம்மலைத்தேசத்திலிருக்கிற சிகேமையும அதின பேட்டைகளையும், கேசேரையும அதின பேட்டைகளையும்,

௬௮. யோக்மெயாமையும அதின பேட்டைகளையும், பெத்ஒரோனையும அதின பேட்டைகளையும்,

௬௯. ஆயலோனையும அதின பேட்டைகளையும், காத்ரிம்மோனையும அதின பேட்டைகளையும்,

௭௰. மனாசேயின பாதிக்கோத்திரத்திலே ஆனேரையும அதின பேட்டைகளையும், பிலேயாமையும அதின பேட்டைகளையுங் கொடுத்தார்கள். இதுகள காகாத்புத்திரரிலுள்ள மற்றவங்கிஷங்களுக்கிருந்தது.

௭௧. கெர்சோமபுத்திரருக்கும மனாசேயின பாதிக்கோத்திர வங்கிஷத்திலே பாசானிலிருக்கிற கோலானும அதின பேட்டைகளும, அஸ்தரோத்தும அதின பேட்டைகளும,

௭௨. இசக்கார்கோத்திரத்திலே கேதேசும அதின பேட்டைகளுந், தொப்ருத்தும அதின பேட்டைகளும,

௭௩. ராமோத்தும அதின பேட்டைகளும, ஆனேமும அதின பேட்டைகளும,

௭௪. ஆசேர்கோத்திரத்திலே மாஷாலும அதின பேட்டைகளும, அப்தோனும அதின பேட்டைகளும,

௭௫. உக்கோக்கும அதின பேட்டைகளும, ரேகோபும அதின பேட்டைகளும,

௭௬. நவ்தலிகோத்திரத்திலே கலிலேயாவிலிருக்கிற கேதேசும அதின பேட்டைகளும, அம்மோனும அதின பேட்டைகளுங், கீரியாத்தாயிமும அதின பேட்டைகளுமிருந்தது.

௭௭. மற்றுமுண்டான மெராரியின புத்திரருக்குச் செபுலோன கோத்திரத்திலே ரிம்மோனும அதின பேட்டைகளுந், தாபோரும அதின பேட்டைகளும,

௭௮. யெரிகோவுக்கப்புறமாயிருக்கிற யோர்தானுக்கப்பாலேயோர்தானுக்குக்கிழக்காகவிருக்கிற ரூபேன கோத்திரத்திலே வனாந்தரத்திலுள்ள பெத்சேரும அதின பேட்டைகளும, யாத்சாவும அதின பேட்டைகளும,

௭௯. கெதேமோத்தும அதின பேட்டைகளும, மெப்பாத்தும அதின பேட்டைகளும,

௮௰. காத்கோத்திரத்திலே கிலேயாதிலுள்ள ராமோத்தும அதின பேட்டைகளும, மகனாயிமும அதின பேட்டைகளும,

௮௧. எஸ்போனும அதின பேட்டைகளும, யாசேரும அதின பேட்டைகளுமிருந்தது.

௭. அதிகாரம்.

இசக்கார் பென்யமீன நவ்தலி மனாசே எப்பிறாயீம ஆசேர் என்றவர்களின சந்ததிகள.

இசக்காருடைய குமாரர் தோலா, பூவா, யசீப், சிமரோன என்ற நாலுபேர்.

௨. தோலாவின குமாரர் ஊசி, ரெப்பாயா,

 யெரீ

யெரீயேல், யக்மாயி, இப்சாம், சாமுவேலென்றவர்கள்; தோலாவுக்குப் பிறந்த இவர்கள் தங்கள் பிதாக்கள் வீட்டுத் தலைவருந் தங்கள் சந்ததிகளிலே பராக்கிரமக்காரருமாயிருந்தார்கள், தாவீதின் நாள்களில் அவர்கள் தொகை இருபத்தீராயிரத்து அறுநூறு பேராயிருந்தார்கள்.

௩. ஊசியின் குமாரரிலொருத்தன் இஸ்றகியா, இஸ்றகியாவின் குமாரர் மிகவேல், ஒபதியா, யோவேல், இஷியா என்றவர்கள், இவர்கள் ஐந்து பேருந் தலைவராயிருந்தார்கள்.

௪. அவர்கள் பிதாக்கள் வீட்டாரான அவர்கள் சந்ததிகளிலே யுத்தமனுஷரான கூட்டங்கள் முப்பத்தாறாயிரம் பேர் அவர்களோடிருந்தார்கள், ஏனெனில் அவர்களுக்கநேகம் பெண்சாதிகளும் பிள்ளைகளுமிருந்தது.

௫. இசஷாருட மற்ற எல்லா வங்கிஷங்களிலும் அவர்களுக்குச் சகோதரரான பராக்கிரமசாலிகள் தங்கள் வங்கிஷ அட்டவணைகளின்படியெல்லாம் எண்பத்தேழாயிரம் பேராயிருந்தார்கள்.

௬. பென்யமீனின் குமாரர்: பேலா, பேகேர், யெரியாவேலென்ற மூன்று பேர்.

௭. பேலாவின் குமாரர்: எஸ்போன், ஊசீ, ஊசீயேல், எரிமோத், ஈரி என்றவர்கள், இவர்கள் தங்கள் பிதாக்களின் வீட்டில் பராக்கிரமக்காரரான ஐந்து தலைவராயிருந்தார்கள், இவர்கள் வங்கிஷ அட்டவணைக்குள்ளான பேர் இருபத்தீராயிரத்து முப்பத்து நாலு.

௮. பேகேரின் குமாரர்: செமீரா, யோவாஸ், எலியேசர், எலியோனாய், உம்ரீ, யெரிமோத், ஆபியா, ஆனதோத், ஆலாமேத் என்றவர்கள், இவர்களெல்லாம் பேகேரின் குமாரர்.

௯. தங்கள் பிதாக்களின் வீட்டுத் தலைவமாராகிய அவர்கள் சந்ததிகளின் அட்டவணைக்குள்ளான பராக்கிரமக்காரர் இருபதினாயிரத்திருநூறு பேர்.

௰. யெரியாவேலின் குமாரரிலொருத்தன் பில்லான், பில்லானின் குமாரர் எயூஸ், பென்யமீன், ஏகூத், கெனானா, சேத்தான், தர்சீஸ், அகிஷாகார் என்றவர்கள்.

௰௧. யெரியாவேலின் குமாரராகிய இவர்களெல்லாந் தங்கள் பிதாக்கள் வீட்டாரில் தலைவமாராயிருந்தார்கள். இவர்களில் யுத்தத்துக்குப் போகத்தக்க சேவகரான பராக்கிரமக்காரர் பதினேழாயிரத்திருநூறு பேர்.

௰௨. சுப்பிமும் உப்பிமும் ஈரின் குமாரரானவர்கள், ஊசிம் ஆகேரின் குமாரரிலொருத்தன்.

௰௩. நவ்தலியின் குமாரரான பில்காவின் பேர்மார்: யாத்சீயேல், கூனி, யேத்சர், சல்லூமென்றவர்கள்.

௰௪. மனாசேயின் புத்திரரிலொருத்தன் சுவஸ்திரியினிடத்தில் பிறந்த அஸ்றியேல், அவனைப் பாட்டியாகிய சூரிய இஸ்திரியோவெனில் கீலெயாத்தின் தகப்பனாகிய மாகீரைப் பெற்றாள்.

௰௫. மாகீர் மாக்காளென்ற பேருள்ள உப்பீம் சுப்பீமென்றவர்களின் சகோதரியை விவாகம்பண்ணினான். மனாசேயின் இரண்டாங் குமாரன் செல்லாப்பேகாத், செல்லாப்பேகாத்துக்குக் குமாரத்திகளிருந்தார்கள்.

௰௬. மாகீரின் பெண்சாதியாகிய மாக்காள் ஒரு குமாரனைப் பெற்று அவனுக்குப் பேரேசென்று பேரிட்டாள், இவன் சகோதரன் பேர் சேரேஸ், இவனுடைய குமாரர்: ஊலாம், ரேக்கேம் என்றவர்கள்.

௰௭. ஊலாமின் குமாரரிலொருத்தன் பேதான், இவர்கள் மனாசேயின் குமாரனுகிய மாகீருக்குப் பிறந்த கீலேயாத்புத்திரர்.

௰௮. இவன் சகோதரியாகிய மொளெகேத் இஸ்கோதையும், அபியேசேரையும், மாகேலாவையும் பெற்றாள்.

௰௯. செமீதாவின் குமாரர்: அகியான், சேகேம், லிக்கேகி, அனியாமென்றவர்கள்.

௨௰. எப்பிராயீமின் குமாரரிலொருத்தன் சுத்தேலா, இவனுடைய குமாரன் பேரோத், இவனுடைய குமாரன் தாகாத், இவனுடைய குமாரன் எலாதா, இவனுடைய குமாரன் தாகாத்.

௨௰௧. சுத்தேலாவைப் பெற்ற சாபாதும் ஏசேருமெலாதும் எப்பிராயீமின் குமாரர்: ஆனால் தேசத்தில் பிறந்த காத்தூர் மனுஷர் இவர்களுடைய ஆடுமாடுகளைப் பிடிக்க இறங்கிவந்தபோது இவர்களைக் கொன்றுபோட்டார்கள்.

௨௰௨. அவர்கள் தகப்பனாகிய எப்பிராயீம் அநேக நாள் துக்கங் கொண்டாடுகையால் அவன் சகோதரர் அவனுக்காறுதல் சொல்லவந்தார்கள்.

௨௰௩. பிற்பாடவன் தன் பெண்சாதியினிடத்தில் பிறவேசித்தினால் இவள் கெர்ப்பந்தரித்து ஒரு குமாரனைப் பெற்றாள், அவனுக்கு அவன் வீட்டில் தீங்குண்டானதினால் இவனுக்குப் பெரீயாவென்று பேரிட்டான்.

௨௰௪. இவனுடைய குமாரத்தியாகிய சேராள்

கீழ்

கீழ்ப்புறமும்மேல்ப்புறமுமான பெத்தோரோனையும் உசேன்சேராவையுங்கட்டினவள்.

௨௫. அவனுடைகுமாரர்: ரெப்பாக், ரேசேப்பென்றவர்கள், இவனுடைகுமாரன்தேலாக், இவனுடைகுமாரன்தாகான்.

௨௬. இவனுடைகுமாரன்லாதான், இவனுடைகுமாரன் அம்மிகூத், இவனுடை குமாரன் எலிசாமா.

௨௭. இவனுடைகுமாரன்நூன், இவனுடைகுமாரன்யோசுவா.

௨௮. அவர்களுடைகாணியாட்சியும்வாசஸ்தலங்களுங்கிழக்கேயிருக்கிறநாரானும், மேற்கேயிருக்கிற கேசேரும் அதின் கிராமங்களும், பெத்தேலும் அதின் கிராமங்களும், சீகேமும் அதின்கிராமங்களும், ஆசாமட்டுக்கும் அதின்கிராமங்களமட்டுக்குமுள்ளபுறமும்,

௨௯. மனாசேபுத்திரரின்பக்கத்திலே பெத்சேயானும் அதின்கிராமங்களும், தானாகும் அதின்கிராமங்களும், மெகிதோவும் அதின்கிராமங்களும், தோரும் அதின்கிராமங்களுந்தானே. இவ்விடங்களில் இஸ்ரவேலின் குமாரனாகிய யோசேப்பின் புத்திரர்குடியிருந்தார்கள்.

௩௰. ஆசேரின்குமாரர்: இம்னா, இஸ்வா, இஸ்வீ, பெரீயாவென்றவர்களும், இவர்கள்சகோதரியாகிய சேராளுந்தானே.

௩௧. பெரீயாவின்குமாரர்: எபேர், மல்கியேலென்றவர்கள், இவன் பிறசாவீத்தின் தகப்பன்.

௩௨. எபேர் யப்லேத்தையும், சோமேரையும், ஒத்தாமையும், இவர்கள்சகோதரியாகிய சூகாளையும்பெற்றான்.

௩௩. யப்லேத்தின்குமாரர்: பாசாக், பிம்மால், அஸ்வாத்தென்றவர்கள், இவர்கள் யப்லேத்தின் குமாரர்.

௩௪. சோமேரின் குமாரரோ வெனில் அகீ, ரோகா, எகூப்பா, ஆராமென்றவர்கள்.

௩௫. அவன்சகோதரனாகிய எலேமின்குமாரர்: சோப்பாக், இம்னா, சேலேஸ், ஆமாலென்றவர்கள்.

௩௬. சோப்பாவின் குமாரர்: சூவாக், அர்னெப்பர், சூகால், பேரி, இம்ரா,

௩௭. பேசேர், ஒத், சம்மா, சில்சா, இத்ரான், பேராவென்றவர்கள்.

௩௮. எத்தேரின்குமாரர்: எப்புனே, பிஸ்பா, ஆராவென்றவர்கள்.

௩௯. உல்லாவின் குமாரர்: ஆராக், அனியேல், ரித்சீயாவென்றவர்கள்.

௪௰. ஆசேரின்புத்திரராகிய இவர்களெல்லாந்தங்கள் பிதாக்களின் வீட்டு தலைவருந்தெரிந்துகொள்ளப்பட்டபராக்கிரமசாலிகளும் பிரபுக்களின் தலைவருமாயிருந்தார்கள். அவர்கள் அங்கிஷட்டவணைகளில் யுத்தத்துக்குப்போகத்தக்க சேவகரின் லெக்கம் இருபத்தாறாயிரம்பேர்.

## ௮. அதிகாரம்.

பென்யமீன்கோத்திரத்துவங்கிஷங்களும் சவுலின்சந்ததியும்.

பென்யமீன் பேலாவென்றதன் மூத்தகுமாரனையும், அஸ்பாலென்ற இரண்டாங்குமாரனையும், அகிராகென்ற மூன்றாங்குமாரனையும்,

௨. நோகாவென்ற நாலாங்குமாரனையும், ரப்பாவென்ற ஐந்தாங்குமாரனையும் பெற்றான்.

௩. பேலாவுக்கிருந்த குமாரர்: அதார், கேரா, அபிகூதென்றவர்கள்;

௪. அபிசூவா, நாமான், அகோவாக்,

௫. கேரா, செப்புப்பான், ஊராமென்றவர்கள் எகூதின்குமாரர்.

௬. கேபாவின் குடிகளுக்கு மூப்பான தலைவராயிருந்து இவர்களை மனாகாத்துக்கழைத்துக்கொண்டுபோனவர்கள்: நாமான், அகோவாக், கேராவென்றவர்கள்தானே.

௭. இவன் அவர்களை அங்கே அழைத்துப்போனபிறபாடு ஊசாவையும், அகீகூதையும் பெற்றான்.

௮. அவர்களையனுப்பிவிட்டபின் சகாரீம் மோவாப்தேசத்திலே ஊசிம், பாராளென்றதன் பெண்சாதிகளாலே பெற்ற பிள்ளைகளைத்தவிர,

௯. தன் பெண்சாதியாகிய ஒதேசாலே யோவாபேயும், சீபீயாவையும், மேசாவையும், மல்காமையும்,

௰. எகூத்சையும், சோகீயாவையும், மீர்மாவையும் பெற்றான், இவர்கள் பிதாக்களின் தலைவரான அவனுடைகுமாரர்.

௰௧. ஊசிமாலே அவன் அபித்தூபையும், எல்பாலையும்பெற்றான்.

௰௨. எல்பாலின்குமாரர்: எபேர், மீஷாம், சாமேர், இவன் ஓனோவையும், லோதையும், அதின்கிராமங்களையுங்கட்டினவன்.

௰௩. பெரீயாவும், சேமாவும், ஆயலோன்குடிக

டிகளுடைய பிதாக்களிலே தலைவராயிருந்தார்கள; இவர்கள காததின குடிகளை யோட்டிவிட்டார்கள.

௰௪. அகியோ, சாஷாக, யெரேமோத,
௰௫. செபதியா, ஆராத, ஏதேர,
௰௬. மிகாவேல, இஸபா, யோக என்றவர்கள பெரீயாவின குமாரர:
௰௭. செபதீயா, மெசுலலாம, இஸகி, ஏபேர,
௰௮. இஸமேராயி, இஸலீயா, யோபாபென்றவர்கள எல்பாலின குமாரர.
௰௯. யாக்கீம, சிகிறி, சப்தி,
௨௰. எலியேனாயி, சிலலேததாயி, எலியேல,
௨௧. அதாயா, பெராயா, சிமராததென்றவர்கள சிமேயின குமாரர.
௨௨. இஸபான, ஏபேர, எலியேல,
௨௩. அப்தோன, சிகிறி, ஆனான,
௨௪. அனனீயா, ஏலாம, அநதோததியா,
௨௫. இபதீயா, பெனுவேலென்றவர்கள சாஷாக்கின குமாரர.
௨௬. சமசேராயி, செகரீயா, அததாலீயா,
௨௭. யரேஷியா, எலியா, சிகிறியென்றவர்கள யெரோகாமின குமாரர.
௨௮. இவர்கள தங்கள சநததிகளின பிதாக்களிலே தலைவராயிருந்து யெருசலேமிலே குடியிருந்தார்கள.
௨௯. கிபெயோனிலே குடியிருந்தவன கிபெயோனின மூப்பன, அவன பெண்சாதியின பேர மாக்காள.
௩௰. அவன மூததகுமாரன அப்தோனென்றவன, மற்றவர்கள சூர, கீஸ, பாகால, நாதாப,
௩௧. கெதோர, அகியோ, சேகேர என்றவர்கள.
௩௨. மிக்லோத சிமேயாவைப பெற்றான, இவர்களுந தங்கள சகோதரரோடுங்கூட யெருசலேமிலே தங்கள சகோதரருக்கெதிர்முகமாய்க் குடியிருந்தார்கள.
௩௩. நேர, கீசைப பெற்றான, கீஸ, சவுலைப பெற்றான, சவுல யோனததானையும, மல்கிசூபாவையும, அபினதாபையும, எஸபாலையும பெற்றான.
௩௪. யோனததானின குமாரன மேரிபால, மேரிபால மீகாவைப பெற்றான.
௩௫. மீகாவின குமாரர: பீததோன, மேலேக, தரேயா, ஆகாசென்றவர்கள.
௩௬. ஆகாஸ யோகதாவைப பெற்றான, யோகதா அலேமேததையும, அஸமாவேததையும, சிமரியையும பெற்றான, சிமரி மோத்சாவைப பெற்றான.
௩௭. மோத்சா பினெயாவைப பெற்றான, இவன குமாரன ரப்பா, இவன குமாரன எலாச, இவன குமாரன ஆத்சேல;
௩௮. ஆத்சேலுக்கு ஆறு குமாரரிருந்தார்கள, அவர்களுக்கு: அஸரீக்காம, பொகரூ, இஸமவேல, செகரீயா, ஒபதீயா, ஆனானென்ற நாமங்களிருந்தது. இவர்களெல்லாம ஆத்சேலின குமாரர.
௩௯. அவன சகோதரனாகிய எசேக்கின குமாரர: ஊலாமென்றவன, அவன மூததகுமாரனும, எகூஸென்ற இரண்டாங் குமாரனும, எலிபெலேத்தென்ற மூன்றாங்குமாரனுந்தானே.
௪௰. ஊலாமின குமாரர வில்லாளராய்ப் பராக்கிரமசாலிகளாயிருந்தார்கள. இவர்களுக்கு நூற்றைம்பதாகிய அநேகங்குமாரருங் குமாரரின குமாரருமிருந்தார்கள. இவர்களெல்லாம பென்யமீன புததிரர.

௯. அதிகாரம.

யெருசலேமிற் பட்டணத்துக்குடிகள.

௧. இஸரவேலெல்லாரும் தங்கள வம்சவிஷங்களின்படி யெண்ணப்பட்டது; இதோ, இதுகள இஸரவேல இராசாக்களின புஸதகத்திலெழுதியிருக்குது. யூதாக்கோததிரததார தங்கள துரோகததினிமித்தியம் பாபெலுக்குச் சிறைப்பிடித்துக் கொண்டுபோகப்பட்டார்கள.
௨. தங்கள காணியாட்சியிலுந் தங்கள பட்டணங்களிலும முன குடியிருந்தவர்கள இஸரவேலருமம ஆசாரியருமம லேவியருமம இஸரவேலிற்சேர்ந்தவர்களுந்தானே.
௩. யூதா புததிரரிலும, பென்யமீன புததிரரிலும, எப்பிராயீம மனாசேயென்றவர்களின புததிரரிலும யெருசலேமிலே குடியிருந்தவர்களாரென்றால,
௪. யூதாவின குமாரனாகிய பேரேசின சநததியில பானியின குமாரனாகிய இம்ரியின மகனான உம்ரிக்குப் பிறந்த அம்மியூதின குமாரன ஊத்தாயி.
௫. சேலாவின சநததியில மூததவனாகிய அசாயாவும அவன பிள்ளைகளும;
௬. சேராவின சநததியில யெகுவேலும அவன சகோ

சகோதரராகிய அறுநூற்றுத்தொண்ணூறுபேருமே.

௭. பென்யமீன்புத்திரரில் அசெனூவாவின் குமாரனாகிய ஒதவியாவுக்குப் பிறந்த மெசுல்லாமின் மகன் சல்லு;

௮. யெரோகாமின் குமாரன் இப்னெயா மிச்கிரியின் குமாரனாகிய உசீயின் மகன் ஏலா, இப்னீயாவின் குமாரனாகிய ரேகுவேலுக்குப் பிறந்த செப்பத்தியாவின் மகன் மெசுல்லாம் என்றவர்களும்,

௯. தங்கள் சந்ததிகளின்படியிருந்த இவர்கள் சகோதரராகிய தொளாயிரத்து ஐம்பத்தாறுபேரும், இந்த மனுஷரெல்லாரும் தங்கள் பிதாக்களின் வீட்டிலே பிதாக்களின் தலைவருமாராயிருந்தார்கள்.

௰. ஆசாரியர்களில்: யெதாயா, யோயரீப், யாகீன்.

௰௧. அகிதூபின் குமாரனாகிய மெராயோதின் மகன் சாதோக்குக்குப் பிறந்த மெசுல்லாமின் குமாரனாகிய இல்க்கியாவின் மகன் அசரியா என்றபராபரனுடைய வீட்டின் தலைவன்.

௰௨. மல்கீயாவின் குமாரனாகிய பஸ்கூருக்குப் பிறந்த யெரோகாமின் மகன் அதாயா, இம்மேரின் குமாரனாகிய மெசில்லேமித்தின் மகன் மெசுல்லாமுக்குப் பிறந்த யாசெராவின் குமாரனாகிய ஆதியேலின் மகன் மாசாயி என்றவர்களும்;

௰௩. தங்கள் பிதாக்களின் வீட்டுத்தலைவரான ஆயிரத்தெழுநூற்றறுபது பேராகிய பராபரனுடைய வீட்டு வேலையின் கிரியைக்குப் பராக்கிரமக்காரரான அவர்கள் சகோதரரும்,

௰௪. லேவியரில் மெராரியின் சந்ததியான அசபியாவின் குமாரனாகிய அஸ்ரீக்காமுக்குப் பிறந்த அசூபின் மகன் செமாயா,

௰௫. பக்பக்கார், எரேஸ், காலால், ஆசாபின் குமாரனாகிய சிக்ரிக்குப் பிறந்த மீகாவின் மகன் மத்தானியா,

௰௬. யெதுத்தூனின் குமாரனாகிய காலாலுக்குப் பிறந்த செமாயாவின் மகன் ஒபதியா, நெத்தோபாத்தியரின் கிராமங்களில் குடியிருந்த எல்க்கானாவின் குமாரனாகிய ஆசாவின் மகன் பெரகியா.

௰௭. வாசல்காவல்காரராகிய சல்லூம், அக்கூப், தல்மோன், அகீமான் என்றவர்களும், இவர்கள் சகோதரரும், இவர்கள் தலைவன் சல்லூம்.

௰௮. லேவிபுத்திரரின் சேனைகளில் இவர்கள் கிழக்கேயிருக்கிற இராசாவின் வாசலில் இந்நாள்மட்டும் காவல்காத்தவர்கள்.

௰௯. கோராகின் குமாரனாகிய எபியாசாப்புக்குப் பிறந்த கோரேயின் மகன் சல்லூமும், அவன் பிதாவின் வீட்டாராகிய அவனுடைய சகோதரருமான கோராகியர் பணிவிடை வேலையை விசாரித்து அவர்கள் பிதாக்கள் கர்த்தருடைய பாளயத்திலே கூடாரத்துக்குப் போகிற வழியைக் காவல் காத்ததுபோலே கூடாரத்து வாசற்படிகளைக் காக்கிறவர்களாயிருந்தார்கள்.

௨௰. எலெயாசாரின் குமாரனாகிய பினேகாஸ் முன்னே கர்த்தரிருந்தபடியினாலே, அவன் முற்காலத்திலே அவர்கள் மேல் தலைவனாயிருந்தான்.

௨௧. மெசெலேமியாவின் குமாரனாகிய செக்கரியா ஆசரிப்புக்கூடாரத்தின் வாசற்படியைக் காவல்காத்தவனாயிருந்தான்.

௨௨. வாசற்படிகளைக் காக்கிறதற்குத் தெரிந்துகொள்ளப்பட்ட இவர்களெல்லாம் இருநூற்றுப்பன்னிரண்டுபேராயிருந்து, தங்கள் கிராமங்களின்படியே தங்கள் வம்சத்திட்டவணைகளில் எழுதப்பட்டார்கள்; தாவீதும் ஞானதிருஷ்டிக்காரனாகிய சாமுவேலும் அவர்கள் உண்மையைப் பார்த்து அவர்களை வைத்தார்கள்.

௨௩. அப்படியே அவர்களும் அவர்கள் குமாரரும் கூடாரவீடாகிய கர்த்தருடைய வீட்டு வாசல்களைக் காக்கிறவர்களை முறைமுறையாய் விசாரித்தார்கள்.

௨௪. வாசல்களைக் காக்கிறவர்கள் நாலுகாற்றுத்திசைகளாகிய கிழக்கிலும் மேற்கிலும் வடக்கிலும் தெற்கிலுமிருந்தார்கள்.

௨௫. அவர்கள் சகோதரர் தங்கள் கிராமங்களிலிருந்து ஏழுநாளில் ஒருவிசை மாறிமாறி அவர்களோடிருக்க வருவார்கள்.

௨௬. ஏனெனில் உண்மையைப் பார்த்துக் கட்டளையிடப்பட்ட அந்த உத்தியோகத்திலே லேவியரான நாலுபிரதான வாசல்காவல்காறரிருந்தார்கள், இவர்கள் பராபரனுடைய வீட்டின் அறைகள் மேலும் பொக்கிஷங்கள் மேலும் வைக்கப்பட்டிருந்தார்கள்.

௨௭. பராபரனுடைய வீட்டைச் சுற்றிலும் இராத்தங்குவார்கள், ஏனெனில் காவல் அவர்களுக்கு ஒப்புவிக்கப்பட்டிருந்தது, காலமாறுதோறும் திறக்கிற வேலையையும் விசாரித்தார்கள்.

௨௮. அவர்களில் சிலருக்கு ஊழியத்தின் தட்டுமுட்டுகள் ஒப்புவிக்கப்பட்டிருந்தது, எண்ணிக்கையின்படி அதுகளை உள்ளே கொண்டுபோய், எண்ணி வெளியே கொண்டுவருவார்கள்.

௨௯. அவர்களில் சிலர் மற்றத் தட்டுமுட்டுகள் மேலும், பரிசுத்த பாத்திரங்கள் எல்லாவற்றின் மேலும், மெல்லிய மாவின்மேலும், திராட்சப்பழரசம் எண்ணெய் குந்திரிக்கம் சுகந்தவர்க்கங்களின் மேலும் வைக்கப்பட்டிருந்தார்கள்.

௩௰. ஆனால் ஆசாரியரின் குமாரரில் சிலர் சுகந்தவர்க்கத்தால் பரிமளதயிலமிறக்குவார்கள்.

௩௧. லேவியரில் கோராகியனான சல்லூமின் மூத்த குமாரனாகிய மத்தித்தியாவுக்குச் சட்டிகளில் சுடுகிற வேலையின் விசாரிப்பு ஒப்புவித்திருந்தது.

௩௨. அவர்கள் சகோதரராகிய காகாத்தியரின் புத்திரரில் சிலருக்கு ஓய்வுநாள்தோறும் சமுகத்தப்பங்களை ஆயத்தம்பண்ணும் விசாரிப்பிருந்தது.

௩௩. இவர்களில் லேவியருடைய பிதாக்களின் தலைவராகிய பாடகர் அறைகளில் மற்ற வேலைக்கு நீங்கலாயிருந்தார்கள், ஏனெனில் இராவும் பகலும் அவர்கள் வேலையின் விசாரிப்பு அவர்களுக்கிருந்தது.

௩௪. லேவியரில் பிதாக்களின் தலைவராகிய இவர்கள் தங்கள் சந்ததிகளுக்குத் தலைமையானவர்கள்; இவர்கள் எருசலேமிலே குடியிருந்தார்கள்.

சவுலின் வங்கிஷத்தட்டவணை திரும்பச் சேர்க்கப்பட்டது.

௩௫. கிபியோனிலே குடியிருந்தவர்கள் யாரென்றால், கிபியோனின் மூப்பனாகிய யேயெல், இவன் பெண்சாதியின் பேர் மாகாள்.

௩௬. அவன் மூத்த குமாரனாகிய அப்தோனும், சூர், கீஸ், பாகால், நேர், நாதாப்,

௩௭. கேதோர், அகியோ, சகரியா, மிக்லோத் என்றவர்களுந்தானே,

௩௮. மிக்லோத் சிமேயாமைப் பெற்றான், இவர்களுந் தங்கள் சகோதரரோடுங்கூட எருசலேமிலிருக்கிற தங்கள் சகோதரருக்கெதிரே குடியிருந்தார்கள்,

௩௯. நேர் கீசைப் பெற்றான், கீஸ் சவுலைப் பெற்றான், சவுல் யோனத்தானையும், மல்கிசூவாவையும், அபினதாபையும், எஸ்பாலையும் பெற்றான்.

௪௰. யோனத்தானின் குமாரன் மேரிப்பால், மேரிப்பால் மீகாவைப் பெற்றான்.

௪௧. மீகாவின் குமாரர் பித்தோன், மேலேக், தரேயா என்றவர்கள்.

௪௨. ஆகாஸ் யாராகைப் பெற்றான், யாராக் அலேமேத்தையும், அஸ்மாவேத்தையும், சிம்ரியையும் பெற்றான், சிம்ரி மோத்சாவைப் பெற்றான்.

௪௩. மோத்சா பினெயாவைப் பெற்றான், இவன் குமாரன் ரப்பாயா, இவன் குமாரன் எலாசா, இவன் குமாரன் ஆத்சேல்.

௪௪. ஆத்சேலுக்கு ஆறு குமாரரிருந்தார்கள், அவர்கள் நாமங்கள்: அசரீக்காம், பொக்கரு, இஸ்மவேல், செராயா, ஒபதியா, ஆனான் என்றவர்கள்; இவர்கள் ஆத்சேலின் குமாரர்.

௰. அதிகாரம்.

சவுல் பெலிஸ்தரோடே பண்ணின யுத்தத்தில் மடிந்துபோனது.

௧. பெலிஸ்தர் இஸ்ரவேலோடு யுத்தம்பண்ணினார்கள், ஆனால் இஸ்ரவேல் மனுஷர் பெலிஸ்தருக்கு முன்பாக முறிந்தோடி, கில்போவா பருவதத்திலே பட்டுவிழுந்தார்கள்.

௨. பெலிஸ்தரோ வென்று சவுலையும் அவன் குமாரரையும் நெருங்கி, சவுலின் குமாரராகிய யோனத்தானையும், அபினதாபையும், மல்கிசூவாவையும் வெட்டினார்கள்.

௩. அம்பெய்கிற வில்லக்காரர் சவுலுக்கு நேராக வந்ததினால் அவன்மேலும் யுத்தம் பெலத்தது, அப்போது சவுல் வில்லக்காரருக்கு மிகவும் பயப்பட்டு,

௪. தன் ஆயுதங்களைப் பிடிக்கிறவனோடே: அந்த விருத்தசேதனமில்லாதவர்கள் வந்து என்னை யிகழ்ச்சிபண்ணாதபடிக்கு நீயுன் பட்டயத்தை யுருவி என்னைக் குத்திப்போடென்றான். ஆனால் அவன் ஆயுதங்களைப் பிடிக்கிறவன் மிகவும் பயப்படுகிறதினால் அப்படிச் செய்யமாட்டேனென்றான். அப்போது சவுல் பட்டயத்தை நட்டு அதின்மேல் விழுந்தான்.

௫. சவுல் செத்துப்போனதை அவன் ஆயுதங்களைப் பிடிக்கிறவன் கண்டபோது, அவனும் பட்டயத்திலே விழுந்து செத்துப்போனான்.

௬. அப்படியே சவுலும் அவன் மூன்று குமாரரும் அவன் வீட்டு மனுஷர் அனைவருங்கூடச் செத்துப்போனார்கள்.

௭. சனம் முறிந்தோடினதையும் சவுலும் அவன் குமாரரும் செத்துப்போனதையும் பள்ளத்தாக்கிலுள்ள இஸ்ரவேல் மனுஷரெல்லாருங் கண்டபோது தங்கள் பட்டணங்களை விட்டோடிப்போனார்கள்.

னார்கள். அப்போது பெலிஸ்தர் வந்து அதுகளில் குடியிறங்கினார்கள்.

௮. வெட்டுண்டவர்களையுரிந்து கொள்ளப் பெலிஸ்தர் மறுநாளிலே வந்த போதோவென்றால், அவர்கள் சவுலையும் அவன் குமாரரையும் கில்போவா பருவதத்திலே பட்டுக்கிடக்கக்கண்டு,

௯. அவனையுரிந்து அவன் தலையையும் அவன் ஆயுதங்களையும் எடுத்துக்கொண்டு, தங்கள் விக்கிரகங்களுக்கும் சனத்துக்கும் அதைப் பிரசங்கிக்க, பெலிஸ்தருடைய தேசத்திலே சுற்றிலும் செய்தியையனுப்பி,

௰. அவன் ஆயுதங்களைத் தங்கள் தேவர்களின் வீட்டிலே வைத்து, அவன் தலையோட்டைத் தாகோனின் வீட்டிலே அடித்து வைத்தார்கள்.

௰௧. பெலிஸ்தர் சவுலுக்குச் செய்த தெல்லாத்தையும் கீலேயாத்தேசத்து யாபேஸ் பட்டணத்தாரெல்லாரும் கேட்டபோதோவென்றால்,

௰௨. பராக்கிரமமனுஷரெல்லாரெழுந்து போய், சவுலினுடலையும் அவன் குமாரரின் உடல்களையுமெடுத்து யாபேசுக்குக் கொண்டுவந்து, அவர்களெலும்புகளை யாபேசிலிருக்கிற ஒரு கர்வாலிமரத்தின் கீழ் அடக்கம்பண்ணி, ஏழுநாள் உபவாசம் பண்ணினார்கள்.

௰௩. அப்படியே சவுல் கர்த்தருடைய வார்த்தையைக் கைக்கொள்ளாமல் கர்த்தருக்குச் செய்த தன் துரோகத்தின் நிமித்தியமும், அவன் கர்த்தரைத் தேடாமல், அஞ்சனம் பார்க்கிறவர்களைக் கேட்கும்படிக்குத் தேடினதின் நிமித்தியமும் செத்துப்போனான்.

௰௪. அதுக்காக அவர் அவனைக் கொன்று, ராச்சியபாரத்தை ஈசாயின் குமாரனாகிய தாவீதுவசமாகத் திருப்பினார்.

## ௰௧. அதிகாரம்.

தாவீது ராசாவாக அபிஷேகம் பண்ணப்பட்டு, எருசலேம் பட்டணத்தைப் பிடித்தது.

இஸ்ருவேலெல்லாம் எபிறோனிலிருக்கிற தாவீதண்டையிலே கூடிவந்து: இதோ, நாங்கள் உம்முடைய எலும்பும் உம்முடைய மாங்கிஷமுமானவர்கள்;

௨. சவுல் இன்னம் இராசாவாயிருக்கிற அப்போது தானும் நீர் இஸ்ருவேலை யழைத்துப் போயழைத்து வருவீர்: நம்முடைய சனமாகிய இஸ்ருவேலை நீ மேய்த்து, நீ நம்முடைய சனமாகிய இஸ்ருவேலின் மேலே அதுபதியாயிருப்பாயென்று உம்முடைய பராபரனாகிய கர்த்தர் உமக்குச் சொல்லியுமிருக்கிறாரென்றார்கள்.

௩. அப்படியே இஸ்ருவேலின் மூப்பரெல்லாம் எபிறோனிலே இராசாவண்டைக்கு வந்தார்கள். தாவீது எபிறோனிலே கர்த்தருக்கு முன்பாக அவர்களோடுடம்படிக்கை பண்ணிக்கொண்டபிறபாடு, அவர்கள் கர்த்தர் சாமுவேலைக் கொண்டு சொன்ன வார்த்தையின்படியே தாவீதை இஸ்ருவேலின் மேலிராசாவாக அபிஷேகம் பண்ணினார்கள்.

௪. பிறபாடு தாவீது இஸ்ருவேலனைத்தோடுங்கூட எபூசாகிய எருசலேமுக்குப் போனான், எனென்னில் எபூசியர் அத்தேசத்தின் குடிகளாயிருந்தார்கள்.

௫. அப்போது எபூசின் குடிகள் தாவீதுக்கு: நீ இதுக்குள்ப் பிறவேசிப்பதில்லையென்றார்கள். ஆனாலுந் தாவீது சீயோன் கோட்டையைப் பிடித்தான், அது தாவீதின் பட்டணம்.

௬. எனென்னில் எவன் எபூசியரை முறியடிக்கிறதிலே முந்தினவனாயிருக்கிறானோ அவன் தலைவனும் சேனாபதியுமாயிருப்பானென்று தாவீது சொன்னபோது, செருயாவின் குமாரனாகிய யோவாப் என்றுசிறதிலே முந்தினவனாயிருந்து, தலைவனானான்.

௭. பிறகு தாவீது அந்தக் கோட்டையில் வாசம்பண்ணின படியினாலே அது தாவீதின் பட்டணமென்னப்பட்டது.

௮. பிறபாடவன் பட்டணத்தை மில்லோவைத் தொடுத்துச் சுற்றிலுங் கட்டினான், யோவாப் போவெனில் பட்டணத்தின் மற்ற இடங்களைப் பழுதுபார்த்தான்.

௯. தாவீது நாளுக்கு நாள் பெருகிப்போனான், எனென்னில் சேனைகளுடைய கர்த்தர் அவனோடே கூடவிருந்தார்.

தாவீதுடைய பராக்கிரமசாலிகளின் டாப்பு.

௰. கர்த்தர் இஸ்ருவேலுக்காகச் சொன்னவார்த்தையின்படியே தாவீதை இராசாவாக்கும்படிக்கவனவசமாயிருந்து, ராச்சியபாரம்பண்ணுகிற அவனிடத்திலும் எல்லா இஸ்ருவேலினிடத்திலும் வீரத்தத்துவத்தைப் பாராட்டின பிறதான பராக்கிரமசாலிகளும்,

௰௧. தாவீதுக்கிருந்த அந்தப் பராக்கிரமசாலிகளின் லெக்கமுமாவது: அக்மோனியின் குமாரனாகிய யாஷோபியாம் என்ற சேர்வைக்காரரின் தலைவன், இவன் முன்னூறு பேர்களின் மேல் தன் ஈட்டியை யோங்கி அவர்களை யொருமிக்கக் கொன்றுபோட்டான்.

௰௨. இவனுக்கிரண்டாவதானவன் அகோகியனான தோதோவின் குமாரனான எலெயாசார், இவன் மூன்று பராக்கிரமசாலிகளிலொருத்தன்.

௰௩. பெலிஸ்தர் பாஸ்தம்மீமிலிருக்கிறவர்கள் கோதுமை நிறைந்த வயலான நிலத்திலே யுத்தத்துக்கு கூடிக்கொள்ளுகிற போதும் ஜனம் பெலிஸ்தர்களுக்கு முன்பாக ஓடுகிற போதும், இவன் தாவீதோடே அங்கேயிருந்தான்.

௰௪. அப்பொழுதிவர்கள் அந்த நிலத்தின் நடுவிலே நின்று அதைக் காப்பாற்றி, பெலிஸ்தரை மடங்கடித்தார்கள், அதினாலே கர்த்தர் பெரிய ரட்சிப்பை நடப்பித்தார்.

௰௫. முப்பது தலைவரிலே மூன்று பேரும் அதுல்லாம் என்கிற கன்மலைக் கெபியிலிருக்கிற தாவீதண்டைக்கிறங்கி வந்திருந்தார்கள். பெலிஸ்தரின் பாளயம் ரெப்பாயீம் பள்ளத்தாக்கிலிறங்கின போதே வெளியில்,

௰௬. தாவீது அரணான ஒரு இடத்திலிருந்தான், ஆனால் பெத்லெகேமில் அப்போது பெலிஸ்தரின் தாணயமிருந்தது.

௰௭. தாவீது ஆசைப்பட்டு: பெத்லெகேமின் ஒலிமுக வாசலிலிருக்கிற கிணற்றின் தண்ணீரிலே கொஞ்சம் என் தாகத்துக்குக் கொண்டுவருபவனாரென்றான்.

௰௮. அப்போதந்த மூன்று பேர் பெலிஸ்தரின் பாளயத்துக்குள் புகுந்துபோய், பெத்லெகேமின் ஒலிமுகவாசலிலிருக்கிற கிணற்றிலே தண்ணீர் மொண்டு தாவீதண்டைக்கு சுமந்து கொண்டுவந்தார்கள்; ஆனால் அவன் அதைக் குடிக்க மனதில்லாமல் அதைக் கர்த்தருக்கென்று ஊற்றிப்போட்டு:

௰௯. நானிதைச் செய்யாதபடிக்கென் பராபரன் என்னை விலக்கக் கடவார், தங்களுக்குப் பிராண மோசமாயதைக் கொண்டு வந்த இந்த மனுஷரின் இரத்தத்தைக் குடிப்பேனோ என்று சொல்லி, அதைக் குடிக்க மாட்டேனென்றான். இப்படி இந்த மூன்று பராக்கிரமக்காரர் செய்தார்கள்.

௨௰. யோவாவின் சகோதரனாகிய அபிசாயி மூன்று பேரில் பிரதானமானவன், அவன் தன் ஈட்டியை யோங்கி முன்னூறு பேரை மடங்கடித்ததினாலே இந்த மூன்று பேர்களிலே பேர்பெற்றவனானான்.

௨௧. இந்த மூன்று பேர்களில் அவன் மற்ற இரண்டு பேரைப்பார்க்கக் கனம்பெற்றவனானதினால் அவர்களுக்குத் தலைவனானான், ஆனாலும் அந்த முந்தின மூன்று பேருக்கு அவன் சரியானவனல்ல.

௨௨. பலத்த சேவகனான யோயதாவின் குமாரனும் கப்சேயேலூரானுமாகிய பெனாயாவுஞ் செய்கைகளிற் பெரியவனாயிருந்தான், அவன் மோவாப்தேசத்தின் இரண்டு வலுமையான சிங்கங்களைக் கொன்றதுமல்லாமல் அவன் இறங்கிப்போய், உறைந்த மழையின் நாளிலே ஒரு கிணத்துக்குள்ளே ஒரு சிங்கத்தைக் கொன்றுபோட்டு,

௨௩. ஐந்து முழ உயரமான ஒரு எசிப்த்திய மனுஷனையும் மடங்கடித்தான், அந்த எசிப்த்தியன் கையில் நெய்கிறவர்களின் படை மரக்கனத்தியான ஒரு ஈட்டியிருக்கக்கொள்ள இவனொரு தடியைப் பிடித்தவனாய் அவனண்டைக்கிறங்கிப்போய், அந்த ஈட்டியை எசிப்த்தியன் கையிலே பறித்து அவனை அவன் ஈட்டியினாலே கொன்றான்.

௨௪. இதுகளை யோயதாவின் குமாரனான பெனாயா செய்தபடியினாலே இந்த மூன்று பராக்கிரமக்காரருக்குள்ளே பேர்பெற்றவனாயிருந்தான்.

௨௫. இதோ முப்பது பேரிலும் அவனே கனம்பெற்றவன், ஆனாலும் அந்த மூன்று பேருக்கவன் சரியானவனல்ல, அவனைத் தாவீது தன்னரமனைச் சேர்வைக்காரனாக வைத்தான்.

௨௬. இராணுவத்திலிருந்த மற்ற பராக்கிரமக்காரராவது: யோவாவின் தம்பி ஆசகேல், பெத்லெகேமூரானான தோதோவின் குமாரனாகிய எல்க்கானான்.

௨௭. ஆரோரியனான சம்மோத், பெலோனியனான எலெஸ்,

௨௮. தெக்கோவியனான இக்கேஷின் குமாரன் ஈரா, ஆனதோத்தியனான அபியேசர்,

௨௯. உஷாத்தியனான சிபெக்காயி, அகோகியனான ஈலாயி,

௩௰. நெத்தோபாத்தியனான மகராயி, நெத்தோபாத்தியனான பானாவின் குமாரன் எலேத்,

௩௧. பென்யமீன் புத்திரரிலே கிபெயா ஊரானான ரிபாயின் குமாரன் இத்தாயி, பிரத்தோனியனான பெனாயா,

௩௨. காகாஸ் பள்ளத்தாக்கின் மனுஷனாகிய ஊராயி, அற்பாத்தியனான அபியேல்,

௩௩. பகரூமியனான அஸ்மாவேத், சால்போனியனான எலியாபா,

௩௪. கிசோனியனான ஆசேமின் குமாரர்: ஆராரியனான சாகேயின் குமாரன் யோனத்தான்,

௩௫. ஆராரியனான சாக்காரின் குமாரன் அகீயாம், ஊரின் குமாரன் எலிப்பால்,

௩௬. மெகெராத்தியனான யெப்பேர், பெலோனியனான அகியா,

௩௭. கற்மேலியனான எஸ்றே, எஸ்பாயின் குமாரன் நாராயி,

௩௮. நாத்தானின் சகோதரன் யோவேல், அகரீயின் குமாரன் மிப்கார்.

௩௯. அம்மோனியனான சேலேக், சேருயாளின் குமாரனாகிய யோவாபின் ஆயுதங்களைப் பிடிக்கிற பெரோத்தியனான நாகராய்,

௪௰. இத்தரியனாகிய ஈரா, இத்தரியனாகிய காரேப்,

௪௧. எத்தியனான ஊரியா, அக்லாயின் குமாரன் சாபாத்,

௪௨. ரூபேனியரின் தலைவனாகிய சீசாவின் குமாரன் அதினா என்ற ரூபேனியன், அவனண்டையிலே முப்பதுபேரிருந்தார்கள்,

௪௩. மாகாகின் குமாரன் ஆனான், மித்னியனான யோசபாத்,

௪௪. அஸ்தெரோத்தியனான ஊசியா, ஆரோவேரியனான ஓத்தாமின் குமாரர்: சமாவும், யேயேலும்,

௪௫. சிம்ரியின் குமாரன் யெதியாயேல், தித்சியனான அவன் சகோதரன் யோகா,

௪௬. மாகாவியரின் புத்திரனான எலியேல், எல்நாமின் குமாரர்: யெரிபாயும், யொசவியாவும், மோவாபியனான இத்மா,

௪௭. மெசோபாயா ஊராரான எலியேலும், ஓபேதும், யாசியேலுந்தானே.

## ௰௨. அதிகாரம்.

பின்னையுந் தாவீது சகோத்தாசைபண்ணின சேவகரின் விபரம்.

தாவீது கீசின் குமாரனாகிய சவுலினிமித்தியம் இன்னம் மறைவாயிருக்கையிலே, சிக்லாகிலிருக்கிற அவனண்டைக்கு வந்து,

௨. யுத்தத்துக்கொத்தாசைசெய்த வில்க்காறரும், கவண்டெறிகிறதுக்கும் வில்லினாலம்பெய்கிறதுக்கும் வலது இடது கைவாட்டமான பராக்கிரமசாலமான மற்ற மனுஷருமானவர்: சவுலின் சகோதரராகிய பென்யமீன் கோத்திரத்தில்,

௩. கிபெயா ஊராரான சேமாகின் குமாரராகிய அகியேசர் என்ற தலைவனும், யோவாசும், அஸ்மாவேத்தின் குமாரராகிய யெசியேலும் பெலேத்தும், பெராக்கா, ஆனதோத்தியனான யெகூ என்றவர்களும்,

௪. முப்பதுபேரில் பராக்கிரமனும் முப்பதுபேருக்குப் பெரியவனுமான இஸ்மாயா என்ற கிபெயோனியனும், யெரேமியா, யகாசியேல், யோகனான் கெதேரூரானான யோசபாத்,

௫. எலூசாயி, யெரிமோத், பாலியா, செமரியா, அரூப்பியனான செப்பத்தியா,

௬. எல்க்கானா, இஷியா, அசாரியேல், யோவேசெர், யசோபெயாம் என்ற கோராகியரும்,

௭. யோவேலா, செபதியா என்ற கேதோர் ஊராரான யெரோகாமின் குமாரருந்தானே.

௮. காதியரில் பரிசையும் ஈட்டியும் பிடித்து, சிங்கங்களின் முகங்களைப்போலொத்த முகப்பார்வையும் மலைகளிலிருக்கிற வெளிமான்களைப்போல வேகமுமாயிருந்து யுத்தத்துக்குச் சேவகரான பராக்கிரமக்காறர் சிலரும் வனாந்தரத்திலுள்ள அரணான இடத்திலிருக்கிற தாவீதுவசமாய்ச் சேர்ந்தார்கள்.

௯. ஆனெருவனே சேர் என்ற தலைவன், அவனுக்கு இரண்டாவது ஒபதியா, மூன்றாவது எலியாப்,

௰. நாலாவது மிஸ்மன்னா, ஐந்தாவது யெரேமியா,

௰௧. ஆறாவது அத்தாயி, ஏழாவது எலியேல்,

௰௨. எட்டாவது யோகனான், ஒன்பதாவது எல்சபாத்,

௰௩. பத்தாவது யெரேமியா, பதினோராவது மக்பன்னாயி.

௰௪. காத்புத்திரரான இவர்கள் ராணுவத்தலைவராயிருந்தார்கள், அவர்களில் சின்னவன் நூறு பேருக்கும் பெரியவன் ஆயிரம் பேருக்குஞ் சேர்வைக்காறராயிருந்தார்கள்.

௰௫. யோர்தான் தன் கரைகளின் மேலெல்லாம் பிரண்டுபோயிருக்கிற முதலாம் மாதத்திலே ஆற்றைக்கடந்து கிழக்கேயும் மேற்கேயும் பள்ளத்தாக்குகளிலிருக்கிற யாவரையுந் துரத்திவிட்டவர்கள், இவர்கள்தானே.

௰௬. பின்னையும் பென்யமீன் புத்திரரிலும் யூதபுத்திரரிலும் சிலர் அரணான ஸ்தலத்திலிருக்கிற தாவீதண்டைக்கு வந்தார்கள்.

௰௭. தாவீது புறப்பட்டு அவர்களுக்கு எதிர்க்கொண்டு அவர்களுக்குத்தரவு கொடுத்தது: நீங்கள் என்னைக் கொத்தாசை பண்ணச் சமாதானமாய் என்னண்டைக்கு வந்தீர்களானால், என் இருதயம் உங்களோடொன்றியிருக்கும், என் கைகளில் கொடுமையில்லாதிருக்கக்கொள்ளளவில் என்னைச் சத்துருக்களுக்குக் காட்டிக் கொடுக்க வந்தீர்களேயாகில், நம்முடைய பிதாக்களின் பராபரன் அதைப் பார்த்துக் கண்டிப்பாராகவென்றான்.

௰௮. அப்பொழுது முப்பது பேருக்குத் தலைவனான அமாசாயின் மேல் ஆவி இறங்கினதினால் அவன்: தாவீதே, நாங்கள் உம்முடையவர்கள், ஈசாயின் குமாரனே, உமது வசமாயிருப்போம், உமக்குச் சமாதானம் சமாதானம், உமக்குக் கொத்தாசை பண்ணுகிறவர்களுக்கும் சமாதானம், ஏனெனில் உம்முடைய பராபரன் உமக்கநுக்கிரகஞ் செய்கிறாரென்றான். அப்பொழுது தாவீது அவர்களைச் சேர்த்துக் கொண்டு, பிறபாடவர்களின் தண்டுத்தலைவருக்குள்ளே வைத்தான்.

௰௯. சவுலின் மேல் யுத்தம் பண்ணப் போகிற பெலிஸ்தருடனே கூடத் தாவீது வருகிறபோது மனாசேயிலும் சிலர் அவன் வசமாய்ச் சேர்ந்தார்கள், ஆனால் அவர்களுக்குதவியானதில்லை, ஏனெனில் பெலிஸ்தரின் பிரபுக்கள் யோசனை பண்ணி, அவன் நம்முடைய தலைகளுக்கு மோசமாய்த் தன் ஆண்டவனாகிய சவுலின் வசமாய்ப் போவானென்று அவனை அனுப்பிவிட்டார்கள்.

௨௰. அப்படியே அவன் சிக்லாகுக்குத் திரும்பிப் போகையில், மனாசேயில் அத்னாக், யோசபாத், யெதியாவேல், மிகாவேல், யோசபாத், எலிகூ, சில்லெத்தாயி என்கிற மனாசே கோத்திரத்தாரின் ஆயிரத்துச் சேனைக்காரர் அவன் வசமாய் வந்தார்கள்.

௨௧. இவர்கள் தாவீதுக்கு அந்தத் தண்டுக்கு விரோதமாய் ஒத்தாசை பண்ணினார்கள், ஏனெனில் அவர்களெல்லாம் பராக்கிரமக்காரரும் சேனுவத்தில் சேர்வைக்காரருமாயிருந்தார்கள்.

௨௨. அதேதென்றால் தாவீதின் பாளையம் பராபரனுடைய சேனையைப் போலப் பெருகுமட்டும் அக்காலத்திலே நாளுக்குநாள் அவனுக்குக் கொத்தாசை பண்ணும் மனுஷர் அவனண்டை வந்தார்கள்.

௨௩. கர்த்தருடைய வாக்கின்படியே சவுலின் ராச்சியபாரத்தைத் தாவீதண்டைக்குத் திருப்ப எபிரோனிலிருக்கிற அவனண்டைக்கு வந்த சேவகத்துக்காயுதம் அணிந்த தலைவரின் லெக்கங்களாவது:

௨௪. யூதபுத்திரரில் பரிசையும் ஈட்டியும் பிடித்துச் சேவகத்துக்காயுதம் அணிந்தவர்கள் ஆறாயிரத்தெண்ணூறுபேர்.

௨௫. சிமேயோன் புத்திரரில் சேவகத்துக்குப் பராக்கிரமமானவர்கள் ஏழாயிரத்தொருநூறுபேர்.

௨௬. லேவி புத்திரரில் நாலாயிரத்தறுநூறு பேரும்,

௨௭. ஆரோன் சந்ததியாரின் மூலியாளியாகிய யோயதாவும் அவனோடிருந்த மூவாயிரத்தெழுநூறுபேரும்,

௨௮. பராக்கிரமசாலியான சாதோக்கென்ற வாலிபனும் அவன் தகப்பன் வீட்டாரான இருபத்திரண்டு பிரபுக்களுந்தானே.

௨௯. பென்யமீன் புத்திரரான சவுலின் கோத்திரரில் மூவாயிரம்பேர்; ஏனெனில் அந்தமட்டுக்கும் அவர்களில் மிச்சமானவர்கள் சவுலின் வீட்டைக் காப்பாற்றப் பார்த்தார்கள்.

௩௰. எப்பிராயீம் புத்திரரில் தங்கள் பிதாக்களின் வீட்டாருக்குள்ளே பேர்போன மனுஷரான பராக்கிரமசாலிகள் இருபதினாயிரத்தெண்ணூறுபேர்.

௩௧. மனாசேயின் பாதிக்கோத்திரத்தில், தாவீதை இராசாவாக்குகிறதுக்கு வரப் பேர்பேராக் குறிக்கப்பட்டவர்கள் பதினெண்ணாயிரம்பேர்.

௩௨. இசக்கார் புத்திரரில் இஸ்ரவேல் செய்ய வேண்டியதென்னதென்றறிந்து காலங்களுக்குத்தக்க உணர்வுள்ளவர்களான அவர்களின் இருநூறு தலைவமாரும் இருநூறுபேரும் இவர்கள் வாக்குக்குச் செவிகொடுத்த இவர்களுடைய எல்லாச் சகோதரருந்தானே.

௩௩. செபுலோனில் சகலவித யுத்த ஆயுதங்களாலும் யுத்தஞ்செய்கிறதுக்கும் மனவருக்கமில்லாத வரிசையாய் நிற்கிறதுக்கும் பழகி, யுத்தத்துக்குப் போகத்தக்கவர்கள் ஐம்பதினாயிரம்பேர்.

௩௪. நப்தலியில் ஆயிரம் பிரபுக்களும், அவர்களோடே கூட இருந்த பரிசையும் ஈட்டியும் பிடித்த முப்பத்தேழாயிரம்பேர்.

௩௫. தாணியரில் யுத்தத்துக்காயத்தப்பட்டவர்கள் இருபத்தெண்ணாயிரத்தறுநூறுபேர்.

௩௬.

௩௬. ஆசேரில் யுத்தத்துக்காயத்தப்பட்டவர்களாய்ச் சேவகம்பண்ணப் போகத்தக்கவர்கள் நாற்பதினாயிரம்பேர்.

௩௭. யோர்தானுக்கக்கரையான ரூபேனியரிலுங் காதியரிலும் மனாசேயின் பாதிக்கோத்திரத்திலும் யுத்தம்பண்ணுஞ் சகலவித ஆயுதங்களையுந் தரித்தவர்கள் நூற்றிருபதினாயிரம்பேர்.

௩௮. தாவீதை இஸ்ரவேல் மேல் ராசாவாக்கிறதுக்கு இந்த யுத்த மனுஷரெல்லாம் அணி அணியாய் வைக்கப்பட்டவர்களாய் உத்தம இருதயத்தோடே எப்பிரோனுக்கு வந்தார்கள்; இஸ்ரவேலில் மற்ற அனைவருந் தாவீதை இராசாவாக்கிறதற்கொருமனப்பட்டிருந்தார்கள்.

௩௯. அவர்கள் அங்கே தாவீதோடே கூட மூன்று நாளிருந்து போசித்துக் குடித்தார்கள், ஏனெனில் அவர்கள் சகோதரர் அவர்களுக்காகச் சேகரம்பண்ணினார்கள்.

௪௰. இசக்காருக்கும் செபுலோனுக்கும் நப்தலிக்கும் எல்லை மட்டும் அவர்களுக்குச் சமீபமாயிருந்தவர்களுங் கழுதைகள் மேலும் ஒட்டகங்களின் மேலுங் கோவேறு கழுதைகள் மேலும் மாடுகள் மேலும் ஏற்றின திண்பண்டங்களாகிய மாவின் வறசங்களையும் அத்திப்பழ அடைகளையும் வற்றலான திராட்சிப்பழங்களையுந் திராட்சிப் பழரசத்தையும் எண்ணெயையும் ஆடுமாடுகளையும் மிகுதியாயேற்றிக்கொண்டுவந்தார்கள்; ஏனெனில் இஸ்ரவேலில் மகிழ்ச்சியுண்டாயிருந்தது.

## ௰௩. அதிகாரம்.

கீரியாத்யெயாரிமிலிருந்த உடன்படிக்கையின் பெட்டியைக் கொண்டுவந்து ஓபேதேதோமின் வீட்டிலே வைத்தது.

தாவீது ஆயிரத்துக்குச் சேர்வைக்காறரோடும் நூற்றுக்குச் சேர்வைக்காறரோடுஞ் சகல பிரபுக்களோடும் ஆலோசனைபண்ணி,

௨. இஸ்ரவேல் சபைக்கெல்லாஞ் சொன்னதாவது: உங்களுக்குச் சம்மதியும் நம்முடைய பராபரனாகிய கர்த்தருடைய சித்தமுமாயிருந்தால், இஸ்ரவேலின் தேசங்களெல்லாமிருக்கிற நம்முடைய மற்றச் சகோதரருக்கும் அவர்களோடே தங்கள் பேட்டைகளின் பட்டணங்களிலிருக்கிற ஆசாரியர்களுக்கும் லேவியருக்கும் நம்மோடேகூடும்படிக்கு நாலுதிக்கிலுமாக அவர்களண்டைக்கு ஆள்களை அனுப்பி,

௩. நம்முடைய பராபரனுடைய பெட்டியைத் திரும்ப நம்மண்டைக்குக் கொண்டுவருவோமாக, ஏனென்றால் சவுலுவின் நாட்களில் அதைத் தேடாதே போனோமென்றான்.

௪. அப்பொழுது சபையெல்லாம்: இப்படிச் செய்யவேணுமென்றார்கள், ஏனெனில் இந்தக் காரியஞ் சகல சனத்தின் பார்வைக்குஞ் செம்மையாயிருந்தது.

௫. அப்படியே பராபரனுடைய பெட்டியைக் கீரியாத்யெயாரிமிலிருந்து கொண்டுவர, தாவீது எகிப்த்துவினுடைய சீகோர் நதியைத் துவக்கி ஆமாத்தின் எல்லைமட்டுமுள்ள இஸ்ரவேலையெல்லாங் கூட்டி,

௬. கேருபீன்களின் நடுவே வாசம்பண்ணுகிற கர்த்தராகிய பராபரனுடைய நாமந் தொழுதுகொள்ளப்படுகிற அவருடைய பெட்டியை யூதாவிலிருக்கிற கீரியாத்யெயாரிமுக்கடுத்த பாலாவிலிருந்தேறிவரப்பண்ணும்படிக்கு, அவனும் இஸ்ரவேலனைத்துமாய் அவ்விடத்துக்கேறிப்போனார்கள்.

௭. அவர்கள் பராபரனுடைய பெட்டியை அபினதாபின் வீட்டிலிருந்தொரு புதுரதத்தின் மேலேற்றிக்கொண்டுவந்தார்கள், ஊசாவும் அகியோவும் ரதத்தை நடத்தினார்கள்.

௮. தாவீதுஞ் சகல இஸ்ரவேலும் எல்லாப் பெலத்தோடும் பராபரனுக்கு முன்பாகப் பாட்டுகளைப் பாடிச் சுரமண்டலங்களையுந் தம்புருக்களையும் மேளங்களையுங் கைத்தாளங்களையும் பூரிகைகளையும் மகிழ்ச்சியாய்ச் சேவித்துக்கொண்டிருந்தார்கள்.

௯. அவர்கள் கீதோனின் களமட்டும் வந்தபோதோவெனில், மாடுகள் இடறினபடியினாலே ஊசா பெட்டியைப் பிடிக்கத் தன் கையை நீட்டினான்.

௰. அப்பொழுது கர்த்தர் ஊசாவின் மேற்கோபமூண்டவராகி, அவன் தன் கையைப் பெட்டியண்டைக்கு நீட்டின நிமித்தியம் அவனையடித்தார், அவன் அங்கே பராபரனுக்கு முன்பாக மரித்தான்.

௰௧. அப்பொழுது கர்த்தர் ஊசாவை இடித்த இடிக்காகத் தாவீது மனஸ்தாபப்பட்டு, அந்தஸ்தலத்துக்கின்னாள் மட்டுமிருக்கிற ஊசாவின் இடியென்றுபேரிட்டு,

௰௨. அன்றையிற்றினம் பராபரனுக்குப் பயந்து: பராபரனுடைய பெட்டியை நானென்னண்டைக்குக் கொண்டுவருவதெப்படியென்று சொல்லி,

௰௩. பெட்டியைத் தன்னண்டைக்குத் தாவீதின் பட்டணத்திலே கொண்டுவராமல், அதைக் கேத்தியனாகிய ஓபேத்தேதோமின் வீட்டிலே சேர்த்தான்.

௰௪. ஆனால் பராபரனுடைய பெட்டி ஓபேத்தேதோமின் வீடாகிய அவனிடத்திலே மூன்றுமாதமிருக்கக் கொள்ள, கர்த்தர் ஓபேத்தேதோமின் வீட்டையும் அவனுக்குண்டான தெல்லாத்தையும் ஆசீர்வதித்தார்.

## ௰௪. அதிகாரம்.

தாவீதின் சம்பிரமமும் அவன் பெலிஸ்தருக்குச் செய்த்த செயங்களும்.

தீருவின் இராசாவாகிய ஈராம் தாவீதண்டைக்குத் தானாபதிகளையும், அவனுக்கொரு வீட்டைக் கட்டுகிறதற்குச் சித்துருமாங்களையுங் கற்றச்சரையுந் தச்சரையும் அனுப்பினான்.

௨. கர்த்தர் தன்னை இஸ்ரவேலின் மேலிராசாவாகத் திடப்படுத்தினாரென்பதைத் தாவீது கண்டறிந்தான், ஏனெனில் இஸ்ரவேலென்கிற அவருடைய சனத்தினிமித்தியம் அவனுடைய ராச்சியம் மிகவுமுயர்ந்தது.

௩. யெருசலேமிலே தாவீது பின்னையுஞ் சில ஸ்திரிகளை விவாகம்பண்ணி, இன்னங் குமாரரையுங் குமாரத்திகளையும் பெற்றான்.

௪. யெருசலேமிலே அவனுக்குப் பிறந்த குமாரரின் நாமங்களாவது: சம்மூவா, சோபாப், நாத்தான், சாலோமோன்,

௫. இப்கார், எலிசூவா, எல்பெலேத்,

௬. நோகா, நெபெக், யப்பியா,

௭. எலிஷாமா, பெலியாதா, எலிப்பெலேத் தென்பவர்கள்.

௮. தாவீது இஸ்ரவேலின் மேலெல்லாம் இராசாவாக அபிஷேகம்பண்ணப்பட்டதைப் பெலிஸ்தர் கேட்டபோதோவெனில், பெலிஸ்தரெல்லாரும் தாவீதைத் தேட ஏறிவந்தார்கள், அதைத் தாவீது கேட்கிறபோது அவர்களுக்கெதிராகப் புறப்பட்டான்.

௯. பெலிஸ்தரோவெனில் வந்து, ரெப்பாயிம் பள்ளத்தாக்கில் விசாலத்திலிறங்கினார்கள்.

௰. பெலிஸ்தரின் மேலே போயேறுவேனோ, அவர்களென்கையிலொப்புக்கொடுப்பீரோவென்று தாவீது பராபரனைக் கேட்டபோது, கர்த்தர் அவனுக்கு: ஏறு அவர்களையுன் கையிலொப்புக்கொடுப்போமென்றார்.

௰௧. அவர்கள் பால்பிராசீமுக்கேறி வந்தபோது தாவீது அங்கே அவர்களைமுறியடித்து: தண்ணீர்கள் வடிந்து போகிறப்போலே பராபரன் என்கையினாலே என் சத்துருக்களை வடிந்து போகப்பண்ணினாரென்றான். ஆகையதொட்டு அந்த ஸ்தலத்துக்குப் பால்பிராசீமென்று பேரிட்டார்கள்.

௰௨. அங்கே அவர்கள் தங்கள் தேவர்களைவிட்டோடினார்கள், அதுகளைத் தாவீது கற்பித்தபடி அக்கினியாலேசுட்டெரிக்கப்பட்டது.

௰௩. ஆனால் பெலிஸ்தர் மறுபடியும் அந்தப் பள்ளத்தாக்கின் விசாலத்திலே வந்திறங்கினார்கள்.

௰௪. அப்போது தாவீது திரும்பப் பராபரனைக் கேட்டதற்குப் பராபரன் அவனுக்கு: நீ அவர்களுக்குப் பின்னாலே ஏறிப்போகாமல், அவர்களுக்குப் பக்கமாய்ச் சுற்றி, முசுக்கட்டைச் செடிகளுக்கெதிரேயிருந்து அவர்கள்மேல்வந்து,

௰௫. முசுக்கட்டைச் செடிகளின் நுனிகளில் நடந்து வருகிற இரைச்சலை நீ கேட்கையில், அப்போது யுத்தத்துக்குப் புறப்படு; ஏனெனில் அப்போ பெலிஸ்தரின் பாளையத்தைமுறியடிக்கப் பராபரன் உனக்கு முன்னாகப் புறப்பட்டிருப்பாரென்றார்.

௰௬. பராபரன் தனக்குக் கற்பித்தபடியே தாவீது செய்கிறபோது பெலிஸ்தரின் ராணுவத்தைக் கிபெயோன் துவக்கி காசேர்மட்டும் முறியடித்தார்கள்.

௰௭. அப்படியே தாவீதின் கீர்த்தி சகல தேசங்களிலும் பிரசித்தமாகி, அவனுக்குப் பயப்படுகிற பயத்தைக் கர்த்தர் சகல சாதிகளின் பேரிலும் வரப்பண்ணினார்.

## ௰௫. அதிகாரம்.

உடம்படிக்கையின் பெட்டியை ஓபேத்தேதோமின் வீட்டிலிருந்து யெருசலேமிலே போட்டப்பட்ட கூடாரத்திலே கொண்டுவரப்பட்டது.

அவன் தனக்குத் தாவீதின் பட்டணத்தில் வீடுகளையுண்டாக்கி, பராபரனுடைய பெட்டிக்கொரு ஸ்தலத்தை யாயித்தப்படுத்தி அதின் மேலொரு கூடாரத்தை விரித்தான்.

௨.

௨. பிறபாடுதாவீது: லேவியரையே ஒழிய வேறொருத்தரும பராபரனுடைய பெட்டியை எடுக்கலாகாது, ஏனெனில பராபரனுடைய பெட்டியை எடுக்கவும என்றைக்கும அவருக்குப பணிவிடைசெய்யவும அவாகளைக கர்த்தர் தெரிந்துகொணடாரெனறான.

௩. அப்படியேதானசறதருடைய பெட்டிக்கு ஆயித்தபபடுத்தின ஆதினிலிருந்ததுக்கதைஎறிவாபபணண, தாவீது இஸ்றவேலயெல்லாம எருசலேமிலேகூட்டி,

௪. ஆறோனின புத்திரரையும,

௫. லேவியராகிய காகாத்புத்திரரில்பபிரபுவாகிய உளரியேலையும அவன சகோதராகிய நூறறிருபதுபேரையும,

௬. மேராரியின புத்திரரிலபிரபுவாகிய ஆசாரியாவையும, அவன சகோதராகிய இருநூறறிருபதுபேரையும,

௭. கெர்சோமபுத்திரரில்பபிரபுவாகிய யோவேலியும, அவன சகோதராகிய நூறறு முப்பதுபேரையும,

௮. எலிசாபபாமபுத்திரரிலேபிரபுவாகிய செமாயாவையும ஆவன சகோதராகிய இருநூறுபேரையும,

௯. எபிரோனபுத்திரரிலேபிரபுவாகியஎலியேலியும, அவன சகோதராகிய எண்பதுபேரையும,

௰. உளசியேல புத்திரரிலே பிரபுவாகிய அமமினதாபையும அவன சகோதராகிய நூறறுப் பனிரெணடுபேரையுந்தாவீதுகூடிவரப்பணணினான.

௰௧. பிறபாடுதாவீது ஆசாரியராகியசாதோக்கையும அபியத்தாரையும, லேவியராகிய உளரியேல, ஆசாயா, யோவேல, செமாய, எலியேல, அமமினதாபெனறவாகளையும அழைத்து,

௰௨. அவர்களுடனே: லேவியரில நீஙகளபிதாக்களுடைய சந்ததிகளின தலைவர், நீஙகள இஸ்றவேலின பராபரனாகிய கர்த்தரின பெட்டியை யதுக்குநான ஆயித்தம பணணின இஸ்தலத்துக்கேறிவாபபணண, உஙகளையும உஙகள சகோதரரையுமபரிசுத்தமபணணிககொளளுஙகோள.

௰௩. ஏனெனறால முந்த நீஙகள அதைச சுமக்காதபடியினாலுமநாமநமமுடைய பராபரனாகிய கர்த்தரை நியாயமானபடியே தேடாதேபோனபடியினாலுமஅவாநமககுளளே இடிக்குத்தலையுணடாக்கினாரெனறான.

௰௪. அப்படியே ஆசாரியர்களும லேவியர்களுமஇஸ்றவேலின பராபரனாகிய கர்த்தரின பெட்டியையேறிவரபபணணத் தஙகளைச சுத்தமபணணிககொணடார்கள.

௰௫. பிறபாடுலேவிபுத்திரர்கர்த்தருடைய வார்த்தையினபடியேமோசேகறபித்தபிறகாரமாகப்பராபரனுடைய பெட்டியை அதுகளிலிருக்கிற வாரைகளினாலே தஙகள தோளகளின மேலெடுத்தார்கள.

௰௬. தாவீது லேவியரின பிரபுககளுடனே: நீஙகளுஙகள சகோதரராகிய பாட்டகரை கீதவாத்தியஙகளாகிய தமபுருகளாலுஞ சுரமணடலஙகளைத்தாளஙகளாலுந் தஙகளசத்தத்தையுயர்த்திசசந்தோஷமுணடாகக கேட்கபபணணுமபடிக்குநிறுத்தவேணுமெனறுசொனனான.

௰௭. அப்படியே லேவியர் யோவேலினகுமாரனாகிய ஏமானையும, அவன சகோதரரில்பபேர்கியாவின குமாரனஆசாபபையும, மேராரியினபுத்திரரான தஙகள சகோதரரில் குஷாயாவின குமாரனஏத்தானையும,

௰௮. இவர்களோடுங்கூட இரணடாவது வரிசையாகத் தஙகள சகோதரராகிய சகரியா, பென, யாசியேல, செமிரமோத், எகியேல, உனனி, எலியாப், பெனாயா, மசெயா, மத்தித்தியா, எலிப்பெலேகு, மிக்கினேயா, ஓபேதேதோம, ஏயேலெனறவாகளைக்காப்பாளரை நிறுத்தினார்கள.

௰௯. பாட்டகராகிய ஏமானும ஆசாபபும ஏத்தானுமபளுசலோபக்கைத்தாளஙகளைத்தொனிக்கப்பணணிபாடினார்கள.

௨௰. சகரியா, ஆசியேல, செமிரமோத், எகியேல, உனனி, எலியாப், மாசெயா, பெனாயா, வெனறவர்களகீசசுக்குராலாய் பபாடித்தமபுருக்களை வாசித்தார்கள.

௨௰௧. அனறியுமமத்தித்தியா, எலிபேலேகு, மிக்கினேயர், ஓபேதேதோம, ஏயேல, அசசியாவெனறவர்களராகமபிடிக்கஎணணாமபு சுரமணடலஙகளைவாசித்தார்கள.

௨௰௨. லேவியரினபிரபுவாகிய கெனனியாலேவாவெனிலபபெட்டியைசசுமக்கிறவேலையைவிசாரித்து, அதைச சுமக்கும வித்தையைப போதிவித்தான, ஏனெனறால அவன உணர்வுளளவனாயிருந்தான.

௨௰௩. பெரகியாவும எல்கானாவும பெட்டிக்குமுனபாக்காவல்ககாத்துநடந்தார்கள.

௨௰௪. அனறியுமசேபனியா, யோஷபாத், நெத்



தானி

நானியேல், அமாசாயி, சகரியா, பெனாயா, எலியேசர் என்ற ஆசாரியர் பராபரனுடைய பெட்டிக்கு முன்பாகப் பூரிகைகளை ஊதினார்கள், ஓபேதேதோமும் எகியாவும் மோவெனில் பெட்டியின் பிறகே காவல்காத்து வந்தார்கள்.

௨௫. இப்படித் தாவீதும் இஸ்ரவேலின் மூப்பரும் ஆயிரத்துச் சேர்வைக்காரரும் கர்த்தருடைய உடன்படிக்கையின் பெட்டியை ஓபேதேதோமின் வீட்டிலிருந்து மகிழ்ச்சியோடே ஏற்றிவரப்பண்ணப்போனார்கள்.

௨௬. கர்த்தருடைய உடன்படிக்கையின் பெட்டியைச் சுமக்கிற லேவியருக்குப் பராபரன் அனுக்கிரகம் பண்ணுகிறபோதோவெனில், அவர்கள் ஏழு காளைகளையும் ஏழு ஆட்டுக்கிடாய்களையும் பலியிட்டார்கள்.

௨௭. தாவீதும் பெட்டியைச் சுமக்கிற எல்லா லேவியரும் பாட்டகர்களும் பாட்டகரின் வேலையை விசாரிக்கிற பிரபுவாகிய கெனனியாவும் மெல்லிய புடவையான சால்வைகளைத் தரித்திருந்தார்கள், தாவீது சணல்நூலான ஆசாரிய சால்வையையும் போர்த்துக்கொண்டிருந்தான்.

௨௮. அப்படியே இஸ்ரவேலனைத்தும் கர்த்தருடைய உடன்படிக்கையின் பெட்டியைக் கெம்பீரத்தோடும், எக்காளங்கள் பூரிகைகள் தாளங்களுடைய தொனிப்போடும், தம்புருகளையும் சுரமண்டலங்களையும் வாசிக்கிற சத்தத்தோடும் ஏற்றிவரப்பண்ணினார்கள்.

௨௯. கர்த்தருடைய உடன்படிக்கையின் பெட்டி தாவீதின் பட்டணமட்டும் வந்தபோதோவெனில், சவுலின் குமாரத்தியாகிய மீகாள் பலகணிவழியாய்ப் பார்த்து, தாவீது இராசா நடனம்பண்ணுகிறதையும் கீதவாத்தியம் பாடுகிறதையும் கண்டு, அவனைத் தன்னிருதயத்திலே அசட்டைபண்ணினாள்.

## ௰௬. அதிகாரம்.

தாவீது தேவஆராதனையையும் அதற்கடுத்த கீதவாத்தியத்தையும் திட்டம் பண்ணினது.

அவர்கள் பராபரனுடைய பெட்டியை உள்ளே கொண்டுவந்தபோது அவர்கள் அதைத் தாவீது அதுக்குப் போட்ட கூடாரத்தின் நடுவே வைத்து, பராபரனுடைய சந்நிதியில் சர்வாங்கத்தகனங்களையும் சமாதானப்பலிகளையும் செலுத்தினார்கள்.

௨. தாவீது சர்வாங்கத்தகனங்களையும் சமாதானப்பலிகளையும் செலுத்தித் தீர்ந்தபிறபாடு அவன் சனத்தைக் கர்த்தருடைய நாமத்திலே ஆசீர்வதித்து,

௩. புருஷனைத் துவக்கி ஸ்திரீகள்மட்டுக்கும் இஸ்ரவேலராகிய அவ்வனைவருக்கும் ஒவ்வொருவருக்கு ஒவ்வொரு பணியாரத்தையும் ஒவ்வொரு இறைச்சித்துண்டத்தையும் ஒவ்வொருபடி திராட்சப்பழரசத்தையும் பங்கிட்டான்.

௪. இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தரைப் பிரஸ்தாபம் பண்ணித் துதித்துப் புகழுகிறதுக்குக் கர்த்தருடைய பெட்டிக்கு முன்பாகச் சேவிக்கத்தக்க லேவியரில் சிலரை அவன் வைத்தான்.

௫. அவர்களில் ஆசாப் தலைவனும், சகரியா அவனுக்கு இரண்டாவதுமாயிருந்தான், யேயேல், செமிரமோத், எகியேல், மத்தித்தியா, எலியாப், பெனாயா, ஓபேதேதோம், ஏயெலென்றவர்கள் தம்புருகள் சுரமண்டலங்களென்ற கீதவாத்தியங்களையும், ஆசாப்போவெனில் கைத்தாளங்களையும் வாசிக்கவும்,

௬. பெனாயா யகாசியேலென்ற ஆசாரியர்கள் எப்போதும் பராபரனுடைய உடன்படிக்கையின் பெட்டிக்கு முன்பாகப் பூரிகைகளை ஊதவும் வைக்கப்பட்டார்கள்.

௭. அப்படித் துவக்கப்பட்ட அந்நாளிலேதானே தாவீது ஆசாபையும் அவன் சகோதரரையும் கொண்டு கர்த்தரைத் துதிக்கிறதுக்குச் சொல்விக்கப்பண்ணின சங்கீதமாவது:

௮. கர்த்தரைத் துதித்து அவர் நாமத்தைப் பிரஸ்தாபமாக்கி, அவர் செய்கைகளைச் சனசதளங்களுக்குள்ளே அறிவியுங்கோள்.

௯. அவரைப் பாடி, அவரைக் கீர்த்தனம்பண்ணி, அவருடைய அதிசெயங்களையெல்லாந் தியானியுங்கோள்,

௰. அவருடைய பரிசுத்த நாமத்தைப் பற்றி மேன்மைபாராட்டுங்கோள், கர்த்தரைத் தேடுகிறவர்களின் இருதயம் மகிழ்வதாக.

௰௧. கர்த்தருக்காகவும் அவர் வல்லமைக்காகவும் விசாரித்துக் கொண்டு, நித்தம் அவர் சமுகத்தைத் தேடுங்கோள்.

௰௨. அவருடைய தாசனாகிய இஸ்ரவேலின் வித்தானவர்களே, அவர் தெரிந்துகொண்டவர்களாகிய யாக்கோபின் புத்திரரே,

௰௩. அவர் செய்த அவருடைய அதிசெயங்களையும் அவருடைய அற்புதங்களையும் அவர் வாக்கின்

நியாய

நியாயத்தீர்ப்புகளையும் நினையுங்கோள்.

௰௪. அவரே நம்முடைய பராபரனாகிய கர்த்தர், பூமியெங்கும் அவருடைய நியாயத்தீர்ப்புகள் விளங்கும்.

௰௫. உனக்குக் கானான் தேசத்தை யுங்களுக்குச் சுதந்திரவீதமாகக் கொடுப்போமென்றவர் ஆபிறகாமோடே,

௰௬. இவர்கள் கொஞ்சத்தொகைக்குட்பட்டபேரும் அதில் பரதேசிகளுமாயிருக்கக்கொள்ள,

௰௭. பண்ணின அவருடைய உடன்படிக்கையும் ஈசாக்குக்கிட்ட ஆணையுமாகிய,

௰௮. அவருடைய ஏற்பாட்டையும், அவர் ஆயிரந்தலைமுறைக்குச் சட்டமிட்ட வார்த்தையையுமென்றைக்கும் நினையுங்கோள்;

௰௯. அதை யாக்கோபுக்குச் சட்டமாகவும் இஸ்றவேலுக்கு நித்திய உடன்படிக்கையாகவும் நிலைப்படுத்தினார்.

௨௰. அவர்கள் சாதிசாதிக்கும் ஒரு ராச்சியத்திலிருந்து மறுசனத்தண்டைக்கும் நடந்துபோனார்கள்.

௨௧. ஒருத்தரும் அவர்களை யொடுக்கவொட்டாதிருந்தார்.

௨௨. நாம் அபிஷேகம் பண்ணினவர்களை நீங்கள் தொடாமலும் நம்முடைய தீர்க்கதரிசிகளுக்குத் தீங்கு செய்யாமலுமிருங்கோளென்று அவர்கள் நிமித்தியமாக இராசாக்களைக் கடிந்து கொண்டார்.

௨௩. பூமியின் சகல குடிகளே, கர்த்தரைப் பாடி நாளுக்குநாள் அவருடைய ரட்சிப்பை சுவிசேஷமாயறிவியுங்கோள்.

௨௪. சாதிகளுக்குள் அவருடைய மகிமையையும் எல்லா சனசத்தளங்களுக்குள்ளும் அவருடைய அதிசெயங்களையும் விபரியுங்கோள்.

௨௫. ஏனெனில் கர்த்தர் பெரியவரும் மிகுதியாய்த் துதிக்கப்பட்டத்தக்கவருமெல்லாத் தேவர்களின்மேலும் பயங்கரமுமானவர்.

௨௬. ஏனென்றால் சனசத்தளங்களுடைய எல்லாத்தேவர்களும் மாய்கைதானே, கர்த்தரோ வானங்களையுண்டாக்கினார்.

௨௭. மகிமையும் பிறகாசமும் அவருக்குமுன்பாகவும் வல்லமையும் சந்தோஷமும் அவரிஸ்தலத்திலுமிருக்குது.

௨௮. சனசத்தளங்களின் வங்கிஷங்களே, கர்த்தருக்கு மகிமையையும் பெலனையுஞ் செலுத்துங்கோள்; கர்த்தருக்கதைச் செலுத்துங்கோள்.

௨௯. கர்த்தருக்கவருடைய நாமத்தின் மகிமையைச் செலுத்தி, காணிக்கைகளைக் கொண்டுவந்து, அவருக்குமுன்பாகச் சேருங்கோள், கர்த்தரைப் பரிசுத்த அலங்காரத்துடனே பணியுங்கோள்.

௩௰. பூமியின் சகல குடிகளே, அவருக்குமுன்பாக நடுங்குங்கோள்; அவர் பூச்சக்கரத்தை யசையாதபடிக்குறுதிப்படுத்துகிறவர்.

௩௧. வானங்கள் மகிழ்ந்து, பூமி பூரிப்பதாகக் கர்த்தர் இராசரிக்கம் பண்ணுகிறாரென்று சாதிகளுக்குள்ளே சொல்லப்படுவதாக.

௩௨. சமுத்திரமும் அதின் நிறைவும் முழங்கி, நாடும் அதிலுள்ளதனைத்துங் களிகூருவதாக.

௩௩. அப்போது கர்த்தருக்குமுன்பாகக் காட்டுமரங்களுங் கெம்பீரிக்கும், ஏனெனில் அவர் பூமியை நியாயந்தீர்க்கவருகிறார்.

௩௪. கர்த்தரைத் துதியுங்கோள், ஏனெனில் அவர் நல்லவர், ஏனென்றால் அவர் கிருபையென்றுமுள்ளது.

௩௫. எங்களை ரட்சிப்பின் பராபரனே, நாங்கள் உம்முடைய பரிசுத்த நாமத்தைப் போற்றி உம்மைத் துதிக்கிறதினாலே மேன்மை பாராட்டும்படிக்கு, எங்களை ரட்சித்து, எங்களைச் சேர்த்துக் கொண்டு, சாதிகளுக்கெங்களை நீங்கலாக்கியருளுமென்று சொல்லுங்கோள்.

௩௬. இஸ்றவேலின் பராபரனாகிய கர்த்தர் சதா காலங்கள் சதா காலங்களாக இஸ்தோத்தரிக்கப்பட்டவரென்பதுதானே; அதற்குச் சனமெல்லாம் ஆமனென்றுசொல்லிக் கர்த்தரைத் துதித்தது.

௩௭. பிறபாடு பெட்டிக்குமுன்பாக நித்தம் அன்றாடக [?] முறையாய்ச் சேவிக்கும்படிக்கவன் அங்கே கர்த்தருடைய உடன்படிக்கையின் பெட்டிக்குமுன்பாக ஆசாபையும் அவன் சகோதரரையும், ஒபேதேதோமையும் அவர்களுடைய சகோதரராகிய அறுபத்தெட்டுப்பேரையும் வைத்துவிட்டு,

௩௮. யெதித்தூனின் குமாரனாகிய இந்த ஒபேதேதோமையும் ஒசாவையும் வாசல்காக்கிறவர்களாக வைத்துவிட்டான்.

௩௯. ஆனால் கிபேயோனிலுள்ள மேட்டினமேலிருக்கிற கர்த்தருடைய கூடாரத்துக்குமுன்பாகவிருக்கிற சறுவாங்கதகனப்பெலிபீடத்தின் மேலே சறுவாங்கதகனங்களை நித்தம் அந்திசந்தி, கர்த்தர் இஸ்றவேலுக்குக் கற்பித்த நியாயப்பிரமாணத்தில் எழுதியிருக்கிறபடியெல்லாங்

கர்த்தருக்குச் செலுத்துவதற்காக,

௪௰. அங்கே அவன் ஆசாரியனாகிய சாதோக்கையும் அவன் சகோதரராகிய ஆசாரியர்களையும் வைத்து,

௪௧. இவர்களோடுங்கூட ஏமானையும் யெதுத்தூனையும், பேர்பேராகக் குறித்துத் தெரிந்துகொள்ளப்பட்ட மற்றச் சிலரையும்: கர்த்தருடைய கிருபை என்றுமுள்ளதென்று அவரைத் துதிக்கவும்,

௪௨. இவர்களிலிருக்கிற ஏமானையும் யெதுத்தூனையும், பூரிகைகளையுங் கைத்தாளங்களையும் பராபரனைப் பாடுகிற கீதவாத்தியங்களையுந் தொனிக்கப்பண்ணவும் வைத்து யெதுத்தூனின் குமாரரை வாசல் காக்கிறவர்களாகக் கட்டளையிட்டான்.

௪௩. பிற்பாடு சனமெல்லாம் அவரவர் தங்கள் வீட்டுக்குப் போனார்கள். தாவீது தன் வீட்டாரை ஆசீர்வதிக்கத் திரும்பினான்.

## ௧௭. அதிகாரம்.

தாவீது தேவாலயத்தைக் கட்ட மனசாயிருக்கிறபோது அவனுக்குப் பராபரனால் உண்டான வாக்குத்தத்தம்.

தாவீது தன் வீட்டிலே வாசமாயிருக்கிறபோதோவெனில், அவன் தீர்க்கதரிசியாகிய நாத்தானுடனே: இதோ, நான் கேதுருமர வீட்டிலே வாசம்பண்ணுகிறேன், கர்த்தருடைய உடம்படிக்கையின் பெட்டியோவென்றால் திரைகளின் கீழிருக்குதென்றான்.

௨. அப்போது நாத்தான் தாவீதுடனே: உம்முடைய இருதயத்திலிருக்கிறதையெல்லாஞ் செய்யும், ஏனெனில் பராபரனும்மோடிருக்கிறாரென்றான்.

௩. அன்று ராத்திரியிலே சம்பவித்ததேதென்றால் பராபரனுடைய வார்த்தை நாத்தானுக்குண்டாகி, அவர் சொன்னதாவது:

௪. நீ போய் நம்முடைய தாசனாகிய தாவீதுடனே சொல்லவேண்டியது: கர்த்தராகிற தேவனில், நாம் வாசமாயிருக்க நீ நமக்கு வீட்டைக் கட்டவேண்டாம்.

௫. ஏனெனில் நாம் இஸ்ரவேலை யேறிவரப்பண்ணின நாள் முதற்கொண்டு இந்நாள் வரைக்கும் நாமொரு வீட்டிலே வாசம்பண்ணாமல் கூடாரங் கூடாரமாகவும் வாசஸ்தலம் வாசஸ்தலமாகவும் நடந்தோம்.

௬. நாம் இஸ்ரவேலோடெல்லாம் உலாவி வந்த எவ்விடத்திலாகிலும், நாம் நம்முடைய சனத்தை மேய்க்கக் கற்பித்த இஸ்ரவேலின் நியாயாதிபதிகளில் ஒருத்தனோடாகிலும்: நீங்கள் நமக்குக் கேதுருமர வீட்டைக் கட்டாதிருக்கிறதென்னவென்று யாதொரு வார்த்தை சொன்னோமோ?

௭. இப்போதும் நீ நம்முடைய தாசனாகிய தாவீதுக்குச் சொல்லவேண்டியது: சேனைகளுடைய கர்த்தராகிற தேவனில், நீ நம்முடைய சனமாகிய இஸ்ரவேலின் மேல் அதிபதியாயிருக்க, நாம் ஆடுகள் பின்னாலே நடந்த உன்னை ஆட்டுமந்தையை விட்டெடுத்துக்கொண்டு,

௮. நீ போன இடமெல்லாம் உன்னோடேகூட விருந்து உன் பகைஞரையெல்லாம் உனக்கு முன்பாக நிர்மூலமாக்கி, பூமியிலிருக்கிற பெரியவர்களின் நாமத்துக்கொத்த நாமத்தையுனக்குண்டாக்கினோம்.

௯. நாம் நம்முடைய சனமாகிய இஸ்ரவேலுக்கொரு இடத்தைப் புறப்படுத்தி, அது தன் தானத்திலே குடியிருக்கவும், அது இனி அசையாமலும், முன்போலும் நாம் நம்முடைய சனமாகிய இஸ்ரவேலின் மேல் நியாயாதிபதிகளைக் கட்டளையிட்ட நாள் முதற்கொண்டு நடந்தது போலும் அக்கிரமப்புத்திரர் அதை இனிச் சிறுமைப்படுத்தாமலிருக்கவுமாக அதை நாட்டி,

௰. உன் பகைஞரையெல்லாந் தாழ்த்திப்போட்டோம். இப்போதுங் கர்த்தா உனக்கொரு வீட்டைக் கட்டுவாரென்கிறதையுனக்கறிவிக்கிறோம்.

௰௧. நீ உன் பிதாக்களிடத்திலே போக உன் நாட்கள் நிறைவேறின போது நான் உனக்குப் பிற்பாடு உன் புத்திரரில் ஒருத்தராகிய உன் வித்தையெழும்பப்பண்ணி, அவன் ராச்சியத்தைத் திடப்படுத்துவோம்.

௰௨. அவர் நமக்கு வீட்டைக் கட்டுவார், அவருடைய ஆசனத்தை என்றைக்கும் நிலைக்கப்பண்ணுவோம்.

௰௩. நாம் அவருக்குப் பிதாவாயிருப்போம், அவர் நமக்குக் குமாரனாயிருப்பார், நாம் உனக்கு முன்னிருந்தவனை விட்டு நம்முடைய கிருபையை விலக்கப்பண்ணினது போல அதை யவனைவிட்டு விலக்கப்பண்ணாமல்,

௰௪. அவனை நம்முடைய வீட்டிலும் நம்முடைய ராச்

சியத்

சியத்திலும் என்றென்றைக்கும் நிலைக்கப்பண்ணுவோம், அவனுடைய ஆசனமனை என்றென்றைக்கும் நிலைவரமாயிருக்குமென்று சொல்லென்றார்.

௰௫. நாத்தான் இந்தவல்லா வார்த்தைகளுக்கும் இந்தவல்லா தரிசனத்துக்குஞ் சரியாய் தாவீதுக்குச் சொன்னான்.

௰௬. அப்போது தாவீதுஇராசா உள்ப்பிரவேசித்து, கர்த்தருக்கு முன்பாகத் தரித்திருந்து சொன்னதாவது: பராபரனாகிய கர்த்தாவே, தேவரீர் என்னை இந்தமட்டுங் கொண்டுவந்ததுக்கு நான் எம்மாத்திரம்? என்னுடவீடும் எம்மாத்திரம்,

௰௭. பராபரனே, இது இன்னம் உம்முடைய பார்வைக்கு கொஞ்சக்காரியமாயிருக்குதென்று, பராபரனை கர்த்தராயிருக்கிறதேவரீர் உமதடியானுடைய வீட்டைக்குறித்து இதுக்குத்தூரமாயிருக்குங் காலத்துச்செய்தியையுஞ்சொல்லி, என்னை மகாமேன்மையான சந்ததியின் மனுஷனாகப் பார்த்தீர்.

௰௮. உமதடியானுக்குண்டாகுங் கனத்தைத் தொட்டு தாவீது அப்புறம் உம்மோடே சொல்வதென்ன, தேவரீர் உமதடியானை அறிவீர்.

௰௯. கர்த்தாவே, உமதடியானின் நிமித்தியமும் உம்முட இருதயத்தின் படியேயும் இந்தப்பெரியகாரியங்களையெல்லாம் அறியப்பண்ணும் படிக்கு இந்தப்பெரிய காரியத்தையெல்லாஞ் செய்தீர்.

௨௰. கர்த்தாவே, நாங்கள் எங்கள் காதுகளாலே க்கேட்டதெல்லாத்தின் படியேயுந் தேவரீரைப்போலொத்தவரில்லை, உம்மைத்தவிர வேறே தேவனுமில்லை.

௨௧. உம்முடசனமாகிய இஸ்றவேலைப்போலொத்தசனமும் ஏது, பூலோகத்தில் இந்தஒரேசாதியைப் பராபரனாகியதேவரீர் உமக்குச்சனமாக மீட்கப்போய, பயங்கரமான பெரியகாரியங்களினாலே உமக்கு கீர்த்தியையுண்டாக்கி, நீர் எசிப்த்துக்கு நீங்கலாக்கி மீட்ட உம்முட சனத்துக்கு முன்பாகச்சாதிகளைத்துரத்தி,

௨௨. உம்முடசனமாகிய இஸ்றவேலை என்றைக்கும் உம்முட சனமாயிருப்பதற்கதை நிலைப்படுத்தி, அவர்களுக்குக் கர்த்தராகிய தேவரீர் பராபரனானீரே.

௨௩. இப்போதும், கர்த்தாவே, தேவரீர் அடியேனையும் என் வீட்டையுங் குறித்து சசொன்ன வார்த்தை என்றென்றைக்கும் நிலைவரப்பட்டிருப்பதாக, தேவரீர் சொன்னபடியே செய்யும்.

௨௪. ஆம், அது நிலைவரப்பட்டிருக்கவும்: இஸ்றவேலின் பராபரனாகிய சேனைகளுடைய கர்த்தர் இஸ்றவேலுக்குப் பராபரனென்றும், உமதடியானாகிய தாவீதின் வீடு உமக்கு முன்பாக த்திடமானதென்றுஞ் சொல்லப்படுவதினாலே உம்முட நாமம் என்றைக்கும் மகிமைப்படவுங்கடவது.

௨௫. ஏனென்றால் உனக்கு வீட்டைக் கட்டுவோமென்று என் பராபரனாகிய தேவரீர் உமதடியானை செவிகேட்க வெளிப்படுத்தினீர், ஆகையால் உமக்குமுன்பாக விண்ணப்பப்பண்ண உமதடியானுக்கு மனத்தயிரியங்கிடைத்தது.

௨௬. இப்போதுங் கர்த்தாவே, தேவரீர் பராபரனானவர் தேவரீர் உமதடியானைக்குறித்து இந்தநல்விசேஷத்தைச்சொன்னீர்.

௨௭. இப்போதும் உமதடியானின் வீடு என்றைக்கும் உமக்கு முன்பாக இருக்கும்படிக்கு அதை ஆசீர்வதித்தருளினீர், கர்த்தாவாகியதேவரீர் அதை ஆசீர்வதித்தபடியினாலே அது என்றைக்கும் ஆசீர்வதிக்கப்பட்டிருக்குமென்றான்.

## ௰௮. அதிகாரம்.

தாவீதின் செயங்களும் அவன் பண்ணின இராச்சியபாரமும்.

இதுக்குப்பிறபாடு சம்பவித்ததென்னவென்றால், தாவீது பெலிஸ்தரை முறியடித்து அவர்களைக் கீழ்ப்படுத்திகாத்பட்டணத்தையும் அதின் கிறுமங்களையும் பெலிஸ்தரின் கையிலே வாங்கினான்.

௨. அவன் மோவாபியரையும் முறியடித்ததினாலே மோவாபியர் தாவீதைச்சேவித்து அவனுக்குக் காணிக்கைகளைச்செலுத்தினார்கள்.

௩. சோபாவின் இராசாவாகிய ஆதாரேசேர் ஐபிறாத்நதியண்டையில் தன் ராணுவத்தை நிறுத்தப்போகிறபோது, தாவீது அவனையும் ஆமாத்தினிட்ட முறியடித்தார்.

௪. அவனுக்கிருந்த ஆயிரம் ரதங்களையும் ஏழாயிரங் குதிரைக்காறரையும் இருபதினாயிரங் காலாளக்களையும் பிடித்து, ரதங்களில் நூறு ரதங்களை வைத்து மற்றதுகளையெல்லாம் முறித்துப்போட்டான்.

௫. சோபாவின் இராசாவாகிய ஆதாரேசேருக்கொத்தாசைபண்ண தமஸ்குவின் சூரியர் வந்

தார்கள்; ஆனால் தாவீது சூரியரில் இருபத்தீராயிரம்பேரை வெட்டிப்போட்டு,

௬. தமஸ்குவிலிருக்கிற சூரியாவிலே தாவீது தாணயம் வைத்தான், அப்படியே சூரியர் தாவீதைச் சேவித்து அவனுக்குக் காணிக்கைகளைச் செலுத்தினார்கள். தாவீது போன இடத்திலெல்லாங் கர்த்தர் அவனை ரட்சித்தார்.

௭. ஆதாரேசேரின் சேவகருக்கிருந்த பொற்பரிசைகளைத் தாவீது எடுத்து எருசலேமுக்குக் கொண்டுவந்தான்.

௮. ஆதாரேசேரின் பட்டணங்களாகிய திப்காத்திலுங் கூனிலுமிருந்து தாவீது வெகுதிரளான வெண்கலத்தையுமெடுத்துவந்தான், அதினாலே சாலொமோன் வெண்கலக்கடல் தொட்டியையுந் தூண்களையும் வெண்கலத் தட்டுமுட்டுகளையும் உண்டாக்கினான்.

௯. தாவீது சோபாவின் இராசாவாகிய ஆதாரேசேரின் ராணுவத்தையெல்லாம் முறியடித்த செய்தியை ஆமாத்தின் இராசாவாகிய தோகூ கேட்டபோது,

௰. அவன் தாவீது ராசாவின் சுகசெய்தியை விசாரிக்கவும், அவன் ஆதாரேசேரோடே யுத்தம்பண்ணி அவனை முறியடித்ததற்காக அவனுக்கு மினவுகிறவாறதையைச் சொல்லவும், தன் குமாரனாகிய அதோராமையும் பொன்னும் வெள்ளியும் வெண்கலமுமான சகலவித தட்டுமுட்டுகளையும் அவனண்டைக்கனுப்பினான், ஏனென்றால் ஆதாரேசேர் தோகூனோடே யுத்தங்களைப்பண்ணுகிற மனுஷனாயிருந்தான்.

௰௧. அந்தத் தட்டுமுட்டுகளையும், தான் ஏதோமியர் மோவாபியர் அம்மோன் புத்திரர் பெலிஸ்தர் அமலேக்கியரென்ற சகல சாதிகளின் கையிலும் வாங்கின வெள்ளியையும் பொன்னையுங்கூட தாவீது ராசா கர்த்தருக்குப் பரிசுத்தமாக்கினான்.

௰௨. செருயாளின் குமாரன் அபிசாயி உப்புப்பள்ளத்தாக்கிலே பதினெண்ணாயிரம் ஏதோமியரையும் முறியடித்தான்.

௰௩. ஆகையால் தாவீது ஏதோமிலே தாணயம் வைத்தான், ஏதோமியரெல்லாம் அவனைச் சேவிக்கிறவர்களானார்கள். தாவீது போன இடத்திலெல்லாங் கர்த்தர் அவனை ரட்சித்தார்.

௰௪. தாவீது இஸ்ரவேலையெல்லாம் ஆண்டு தன்னுடைய சனத்துக்கெல்லாம் நியாயமும் நீதியுஞ் செய்தான்.

௰௫. செருயாளின் குமாரன் யோவாப் ராணுவத்தலைவனாயிருந்தான், அகிலூதின் குமாரனாகிய யோசபாத் மந்திரியாயிருந்தான்.

௰௬. அகித்தூபின் குமாரன் சாதோக்கும் அபியத்தாரின் குமாரன் அபிமெலேக்கும் ஆசாரியராயிருந்தார்கள், சவுஷா சம்பிரதியாயிருந்தான்.

௰௭. யோயதாவின் குமாரன் பெனாயா கிரேத்தியருக்கும் பிலேத்தியருக்குந் தலைவனாயிருந்தான், ஆனால் தாவீதின் மூத்த குமாரர் இராசாவுக்குதவியாயிருந்தார்கள்.

## ௰௯. அதிகாரம்.

### தாவீது அம்மோனியரையுஞ் சூரியரையுஞ் செயித்தது.

இதுக்குப்பிறபாடு சம்பவித்ததேதெனில் அம்மோன் புத்திரரின் இராசாவாகிய நாகாஸ் மரித்து, அவன் குமாரன் அவனிஸ்தலத்தில் ராசாவானபோது,

௨. தாவீது: ஆனூனின் தகப்பனாகிய நாகாஸ் எனக்குத் தயவு செய்ததுபோலே நானவன் குமாரனாகிய இவனுக்குத் தயவு செய்வேனென்று சொல்லி, அவன் தகப்பனுக்காக அவனுக்கு ஆறுதல் சொல்லத் தானுபதிகளை அனுப்பினான். ஆனால் தாவீதின் ஊழியக்காரர் ஆனூனுக்கு ஆறுதல் சொல்ல அம்மோன் புத்திரரின் தேசத்திலே வந்தபோது,

௩. அம்மோன் புத்திரரின் பிரபுக்கள் ஆனூனுக்குச் சொன்னதாவது: தாவீது ஆறுதல் சொல்லுகிறவர்களையுமக்கனுப்பினதினாலே உம்முடைய தகப்பனைக் கனம்பண்ணுகிறதாய் உமக்குத் தோன்றுகுதோ? தேசத்தையாராயவும், அதைக் கீழ்ப்படுத்தவும் வேவுபார்க்கவுமல்லவோ அவனூழியக்காரர் உம்மண்டைக்கு வந்தார்கள்,

௪. அப்போது ஆனூன் தாவீதின் ஊழியக்காரரைப் பிடித்து அவர்களைச் சிரைத்து அவர்களுக்கிருந்த வஸ்திரங்களை இடுப்புமட்டும் வைத்துவிட்டு மற்றப்பாதியைக் கத்தரித்துப்போட்டு அவர்களையனுப்பிவிட்டான்.

௫. அந்த மனுஷர் வருகையில் அவர்கள் செய்தி தாவீதுக்கறிவிக்கப்பட்டது. அப்போதவன், அந்த மனுஷர் மிகவும் திஸ்காரம் பண்ணப்பட்டபடியினாலே அவர்களுக்கெதிராக ஆள்களையனுப்பி: உங்கள் தாடி முளைக்குமட்டும் நீங்

களையெரிகோவிலிருந்து பிறபாடு திரும்பிவாருங்கோளென்று இராசா சொல்லச்சொன்னான்.

௬. தாங்கள் தாவீதுக்கு நாற்றமெடுத்தவர்களானதை அம்மோன் புத்திரர் கண்டபோது, ஆனூனும் அம்மோன் புத்திரரும் மெசொப்பொத்தாமியாவிலும், மாக்கா, சோபா என்ற சூரியின் தேசத்திலுமிருந்து தங்களுக்கு இரதங்களுங் குதிரைக்காரருங் கூலிக்கு வரும்படிக்கு ஆயிரந் தாலந்து வெள்ளியை அனுப்பி,

௭. முப்பத்திரண்டாயிரம் இரதங்களையும் மாக்காவின் இராசாவையும் அவன் சனத்தையுங் கூலி பொருந்திக்கொண்டார்கள். இவர்கள் வந்து மெதெபாவுக்கு முன்புறத்திலே பாளயமிறங்கினார்கள், அம்மோன் புத்திரருந் தங்கள் பட்டணங்களிலிருந்து கூடிக்கொண்டு, யுத்தம்பண்ண வந்தார்கள்.

௮. அதைத் தாவீது கேட்டபோது யோவாபையும் பெலசாலிகளின் ராணுவமனைத்தையும் அனுப்பினான்.

௯. அம்மோன் புத்திரர் புறப்பட்டு, பட்டணத்தின் ஒலிமுகவாசலண்டையிலும், வந்த ராசாக்களோ வெளியிலே தனித்து வெளியிலும் போருக்காயித்தமாய் நின்றார்கள்.

௰. யுத்தமானது முகப்புக்கு முன்னும் பின்னுமிருக்கிறதை யோவாப் காண்கையில், அவன் இஸ்ரவேலிலே தெரிந்து கொள்ளப்பட்ட அனைவரிலுமொரு பங்கைப் பிரித்தெடுத்து தன்னைச் சூரியருக்கெதிராக நிறுத்தி,

௰௧. மற்றச்சனத்தை அம்மோன் புத்திரருக்கெதிராகப் போருக்காயித்தமாயிருக்கப் பண்ணி, தன் சகோதரனாகிய அபிசாயிக்கொப்புவித்துச் சொன்னதாவது:

௰௨. சூரியர் என்னிப்பார்க்கிலும் பெலத்தால் நீ எனக்கொத்தாசையாயிரு, அம்மோன் புத்திரர் உன்னிப்பார்க்கிலும் பெலத்தால் நான் உனக்கொத்தாசையாயிருப்பேன்.

௰௩. திடனாயிரு, நாம் நம்முடைய சனத்துக்காகவும் நம்முடைய பராபரனுடைய பட்டணங்களுக்காகவுந் திடன் கொண்டிருக்கக்கடவோம், கர்த்தர் தம்முடைய பார்வைக்கு நலமானதைச் செய்வாராக வென்று சொல்லி,

௰௪. யோவாபும் அவனோடிருந்த சனமுஞ் சூரியரோடு யுத்தம்பண்ணச் சேர்ந்தார்கள், அவர்கள் அவனுக்கு முன்பாக முறிந்தோடினார்கள்.

௰௫. சூரியர் முறிந்தோடுகிறதை அம்மோன் புத்திரர் கண்டபோது அவர்களும் அவன் சகோதரனாகிய அபிசாயிக்கு முன்பாக முறிந்தோடிப் பட்டணத்துக்குட் பட்டார்கள். யோவாப் திரும்ப எருசலேமுக்கு வந்தான்.

௰௬. தாங்கள் இஸ்ரவேலுக்கு முன்பாக முறியடிக்கப்பட்டதைச் சூரியர் கண்டபோதோ வெனில், அவர்கள் நதிக்கப்பாலிருக்கிற சூரியரை அழைத்தனுப்பிப் புறப்படுவப் பண்ணினார்கள், ஆதாரேசரின் படைத்தலைவனாகிய சோப்பாக் அவர்களுக்கு முன்னாலே நடந்தான்.

௰௭. அது தாவீதுக்கறிவிக்கப்பட்டபோது அவன் இஸ்ரவேலையெல்லாங் கூட்டிக்கொண்டு யோர்தானைக் கடந்து, அவர்களுக்குச் சமீபமாய் வந்தபோது அவர்களுக்கெதிராக ராணுக்கவின நிறுத்தினான்; தாவீது சூரியருக்கெதிராக ராணுக்கவின போருக்காயித்தமாயிருக்கப் பண்ணின பின் அவனோடு யுத்தம்பண்ணினார்கள்.

௰௮. ஆனாலுஞ் சூரியர் இஸ்ரவேலுக்கு முன்பாக முறிந்தோடினார்கள், தாவீது சூரியரில் ஏழாயிரம் இரதங்களின் மனுஷரையும் நாற்பதினாயிரங் காலாட்களையுங் கொன்று படைத்தலைவனாகிய சோப்பாக்கையும் மடிவித்தான்.

௰௯. தாங்கள் இஸ்ரவேலுக்கு முன்பாக முறியடிக்கப்பட்டதை ஆதாரேசரின் சேவகர் கண்டபோதோ வென்றால், அவர்கள் தாவீதோடே சமாதானம்பண்ணி அவனைச் சேவித்தார்கள், அப்புறம் அம்மோன் புத்திரருக்கொத்தாசை பண்ணச் சூரியர் மனதில்லாதிருந்தார்கள்.

## ௨௰. அதிகாரம்.

### தாவீது அம்மோனியரையும் பெலிஸ்தரையுஞ் செயித்தது.

மறுவருஷம் இராசாக்கள் யுத்தத்துக்குப் புறப்படுங்காலம் வந்தபோது, யோவாப் ராணுவப்பெலனைக் கூட்டிக்கொண்டு போய் அம்மோன் புத்திரரின் தேசத்தைப் பாழ்க்கடித்து வந்து ராபாவை முற்றிக்கைபோட்டான்; தாவீதோ வெனில் எருசலேமிலிருந்து விட்டான், யோவாப் ராபாவை இடறடித்துப்போட்டபோது,

௨. தாவீது வந்து அவர்கள் இராசாவுடைய தலையின் மேலிருந்த கிரீடத்தை யெடுத்துக் கொண்டான், அது ஒரு தாலந்து பொன்னிறையும், இரத்தினங்கள் பதித்ததுவுமாயிருந்தது, அது தாவீதின்

தலையிலே வைக்கப்பட்டது, பட்டணத்தின் கொள்ளையையும் வெகுவிஸ்தாரமாய் அதிலிருந்து கொண்டுபோனான்.

௩. ஆனால் அதிலிருந்த சனத்தையவன் வெளியே கொண்டுபோய், அவர்களை வாளறுக்கிற வேலைக்கும் இருப்புப்பாரைகளின் வேலைக்குங் கோடாலிகளின் வேலைக்கும் வைத்து, இப்படி அம்மோன் புத்திரரின் பட்டணங்களுக்கெல்லாந் தாவீது செய்து, எல்லாச்சனத்தோடுங்கூட யெருசலேமுக்குத் திரும்பினான்.

௪. அதற்குப்பிறபாடு காசேரிலே பெலிஸ்தரோடு யுத்தமுண்டாச்சுது, அப்போது உஷாத்தியனான சிபேக்காய் ராட்சதபுத்திரரிலொருத்தனான சிப்பாயியென்றவனை மடங்கடித்தான், அதினால் அவர்கள் தாழ்த்தப்பட்டார்கள்.

௫. திரும்ப பெலிஸ்தரோடு யுத்தமுண்டாகிறபோது, யாவீரின் குமாரனாகிய எல்கானான் காத்தூரானாகிய கோலியாத்தின் சகோதரனான லாகேமியை மடங்கடித்தான், அவனீட்டிப்படங்கு நெய்கிறவர்களின் படைமரத்தளவாயிருந்தது.

௬. மறுபடியுமொரு யுத்தங் காத்திலேயுண்டாகிறபோது, அங்கே உயர்ந்த ஒரு மனுஷனிருந்தான், அவனுக்கவ்வாறுவிரலாக இருபத்துநாலுவிரல்களிருந்தது, அவனும் ராட்சத சந்ததியாயிருந்து,

௭. இஸ்ரவேலை நிந்தித்தான், ஆனால் தாவீதின் சகோதரனாகிய சிமெயாவின் குமாரன் யோனத்தான் அவனை மடங்கடித்தான்.

௮. காத்தூரிலிருந்த ராட்சதனுக்குப்பிறந்த அவர்கள் தாவீதின் கையினாலும் அவன் சேவகரின் கையினாலும் மடிந்தார்கள்.

## ௨௧. அதிகாரம்.

சனத்தின் லெக்கத்தைப்பார்க்கச் சொன்ன தாவீதின் பெருமைக்காகக் கொள்ளையாக வந்தபெருவாரிக்காச்சலின் செய்தி.

சாத்தானென்றவன் இஸ்ரவேலுக்கு விரோதமாயெழும்பி, தாவீதை இஸ்ரவேலின் தொகையைப் பார்க்கிறதற்கேவிவிட்டது.

௨. அப்படியே தாவீது யோவாபுக்குஞ் சனத்தின் சேர்வைக்காறருக்கும் நீங்கள்போய் பெயேர்சேபா துவக்கித் தாண்மட்டுமிருக்கிற இஸ்ரவேலையெண்ணி, அவர்கள் லெக்கத்தை நானறியும்படிக்கென்னண்டைக்குக் கொண்டுவாருங்களென்றான்.

௩. அப்போது யோவாப் என்றவன்: கர்த்தருடைய சனமிருக்கிறதைப்பார்க்க அவரதை நூறத்தனையாய் வர்த்திக்கப்பண்ணுவாராக; ஆனால் இராசாவாகிய என்னுடையவனே, அவர்களெல்லாரும் என்னுடையவனின் சேவகரல்லவோ, என்னுடையவனிதை விசாரிப்பானேன், இஸ்ரவேலின்மேற்குற்றமுண்டாக இது நடக்கவேண்டியதென்னவென்றான்.

௪. ஆனால் யோவாப் அப்படிச்சொல்லியும் இராசாவின் வார்த்தையே மேல்வட்டமானபடியினாலே யோவாப் புறப்பட்டு இஸ்ரவேலெங்குஞ் சுற்றித்திரிந்து, யெருசலேமுக்கு வந்து,

௫. சனத்தை லெக்கம்பார்த்த தொகையைத் தாவீதுக்குக் கொடுத்தான். இஸ்ரவேலெல்லாம் பட்டயமுருவத்தக்கவர்கள் பதினொரு லெட்சம் பேரும், யூதாவிலே பட்டயமுருவத்தக்கவர்கள் நாலுலெட்சத்தெழுபதினாயிரம் பேருமாயிருந்தார்கள்.

௬. ஆனால் லேவிபென்யமீன் கோத்திரங்களிலுள்ளவர்களையவர்களுடே லெக்கத்துக்குள்ப்பட எண்ணாதே போனான், ஏனெனில் இராசாவின் வார்த்தை யோவாபுக்கருவருப்பாயிருந்தது.

௭. இந்தக்காரியம் பராபரனுடைய பார்வைக்கும் ஆகாததானபடியினாலே அவர் இஸ்ரவேலை வாதித்தார்.

௮. தாவீது பராபரனை நோக்கி: நானிந்தக்காரியத்தைச் செய்ததினாலே மிகவும் பாவஞ்செய்தேன், இப்போதும் உம்மடியானின் அக்கிரமத்தை நீக்கிப்போடுமேன், ஏனென்றால் வெகுபயித்தியமாய்ச் செய்தேனென்றான்.

௯. அப்போது கர்த்தர் தாவீதுக்கு ஞானதிஷ்டிபுருஷனாகிய காத்துடனே பேசி:

௰. நீ போய் தாவீதுக்குச் சொல்லவேண்டியதேதெனில்: மூன்றுகாரியங்களை நாம் உனக்கு முன்பாக வைக்கிறோம், அதுகளில் நாமுனக்குச் செய்ய ஒருகாரியத்தைத் தெரிந்துகொள்ளென்று கர்த்தருரைக்கிறாரென்று சொல்லென்றார்.

௰௧. அப்படியே காத்து தாவீதண்டைக்குவந்து அவனுக்குச் சொன்னதாவது: கர்த்தருரைக்கிறதேதெனில்,

௰௨. மூன்றுவருஷம் பஞ்சத்தையாகிலும், மூன்றுமாதம் உன் பகைஞரின் பட்டயம் உன்

னைத

வினத்தொடர்ந்துசேரநீயுன் சத்துருக்களுக்கு முன்பாக முறிந்துபோகுதலையாகிலும், மூன்று நாள் கர்த்தருடைய தூதன் இஸ்ரவேலுடைய எல்லையெங்குந்த அழிவுண்டாக்கும்படிக்குத் தேசத்திலுண்டாகுங் கர்த்தருடைய பட்டயத்தையென்கிலும் நேர்ந்துகொள்ளென்கிறார்; இப்போது மென்னையனுப்பினவருக்கு நானென்ன மறுஉத்தரவு கொண்டுபோகவேணுமென்கிறதைப் பாருமென்றான்.

௰௩. அப்போது தாவீது காத்துடனே: வெகு இடுக்கம் அடைந்திருக்கிறேன், இப்போது நான் கர்த்தரின் கையிலே விழுவேனாக, ஏனென்றால் அவருடைய இரக்கங்கள் மகாபெரியதுகள், மனுஷர் கையிலே விழாதிருப்பேனாகவென்றான்.

௰௪. ஆகையால் கர்த்தர் இஸ்ரவேலின்மேலே பெருவாரிக்காச்சலைக் கட்டளையிட்டார், அதினாலே இஸ்ரவேலில் எழுபதினாயிரம் பேர் மடிந்தார்கள்.

௰௫. யெருசலேமையும் அழிக்கப்பராபரன் தூதனையனுப்பினார், ஆனால் அவன் அழிக்கையிலே கர்த்தர்பார்த்து அந்தத் தீங்குக்கு மனஸ்தாபப்பட்டு அழிக்கிற தூதனுக்கு: போதும், இப்போது உன் கையை வாங்கிக்கொள்ளென்றார். கர்த்தருடைய அந்தத் தூதன் யெபூசியனாகிய ஒற்னானின் களத்தண்டையிலே நின்றான்.

௰௬. தாவீது தன் கண்களையேறெடுத்துப் பூமிக்கும் வானத்துக்கும் நடுவே நிற்கிற கர்த்தருடைய தூதனை யெருசலேமின்மேல் நீட்டின தன் கையிலுருவின தன்னுடைய பட்டயத்தைப் பிடித்தவனாகக் கண்டான். அப்போது தாவீதும் மூப்பானவர்களும் மொட்டுக்களைப்போர்த்தினவர்களாய் முகங்குப்புற விழுந்தார்கள்.

௰௭. தாவீது பராபரனுடனே: ஜனத்தையெண்ணச் சொன்னவன் நானல்லவோ? பாவஞ்செய்து பொல்லாப்பு நடப்பிக்கவேண்டப்பித்தவன் நான்தானே; இந்த ஆடுகள் செய்ததென்ன? என் பராபரனாகிய கர்த்தாவே, வாதைசெய்ய உம்முடைய கரம் உம்முடைய ஜனத்துக்கு அல்ல எனக்கும் என் தகப்பன் வீட்டுக்கும் விரோதமாயிருக்கட்டுமென்றான்.

௰௮. அப்போது யெபூசியனாகிய ஒற்னானின் களத்திலே கர்த்தருக்கொரு பலிபீடத்தையெடுப்பிக்கும்படிக்குத் தாவீது போயேறவேணுமென்கிறதைத் தாவீதுக்குச் சொல்லென்று, கர்த்தருடைய தூதன் காத்துக்குச் சொன்னான்.

௰௯. அப்படியே தாவீது கர்த்தரின் நாமத்திலே காத்துச்சொன்ன வார்த்தையின்படியே போயேறினான்.

௨௰. ஆனால் ஒற்னான் திரும்பிப்பார்த்து, அவனும் அவனோடிருக்கிற அவனுடைய நாலு குமாரரும் அந்தத் தேவ தூதனைக் கண்டு ஒளித்துக்கொண்டார்கள் ஒற்னானோவெனில் போரடித்துக்கொண்டிருந்தான்.

௨௧. தாவீது ஒற்னானண்டைக்கு வந்தபோது ஒற்னான் கவனித்துத் தாவீதைப் பார்க்கிறபோது, அவன் களத்திலிருந்து புறப்பட்டு, தரைமட்டும் முகங்குனிந்து தாவீதை வணங்கினான்.

௨௨. அப்போது தாவீது ஒற்னானுடனே: இந்தக் களத்தின் நிலத்திலே நான் கர்த்தருக்கொரு பலிபீடத்தைக் கட்டும்படிக்கதை யெனக்குக் கொடு, இந்தவாதை சனத்தைவிட்டு நிறுத்தப்படத்தக்கதைப் பெறுமதிவிலைக்குக் கொடுமென்றான்.

௨௩. அப்போது ஒற்னான் தாவீதுடனே: இராசாவாகிய என்னாண்டவன் அதை வாங்கிக்கொண்டு, தம்முடைய பார்வைக்கு நலமானபடி செய்வாராக; இதோ, சர்வாங்க தகனங்களுக்கு மாடுகளும், விறகுகளுக்குப் போரடிக்கிற உருளைகளுங் காணிக்கைக்குக் கோதுமையுமாகிய யாவையுங் கொடுக்கிறேனென்றான்.

௨௪. ஆனால் தாவீது இராசா ஒற்னானுக்கு: அப்படியல்ல நான் உன்னுடையதை இலவசமாய் வாங்கிக் கர்த்தருக்குச் சர்வாங்க தகனத்தைப் பலியிடாமல், அதைப்பெறுமதிவிலைக்கு வாங்கவே வாங்குவேனென்று சொல்லி,

௨௫. தாவீது அந்த நிலத்துக்கு அறுநூறு சேக்கல் நிறைபொன்னை ஒற்னானுக்குக் கொடுத்து,

௨௬. அங்கே கர்த்தருக்கொரு பலிபீடத்தைக் கட்டி, சர்வாங்க தகனங்களையுஞ் சமாதான பலிகளையுஞ் செலுத்தி, கர்த்தரை நோக்கிக் கூப்பிட்டான், அப்போதவர் வானத்திலிருந்து சர்வாங்க தகன பலிபீடத்தின் மேலிறங்கின அக்கினியினாலே அவனுக்கு மறுஉத்தரங் கொடுத்ததுமல்லாமல்,

௨௭. தேவ தூதன் தன்னுடைய பட்டயத்தை யதின் உறையிலே திரும்பப் போடவேணுமென்று கர்த்தர் அவனுக்குச் சொன்னார்.

௨௮. யெபூசியனாகிய ஒற்னானின் களத்திலே கர்த்தர் தனக்குத்தரவருளினதைத் தாவீது அக்காலத்திலே கண்டு அங்கேதானே பலியிட்டுவான்.

௨௯. ஏனென்றால் மோசே வனாந்தரத்திலே உண்டாக்கின கர்த்தருடைய வாசஸ்தலமுஞ் சர்வாங்கதகன பலிபீடமும் அக்காலத்திலே கிபேயோனின் மேட்டிலிருக்கக்கொள்ள,

௩௰. தாவீது அதின்முன்பாகப் போய்ப் பராபரனைத் தேடக் கூடாதிருந்தது, ஏனென்றால் கர்த்தருடைய தூதனின் பட்டயத்துக்குக் கலங்கியிருந்தான்.

## ௨௨. அதிகாரம்.

கட்டப்படப்போகிற தேவாலயத்துக்காகத் தாவீது பராமரிக்கை யாயிருந்தது.

அப்போது தாவீது: பராபரனாகிய கர்த்தருடைய வீடு இருக்கத்தக்க இஸ்தலமிதுதானே, இஸ்ரவேலுக்குச் சர்வாங்கதகன பலிபீடமிருக்கும் இஸ்தலமுமிதுதானே என்றான்.

௨. பிறபாடு தாவீது இஸ்ரவேல் தேசத்திலிருக்கிற அன்னியச்சாதியாரைக் கூட்டிக்கொள்ளச்சொல்லி, பராபரனுடைய வீட்டைக் கட்டுகிறதுக்கான கல்லுகளை வெட்டுங் கற்றச்சரை யேற்படுத்தினான்.

௩. தாவீது வாசல்களின் கதவுகளுக்கு வேண்டிய ஆணிகளுக்குங் கீல்களுக்கும் மிகுதியான இரும்பையும் நிறுத்து முடியாத திரளவெண்கலத்தையும்,

௪. எண்ணிமுடியாத கேதுருமரங்களையுஞ் சம்பாதித்தான், ஏனென்றால் சீதோனியருந் தீரியருந் தாவீதுக்குத் திரளான கேதுருமரங்களைக் கொண்டுவந்தார்கள்.

௫. ஏனென்றால் தாவீதென்றவன்: என்குமாரனாகிய சாலோமோன் வாலிபனும் இளந்தையுமாயிருக்கிறான், கர்த்தருக்குக் கட்டப்படும் வீடோவென்றால் சகல தேசங்களுக்குங் கீர்த்தியும் மகிமையும் விளங்கத்தக்கதாக மகாப்பெரியதாயிருக்கும், ஆகையால் அதுக்காச் சிலதைச் சம்பாதிப்பேனென்றுசொல்லி, தாவீது தன் மரணத்துக்குமுன்னே திரளாய்ச் சவதரித்து வைத்தது,

௬. தன்குமாரனாகிய சாலோமோனை யழைத்து, இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தருக்கு வீட்டைக் கட்டுகிறதுக்காக அவனுக்குக் கற்பித்தது,

௭. சாலோமோனுக்குச் சொன்னதாவது: என்குமாரனே, நான் என் பராபரனாகிய கர்த்தரின் நாமத்துக்கொருவீட்டைக் கட்டவெனக்கிருதயத்திலே நினைத்திருந்தேன்.

௮. ஆனால் கர்த்தருடைய வார்த்தை யெனக்குண்டாகி, அவர் சொன்னதாவது: நீ திரளான ரெத்தத்தைச் சிந்திப் பெரிய யுத்தங்களைப் பண்ணினாய், நீ நம்முடைய நாமத்துக்கு வீட்டைக் கட்ட வேண்டாம், ஏனெனில் நமக்குமுன்பாக வெகுரெத்தத்தைத் தரையிலே சிந்தப்பண்ணினாய்.

௯. இதோ, உனக்குப் பிறக்கப்போகிற குமாரன் இளைப்பாறுகிற புருஷனாயிருப்பான், ஏனெனில் சுற்றிலுமிருக்கும் அவன் சத்துருக்களை யெல்லாம் விலக்கி அவனுக் கிளைப்பாறுதலைக் கொடுப்போம், ஆகையால் அவன் பேர் சாலோமோனென்றிருக்கும், அவன் நாட்களில் இஸ்ரவேலின்மேல் சமாதானத்தையும் அமரிக்கையையுங் கட்டளையிடுவோம்.

௰. அவன் நம்முடைய நாமத்துக்கு வீட்டைக் கட்டுவான், அவன் நமக்குக் குமாரனாயிருப்பான், நாம் அவனுக்குப் பிதாவாயிருந்து அவன் இஸ்ரவேலின் ராச்சியபாரத்தின் ஆசனத்தை யென்றென்றைக்குந் திடப்படுத்துவோமென்றார்.

௰௧. இப்போதும் என்குமாரனே, நீ பாக்கியவானாயிருந்து, கர்த்தர் உன்னைக்குறித்துச் சொன்னபடியே உன் பராபரனாகிய கர்த்தரின் வீட்டைக் கட்டும்படிக்கவர் உன்னுடனே கூடவிருப்பாராக.

௰௨. கர்த்தர் உனக்கு விவேகத்தையும் உணர்வையுமே கட்டளையிட்டு, இஸ்ரவேலுக்காகவும் உன் பராபரனாகிய கர்த்தரின் நியாயப்பிரமாணத்தைக் கைக்கொள்வதற்காகவும் உனக்குக் கல்வியைக் கற்பிப்பாராக.

௰௩. கர்த்தர் இஸ்ரவேலுக்காக மோசேக்குக் கற்பித்த கட்டளைகளின்படியும் நியாயங்களின்படியுஞ் செய்ய நீ கவனமாயிருந்தால், அப்போது பாக்கியவானாயிருப்பாய். நீ திடன்கொண்டு பெலப்படு, பயப்படாமலுங் கலங்காமலுமிரு.

௰௪. இதோ, நான் என் சிறுமையிலே கர்த்தருடைய வீட்டுக்காக ஒருலெட்சந்தாலந்து பொன்னையும் பத்துலெட்சந்தாலந்து வெள்ளியையும் நிறுத்து முடியாத திரளான வெண்கலத்தையும் இரும்பையுஞ் சவதரித்து, மரங்களையுங் கல்லுகளையுஞ் சவதரித்து வைத்தேன், நீயின்னம் அதுகளுக்கதிகமாயச் சவதரிப்பாய்.

௰௫. வேலைசெய்யத்தக்க திரளசிற்பாசாரிகளுங் கற்றச்சருந் தச்சருமுள்ள தவேலைக்குமான சக

லவித

லவித்சால்திரிசளுமஉனனோடிருககிறூர்கள.

௰௬. பொனனுககுமவெளளிககும வெணக லததுககுமஇருமபுககுமலெககமிலலல, நீயெழு மபி,காரியததைநடபபி,கறதர்உனனணடையிலிரு ககிறூர்.

௰௭. தனகுமாரனுகியசாலொமொனுககொ ததாசைசெயயதாவீதுஇஸ்ருவேலின பிரபுககளெ லலாருககுமகறபிததுசசொனனதாவது:

௰௮. உஙகளபாராபரனுகியகறதர்உஙகளொ டிருநது,சுறறுபபுறததாரையடககி உஙகளுககி ளைபபாறுதலலைககொடுககவிலலையோ? ஏனெ னில் தேசததின குடிகளெயெனகையிலொபபுக கொடுததார்,கறதருககுமுனபாகவும அவருடைய ஜனததுககுமுனபாகவுந தேசங கீழ்ப்பட்டிருக குது.

௰௯. இபபொதுமநீஙகளுஙகள இருதயத தையுமுஙகளாததுமததையுமஉஙகள பாராபரனு கிய கறதரை தேடுகிறதற்குநேராககி,கறதரு டைய உடமபடிககையின பெட்டியையும பாரா பரனுடையபரிசுததபணிமுட்டுகளையுங கறத ருடையநாமததுககுககட்டபபடுமஅநதவீட்டுக குள்ககொணடுபோகுமபடிககுநீஙகளெழுமபி, பாராபரனுகியகறதரின பரிசுததஸ்தலததை கட டுஙகொளளுஙகள.

## ௨௩. அதிகாரம.

லெககமபார்ககபபட்ட லேவியருககு தாவீது திட்டமபணணின உததியோகஙகள.

தாவீதுகிழவனுகிபபரிபூரண வயதான போ துதனகுமாரனுகிய சாலொமொனை இஸ் ருவேலினமேலிராசாவாககி,

௨. இஸ்ருவேலின எலலா பபிரபுககளையும ஆசாரியரையுமலேவியரையுஙகூட்டிக கொண டான.

௩. அபபொது முபபதுவயது முதற்கொ ணடு அதறகுமேற்படடமானலேவியரெணணபப டடார்கள, அவர்களுடைய லெககந தலைககு ததலை யாகமுபபததெணணுயிரமபுருஷரானது.

௪. இவர்களில இருபததுநாலாயிரமபேர்கற தருடைய வீட்டின வேலையை விசாரிதது,ஆறு யிரம பேர்தலைவருமநியாயாதிபதிகளுமாயிரு நதது,

௫. நாலாயிரமபேர்வாசல்ககாககிறவர்களா யிருககவேணுமெனறுதாவீதுசொல்லி: துதிசெ யகிறதற்குநாம பணணிவிதத வாததிய முட்டுக ளாலநாலாயிரமபேரொ்கறதரை ததுதிககிறவர் களாயிருககவேணுமெனறுசசொலலி,

௬. அவர்களைலேவியின குமாரராகிய கெர் சோன,கேகாத், மெராரியெனறவர்களுடைய சந்ததிக ளினபடிபஙகுபபிரிததான.

௭. கெர்சோனியரில:லாதானும,சீமேயுமஇ ருநதார்கள.

௮. லாதானின குமாரர்:எகியேலெனறதலை சசன,சேததாம,யோவேலெனறமூனறுபேர்.

௯. சீமேயின குமாரர்:செலோமித்,ஆசீயேல, ஆரானெனறமூனறுபேர். இவர்கள லாதானவ ஙகிஷபிதாககளின தலைவராயிருநதார்கள.

௰. யாகாத்,சீனு, யேகூஸ், பெரீயாவெனற நாலுபேருமசீமேயின குமாரராயிருநதார்கள.

௰௧. யாகாத் தலைசசனுயிருநதான, சீனுஇர ணடாங குமாரனுயிருநதான, ஆனுல யேகூசுக குமபெரீயாவுககும அனேகங குமாரரிராதபடி யினுலேஅவர்களபிதாககளின வீட்டாரிலொரே வஙகிஷமாககெணணபபட்டார்கள.

௰௨. கேகாதின குமாரர்: அம்ராம, இசசே கார்,எபிரோம,ஊசியேலெனறநாலுபேர்.

௰௩. அம்ராமின குமாரர்:ஆரோன,மோசே எனறவர்கள. ஆனுல ஆரோனும அவனகுமார ருமபரிசுத்ததுககுபபரிசுததமான இஸ்தலத்தை யெனறைககும பரிசுததமாய் ககாககிறதற்கும எனறைககுங கறதருககுமுனபாகததூபங்காட் டுகிறதறகுமஅவரைசசேவிககிறதறகும அவர் நாமததிலேஆசீர்வாதஙகொடுககிறதறகுமபிரி ததுவைககபபட்டார்கள.

௰௪. பாராபரனுடையமனுஷனுகியமோசே யின குமாரரொலேவிகோததிரததாருககு ளெணணபபட்டார்கள.

௰௫. மோசேயின குமாரர்: கெர்சோம,எலீ யேசரெனறவர்கள.

௰௬. கெர்சோமின குமாரரிலசேபுவேலதலை சசனுயிருநதான.

௰௭. எலீயேசருடைய குமாரரில ரெகபீயா வெ னறஅவனகுமாரனதலைவனுனவன,எலீயேசரு ககுவேறேகுமாரரிருநததிலலை, ரெகபீயாவின குமாரரொவெனறுலமிகவுமபெருகினுர்கள.

௰௮. இசசேகாரின குமாரரிலே செலோமீத் தலைசசனுயிருநதான.

௰௯. எபிரோனின குமாரர்: யெரீயாவென றதலை

றதலைச்சனும், அமரீயா இரண்டாங்குமாரனும், யகாசீயேல் மூன்றாங்குமாரனும், யெக்காமாம் நாலாங்குமாரனுந்தானே.

௨௰. ஊசியேலின் குமாரர்: மீகா வென்ற தலைச்சனும் இசியா வென்ற இரண்டாங் குமாரனும்,

௨௧. மேராரியின் குமாரர்: மகேலி, மூசியென்றவர்கள். மகேலியின் குமாரர்: எலெயாசார், கீஸென்றவர்கள்.

௨௨. எலெயாசார் மரிக்கிறபோது அவனுக்குக் குமாரத்திகளல்லாமல் குமாரர் உண்டாயிருந்ததில்லை. இவர்களைக் கீசின் குமாரராகிய இவர்களுடைய சகோதரர் விவாகம்பண்ணினார்கள்.

௨௩. மூசியின் குமாரர்: மகேலி, யெதேர், எரேமோத்தென்ற மூன்றுபேர்.

௨௪. இவர்கள் தங்கள் பிதாக்களுடைய வீட்டாரின்படியே பிதாக்களின் தலைவராகிய லேவிபுத்திரர் பேர்களுடைய டாப்பின்படியே தலைதலையாக யெண்ணப்பட்ட இருபது வயதும் அதுக்குமேல் தத்தரமுமான அவர்களுடைய சந்ததியார் கர்த்தருடைய வீட்டுப்பணிவிடையைச்செய்பவர்கள்.

௨௫. என்னென்றால்: இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர் தமது சனத்தை இளைப்பாறப் பண்ணினார். அவர் என்றென்றைக்கும் யெருசலேமில் வாசம்பண்ணுவாரென்றும்,

௨௬. இனி லேவியர் வாசஸ்தலத்தையாகிலும் அதின் ஊழியத்துக்கடுத்த அதின் தட்டுமுட்டுகளிலெதையென்கிலுஞ் சுமக்கத்தேவையில்லையே யென்றும்,

௨௭. தாவீது அவர்களைக்குறித்துச் சொன்ன கடைசிவாற்றைகளின்படியே லேவிபுத்திரரில் தொகைக்குள் பட்டவர்கள் இருபது வயதும் அதுக்குமேல்தத்தரமுமானவர்கள் தானே.

௨௮. என்னென்றால் அவர்கள் ஆரோனுடைய குமாரரின் கீழ்க் கர்த்தருடைய வீட்டின் ஊழியமாயிருந்த பிரகாரங்களையும் அறைகளையும் சகலபரிசுத்த தட்டுமுட்டுகளின் சுத்திகரிப்பையும், பராபரனுடைய வீட்டு ஊழியத்தின் கிரிகையையும் விசாரிப்பதும்,

௨௯. சமுகத்தப்பங்களையும் காணிக்கைக்கு மெல்லியமாவையும் புளிப்பில்லா அதிரசங்களையுஞ் சட்டிகளிலே செய்கிறதையுஞ் சுடுகிறதையும், திட்டமான சகல கட்டளையையும் அளவையும் பராமரிப்பதும்,

௩௰. காலமேறும் அந்தப்படியே சாயங்காலந்தோறும் கர்த்தரைப்போற்றித் துதிக்கிறது, ஓய்வுநாள்களிலும் அமாவாசிகளிலும் பண்டிகைகளிலுங் கர்த்தருக்குச் சருவாங்கதகனங்களைச் செலுத்தப்படுகிற சகலவேளையிலும்,

௩௰௧. லெக்கத்துக்குள்ளான அவர்கள் தங்கள் நியாயத்தின்படியே எப்போதும் அந்தப்பிரகாரமாகச்செய்யக் கர்த்தருக்குமுன்பாகநிற்பதும்,

௩௰௨. ஆசரிப்புக்கூடாரத்தின் காவலையும் பரிசுத்தஸ்தலத்தின் காவலையுந் தங்கள் சகோதரராகிய ஆரோனுடைய குமாரரின் காவலையுங் காப்பதும், அவர்கள் கர்த்தருடைய வீட்டின் பணிவிடையாய்ச்செய்யும் உத்தியோகமாயிருக்கும்.

## ௨௪. அதிகாரம்.

ஆசாரியர் இருபத்துநாலு முறைவரிசைகளாகவகுக்கப்பட்டது.

ஆரோன் புத்திரரின் வகுப்புகளாவது: ஆரோனின் குமாரர் நாதாப், அபீகூ, எலெயாசார், இத்தாமார் என்றவர்கள்.

௨. ஆனால் நாதாபும் அபீகூவும் தங்கள் தகப்பனுக்குமுன்னே குமாரரில்லாமல் மரித்தபடியினாலே, எலெயாசாரும் இத்தாமாரும் ஆசாரிய ஊழியஞ்செய்தார்கள்.

௩. தாவீதும் எலெயாசாரின் புத்திரரில் சாதோக்கென்கிறவனும் இத்தாமாரின் புத்திரரில் அகிமேலேக்கென்கிறவனும் அவர்களை அவர்கள் ஊழியஞ்செய்யு முறைவரிசைகளாக வகுத்தார்கள்.

௪. அவர்களை வகுக்கிறபோது இத்தாமாரின் புத்திரரைப் பார்க்கிலும் எலெயாசாரின் புத்திரருக்குள்ளே அதிகமான தலைவராகிய புருஷர் காணப்பட்டபடியினாலே எலெயாசாரின் புத்திரரில் பதினாறுபேர் தங்கள் பிதாக்களுடைய வீட்டாருக்கும் இத்தாமாரின் புத்திரரில் எட்டுப்பேர் தங்கள் பிதாக்களுடைய வீட்டாருக்குந் தலைவராக வைக்கப்பட்டார்கள்.

௫. எலெயாசாரின் புத்திரரிலும் இத்தாமாரின் புத்திரரிலும் பரிசுத்தஸ்தலத்தையும் பராபரனையுஞ்சேவிக்கிறபிரபுக்களுண்டாயிருக்கும்படிக்கவர்களை இவர்களுக்கும் அவர்களுக்குஞ்சீட்டுகளைப்போட்டு வகுத்தார்கள்.

௬. லேவியரில் சம்பிரதியாகிய செமாயா வென்ற நெதனெயேலின் குமாரன் அவர்களை இரா

ராஜா

ராசாவுக்கும் பிரபுக்களுக்கும் ஆசாரியனாகிய சாதோக்குக்கும் அபியத்தாரின் குமாரனாகிய அகிமேலேக்குக்கும், ஆசாரியரும் லேவியருமான பிதாக்களின் தலைவருக்கும் முன்பாக வெழுதினான். ஒரு பிதாவின் வீட்டுச்சீட்டு எலெயாசாருக்காக வெடுக்கப்பட்டது, பிறகு அந்தப்படியே இத்தாமாருக்காகவும் எடுக்கப்பட்டது.

௭. முதலாஞ்சீட்டு யோயரிபின் பேர் வழிக்கும், இரண்டாவது யெதாயாவின் பேர் வழிக்கும்,

௮. மூன்றாவது ஆரீமின் பேர்வழிக்கும், நாலாவது செயோரீமின் பேர்வழிக்கும்,

௯. ஐந்தாவது மல்கீயாவின் பேர்வழிக்கும், ஆறாவது மியாமீனின் பேர்வழிக்கும்,

௰. ஏழாவது அக்கோத்சின் பேர் வழிக்கும், எட்டாவது அபியாவின் பேர்வழிக்கும்,

௰௧. ஒன்பதாவது எசுவாவின் பேர்வழிக்கும், பத்தாவது செக்கனீயாவின் பேர்வழிக்கும்,

௰௨. பதினோராவது எலியாசிபின் பேர்வழிக்கும், பன்னிரண்டாவது யாக்கீமின் பேர்வழிக்கும்,

௰௩. பதின்மூன்றாவது உப்பாவின் பேர்வழிக்கும், பதினாலாவது எசெபெயாவின் பேர்வழிக்கும்,

௰௪. பதினைந்தாவது பில்காவின் பேர்வழிக்கும், பதினாறாவது இம்மேரின் பேர்வழிக்கும்,

௰௫. பதினேழாவது எசீரின் பேர்வழிக்கும், பதினெட்டாவது அப்பித்சேசின் பேர்வழிக்கும்,

௰௬. பத்தொன்பதாவது பெத்தகீயாவின் பேர்வழிக்கும், இருபதாவது எசெக்கியேலின் பேர்வழிக்கும்,

௰௭. இருபத்தோராவது யாகினின் பேர்வழிக்கும், இருபத்திரண்டாவது காமூவேலின் பேர் வழிக்கும்,

௰௮. இருபத்துமூன்றாவது தெலாயாவின் பேர் வழிக்கும், இருபத்துநாலாவது மாசியாவின் பேர்வழிக்கும் பறப்பட்டது.

௰௯. இஸ்ரவேலின் பராபரனாகிய கற்த்தர் அவர்கள் தகப்பனாகிய ஆரோனுக்குக் கற்பித்தபடியே அவர்கள் அவனுடைக்கட்டளையின் பிறகாரமாகத் தங்கள் முறைவரிசைகளில் கற்த்தருடைய வீட்டுக்குள் பிறவேசிக்கும் அவர்களுடைய ஊழியத்துக்காகப் பண்ணப்பட்ட வகுப்புகள் இதுகள்தானே.

லேவியரில் சிலர் ஆசாரியருக்குதவியாக வைக்கப்பட்டது.

௨௰. லேவியின் மற்றப் புத்திரருக்குள்ளே இருக்கிற அம்ராமின் புத்திரரில் சூபவேலும், சூபவேலின் குமாரரில் யெகேதீயாவும்,

௨௧. ரெகெபீயாவின் குமாரரில் மூத்தவனாகிய இசியாவும்,

௨௨. இசேகாரியரில் செலேமோத்தும், செலேமோத்தின் குமாரரில் யாகாத்தும்,

௨௩. எபிரோனின் குமாரரில் மூத்தவனாகிய யெரியாவும், இரண்டாம் குமாரனாகிய அமரீயாவும், மூன்றாம் குமாரனாகிய யகாசியேலும், நாலாம் குமாரனாகிய எக்காமாமும்,

௨௪. ஊசீயேலின் புத்திரரில் மிகாவும், மிகாவின் குமாரரில் சாமீரும்,

௨௫. மிகாவின் சகோதரனாகிய இசியாவும், இசியாவின் குமாரரில் சகரீயாவும்,

௨௬. மெராரியின் குமாரராகிய மாகேலி, மூசி என்றவர்களும்,

௨௭. மெராரியின் குமாரனாகிய யாசீயாவின் குமாரரான சோகாம், சக்கூர், இபரீ என்றவர்களும்,

௨௮. மகேலியின் புத்திரரில் குமாரரில்லாத எலெயாசாரும்,

௨௯. கீசின் புத்திரரிலே யெனறமேயேலும்,

௩௰. மூசியின் குமாரரான மகேலி, யெதேர், யெரிமோத் என்றவர்களுமாகிய இவர்கள் தங்கள் பிதாக்களுடைய வீடுகளின்படியே லேவியரின் புத்திரரானவர்கள்.

௩௧. இவர்களும் இராசாவாகிய தாவீதுக்கும் சாதோக்குக்கும் அகிமேலேக்குக்கும் ஆசாரியரிலும் லேவியரிலும் பிதாக்களாயிருக்கிற தலைவருக்கும் முன்பாக, தங்கள் சகோதரராகிய ஆரோனின் புத்திரர் செய்ததுபோலே, தங்களிலிருக்கிற பிதாக்களான தலைவருக்கும் அவர்களுடைய சிறிய சகோதரருக்கும் சரிசமானமாய்ச் சீட்டுகளைப் போட்டுக்கொண்டார்கள்.

௨௫. அதிகாரம்.

பரிசுத்தப்பாடகர் இருபத்துநாலு முறைவரிசைகளாக வகுக்கப்பட்டது.

பின்னையும் சேனைமண்டலங்களாலுந் தம்புருக்களாலுங் கைத்தாளங்களாலுந் தீர்க்கதெரி



சனஞ்

சனனு சொலலுகிற ஆசாப், யேமான, யெதுததூன என்றவர்களின குமாரரிலசிலரை தாவீதுஞ்சேவிநகளினபிரபுககளுமஊழியததுககெனறுபிரிததுவைததார்கள, தஙகளஊழியததினகிரிகைககுககுறிததுவைககபபடட மனுஷர்களினலெககம.

௨. ஆசெனறுலஇராசாவுடைய கடடளைபபிறமாணமாய்ததீர்கக தரிசனஞ சொலலுகிறஆசாபபின வசததிலிருகக ஆசாபபின குமாரரில சககூர், யோசேப், நெத்தானியா, அஷரேலாவெனறவர்களையும,

௩. கறததரைப்போறறித்துதிதது தீர்ககதரிசனஞ சொலலுகிறதஙகள தகபபனாகிய யெதுததூனினவசததிலேசுரமணடலஙகளைவாசிககயெதுத்தூனின குமாரராகிய கெதலியா, செரீ, யெசாயா, அஷாபியா, மததிததியாவெனறஆறுபேரையும,

௪. கொமபைததொனிககபபணண, பாரபரனுடவாறதைகளில இராசாவுககுஞான திஷடடிபபருஷனாகியஏமானினகுமாரரான புககீயா, மததனீயா, ஊசியேல, செபுவேல, யெரிமோத், அனனீயா, அனானி, எலியாறறு, கிததலதி, ரோமநதியேசர், யோஸபெகாஷா, மலோததி, ஒததிர், மகாசியோத்எனறவர்களையுநதானே.

௫. இவர்களெலலாரும ஏமானின குமாரராயிருநதார்கள, ஏனெனில்பபாரபரனஏமானுககுப்பதினாலுகுமாரரையும மூனறு குமாரததிகளையுஙகொடுததிருநதார்.

௬. இவர்களனைவரும்இராசாவுடைய கடடளைப்பிறமாணமாய கரததருடைய வீடடிலததாளஙகளதமபுருகள சுரமணடலஙகளுடைய கீதவாததியஞசெயய, பாரபரனுடையவீடடுஊழியமாக அவரவர்தஙகளதஙகளதகபபனாகியஆசாப், யெதுததூன, ஏமானஎனறவர்களவசததிலிருநதார்கள.

௭. கறததரைபபாடுமபாடடுகளைககறறுககொணடுஅனைவரும அறிவுளளவர்களான தஙகளசகோதரரோடுஙகூடஅவர்களலெககததுஇருநூறறெணபததெடடு பேராயிருநதார்கள.

௮. அவர்களசினனவனுமபெரியவனுஙகறறுககொடுககிறவனுஙகறறுககொளளுகிறவனுஞசரிசமானமாயமுறைவரிசைககாக சீடடுகளைபபோடடுககொணடார்கள.

௯. முதலாஞசீடடுஆசாப்வசமான யோசேபபினபேர்வழிககும, இரணடாவதுகெதலியா, அவனசகோதரர், அவனகுமாரர்எனறபனிரெணடுபேர்வழிககும,

௰. மூனறுவதுசககூர், அவனகுமாரர்அவனசகோதரரெனறபனிரெணடுபோவழிககும,

௰௧. நாலாவதுஇஸரீ, அவனகுமாரர்அவனசகோதரரெனறபனிரெணடுபேர்வழிககும,

௰௨. ஐநதாவதுநெததனீயா, அவனகுமாரர் அவனசகோதரரெனறபனிரெணடுபேர்வழிககும,

௰௩. ஆறுவதுபுககீயா, அவனகுமாரர்அவனசகோதரரெனறபனிரெணடுபேர்வழிககும,

௰௪. ஏழாவதுஎசரேலா, அவனகுமாரர் அவனசகோதரரெனறபனிரெணடுபோவழிககும

௰௫. எடடாவது யெசாயா, அவன குமாரர் அவனசகோதரரெனற பனிரெணடுபேர்வழிககும,

௰௬. ஒனபதாவது மததனீயா, அவன குமாரர் அவனசகோதரரெனற பனிரெணடுபேர்வழிககும,

௰௭. பததாவதுசீமேயா, அவனகுமாரர் அவனசகோதரரெனறபனிரெணடுபேர்வழிககும,

௰௮. பதினோராவது அசாரேயல, அவனகுமாரர் அவன சகோதரரெனற பனிரெணடு பேர்வழிககும,

௰௯. பனிரெணடாவது அஷாபியா, அவனகுமாரர் அவனசகோதரரெனறபனிரெணடுபேர்வழிககும,

௨௰. பதிமூனறுவது சுபவேல, அவனகுமாரர் அவன சகோதரரெனற பனிரெணடு பேர்வழிககும,

௨௧. பதினாலாவது மததிததியா, அவனகுமாரர் அவன சகோதரரெனற பனிரெணடு பேர்வழிககும,

௨௨. பதினைநதாவது யெரேமோத், அவன குமாரர் அவன சகோதரரெனற பனிரெணடு பேர்வழிககும,

௨௩. பதினாறுவது அனனீயா, அவனகுமாரர் அவனசகோதரரெனற பனிரெணடு பேர்வழிககும,

௨௪. பதினேழாவது யோஸபெகாஷா, அவனகுமாரர் அவன சகோதரரெனறபனிரெணடுபேர்வழிககும,

௨௫. பதினெடடாவது அனானி, அவனகுமாரர் அவன சகோதரரெனறபனிரெணடுபேர்வழிககும,

௨௬.

உசு. பததொன்பதாவதுமலலோததி,அவன குமாரர் அவன சகோதரரொனற பனிரெணடுபேர்வழிககும,

உஎ. இருபதாவதுஎலியாறறு,அவனகுமாரர்அவனசகோதரரொனறபனிரெணடுபேர்வழிககும,

உஅ. இருபதேதாராவதுஒததீர்,அவனகுமாரர் அவனசகோதரரொனறபனிரெணடு பேர்வழிககும,

உகூ. இருபததிரணடாவதுகிதலதி,அவன குமாரர் அவன சகோதரரொனற பனிரெணடு பேர்வழிககும,

ஙய. இருபததுமூனறுவது,மகாசியோத்அவனகுமாரர் அவன சகோதரரொனற பனிரெணடுபேர்வழிககும,

ஙக. இருபததுநாலாவதுரொமந்தியேசர்,அவனகுமாரர் அவனசகோதரரொனறபனிரெணடுபேர்வழிககுமபுறபபடடது.

## உசு. அதிகாரம.

வாசலககாபபாருந தேவாலய உககிருணக காறருஞ சிலமணியககாறரும நியாயாதிப திகளுமவை ககபபடடது.

வாசலககாககிறவர்களினவகுபபுகளாவது: கோராகியர்சநததியானஆசாபின புததிரரிலேகோரேயினகுமாரனமெஷெலெமீயா வெனறவன.

உ. மெஷெலெமீயாவினகுமாரர்: மூததவனாகியசகரீயாவும,

ங. யெதீயாவேல, செபதீயா, யத்னீயேல, யேலாம,யோகனான,எலியோனாயெனற இரணடாமமூனறுமநாலாம ஐநதாம ஆறும ஏழாஙகுமாரரும,

ச. ஓபேதேதோமினகுமாரர்:மூததவனாகிய சேமாயாவும,

ரு. யோசபாத், யோவாக,சாககார்,நெததானெயேல, அம்மியேல, யீசககார், பெயுள்தாயி யெனற இரணடாம மூனறும நாலாம ஐநதாமஆறும ஏழாமெடடாஙகுமாரருநதானே; ஏனென றால்பபராபரன அவனையாசீர்வதிததிருநதார்.

சு. அவன குமாரனாகிய சேமாயாவுககுங்குமாரர்பிறநது,தஙகளதகபபனவீடடாரையாணடார்கள்;ஏனெனில்பயராககிறமசாலிகளாயிருநதார்கள்.

எ. சேமாயாவுககிருநதகுமாரர்:ஒத்னீயுமபெலசாலிகளாகியரெபபவேல, ஓபேத், எல்சாபாத் எனறஅவனசகோதரரும,எலிகூவும, செமகீயாவுநதானே.

அ. ஓபேதேதோமினபுததிரருமஅவர்களகுமாரருமஅவாகளசகோதரருமாகிய ஊழியததுககுபபெலததபராககிறமமான அவர்களெலலாமஅறுபததிரணடுபேர்.

கூ. மெஷெலெமீயாவினகுமாரருஞசகோதரருமான பராககிறமர்பதினெடடுபேர்.

ய. மெராரியினபுததிரரிலஓசாவெனறவனுடையகுமாரராவது:சிம்றீஎனறதலைவன,இவன மூததவனாயிராவிடடாலுமஅவனதகபபன அவனைததலைவனாகவைததான.

யக. இல்கியா, தெபலியா,சகரீயாவெனற இரணடாமமூனறுமநாலாஙகுமாரரான வர்கள ஓசாவினகுமாரருஞசகோதரருமெலலாமபதிமூனறுபேர்.

யஉ. காவலககாறரானதலைவரினகீழ் தஙகளசகோதரருககொததமுறையாயககறததருடையவீடடிலவாசலககாககிறவர்களாய் சேவிகக இவர்களவகுககபபடடு,

யங. தஙகளபிதாககளின வீடடாராகியசிறியவர்களுமபெரியவர்களுமாய, இனன வாசலுககினனாரெனறு சீடடுகளைபபோடடு கொணடார்கள்.

யச. கிழ்பபுறததுககு செலேமியாவுககுச சீடடுவிழுநதது;விவேககமுளளயோசனைககாறனாகியசகரீயாவெனறஅவனகுமாரனுககுசசீடடைபபோடடபோதுபுறபபடடஅவனசீடடுவடபுறததுககெனறிருநதது.

யரு. ஓபேதேதோமுககு தெறகுபுறததுககும,அவனகுமாரருககுததறமபணடஙகளசேருகிற வீடடுககும,

யசு. சுபபீமுககுமஓசாவுககுமமண போடடுஉசததபபடடவழியுஙகாவலுககெதிரேகாவலுமிருககிறமேறபுறமானவாசலுககுஞசீடடு விழுநதது.

யஎ. கிழககேலேவியரானஆறுபேருமவடககேபகலமாறுநாலுபேருநதெறகேபகல மாறுநாலுபேருநதறமருசேருமவீடடணடையிலரெணடுபேரும,

யஅ. வெளிபபுறமானவாசலணடையிலமேறகேயிருககிறஉயர்நதவழிககு நாலுபேரும,வெளிபபுறமானவழியில்இரணடுபேருமிருபபயர்கள.



யகூ.

௰௯. கோராகின புததிரருககுளளுமமோராரியின புததிரருககுளளுமவாசலககாககிறவர்களின வகுபபுகளிவைகளதானே.

௨௰. மறறலேவியரில அகியா வெனறவன பராபரனுடையவீடடுபபொககிஷஙகளையுமபரிசுததம பணணபபடடபபொருளகளின பொககிஷஙகளையுமவிசாரிககிறவனாயிருநதான.

௨௰௧. லாதானின குமாரர் ஆரொனறால: கேர்சோனியனான அவனுடைய குமாரராகிய பிதாககளின தலைவராயிருநதவர்கள யெகியேலியும,

௨௰௨. யெகியேலியின குமாரராகிய சேததாமும அவன சகோதரனாகிய யோவேலுங கறததருடைய வீடடுப்பொககிஷஙகளை விசாரிககிறவர்களுமாயிருநதார்கள.

௨௰௩. அம்ராமீயரிலும இசசேகாரியரிலும எபிரோனியரிலும ஊசியேரியரிலுஞசிலர் அபபடதானே.

௨௰௪. மோசேயின குமாரனாகிய கெர்சோமின சநததியான செபூவேலபொககிஷஙகளின மேலே பிரதானியாயிருநதான.

௨௰௫. எலியேசரைத தொடடு அவனுககிருநத சகோதரரானவர்கள இவனுடைய குமாரனாகிய ரெகபியாவும இவனுடைய குமாரனாகிய யெசாயாவும, இவன குமாரனயோராமும, இவன குமாரன சிககிரீயும, இவன குமாரன செலோமீததுமதானே.

௨௰௬. இராசாவாகிய தாவீதும ஆயிரததுச சேர்வைகாறரும நூறறுககுசசேர்வைகாறருமான பிதாககளின தலைவருஞ சேனாபதிகளுமஉயிததஙகளிற்பிடிததுககொளளையிடடதுகளிலெடுததது,

௨௰௭. கறததருடையவீடடைபபெலபபாககுமபடிககுப பரிசுததமபணணின பொருளகளின பொககிஷஙகளையெலலாம அநதசசெலோமீததுமஅவனுடைசகோதரருமவிசாரிததார்கள.

௨௰௮. ஞானதிஷ்டடிப்புருஷனாகிய சாமுவேலுஙகீசின குமாரனாகியசவுலும நேரின குமாரனாகிய அப்னேருஞ செருயாளின குமாரனாகிய யோபாபும அவரவர்பரிசுததமபணணினதனைததுஞ்செலோமீததின கையின கீழும அவன சகோதரர்கையின கீழுமிருநதது.

௨௰௯. இசசகாரியரில கெனனியாவும அவன குமாரரும வெளிபபுறததுவேலைககு வைககபபடடு இஸ்றவேலினமேலமணியகாறருமநியாயாதிபதிகளுமாயிருநதார்கள.

௩௰. எபிரோனியரில அசபியாவும அவனசகோதரருமாகிய ஆயிரததெழுநூறுபராககிறமசாலிகள யோர்தானுககிபபால மேறகேயிருககிற இஸ்றவேலின மேல் கறததருடைய எலலாவேலைககும இராசாவின ஊழியததுககுமாக வைககபபடடார்கள.

௩௰௧. எபிரோனியரில யெரீயாவுமிருநதான, அவன தன பிதாககளின வமிஷஙகளான எபிரோனியரிலதலைவனானவன தாவீது அரசாணட நாறபதாமவருஷததிலே அவாகள தேடபபடடு, அவர்களுககுளளே கிலேயாத் தேசததின யசேரிலேபெலதத மனுஷர் கணடுபிடிககபபடடார்கள.

௩௰௨. பெலசாலிகளாகிய அவனுடசகோதரர் ரெணடாயிரததெழுநூறு பிறதான தலைவராயிருநதார்கள, அவர்களைதாவீது இராசாபராபரனுடையயெலலாககாரியததுககாகவும இராசாவின காரியததுககாகவும ரூபேனியர்மேலுமகாதியர்மேலும மனாசேயின பாதிககோததிரததின மேலும வைததான.

## ௨௭. அதிகாரம்.

தாவீதுககிருநத ராணுவததலைவரும மறறப்பிறதானவேலைகாறரும.

தஙகள லெககததின படி இருககிற இஸ்றவேல புததிரருககு வமிஷஙகளின தலைவருமஆயிரததுசசேர்வை காறரும நூறறுககுச சேர்வைகாறரும இவர்களுடையதலைவருமவைககபபடடிருநதார்கள. இவர்களவருஷததிலுணடானமாதஙகளிலெலலாம மாததததுககுமாதமஇராசாவைசசேவிககிறததுககு வகுககபபடடவரிசைகளின படியெலலாம மாறிமாறிவருவார்கள, ஒவவொரு வகுபபிலிருபதது நாலாயிரமபேரிருநதார்கள.

௨. முதலாமமாதததின முதலவகுபபினமேல சப்தியேலின குமாரனயஷோபெயாமிருநதான, அவன வகுபபிலிருபதது நாலாயிரமபேரிருநதார்கள.

௩. பேரேசின சநததியாரில இவன சகலசேனாபதிகளின தலைவனாயிருநது முதல மாதததைவிசாரிததான.

௪. இரணடாமமாதததின வகுபபினமேலஅகோசியனான தோதாயிஇருநதான, இவனவகுபபிலேமிக்லோத்தளககறததனாயிருநதான, அவனவகுபபில

ப்பிலிருபத்துநாலாயிரம்பேரிருந்தார்கள்.

௫. மூன்றாவதுமாதத்தின் மூன்றாஞ்சேனாபதி யோய்தாவின் குமாரனாகிய பெனாயாவென்ற தஸியான பிறதானி, அவன் வகுப்பிலிருபத்துநாலாயிரம்பேரிருந்தார்கள்.

௬. இந்தப்பெனாயா அந்தமுப்பது பராக்கிரமசாலிகளிலொருத்தனும் அந்தமுப்பது பேர்களின் தலைவனுமாயிருந்தான். அவனுடைய வகுப்பையவன் குமாரனாகிய அமீசபாத் விசாரித்தான்.

௭. நாலாவது மாதத்தின் நாலாஞ்சேனாபதி யோவாபின் சகோதரனாகிய ஆசகேலும், அவனுக்குப் பிறபாடு அவன் குமாரன் செபதீயா வந்தானே, அவன் வகுப்பிலிருபத்துநாலாயிரம்பேரிருந்தார்கள்.

௮. ஐந்தாவதுமாதத்தின் ஐந்தாஞ்சேனாபதி இஸ்ருகியனான சம்கூதென்றவன். அவன் வகுப்பிலிருபத்துநாலாயிரம்பேரிருந்தார்கள்.

௯. ஆறாவதுமாதத்தின் ஆறாஞ்சேனாபதி இக்கேசின் குமாரன் ஈராவென்ற தெக்கோபியன், அவன் வகுப்பிலிருபத்துநாலாயிரம் பேரிருந்தார்கள்.

௧௦. ஏழாவதுமாதத்தின் ஏழாஞ்சேனாபதியெப்பிருயீம்புத்திரரிலொருத்தனாகிய எலேசென்ற பேலோனியன், அவன் வகுப்பிலிருபத்துநாலாயிரம்பேரிருந்தார்கள்.

௧௧. எட்டாவதுமாதத்தின் எட்டாஞ்சேனாபதி சாரியரிலொருத்தனாகிய சிபேகாயென்ற ஊஷாத்தியன், அவன் வகுப்பிலிருபத்துநாலாயிரம்பேரிருந்தார்கள்.

௧௨. ஒன்பதாவது மாதத்தின் ஒன்பதாஞ்சேனாபதி பென்யமீனரில் ஆபியேசேரென்ற ஆனதோத்தான், அவன் வகுப்பிலிருபத்து நாலாயிரம்பேரிருந்தார்கள்.

௧௩. பத்தாவதுமாதத்தின் பத்தாஞ்சேனாபதி சாரியரிலொருத்தனாகிய மகாராயி என்ற நெதோபாத்தியன், அவன் வகுப்பிலிருபத்து நாலாயிரம்பேரிருந்தார்கள்.

௧௪. பதினோராவதுமாதத்தின் பதினோராஞ்சேனாபதியெப்பிருயீம் புத்திரரில் பெனாயா என்ற பிரத்தோனியன் அவன் வகுப்பிலிருபத்துநாலாயிரம்பேரிருந்தார்கள்.

௧௫. பனிரெண்டாவதுமாதத்தின் பனிரெண்டாஞ்சேனாபதி ஒத்னியேல் சந்ததியான எல்தாயி என்ற நெதோபாத்தியன் தானே, அவன் வகுப்பிலும் இருபத்துநாலாயிரம்பேரிருந்தார்கள்.

௧௬. இஸ்ருவேல் கோத்திரங்களுக்குத் தலைவராவது, ரூபேனியருக்குத் தலைவனான சிக்கிரியின் குமாரன் எலியேசேர், சிமெயோனியருக்கு மாக்காவின் குமாரன் செப்பத்தியா.

௧௭. லேவியருக்கு கேமூவேலின் குமாரன் அஷாபியா, ஆரோன் சந்ததிக்குச் சாதோக்.

௧௮. யூதாவுக்குத் தாவீதின் சகோதரரிலொருத்தனாகிய எலீகூ, இசக்காருக்கு மீகவேலின் குமாரன் ஓம்றி;

௧௯. செபுலோனுக்கு ஒபதீயாவின் குமாரன் இஸ்மாயா, நப்தலிக்கு அஸ்ரீயேலின் குமாரன் எரிமோத்.

௨௦. எப்பிருயீம் புத்திரருக்கு அசசீயாவின் குமாரன் ஒசேயா, மனாசேயின் பாதிக்கோத்திரத்துக்குப் பெதாயாவின் குமாரன் யோவேல்.

௨௧. கீலேயாத்திலுள்ள மனாசேயின் பாதிக்கோத்திரத்துக்குச் சகரியாவின் குமாரன் இத்தோ, பென்யமீனுக்கு அப்னேரின் குமாரன் யாசியேல்,

௨௨. தாணுக்கு யெரோகாமின் குமாரன் அசாரேல்; இவர்கள் இஸ்ருவேல் கோத்திரங்களுக்குத் தலைவராயிருந்தார்கள்.

௨௩. ஆனால் இருபதுவயதும் அதுக்குக் கீழ்ப்பட்டதுமானவர்களின் லெக்கத்தைத் தாவீது தொகையேற்றாதிருந்தான், ஏனெனில் இஸ்ருவேலை வானத்தின் நட்சேத்திரங்கள் தத்துவமாய்ப் பெருகப்பண்ணுவோமென்று கர்த்தர் சொல்லியிருந்தார்.

௨௪. செருயாவின் குமாரன் யோவாப் எண்ணத்துவக்கியும் முடிக்காதேபோனான், ஏனெனில் அதுக்காக இஸ்ருவேலின் மேலே கடுங்கோபம் வந்தது, ஆனதுகொண்டு அந்தத் தொகை தாவீது இராசாவின் நாளாகமக்கணக்கிலே ஏறினதில்லை.

௨௫. இராசாவுடைய பொக்கிஷங்களின் மேல் ஆதியேலின் குமாரன் அஸ்மாவேத்தும், பட்டணங்களுக்குங் கிராமங்களுக்குந் துருக்கங்களுக்குமுள்ள நிலத்திலுடைய பொக்கிஷங்களின் மேலும் உசீயாவின் குமாரன் யோனத்தானும்,

௨௬. நிலத்தைப் பயிரிட வயல்வெளியின் வேலை செய்கிறவர்களின் மேலே கேலூபின் குமாரன் எஸ்ரியும்,

௨௭. திராட்சத்தோட்டங்களின் மேல் ராமாத்தியனான சிமேயும், திராட்சத்தோட்டங்களின் வரத்தாகிய திராட்சப்பழரசவிருப்புகளின் மேலே சிப்மியனாகிய சப்தீயும்,

௨௮. பள்ளத்தாக்குகளிலுள்ள ஒலிவமரங்களின்மேலும் மூசுக்கட்டை விருட்சங்களின்மேலுங் கெதேரியனான பால்கானானும், எண்ணெயிருப்புகளின்மேல் யோவாசும்,

௨௯. சாரோனிலே மேய்கிற மாடுகளின்மேல் சாரோனியனான சித்ராயும், பள்ளத்தாக்குகளிலுள்ள மாடுகளின்மேல் அத்லாயின் குமாரன் சாப்பாத்தும்,

௩௰. ஒட்டகங்களின்மேல் இஸ்மவேலியனாகிய ஓபிலும், கழுதைகள்மேல் மெரோனோத்தியனாகிய யெகெதியாவும்,

௩௧. ஆடுகளின்மேல் ஆகாரியனான யாசீசும் விசாரிப்புக்காரராயிருந்தார்கள். இவர்களெல்லாந் தாவீது ராசாவுக்கிருந்த ஆஸ்தியின் தலைவராயிருந்தார்கள்.

௩௨. தாவீதின் சிறிய தகப்பனாகிய யோனத்தான் என்ற புத்தியுள்ள மனுஷன், ஆலோசனைக்காறனுஞ் சம்பிறதியுமாயிருந்தான், அக்மோனியின் குமாரன் எகியேலோவென்றால் இராசாவின் குமாரரோடிருந்தான்.

௩௩. அகித்தோப்பேல் இராசாவுக்கு ஆலோசனைக்காறனாயிருந்தான், அற்கியனான உஷாயியோவென்றால் இராசாவின் சிநேகிதனாயிருந்தான்.

௩௪. அகித்தோப்பேலுக்குப் பிற்பாடு பெனாயாவின் குமாரன் யோய்தாவும் அபியத்தாருமிருந்தார்கள், யோபாபோவென்றால் இராசாவின் படைத்தலைவனாயிருந்தான்.

## ௨௮. அதிகாரம்.

தேவாலயத்தைக் கட்டுகிறதுக்காகத் தாவீது சனத்துக்குந் தன் குமாரனாகிய சாலோமோனுக்கும் பண்ணின பிரசங்கம்.

கோத்திரங்களின் தலைவரும் இராசாவைச் சேவிக்கிற வகுப்புகளின் தலைவரும் ஆயிரத்துச் சேர்வைக்காறரும், நூற்றுக்குச் சேர்வைக்காறரும், இராசாவுக்கும் இராசகுமாரருக்கும் உண்டான எல்லா ஆஸ்தியையும் மிருகசீவன்களையும் விசாரிக்கிற தலைவருமாகிய இஸ்ரவேலின் சகல பிரபுக்களையும், பிரதானிகளையும் பெலசாலிகளையுஞ் சகல பராக்கிரமக்காறரையுந் தாவீது எருசலேமிலே கூட்டினான்.

௨. அப்பொழுது இராசாவாகிய தாவீது எழுந்திருந்து காலூன்றி நின்று சொன்னதாவது: என் சகோதரரே, என் சனமே, நான் சொல்வதைக் கேளுங்கோள்; கர்த்தருடைய உடம்படிக்கைப் பெட்டியின் இளைப்பாறுதலுக்கும் நம்முடைய பராபரனுடைய பாதப்படிக்குமாக ஒரு வீட்டைக் கட்ட நான் என் மனதிலே நினைத்து, கட்டுகிறதுக்கு ஆயித்தமும் பண்ணினேன்.

௩. ஆனால் பராபரன் என்னிடத்தில்: நீ எம்முட நாமத்துக்கு வீட்டைக் கட்ட வேண்டாம், ஏனெனில் நீ யுத்தமனுஷனாயிருந்து இரத்தங்களைச் சிந்திப்போட்டாயென்றார்.

௪. இப்பொழுதும் இஸ்ரவேலின்மேல் என்றைக்கும் இராசாவாயிருக்க இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர் என் தகப்பனுடைய வீட்டாரிலெல்லாம் என்னைத் தெரிந்துகொண்டார், ஏனெனில் அவர் யூதாவையும் யூதாவின் வீட்டில் என் தகப்பன் வீட்டையுந் தலைமையாகத் தெரிந்துகொண்டு என்னை எல்லா இஸ்ரவேலின்மேல் இராசாவாக்க என் தகப்பனுடைய குமாரரில் என்மேல் பிரியம் வைத்தார்.

௫. இப்பொழுது கர்த்தர் எனக்கு அநேகங் குமாரரைக் கட்டளையிட்டார், ஆனால் இஸ்ரவேலை ஆளுங் கர்த்தருடைய இராச்சிய பாரத்தின் ஆசனத்தின் மேலுட்காருகிறதுக்கு அவர் என்னுடைய எல்லாக் குமாரரிலும் என் குமாரனாகிய சாலோமோனைத் தெரிந்துகொண்டு,

௬. எனக்குச் சொன்னதாவது: உன் குமாரனாகிய சாலோமோனே நம்முடைய வீட்டையும் நம்முடைய பிரகாரங்களையுங் கட்டக்கடவான், ஏனெனில் அவனை நமக்குக் குமாரனாகத் தெரிந்துகொண்டோம், நாம் அவனுக்குப் பிதாவாயிருப்போம்.

௭. இந்நாளில் நடக்கிறபடியே அவன் நம்முடைய கற்பனைகளின்படியும் நம்முடைய நியாயங்களின்படியுஞ் செய்யப் பெலத்துக்கொண்டிருந்தானானால், அவன் இராச்சிய பாரத்தை என்றென்றைக்குந் திடப்படுத்துவோமென்றார்.

௮. இப்பொழுது நீங்கள் என்றென்றைக்கும் இந்த நல்ல தேசத்தைச் சுதந்திரமாய் அனுபவித்து, உங்களுக்குப் பிறகு அதை உங்கள் பிள்ளைகளுக்குச் சுதந்திரமாய்ப் பின்வைக்கும்பொருட்டாக, நீங்கள் உங்கள் பராபரனாகிய கர்த்தரின் கற்பனைகளையெல்லாங் கைக்கொண்டு விசாரியுங்கோளென்று கர்த்தரின் சபையாகிய இஸ்ரவேலெல்லாத்தின் கண்களுக்கு முன்பாகவும் நம்முடைய பராபரனுடைய செவிகளுக்கு முன்பாகவும் உங்களுக்குப் புத்தி சொல்லுகிறேன்.

கூ. என குமாரனாகிய சாலொமோனே, நீயுன பிதாவின பராபரனையறிந்தவனாயுத்தம இருதயத்தாலும மனப்பூருவத்தாலுஞசேவி, எனனறால் கர்த்தர் எல்லா இருதயஙகளையும ஆராய நது, சிநதிணைகளினதோற்றுதலையெலலாமஉண ருகிறார்; நீயவனைததேடினால உனககுததெனப டுவார், நீயவனை விட்டு விட்டாயே யாகிலஉன னையெனறைககுந்தளளிப்போடுவார்.

ய. இப்போதுமஎசசரிககையாயிரு, எனெ னில் பபரிசுத்தஸ்தலமாக ஒருவீட்டைக கட்டுவத றகுகர்த்தருனனைத்தெரிநது கொண்டார், நீதி டனகொண்டதைநடப்பியென்றுசொலலி,

யக. தாவீதுதன குமாரனாகிய சாலொமோ னுககுமண்டபமும அதின அறைகளும அதின பொககிஷசாலைகளும அதினமேலவீடுகளுமஅ தினஉளள அறைகளுஙகிருபாசன அறையுமஇ ருககுமமாதிரியையும,

யஉ. ஆவியினாலேதனககுககட்டளையிடப பட்டபடியெலலாம, அவனசெயய வேண்டிய கர்த்தருடைய வீட்டுப பிரகாரஙகளும, பராபர னுடைய வீட்டுபபொககிஷஙகளையும பரிசுத தமபணணபபட்டதுகளின பொககிஷஙகளை யுமவைககுஞசகலசுற்றறைகளுமிருககுமமாதிரி யையும,

யங. ஆசாரியரையுமலேவியரையும வரிசை களாகவகுககிறதற்கும, கர்த்தருடையவீட்டுப பணிவிடைவேலையனைத்துககும, கர்த்தருடையவீ ட்டுவேலையினதட்டுமுட்டுகளனைத்துககுமான கட்டளையையுஙகொடுத்தான.

யச. அவன பலபலவேலைககுவேண்டிய, சகலபொனதட்டுமுட்டுகளுககாக நிறையினப டிபொனனையும, பலபலவேலைககு வேண்டிய சகலவெளளிததட்டுமுட்டுகளுககாக நிறையின படிவெளளியையும,

யரு. பொன்னுனவிளககுததண்டுகளுககும அதுகளின பொன்னுன விளககுகளுககும, ஒவ வொருவிளககுததண்டுககும அதின விளககுகளு ககுமநிறையினபடிவேண்டிய பொனனையும, வெளளி விளககு ததண்டுகளி லொவவொரு விள ககுததண்டுககும அதின விளககுகளுககுமநிறை யினபடி வேண்டிய வெளளியையும,

யசா. சமுகத்தப்பஙகளைவைககும் ஒவவொ ருமேசைககுநிறையினபடி வேண்டிய பொன னையும, வெளளிமேசைகளுககுவேண்டியவெள ளியையும,

யஎ. முள்கொறடுகளுககுஙகலஙகளுககுந த்டுகளுககுமவேண்டிய சுத்தபபொனனையும பொற்கிணணிகளிலொவவொரு கிணணிககுநி றையினபடி வேண்டியதையும, வெளளி ககிண ணிகளிலொவவொருகிணணிககுநிறையினபடி வேண்டியதையும,

யஅ. தூபஙகாட்டுமபீடத்துககுநிறையின படிவேண்டியபுடமிடபபட்ட பொனனையுங கொடுத்து ச்செட்டைகளை விரித்து கர்த்தரு டையஉடமபடிககைப்பெட்டியை மூடுமபொ ற்கேருபீன களான வாகனத்தின மாதிரியையுங கொடுத்து:

யகூ. இநதமாதிரியினசகலகிறியைகளுமஎனக குததெரியபபணண இதுவெலலாஙகர்த்தருடைய கரத்தினாலெனககெழுதிக்கொடுககபபட்டுதெ னறான.

உய. தாவீதுதனகுமாரனாகிய சாலொமோ னுககுச்சொனனதாவது: நீபெலத்துத்திட்டன கொண்டிருநதுநடப்பி, பயபபடாமலுஙகலஙகாம லுமிரு, எனெனிலபபராபரனாகியகர்த்தரெனறன னுடபராபரன உனனோடிருபபார், கர்த்தரு டைய வீட்டுவேலையின கிறியையனைத்தையுமநீ முடித்துத்தீருமட்டும அவருனனைக்கைநெகிழ்வ துமிலலையுனனைககைவிடுவதுமிலலை;

உக. இதோ, பராபரனுடையவீட்டுவேலைக கெலலாம ஆசாரியர்லேவியருடையவகுப்புகளி ருககுது, அநதவெலலாககிறியைககுஞ சகலவித வேலைககுமஞானமுளளமனப்பூருவமானசகல மனுஷருமஉனசொல்பபடியெலலாஙகேட்கும பிரபுககளுஞ சகலசனஙகளும உனனணடையிலி ருககிறார்களெனறான.

உகூ. அதிகாரம்.

தேவாலயத்துககாகசசனமமனபபூருவ மானகாணிககைகளைககொடுத்தபிறபாடு தாவீதுபணணினசெபமுமஅவன அடைநதமரணமும.

பிறபாடுதாவீது இராசாசபைகெலலாஞ சொனனதாவது: பராபரன எனகுமாரனா கியசாலொமோனொருத்தனையேதெரிநது கொ ண்டிருககசசேஅவன இனனமவாலிபமுமஇளந தையு மாயிருககிறான, கிறியையோ வெனறால்ப பெரியது, எனெனிலஅதுவொரு மனுஷனுகக லல, பராபரனாகியகர்த்தருககுகடுமஆரமனை.

௨. நான் என்னாலேயானமட்டும் என் பராபரனுடைய வீட்டுக்கென்று பொன்வேலைக்குப் பொன்னையும் வெள்ளிவேலைக்கு வெள்ளியையும் வெண்கல வேலைக்கு வெண்கலத்தையும் இரும்பு வேலைக்கு இரும்பையும் மரவேலைக்கு மரங்களையுங் கோமேதகக் கல்லுகளையும் பதிக்கப்படுங் கல்லுகளையும் ஒளிவான பல்வற்ணக் கல்லுகளையும் விலையேறப்பெற்ற சகல விதத்தின் நகைகளையும் வெண்சல்லுகளையும் ஏராளமாகச் சவதரித்தேன்.

௩. இன்னம் என் பராபரனுடைய வீட்டின் மேலேயிருக்கிற விருப்பத்தினாலே நான் பரிசுத்த வீட்டுக்காகச் சவதரித்தவைகளைத் தவிர என்னுடைய சொந்தமாயிருக்கிற பொன்னையும் வெள்ளியையும் என் பராபரனுடைய வீட்டுக்கென்று கொடுக்கிறேன்.

௪. என்னவெனில், அறைகளின் சுவர்களை மூடுவதற்காகவும், பொன்வேலைக்குப் பொன்னும் வெள்ளிவேலைக்கு வெள்ளியும் உண்டாவதற்காகவும், கம்மாளர் செய்யும் வேலையனைத்துக்காகவும் ஓப்பிரின் பொன்னாகிய மூவாயிரந் தாலந்துப் பொன்னையும் புடமிடப்பட்ட வெள்ளி ஏழாயிரந் தாலந்தையுங் கொடுக்கிறேன்.

௫. இப்போதும் உங்களில் இன்றையிற்றினங் கற்த்தருக்குத் தன் கைக் காணிக்கைகளைச் செலுத்த மனப்பூறுவமானவர்கள் ஆரென்றான்.

௬. அப்போது வங்கிஷங்களின் பிரபுக்களும் இஸ்ரவேல் கோத்திரங்களின் பிரபுக்களும் ஆயிரத்துக்குச் சேர்வைக்காறரும், நூற்றுக்குச் சேர்வைக்காறரும் இராசாவின் வேலைக்காறராகிய பிரபுக்களும் மனப்பூறுவமாகி,

௭. பராபரனுடைய வீட்டு வேலைக்கு ஐயாயிரந் தாலந்துப் பொன்னையும் பதினாயிரந் தங்கக்காசுகளையும், பதினாயிரந் தாலந்து வெள்ளியையும், பதினெண்ணாயிரந் தாலந்து வெண்கலத்தையும் நூறாயிரந் தாலந்து இரும்பையுங் கொடுத்தார்கள்.

௮. ஆர்கையிலே ரத்தினங்களகப்பட்டுதோ, அவர்கள் அதுகளையுங் கற்த்தருடைய வீட்டுப் பொக்கிஷத்துக்கென்று கேர்சோனியனான யெகியேலின் கையிலே கொடுத்தார்கள்.

௯. இப்படி மனப்பூறுவமாய்க் கொடுத்ததற்காகச் சனங்கள் சந்தோஷப்பட்டது, ஏனெனில் மன உத்தமமும் உச்சாயமுமாய்க் கற்த்தருக்குக் கொடுத்தார்கள், தாவீதுராசாவும் மிகுதியாகவுஞ் சந்தோஷப்பட்டான்.

௰. ஆகையால் தாவீது சபையனைத்தின் கண்களுக்கு முன்பாகவுங் கற்த்தருக்கு ஸ்தோத்திரஞ் செலுத்திச் சொன்னதாவது: எங்கள் தகப்பனாகிய இஸ்ரவேலின் பராபரனான கற்த்தாவே, தேவரீர் சதாகாலங்களாகிய என்றென்றைக்கும் ஸ்தோத்திரிக்கப்பட்டவர்.

௰௧. கற்த்தராகிய உமக்கு மகிமையும் வல்லமையும் முக்கியமுஞ் செயமும் மகத்துவமுமுண்டாவதாக, ஏனென்றால் வானத்திலும் பூமியிலுமுள்ளதெல்லாம் உம்முடையது, கற்த்தாவே ராச்சியமும் உம்முடையது, தேவரீர் எல்லாரின் மேலுந் தலைவராயுயர்ந்திருக்கிறவர்.

௰௨. இத்த ஐசுவரியமுங் கனமும் உம்மாலேயுண்டாயிருக்குது, தேவரீர் எல்லாத்தையு மாளுகிறவர், உம்முடைய கரத்திலே பெலனும் வல்லமையும், உம்முடைய கரத்திலிதையெல்லாம் பெருகவும் பெலக்கவும் பண்ணுதலுமிருக்குது.

௰௩. இப்போதும், எங்கள் பராபரனே, நாங்கள் உமக்கு ஸ்தோத்திரஞ் செலுத்தி, உமது மகிமையுள்ள நாமத்தைத் துதிக்கிறோம்.

௰௪. ஏனெனில் இப்படி மனப்பூறுவமாய்க் கொடுக்குஞ் சாமர்த்தியம் எங்களுக்கிருக்கிறதற்கு நானெம்மாத்திரம், என்னுடச் சனமும் எம்மாத்திரம், ஏனென்றால் இதுவெல்லாம் உம்மாலுண்டானது, உமது கரத்திலே அதை வாங்கி உமக்குக் கொடுத்தோம்.

௰௫. ஏனென்றால் உமக்கு முன்பாக நாங்கள் எங்களுடைய எல்லாப் பிதாக்களைப்போலும் அ[illegible]தேசிகளும் பரதேசிகளுமாயிருக்கிறோம், பூமியின் மேல் எங்கள் நாட்கள் ஒரு நிழலைப்போலிருக்குது, தரித்திருக்க நம்பிக்கையில்லை.

௰௬. எங்கள் பராபரனாகிய கற்த்தாவே, உம்முடைய பரிசுத்தநாமத்துக்கென்று உமக்கொரு வீட்டைக் கட்டுகிறதற்கு நாங்கள் சவதரித்த இதெல்லாத் திரட்சியும் உமது கரத்திலிருந்து வந்தது, அதுவெல்லாம் உம்முடையது.

௰௭. என் பராபரனே, தேவரீர் இருதயத்தைச் சோதித்துச் செம்மையான குணங்களின்மேலே பிரியமாயிருக்கிறீரென்கிறதை யறிவேன், இதையெல்லாம் நான் என் இருதயத்தின் செம்மையான குணத்தினாலே மனப்பூறுவமாய்க் கொடுத்தேன், இப்போதிங்கேயிருக்கிற உம்முடைய சனமும் உமக்கு மனப்பூறுவமுமாய்க் கொடுத்ததைச் சந்தோஷத்தோடே பார்த்தேன்.

௰௮. ஆபிரகாம் ஈசாக் இஸ்ரவேல் என்ற எங்கள் பிதாக்களின் பராபரனாகிய கற்த்தாவே, உமது

மாதென்றான்.

௰௩. ஆனாலும் யெரொபெயாம், அவர்களுக்குப் பின்னாக வரத்தக்கதாக ஒரு பதிவிடையைச் சுற்றிப்போகப்பண்ணினான். அப்படியே யூதாவுக்கு முன்னும் அந்தப் பதிவிடையவர்களுக்குப் பின்னுமாயிருந்தது.

௰௪. யூதா திரும்பிப் பார்க்கிறபோது, இதோ, முன்னும் பின்னும் தங்களுக்கு யுத்தமுண்டென்று கண்டு, கர்த்தரை நோக்கிக் கூப்பிட்டார்கள், ஆசாரியர்களோவென்றால் பூரிகைகளைத் தொனிக்கப்பண்ணினார்கள்.

௰௫. யூதா மனுஷரோவென்றால் ஆர்ப்பரித்தார்கள்; யூதா மனுஷர் ஆர்ப்பரிக்கிறபோது சம்பவித்ததேதென்றால் பராபரன் யெரொபெயாமையும் இஸ்ரவேலனைத்தையும் அபியாவுக்கும் யூதாவுக்கும் முன்பாக முறியடித்தார்.

௰௬. இஸ்ரவேல் புத்திரர் யூதாவுக்கு முன்பாக முறிந்தோடினார்கள், பராபரன் அவர்களை இவர்கள் கையிலே ஒப்புக்கொடுத்தார்.

௰௭. அபியாவும் அவனுடைய சனமும் அவர்களிலே மகா சங்காரமுண்டாக்கினார்கள், தெரிந்துகொள்ளப்பட்ட அஞ்ஞூறாயிரம்பேர் இஸ்ரவேலிலே வெட்டுண்டு விழுந்தார்கள்.

௰௮. அப்படியே இஸ்ரவேல் புத்திரர் அக்காலத்திலே தாழ்த்தப்பட்டார்கள், யூதா புத்திரரோவென்றால் தங்கள் பிதாக்களின் பராபரனைச் சார்ந்துகொண்டதினால் பெலத்துப்போனார்கள்.

௰௯. அபியா யெரொபெயாமைப் பின்தொடர்ந்து, அவனுக்குண்டான பட்டணங்களாகிய பெத்தேலையும் அதின் கிராமங்களையும், எஷானாவையும் அதின் கிராமங்களையும், எப்பிரோனையும், அதின் கிராமங்களையும் பிடித்தான்.

௨௰. அப்புறம் அபியாவின் நாட்களிலே யெரொபெயாம் பெலனடைய மாட்டாதே போய்க் கர்த்தர் அவனையடித்ததினாலே மரணமடைந்தான்.

௨௧. அப்படியே அபியா பெலத்துக்கொண்டான்; அவன் பதினாலு பெண்சாதிகளை விவாகம்பண்ணி, இருபத்திரண்டு குமாரரையும் பதினாறு குமாரத்திகளையும் பெற்றான்.

௨௨. அபியாவின் மற்ற நடபடிகளும், அவன் வழிகளும் அவன் வர்த்தமானங்களும் தீர்க்கதரிசியாகிய இத்தோவின் சரித்திரத்திலெழுதியிருக்குது.

## ௰௪. அதிகாரம்.

ஆசாவின் நல்ல ராச்சியபாரமும் செயமும்.

அபியா தன் பிதாக்களோடே நித்திரையடைந்தபின் அவனை தாவீதின் பட்டணத்திலடக்கம்பண்ணினார்கள், அவன் ஸ்தலத்திலே அவன் குமாரனாகிய ஆசா இராசாவானான், இவனுடைய நாட்களிலே தேசம் பத்து வருஷமட்டும் அமரிக்கையாயிருந்தது.

௨. ஆசா தன் பராபரனாகிய கர்த்தரின் பார்வைக்கு நன்றும் செம்மையுமானதைச் செய்து,

௩. அன்னிய தேவர்களின் பீடங்களையும் மேடைகளையும் அகற்றி, சிலைகளையுடைத்து, தோப்புகளை வெட்டி,

௪. தங்கள் பிதாக்களின் பராபரனாகிய கர்த்தரைத் தேடவும், நியாயப்பிரமாணத்தின்படியும் கற்பனையின்படியும் செய்யவும் யூதாவுக்குக் கற்பித்து,

௫. மேடைகளையும் சிலைகளையும், யூதாவுடைய எல்லாப் பட்டணங்களிலுமிருந்தகற்றினான், அவனுக்கு முன்பாக ராச்சியம் அமரிக்கையாயிருந்தது.

௬. அந்த வருஷங்களில் அவனுக்கு விரோதமான யுத்தமில்லாமல், தேசம் அமரிக்கையான படியினாலே யூதாவிலே அரணான பட்டணங்களைக் கட்டினான், ஏனெனில் கர்த்தர் அவனுக்கு இளைப்பாறுதலைக் கட்டளையிட்டார்.

௭. அவன் யூதாவுடனே: தேசம் நமக்கு முன்பாக இன்னும் இப்படியிருக்கக்கொள்ள நாம் இந்தப் பட்டணங்களைக் கட்டி, அலங்கங்கள் கோபுரங்கள் வாசல்கள் தாப்பாள்களாலும் அதுகளையடைப்போமாக, ஏனெனில் நம்முடைய பராபரனாகிய கர்த்தரைத் தேடினோம், தேடினபோது சுற்றிலும் நமக்கு இளைப்பாறுதலைக் கட்டளையிட்டாரென்றான். அப்படியே கட்டினார்கள், அவர்களுக்குக் கைகூடிவந்தது.

௮. யூதாவிலே பரிசையையும் ஈட்டியையும் பிடிக்கிற முன்னூறாயிரம்பேரும்; பென்யமீனிலே கேடயம்பிடித்து வில்வலிக்கிற இருநூற்றெண்பதினாயிரம் பேருமான ராணுவங்கள் ஆசாவுக்கிருந்தது, இவர்களெல்லாரும் பராக்கிரமசேவகரானவர்கள்.

௯. அவர்களுக்கு விரோதமாய் எத்தியோப்பியனாகிய சேரா ஆயிரந்தாயிரம் பேர்களின் ரா

ணுவோ

னுவோடும் முந்நூறு இரதங்களோடும் புறப்பட்டு, மரேசா மட்டும் வந்தான்.

௰. அப்போது ஆசா அவனுக்கெதிராகப் புறப்பட்டான், மரேசாவுக்கடுத்த செப்பத்தா வென்ற பள்ளத்தாக்கிலுயித்தத்துக்காயித்தம் பண்ணினார்கள்.

௰௧. ஆசா தன் பராபரனாகிய கர்த்தரை நோக்கிக் கூப்பிட்டு: கர்த்தாவே பெலத்தவனுக்காகிலும் பெலனற்றவனுக்காகிலும் ஒத்தாசை பண்ணுகிறது உமக்கற்பக்காரியமாயிருக்குது; எங்கள் பராபரனாகிய கர்த்தாவே, எங்களுக்கொத்தாசை பண்ணும், ஏனெனில் உம்மைச் சார்ந்துகொண்டு உம்முட நாமத்தினிந்த ஏராளத்துக்கெதிராக வந்தோம், கர்த்தாவே தேவரீரெங்கள் பராபரன், மனுஷன் உம்மை மேலக்கொள்ளானாகவென்றான்.

௰௨. அப்போது கர்த்தர் அந்த எத்தியோப்பியரை ஆசாவுக்கும் யூதாவுக்கும் முன்பாக முறியடிக்கிறதினால் எத்தியோப்பியர் ஓடிப்போனார்கள்.

௰௩. அவர்களை ஆசாவும் அவனோடிருக்கிற சனமுங் கேரார் மட்டுந் துரத்தினார்கள், எத்தியோப்பியரிலொருபேலனுமிராதபடிக்கு விழுந்தார்கள், ஏனென்றால் கர்த்தருக்கும் அவருடைய ராணுவத்துக்கும் முன்பாக நொறுங்கிப்போனார்கள் கொள்ளையை மிகவுந் திரட்சியாயெடுத்தார்.

௰௪. கேராரின் சுற்றுப்பட்டணங்களையெல்லாம் இடறடித்தார்கள், ஏனெனில் கர்த்தரால் அவர்கள் மேலே பயங்கரமுண்டாச்சுது, அந்தப் பட்டணங்களையெல்லாங் கொள்ளையிட்டார்கள், ஏனெனில் அதுகளில் கொள்ளை நிரம்பவிருந்தது.

௰௫. மிருகஜீவன்களிருந்த கொட்டாரங்களையும் அவர்களிடறடித்து, திரளாடுகளையும் ஒட்டகங்களையுஞ் சாய்த்துக்கொண்டு யெருசலேமுக்குத் திரும்பினார்கள்.

## ௰௫. அதிகாரம்.

சத்தியமார்க்கத்துக்கோத்ததை ஆசா அகற்றினது.

அப்போது பராபரனுடைய ஆவி ஒதேதின் குமாரனாகிய அசரியாவின் மேலிறங்கினதினால்,

௨. அவன் வெளியே ஆசாவுக்கெதிர்கொண்டுபோய் அவனுக்குச் சொன்னதாவது: ஆசாவே, யூதா பென்யமீன் கோத்திரங்களின் சகல மனுஷரே, என்னைக் கேளுங்கோள், நீங்கள் கர்த்தரோடிருக்கையால் அவருங்களோடிருக்கிறார், நீங்களவரைத் தேடினால் உங்களுக்குத் தென்படுவார், அவரை விட்டீர்களேயாகில் உங்களை விடுவார்.

௩. இஸ்ரவேலிலே மெய்யான தேவனும் உபதேசிக்கிற ஆசாரியனும் வேதமுமில்லாத அனேககாலிருக்கும்.

௪. தங்கள் நெருக்கத்திலே இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தரண்டைக்குத் திரும்பி அவரைத் தேடினார்களேயானால், அவர் இவர்களுக்குத் தென்படுவார்.

௫. அக்காலங்களிலே புறப்படுகிறவர்களுக்கும் உள்ப்பிறவேசிக்கிறவர்களுக்குஞ் சமாதானமில்லாதிருக்கும், ஏனெனில் தேசங்களின் குடிகளெல்லாரின் மேலும் மகா அமளிகளுண்டாயிருந்தது,

௬. சாதியைச் சாதியும் பட்டணத்தைப் பட்டணமும் நொறுக்கும், ஏனென்றால் பராபரன் அவர்களைச் சகலவித இடுக்கத்தினாலே கலங்கப்பண்ணுவார்.

௭. நீங்களோவென்றால் உங்கள் கைகளை நெகிழவொட்டாமல் திடன் கொள்ளுங்கோள், ஏனெனில் உங்கள் கிரிகைகளுக்குப் பலனுண்டென்றான்.

௮. ஆசா இந்த வாற்த்தைகளையுந் தீர்க்கதரிசியாகிய ஒதேதின் தீர்க்கதரிசனத்தையுங் கேட்டபோது, அவன் திடன்கொண்டு, அருவருப்புகளை யூதா பென்யமீன் தேசமனைத்திலும் எப்பிறயீமின் மலைத்தேசத்தில் தான் பிடித்த பட்டணங்களிலுமிருந்தகற்றி, கர்த்தருடைய மண்டபத்தின் முன்னிருக்கிற கர்த்தருடைய பலிபீடத்தைப் புதிதாக்கி,

௯. அவன் யூதா பென்யமீன் அனைத்தையும், அவர்களோடே கூட எப்பிறயீமிலும் மனாசேயிலுஞ் சிமேயோனிலுமிருந்து வந்த பரதேசிகளையுங் கூட்டினான், ஏனெனில் இஸ்ரவேலிலே திரளச்சனங்கள் அவனுட பராபரனாகிய கர்த்தர் அவனோடிருக்கிறதைக் கண்டு, அவன் வசத்திலே சேர்ந்தார்கள்.

௰. ஆசா அரசாண்ட பதினைந்தாம் வருஷம் மூன்றும் மாதத்திலே அவர்கள் யெருசலேமிலே கூடி,

௰௧. தாங்கள் கொள்ளையிட்டு ஓட்டிவந்ததில

அந்நாளிலே எழுநூறு மாடுகளையும் ஏழாயிரம் ஆடுகளையுங் கர்த்தருக்குப் பலியிட்டு,

௰௨. தங்கள் பிதாக்களின் பராபரனாகிய கர்த்தரைத் தங்கள் முழு இருதயத்தோடுந் தங்கள் முழு ஆத்துமத்தோடுந் தாங்கள் தேடுவோமென்றும்,

௰௩. சிறியவன் துவக்கிப் பெரியவன் மட்டாகவும் புருஷன் துவக்கி ஸ்திரி மட்டாகவும் இஸ்ருவேலின் பராபரனாகிய கர்த்தரைத் தேடாதவன் எல்லாருங் கொல்லுண்கப்படவேணுமென்றும் ஒருவுடம்படிக்கைக்குள்ளாகி,

௰௪. கர்த்தருக்கு மகா சத்தத்தோடுங் கெம்பீரத்தோடும், பூரிகைகளோடும் மெக்காளங்களோடும் ஆணையிட்டார்கள்.

௰௫. இந்த ஆணைக்காக யூதாவனைத்துஞ் சந்தோஷப்பட்டது, ஏனெனில் தங்கள் முழு இருதயத்தாலும் ஆணையிட்டு, தங்கள் முழு மனதினாலும் அவரைத் தேடினார்கள், ஏனெனில் கர்த்தர் அவர்களுக்குத் தென்பட்டு, சுற்றுப்புறத்தாரால் போரில்லாதபடிக்கவர்களை இளைப்பாறப்பண்ணினார்.

௰௬. தோப்பிலே அருவருப்பான விக்கிரகத்தை யுண்டுபண்ணின இராசாவாகிய ஆசாவின் தாயான மாகாளையும் இராசாத்தியாயிராதபடிக்கு ஆசா விலக்கிப்போட்டு, அவளுடைய அந்த விக்கிரகத்தையும் நிறமூலமாக்கித் தகர்த்து, கீதரோன் ஆற்றிலே சுட்டெரித்துப் போட்டான்.

௰௭. மேடைகளோவெனில் இஸ்ருவேலிலிருந்து தள்ளிப்போடப்படவில்லையென்றாலும் ஆசாவின் இருதயம் அவன் நாள்களிலெல்லாம் உத்தமமாயிருந்தது.

௰௮. தன் தகப்பனுந் தானும் பரிசுத்தம் பண்ணினதாகிய வெள்ளியையும் பொன்னையுந் தட்டுமுட்டுகளையும் அவன் பராபரனுடைய வீட்டிலே கொண்டுவந்து வைத்தான்.

௰௯. ஆசா அரசாண்ட ராச்சியத்தின் முப்பத்தைந்தாம் வருஷமட்டுக்கும் யுத்தமில்லாதிருந்தது.

## ௰௬. அதிகாரம்.

### ஆசாகல்வழியை விலக்கினது.

ஆசா அரசாண்ட முப்பத்தாறாம் வருஷத்திலே இஸ்ருவேலின் இராசாவாகிய பாஷா யூதாவுக்கு விரோதமாயெழும்பி வந்து, ஒருத்தரும் யூதாவின் இராசாவாகிய ஆசாவண்டையிலே போக்கும் வரத்துமாயிராதபடிக்கு, ராமாவைக் கட்டினான்.

௨. அப்பொழுது ஆசா கர்த்தருடைய வீட்டிலும் இராசாவின் வீட்டிலுமுள்ள பொக்கிஷங்களில் வெள்ளியும் பொன்னும் எடுத்து, தமஸ்குவிலே வாசம்பண்ணுகிற பென்னாதாத்வென்ற சூரியாவின் இராசாவண்டைக்கனுப்பி:

௩. எனக்குமுமக்கும் என் தகப்பனுக்கும் உம்முடைய தகப்பனுக்கும் உடம்படிக்கையுண்டே, இதோ வெள்ளியும் பொன்னும் உமக்கனுப்பினேன், இஸ்ருவேலின் இராசாவாகிய பாஷா என்னைவிட்டப்பாலே போகும்படிக்கு நீர் வந்து அவனோடிருக்கும் உம்முடைய உடம்படிக்கையை விட்டுவிடுமென்று சொல்லியனுப்பினான்.

௪. பென்னாதாத் இராசாவாகிய ஆசாவுக்குச் செவிகொடுத்து, தனக்குண்டான ராணுவங்களின் தலைவரை இஸ்ருவேலின் பட்டணங்களுக்கு விரோதமாக அனுப்பினான், இவர்கள் ஈயோனையுந் தாணையும் ஆபேல்மாயிமையும், நப்தலிப்பட்டணங்களின் எல்லாப் பண்டகசாலைகளையும் இடித்தார்கள்.

௫. இதைப் பாஷா கேட்டபோது ராமாவைக் கட்டுகிறதை நிறுத்தி, தன் வேலையை விட்டோய்ந்தான்.

௬. அப்பொழுது ராசாவாகிய ஆசா யூதாவனைத்தையுங் கூட்டிக்கொண்டான். இவர்கள் போய் பாஷா கட்டின ராமாவின் கல்லுகளையும் அதின் மரங்களையுமெடுத்து வந்தார்கள், அதுகளால் அவன் கேபாவையும் மிஸ்பாவையுங் கட்டினான்.

௭. அக்காலத்திலே ஞானதிஷ்டி புருஷனாகிய அனானீ யூதாவின் இராசாவாகிய ஆசாவண்டைக்கு வந்து அவனுடனே சொன்னதாவது: நீர் உம்முடைய பராபரனாகிய கர்த்தரைச் சார்ந்து கொள்ளாமல் சூரியாவின் இராசாவைச் சார்ந்து கொண்டபடியினாலே, சூரியாவுட இராசாவின் ராணுவம் உம்முடைய கைக்குத் தப்பிப் போச்சுது.

௮. மிகவும் ஏராளமான ரதங்களுங் குதிரைச்சேவகருமுள்ள எத்தியோப்பியரும் லூபியரும் பெரிய ராணுவமாயிருந்ததில்லையோ? நீர் கர்த்தரைச் சார்ந்து கொண்டபோதோவெனில் அவர்களையும் உம்முடைய கையிலொப்புக்கொடுத்தாரே.

௯. ஏனெனில் தம்மை நோக்கி உத்தம இருதயத்தோடிருக்கிறவர்களுக்குத் தம்முடைய பெலனை விளங்கப்பண்ணும்படிக்குக் கர்த்தருடைய கண்கள் பூமியெங்குஞ் சுற்றிப்பார்த்துக் கொண்

டிருக்

டிருககுது. இதிலே மதியிலலாதவராயிருநதீர், ஆகையால் இதுமுதறகொணடுமககுயிததஙகளி ருககுமெனறுன.

௰. ஆனுல ஆசாஞானதிஷடடிப புருஷன மேலமனமடிவாகி, அதுநிமிததியம அவனபேரி லேசினமானபடியினுலே, அவனைக காவலறை யிலே போடடான, இதலலாமல அககாலத்தில சனததில சிலரையுங கொடூரமாய நடபபித தான.

௰௧. ஆசாவின முனபின நடபடிகளோவெ னறுல, இதோ அதுகளயூதா இஸ்ருவேல இராசா ககளின புஸதகததிலெழுதியிருககுது.

௰௨. ஆசா அரசாணடராச்சியததின முபபத தொன்பதாம வருஷததிலே தனகாலகளில நோய் கொணடான, ஆனுல அவனவியாதிவெகுமும்மு ரமாயிருநதாலும, தனனுடவியாதியிலும அவன கறதரையலலபரியாரிகளையேதேடினுன.

௰௩. ஆசா தனபிதாககளோடே நிததிரையடைநது தனனுடராச்சியததினநாறபததோராம வருஷததிலேமரிததான.

௰௪. தயிலககாறருடையவேலையாய ககெந தவறககஙகளினுலும பரிமளஙகளினுலும ரொபபி வைககபபடட மெதைதயினமேல அவனைவளத தி, அவனுககாக வெகுதிரளான கெநதவறகஙக ளைககொளுததின பிறபாடு, அவனைதாவீதின படடணததிலெததனககுவெடடிவைததிருநத அவ னுடகலலறையிலே அவனையடககமபணணினு ர்கள.

௰எ. அதிகாரம.

யோசபாதுடைய நலலராச்சியபாரம.

அவன இஸதலததிலே அவன குமாரனுகிய யோசபாத்இராசாவாகி, இஸ்ருவேலுக கெதிரோபெலததுககொணடான.

௨. அவனயூதாவின அரணுன படடணஙகளி லெலலாமரானுவதசேனைகளைவைதது, யூததேசததிலுந தனதகபபனுகிய ஆசாபிடிததஎபபிராயீமின பட டணஙகளிலுந தாவளையஙகளைவைததான.

௩. கறதர்யோசபாதோடிருநதார், எனெ னில அவன தகபபனுகிய தாவீதுமுனனுளககளில நடநதவழிகளிலஅவனநடநது பாகாலகளைததே டாமல,

௪. தனதகபபனுடைய பராபரனைததேடி இஸ்ருவேலுட செயகையின படியலல, அவரு டையகறபனைகளிலேநடநதுகொணடான.

௫. ஆகையாலககறதர்அவன கையிலராச்சி யபாரததைததிடபபடுததினுர், யூதகோததிரத தாரெலலாமயோசபாதுககுககாணிககைகளைக கொடுததார்கள, அவனுககைசுவரியமுங கனமு மிகுதியுமுணடாசசுது.

௬. கறததருடவழிகளில அவனஇருதயமவெ குதிடனுனபோது, அபபுறம அவனமேடைகளை யுநதோபபுகளையுமயூதாவைவிடடகறறினுன.

௭. அவன அரசாணடமூனறும வருஷததில யூதாவின படடணஙகளில உபதேசமபணணுமப டிககு அவனதனபிரபுககளாகிய பெனஹயிலை யுமஒபதீயாவையுஞசகரீயாவையுமநததானவே லையுமமிகேயாவையும,

௮. இவர்களோடேகூட செமாயா, நெதத னியா, செபதீயா, ஆசகேல, சேமீர்மோத், யோ னததான, அதோனியா, தொபீயா, தோபதோ னியாவெனறலேவியரையும, இவர்களோடேகூ ட ஆசாரியரானஎலிஷாமாவையுமயோராமையும அனுபபினுன;

௯. இவர்களயூதாவிலே உபதேசமபணணி, கறதருடையவேதபுஸதககதைவைததிருநது யூதா வினபடடணஙகளிலெலலாந திரிநது சனததையு பதேசிததார்கள.

௰. யூதாவை சசுறறியிருககிற தேசஙகளுட ராச்சியஙகளினமேலெலலாங கறதரின பயஙக ளுணடானதினுலயோசபாதோடுயுததமபண ணுதிருநதார்கள.

௰௧. பெலிததரினுஞசிலர்யோசபாதுககுப் பகுதியின திரவியததோடேகூட காணிககைக ளைககொணடுவநதார்கள; அருபியரும அவனு ககேழாயிரததெழுநூறு ஆடடுககடாயககளை யுமஏழாயிரததெழுநூறு வெளளாடடுககடாய களையுஙகொணடுவநதார்கள.

௰௨. இபபடியே யோசபாத்வரவர மிகுதி யுமபெரியவனுகி யூதாவிலே கோடடைகளையும ரஸததுசககளையும வைககும படடணஙகளையுங கடடினுன.

௰௩. யூதாவின படடணஙகளில அவனுககுப்பெரியவேலைநடநதது, யெருசலேமிலோவெ னறுலபபராககிறமசாலிகளானசேவகர் அவனு ககிருநதார்கள.

௰௪. தஙகளபிதாககளுடவஙகிஷஙகளினபடி இவர்களுட லெககமாவது: யூதாவிலே ஆயிர ததுககசேர்வைககாறரான வர்களாரெனறுலஅ



தனு

த்தென்கிற சேர்வைக்காரன்; இவனிடத்திலே பராக்கிரமசாலிகள் மூன்றூறாயிரம்பேரிருந்தார்கள்.

௰௫. இவனோடேகூட யோகனான் என்ற சேர்வைக்காரன், இவனிடத்திலிருநூற்றெண்பதினாயிரம்பேரிருந்தார்கள்.

௰௬. இவனோடேகூடக் கர்த்தருக்குச் சுயசேவகனான சிக்கிரியின் குமாரனாகிய அமசியா என்கிறவனுமிருந்தான், இவனிடத்திலே பராக்கிரமசாலிகள் இருநூறாயிரம்பேரிருந்தார்கள்.

௰௭. பென்யமீனிலோ வென்றால் எலியாதா என்ற பராக்கிரமசாலியிருந்தான், இவனிடத்திலே வில்லுங் கேடயமும் பிடிக்கிறவர்கள் இருநூறாயிரம்பேரிருந்தார்கள்.

௰௮. இவனோடேகூட யோசபாது மிருந்தான், இவனிடத்திலே சேவகத்துக்காயத்தமணிந்தவர்கள் நூற்றெண்பதினாயிரம் பேரிருந்தார்கள்.

௰௯. இராசா யூதாவெங்குமுள்ள அரணான பட்டணங்களிலும் வைத்தவர்களைத் தவிர இவர்கள் இராசாவைச் சேவித்தவர்கள்தானே.

## ௰௮. அதிகாரம்.

யோசபாத் ஆகாபோடேகூடச் சூரியர்மேலே யுத்தம்பண்ணப்போய் நாசமோசத்துக்குத் தப்பினது.

யோசபாத்துக்கைசுவரியமுங் கனமும் மிகுதியுமுண்டாயிருந்தது; ஆனால் அவன் ஆகாபோடே சம்மந்தங்கலந்து,

௨. சிலவருஷங்கள் சென்றபிற்பாடு, சமாரியாவிலிருக்கிற ஆகாபண்டைக்கிறங்கிப் போனான். அப்போது ஆகாப் அவனுக்கும் அவனோடிருக்கிற சனத்துக்குமாக அனேகம் ஆடுமாடுகளை யடிப்பித்து கீலேயாத்திலுள்ள ராமோத்துக்கேறிவர அவனைப் பயிற்றுவித்தான்.

௩. எப்படியென்னில் இஸ்ரவேலின் இராசாவாகிய ஆகாப் யூதாவின் இராசாவாகிய யோசபாத்தை: கீலேயாத்திலுள்ள ராமோத்துக்கு என்னோடே வருகிறீரோவென்று கேட்டதற்கவன்: உம்மைப்போலே நானுமிருப்பேன், உம்முடைய சனத்தைப்போல் என்னுடைய சனமுமிருக்கும், உம்மோடேகூட யுத்தத்துக்கு வருகிறேனென்றான்.

௪. ஆனால் பின்னையும் யோசபாத் இஸ்ரவேலின் இராசாவுடனே: கர்த்தருடைய உத்தரவை இன்றைக்குக் கேட்டு விசாரியுமென்றான்.

௫. அப்போது இஸ்ரவேலின் இராசா நானூறுபேராகிய தீர்க்கதெரிசிகளைக் கூட்டி: நாங்கள் கீலேயாத்திலுள்ள ராமோத்தின் மேலும் யுத்தம்பண்ணப் போகலாமோ, போகாதிருப்பேனோ என்றவர்களைக் கேட்டான். அதற்கவர்கள்: போயேறும் பராபரன் அதை இராசாவின் கையிலே ஒப்புக்கொடுப்பாரென்றார்கள்.

௬. ஆனால் யோசபாத்: இன்னுங் கர்த்தருடைய தீர்க்கதெரிசியாராகிலும், நாம் அவனிடத்திலே கேட்டு விசாரிக்க, இங்கேயில்லையோ வென்று கேட்டான்.

௭. அப்போது இஸ்ரவேலின் இராசா யோசபாத்துடனே: கர்த்தரைக் கேட்கிறதுக்கு இம்லாவின் குமாரனாகிய மிகாயா வென்ற இன்னமொருத்தன் இருக்கிறான், ஆனால் நானவனைப் பகைக்கிறேன், ஏனென்னில் அவன் என்பேரில் நன்மையாக வல்லதன் நாள்களிலெல்லாந் தின்மையாகத்தானே தீர்க்கதெரிசனஞ் சொல்லுகிறவனென்றான். அதுக்கு யோசபாத்: இராசா அப்படிச்சொல்லாராகவென்றான்.

௮. அப்போது இஸ்ரவேலின் இராசா பிரதானி ஒருத்தனைக் கூப்பிட்டு: இம்லாவின் குமாரனாகிய மிகாயாவைச் சீக்கிரமாயழைத்துவாவென்றான்.

௯. இஸ்ரவேலின் இராசாவும் யோசபாத்தென்ற யூதாவின் இராசாவுமோ வென்றால் சமாரியாவின் ஒலிமுக வாசலுக்கு முன்னான விசாலத்திலே அவரவர் தங்கள் வஸ்திரங்களைத் தரித்துக்கொண்டவர்களாய்த் தந்தந்த ஆசனத்தில் உட்கார்ந்திருந்தார்கள், சகல தீர்க்கதெரிசிகளும் அவர்களுக்கு முன்பாகத் தீர்க்கதெரிசனஞ் சொல்லிக்கொண்டிருந்தார்கள்.

௰. கெனானாவின் குமாரனாகிய சிதேக்கியா தனக்கிருப்புக் கொம்புகளை யுண்டாக்கி: இவைகளால் நீர் சூரியரை, அவர்களை நிர்மூலமாக்குமட்டும் முட்டிப்போடுவீரென்று கர்த்தர் சொல்லுகிறாரென்றான்.

௰௧. சகல தீர்க்கதெரிசிகளும் அதற்கிசைவாய தீர்க்கதெரிசனஞ் சொல்லி: கீலேயாத்திலுள்ள ராமோத்துக்குப் போயேறும், உமக்குவாய்க்குங் கர்த்தர் அதை இராசாவின் கையிலே ஒப்புக்கொடுப்பாரென்றார்கள்

௰௨. மிகாயாவை அழைக்கப்போனவன் அவ

வனுட

வனுடனே : இதோ, தீர்க்கதரிசிகளின வாறதைகளஎகவாககாய இராசாவின பேரிலநனமையாகஇருககுது.உமமுடவாறதையும அவர்களில ஒருததர் வாறதையை பபோலிருககும படிககு நனமையாய்பபேசுமெனெனறுன.

௰௩. மிகாயாவோவெனில்: எனனுடபராபரன சொல்வதையேபேசுவேனெனறு கறதருடைய சீவனைககொணடு சொலலுகிறேனெனறுன.

௰௪. அவனஇராசாவணடைககுவநதபோது இராசா அவனுடனே : மிகாயாவே, நாஙகளகீலேயாதிலுளளராமோததினமேலுபிதததபணணபபோகலாமோபோகாதிருபபேனேவெனறுன. அதுககவன: போயேறுஙகோள, உஙகளுககுவாயககும,உஙகளகையிலே பபுககொடுககபபடுவார்களெனறுன.

௰௫. இராசாஅவனுடனே: நீகறதருடைய நாமததிலேநிசததைமாததிரமனனேடேசொலலநானெததனைதரம உனனை யாணையிடடுக்கொளளவேணுமெனறுன.

௰௬. அபபோதவன:இஸ்ருவேலெலலாமமேயபபனிலலாத ஆடுகளைபபோலபறுவதஙகளிலச்சிதறபபடடதை ககணடேன, அபபோதுகறதர்: இவர்களுககாணடவனிலலை, அவனவனதனதனவீடடுககுசசமாதானததோடேதிருமபககடவார்களெனறுரைததாரெனறுன.

௰௭. அபபோது இஸ்ருவேலின இராசா யோசபாததுடனே:இவனெனபேரிலே தினமையாயலலாமல நனமையாய் ததீர்ககதரிசனஞசொலலுகிறவனலல வெனறுநான உமமோடே சொலலவிலலையோவெனறுன.

௰௮. அபபுறமஅவன சொனனதாவது:இபபோதுஙகறதருடைய வாறதையை ககேளுஙகோள,கறதர்தமமுடஆசனததினமேலுளககாரநதிருககிறதையுமபாரததினசேனையெலலாமஅவர்வலதுபககததிலும அவர்இடதுபககததிலும நிறகிறதையுஙகணடேன.

௰௯. அபபோதுகறதர்:இஸ்ருவேலினஇராசாவாகிய ஆகாப் போயேறி, கீலேயாதிலுளளராமோததிலவிழுமபடிககவனைபபயிததிவிபபவனாரெனறுகேடடதறகொருததர்இபபடியும ஒருததர்அபபடியுமாய்சசொனனார்கள.

௨௰. ஆனாலஒருஆவிபுறபபடடுவநதுகறதருககுமுனபாகநினறு: நானஅவனைபபயிததிவிபபேனெனறுது.எதினாலெனறுகறதாதைககேடடார்.

௨௧. அபபோதது:நானபுறபபடடுபபோய் அவனுடையெலலாததீர்ககதரிசிகளின வாயிலும பொயயின ஆவியாயிருபபேனெனறுது. அபபோதவர்:நீயவனைபபயிததிவிதது அபபடியாகவுமபணணுவாய,போயஅபபடிச்செயயெனறுர்.

௨௨. இபபோதும,இதோகறதர்பொயயின ஆவியையிநதஉமமுடதீர்ககதரிசிகளினவாயிலேகடடவிடடார், கறதருன பேரிலே தினமையாகப்பேசினாரெனறுன.

௨௩. அபபோதுகேனானாவின குமாரனாகிய சிதேககியா சேர்நது வநது,மிகாயாவைககனனததிலடிதது: உனனோடே பேசககறதருடைய ஆவியெநதவழியாயெனனை விடடு தாணடிபபோசசுதெனறுன.

௨௪. அதறகுமிகாயா:இதோ, நீயொளிநதுககொளள அறைவீடு அறைவீடாசபபதுஙகும அநநாளிலேஅதைபபார்பபாயெனறுன.

௨௫. அபபோது இஸ்ருவேலின இராசா சொனனதாவது:நீஙகளமிகாயாவைபபிடிதது, அவனைபபடடணததுததலைவனாகிய ஆமோனணடைககுமஇராசாககுமாரனாகியயோவாசணடைககுநதிருமபககொணடுபோய:

௨௬. நீஙகளிவனைசசிறைசாலையிலவைதது, நானசமாதானததோடேதிருமபிவருமடடுமஅவனுககொடுககததின அபபததையுமஒடுககததினதணணீரையுஞசாபபிடககொடுஙகோளெனகிறதைஇராசா சொனனாரெனறு சொலலுஙகோளெனறுன.

௨௭. அபபோது மிகாயா: நீர்சமாதானததோடேதிருமபவேதிருமபினால,கறதர்எனனைககொணடுபேசினதிலலையெனறுசொலலி:சனககுமபுகளாகியநீஙகளெலலாருமஇதைககேளுஙகோளெனறுன.

௨௮. அபபடியே இஸ்ருவேலின இராசாவுமயோசபாததெனற யூதாவின இராசாவுஙகீலேயாதிலுளளராமோததுககேறிபபோனார்கள.

௨௯. ஆனாலஇஸ்ருவேலினஇராசா யோசபாததுடனே: நான வேஷமாறி யுததததிலேவருவேன,நீரோவெனறாலஉமமுடவஸ்திரஙகளைத்தரிததிருமெனறுசொலலி, இஸ்ருவேலினராசாவேஷமாறினான, அபபடியேயுததததிலேவநதான.

௩௰. சூரியாவினஇராசாவோவெனில்தனனகதிருககிறரதஙகளின தலைவருககு: நீஙகள இஸ்ருவே

ரூவேலின் இராசாவொருத்தனோடேயொழிய, சிறியவனோடும் பெரியவனோடும் யுத்தம்பண்ணாதேயுங்கோளென்று கற்பித்திருந்தான்.

௩௧. ஆனதுகொண்டு இரதங்களின் தலைவர் யோசபாத்தைக் காண்கையில்: இவன் இஸ்ரூவேலின் இராசாவென்றுசொல்லி, யுத்தம்பண்ண அவனைச்சுற்றினார்கள்; ஆனால் யோசபாத் கூக்குரலிட்டான், அப்போது கர்த்தர் அவனுக்கனுசாரியாகி, பராபரன் அவர்களையவனைவிட்டுவிலக்கினார்.

௩௨. இவன் இஸ்ரூவேலின் இராசாவல்லவென்று இரதங்களின் தலைவர்கண்டபோது, அவனைவிட்டுத்திரும்பிக்கொண்டார்கள்.

௩௩. ஆனால் ஒருமனுஷன் நினையாமல் வில்லை நாணேற்றி, இஸ்ரூவேலின் இராசாவைச்சீராவின் சந்துகளுக்குள்ளே எய்துபோட்டான். அப்போதவன் இரதக்காறனுடனே: நீயுன்கையைத் திருப்பி, என்னைச்சாணுவத்திலிருந்தப்புறப்படுத்து, ஏனென்றால் காயப்பட்டிருக்கிறேனென்றான்.

௩௪. அன்றைப்பிற்றினம் யுத்தம் அதிகரிக்கையில் இஸ்ரூவேலின் இராசா சூரியருக்கெதிராக இரதத்தின்மேலே சாயுங்காலமட்டும் நின்றிருந்து, சூரியன் அஸ்தமிக்கும் நேரத்திலே சென்றுபோனான்.

## ௰௯. அதிகாரம்.

**யோசபாத் கடிந்துகொள்ளப்பட்டு, அப்புறந் தேவபத்தியாயப்பண்ணின இராச்சியபாரம்.**

யூதாவின் இராசாவாகிய யோசபாத்தோவென்றால் யெருசலேமிலிருக்கிற தன்னுடைய வீட்டுக்குச்சமாதானத்தோடே திரும்பிவந்தான்.

௨. அப்போது அனானியின் குமாரனாகிய யேகூவென்றஞானதிஷ்டிப்புருஷன்புறப்பட்டு அவனைச்சந்தித்து, இராசாவாகிய யோசபாத்துடனே சொன்னதாவது: ஆகாதவனுக்கொத்தாசைசெய்து, கர்த்தரைப்பகைக்கிறவர்களை நீர் சினேகிக்கலாமோ? இதுநிமித்தியங் கர்த்தராலே கடுங்கோபம் உம்முடமேலே வருகிறதாயிருந்தது.

௩. ஆகிலும் நீர் விக்கிரகத்தோப்புகளைத் தேசத்தைவிட்டகற்றிப் பராபரனைத்தேடவும் உம்முட இருதயத்தை நேராக்கின சற்குணக்காரியங்கள் உம்முடத்திலே காணப்பட்டதென்றான்.

௪. அப்படியே யோசபாத் யெருசலேமிலே வாசமாயிருந்து, திரும்பப் பெறசேபாவைத்துவக்கி எப்பிராயீம்மலைத்தேசமட்டுமுள்ள சனத்துக்குள்ளே பயணமாய்ப்போய், அவர்களைத் தங்கள் பிதாக்களுடைய பராபரனாகிய கர்த்தரண்டைக்குத் திரும்பப்பண்ணினான்.

௫. அவன் யூதாவின் அரணான சகல பட்டணங்களாகிய ஒவ்வொரு பட்டணங்களிலே நியாயாதிபதிகளை வைத்து,

௬. நியாயாதிபதிகளோடே சொன்னதாவது: நீங்கள் செய்கிறகாரியத்துக்காகச் சரிக்கையாயிருங்கோள், ஏனெனில் நீங்கள் மனுஷனுடைய கட்டளையினாலல்ல, கர்த்தருடைய கட்டளையினாலே நியாயம் விசாரிக்கிறீர்கள், நியாயம் விசாரிக்கிற காரியத்திலே அவர் உங்களுடனேயிருக்கிறார்.

௭. இப்போதுங் கர்த்தருக்குப் பயப்படுதல் உங்கள்மேலிருக்கக்கடவது, சாவதானமாயிருந்ததைச் செய்யுங்கோள், ஏனென்றால் உங்கள் பராபரனாகிய கர்த்தரிடத்திலே அநியாயமும் முகத்தாட்சிணியமும் பரிதானம் வாங்குதலுமில்லையென்றான்.

௮. யெருசலேமிலும் யோசபாத் லேவியரிலும் ஆசாரியரிலும் இஸ்ரூவேலுடைய வங்கிஷத்தலைவரிலுஞ்சிலரைக் கர்த்தருடைய நியாயத்துக்கும் வழக்குக்காரியங்களுக்கும் விசாரிப்புக்காராக்கி அவர்களை யெருசலேமுக்குத் திரும்பிக்கொள்ளப்பண்ணி,

௯. அவர்களுக்குக் கற்பித்ததாவது: நீங்கள் கர்த்தருக்குப் பயந்து, உண்மையோடும் உத்தம இருதயத்தோடும் உத்தியோகஞ்செய்து,

௰. தங்கள் பட்டணங்களிலே குடியிருக்கிற உங்கள் சகோதரரிடத்திலிருந்து விதவிதமான இரத்தப்பழிகாரியங்களுக்கும், விதவிதமான பிரமாணத்துக்குங் கற்பனைக்குங் கட்டளைகளுக்கும் நியாயங்களுக்குமடுத்த எந்தவழக்கு உங்களண்டைக்குவந்தாலும், அவர்கள் கர்த்தருக்கு நேரஸ்தராகி உங்கள்மேலும் உங்கள் சகோதரர்மேலுங் கடுங்கோபம் வராதபடிக்கு நீங்கள் அவர்களை எச்சரியுங்கோள், நீங்கள் நேரஸ்தராகாதபடிக்கு இப்படிச்செய்வீர்களாக.

௰௧. இதோ, ஆசாரியனாகிய அமரீயா கர்த்தருக்கடுத்த எல்லா நியாயத்திலும், இஸ்மவேலின் குமாரனாகிய செபதீயாவென்ற யூதா வீட்டின் தலைவன் இராசாவுக்கடுத்த எல்லா நியாயத்திலும் உங்களுக்குப் பெரியவர்கள், லேவியரான அதிக்காரரும் உங்களுக்குமுன்பாகவிருக்கிறார்கள்,

கள், நீங்கள் பெலத்துக்கொண்டு உத்தியோகஞ் செய்யுங்கோள், நல்லவனோடே கர்த்தரிருப்பாரென்றான்.

## ௨௰. அதிகாரம்.

யோசபாத் அம்மோனியரையும் மோவாபியரையும் ஜெயித்தது.

இதற்குப் பிற்பாடு சம்பவித்ததேதென்றால் மோவாப்புத்திரரும் அம்மோனபுத்திரரும் அவர்களோடே அம்மோனியருக்கப்புறத்தாரான மனுஷரும் கூட யோசபாத்தின் மேல் யுத்தம் பண்ணவந்தார்கள்.

௨. சிலர் வந்து யோசபாத்துக்கு அதையறிவித்தது: உம்முடைய மேல் ஏராளமான சனங்கடலுக்கக்கரையிலிருக்கிற சூரியப்புறத்திலிருந்து வருகுது; இதோ, அவர்கள் எங்கேதியாகிய ஆத்சேசோன் தாமாரிலிருக்கிறார்களென்றார்கள்.

௩. அப்பொழுது யோசபாத் பயந்து, கர்த்தரைத் தேடுகிறதற்குத் தன் முகத்தைத் திருப்பி, யூதாவெங்கும் உபவாசத்தைக் கூறுவித்தான்.

௪. அப்படியே யூதசனங்கள் கர்த்தரிடத்திலே சகாயந் தேடக் கூடினார்கள்; யூதாவிலுள்ள எல்லாப் பட்டணங்களிலுமிருந்து மனுஷர் கர்த்தரைத் தேடவந்தார்கள்.

௫. அப்பொழுது யோசபாத் கர்த்தருடைய வீட்டிலே புதுப்பிரகாரத்து முகப்பிலே யூதசனங்களும் யெருசலேமியாருங் கூடின சபையிலே நின்று சொன்னதாவது:

௬. எங்கள் பிதாக்களின் பராபரனாகிய கர்த்தாவே, பரமண்டலங்களிலிருக்கிற தேவரீரல்லவோ பராபரன், தேவரீர் சாதிகளுடைய ராச்சியங்களையெல்லாம் ஆளுகிறவர், உம்முடைய கரத்திலே வல்லமையும் பராக்கிரமுமுண்டாயிருக்குது, ஒருத்தரும் உம்மோடே எதிர்த்து நிற்கக்கூடாது.

௭. எங்கள் பராபரனாகிய தேவரீர் உம்முடைய சனமாகிய இஸ்ரவேலுக்கு முன்பாக இந்தத் தேசத்துக் குடிகளைத் துரத்திவிட்டு, இதை உம்முடைய பிரியனாகிய ஆபிரகாமுடைய வித்துக்கு என்றைக்குமென்று கொடுத்ததில்லையோ?

௮. ஆனதுகொண்டு இதிலே குடியிருந்து, இதிலே உம்முடைய நாமத்துக்கென்று ஒரு பரிசுத்த ஸ்தலத்தையுங் கட்டினார்கள்.

௯. எங்கள் மேலே பட்டயம், ஆக்கினை, கொள்ளைநோய், பஞ்சமுதலான பொல்லாப்பு வந்தால், அப்பொழுது உம்முடைய நாமம் இந்த வீட்டிலிருக்கிறபடியினாலே நாங்கள் இந்த வீட்டுக்கும் உமக்கும் முன்பாகவும் வந்துநின்று, எங்கள் இக்கட்டிலும்மை நோக்கிக் கூப்பிடுகையில் தேவரீர் கேட்டு ரட்சிப்பீரென்றப்போ சொல்லப்பட்டுதே.

௰. இப்பொழுதும் இதோ, இஸ்ரவேலர் எகிப்து தேசத்திலிருந்து வருகிற போது, அம்மோனபுத்திரர் மோவாபியர் சேயீர் மலைத்தேசத்தாருடைய சீமைகள் வழியாய்ப் போக நீர் உத்தாரங் கொடுத்ததில்லை; ஆகையால் அவர்களை விட்டு விலகி அவர்களுக்குக் கேடு செய்யாதே போனார்களே.

௰௧. இப்பொழுதும் இதோ, அவர்கள் எங்களுக்கு நன்மைக்குத் தின்மை சரிக்கட்டி, தேவரீர் எங்களைச் சுதந்திரிக்கப் பண்ணின உம்முடைய சுதந்திரத்திலிருந்து எங்களைத் துரத்திவிட வருகிறார்கள்.

௰௨. எங்கள் பராபரனே, அவர்களை நீர் நியாயந் தீரீரோ? ஏனென்றால் எங்களுக்கு விரோதமாக வந்த இந்த ஏராளமான கூட்டத்துக்கு முன்பாக நிற்க எங்களிலே பெலனில்லை, நாங்கள் செய்யவேண்டியதையும் நாங்களறிகிறதுமில்லை, ஆகையால் எங்கள் கண்கள் உம்மை நோக்கிக் கொண்டிருக்குதென்றான்.

௰௩. யூதகோத்திரத்தார் அனைவரும் அவர்கள் குழந்தைகளும் அவர்கள் பெண்சாதிகளும் அவர்கள் குமாரருங் கூட கர்த்தருக்கு முன்பாக நின்றார்கள்.

௰௪. அப்பொழுது சபையின் நடுவிலிருக்கிற மத்தனீயாவின் குமாரனாகிய ஏயியேலின் மகனான பெனாயாவுக்குப் பிறந்த சகரீயாவின் குமாரனாய் ஆசாப்பின் புத்திரரிலொருத்தனான லேவியனின் பேரிலே கர்த்தருடைய ஆவி இறங்கினதினால் அவன் சொன்னதாவது:

௰௫. எல்லா யூதகோத்திரத்தாரே, யெருசலேமின் குடிகளே, இராசாவாகிய யோசபாத்தே, கவனியுங்கோள், நீங்கள் அந்த ஏராளமான கூட்டத்துக்குப் பயப்படாமலும் கலங்காமலுமிருங்கோளென்று கர்த்தர் உங்களுக்குச் சொல்லுகிறார், ஏனென்றால் அந்த யுத்தம் உங்களுடையதல்ல, பராபரனுடையது.

௰௬. நாளை அவர்களுக்கெதிராக இறங்கிப் போங்கோள்; இதோ, அவர்கள் சீசின் மேட்டு வழியாய் ஏறிவருகிறார்கள், நீங்கள் அவர்களை யெருவேல் வனாந்தரத்துக்கெதிரான பள்ளத்தாக்கின்



கடை—

கடையாந்திரத்திலே கண்டுசந்திப்பீர்கள்.

௰௭. இந்த யுத்தத்தைப் பண்ணுகிறவர்கள் நீங்கள் அல்ல; யூதா மனுஷரே, யெருசலேம் ஊராரே, நீங்கள் தரித்து நின்றுகொண்டு, உங்களோடிருக்கிற கர்த்தாவின் இரட்சிப்பைப் பாருங்கோள், பயப்படாமலும் கலங்காமலுமிருங்கோள், நாளைக்கு அவர்களுக்கு எதிராகப் புறப்படுங்கோள், என்னில் கர்த்தர் உங்களோடிருக்கிறாரென்றான்.

௰௮. அப்பொழுது யோசபாத் தரைமட்டும் முகங்குனிந்தான், எல்லா யூதா கோத்திரத்தாரும் யெருசலேமின் குடிகளுங் கர்த்தரைப் பணிந்துகொள்ளக் கர்த்தருக்கு முன்பாகத் தாழவிழுந்தார்கள்.

௰௯. கேகாத்தியரின் புத்திரரிலுங் கோராகியரின் புத்திரரிலுமிருந்த லேவியர் எழுந்திருந்து, இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தரை மகா சத்தத்தோடே மிகுதியுமாய்த் துதித்தார்கள்.

௨௰. அவர்கள் அதிகாலமே எழுந்திருந்து, தெக்கோவாவின் வனாந்தரத்துக்குப் புறப்பட்டார்கள், புறப்படுகையில் யோசபாத் நின்று: யூதாவே, யெருசலேமின் குடிகளே, என்னைக் கேளுங்கோள், உங்கள் பராபரனாகிய கர்த்தரை விசுவாசியுங்கோள், அப்பொழுது நிச்செயப்படுவீர்கள், அவருடைய தீர்க்கதரிசிகளை நம்புங்கோள் அப்பொழுது உங்களுக்கு வாய்க்குமென்றான்.

௨௧. பிற்பாடவன் சனத்தோடே ஆலோசனைபண்ணிப் பரிசுத்தமுள்ள மகத்துவத்தைத் துதிக்கவும், ஆயுதமணிந்தவர்களுக்கு முன்னாக நடந்துபோய்: கர்த்தரைத் துதியுங்கோள், என்னில் அவர் கிருபை யென்றுமுள்ளதென்று கர்த்தரைப் பாடவும் பாடகரை நிறுத்தினான்.

௨௨. அவர்கள் கெம்பீரத்தோடுந் துதியோடும் பாடத் துவக்குகிற நேரத்திலே-யென்றால் கர்த்தர் யூதாவுக்கு விரோதமாய் வந்த அம்மோன் புத்திரரையும் மோவாபியரையுஞ் சேயீர்மலைத் தேசத்தாரையும் ஒன்றுக்கொன்று விரோதிக்கிறபடி விடைகளாய்ப் போகப்பண்ணுகிறதினாலே அவர்கள் வெட்டுண்டுவிழுந்தார்கள்.

௨௩. அதெப்படியென்றால் அம்மோன் புத்திரரும் மோவாபியருஞ் சேயீர்மலைத் தேசக்குடிகளைச் சங்கரிக்கவும் அழிக்கவும் அவர்களுக்கு விரோதமாயெழும்பினார்கள், சேயீர்க்குடிகளை யழித்துத் தீர்ந்தபோது தாங்களுந் தங்களை யொன்றுக்கொன்று அழியத்தக்கவண்ணமாய்க் கைகலந்தார்கள்.

௨௪. யூதா மனுஷர் வனாந்தரத்திலுள்ள சாமக்கூட்டண்டையிலே வந்து அந்தத் தானமான கூட்டமிருக்குந் திக்கை நோக்குகிறபோது, இதோ, அவர்கள் தரையிலே விழுந்துகிடக்கிற பிரேதங்களென்று கண்டார்கள், ஒருத்தருந் தப்பினதில்லை.

௨௫. அப்பொழுது யோசபாத்தும் அவனுடைய சனமும் அவர்கள் உடைமைகளைக் கொள்ளையிட வந்து அவர்களில் பரிபூரணமான ஆஸ்தியையும் பிரேதங்களிலிருக்கிற ஆடை ஆபரணங்களையுங் கண்டு இனியெடுக்கமாட்டாத சுமையாயெடுத்துக்கொண்டார்கள், மூன்றுநாளாய்க் கொள்ளையிட்டார்கள், என்னில் அது வெகுவாயிருந்தது.

௨௬. நாலாம்நாளிலே இஸ்தோத்திரப்பள்ளத்தாக்கிலே கூடினார்கள், என்னில் அங்கே கர்த்தருக்கு இஸ்தோத்திரஞ் செலுத்தினார்கள்; ஆனதுகொண்டு அவ்விடத்துக்கு இந்நாள்வரைக்குமிருக்கிற இஸ்தோத்திரப்பள்ளத்தாக்கென்கிற பேரைத் தரித்தார்கள்.

௨௭. பிற்பாடு எல்லா யூதா மனுஷரும் யெருசலேமாரும் அவர்களுக்கு முன்னாலே யோசபாத்தும் மகிழ்ச்சியோடே யெருசலேமுக்குத் திரும்பிவரப் புறப்பட்டார்கள், என்னென்றால் கர்த்தர் அவர்களை யவர்கள் சத்துருக்களைத் தொட்டு மகிழ்ச்சியாக்கியிருந்தார்.

௨௮. அவர்கள் தம்புருக்களோடுஞ் சுரமண்டலங்களோடும் பூரிகைகளோடும் யெருசலேமிலிருக்கிற கர்த்தருடைய வீட்டுக்கு வந்தார்கள்.

௨௯. கர்த்தர் இஸ்ரவேலின் சத்துருக்களோடே யுத்தம்பண்ணினாரென்று கேள்விப்பட்ட அந்தத் தேசங்களின் ராச்சியங்களெல்லாம் பராபரனாலே பயங்கரமுண்டாச்சுது.

௩௰. அப்படியே யோசபாத்தின் ராச்சியபாரம் அமரிக்கையாயிருந்தது. அவனுடைய பராபரன் சுற்றுப்புறத்தாரால் உபத்திரவமில்லாததினாலே இளைப்பாறுதலை யவனுக்குக் கட்டளையிட்டார்.

௩௧. யோசபாத் யூதாவை அரசாண்டான். அவன் இராசாவாகிறபோது முப்பத்தைந்து வயதாயிருந்து, இருபத்தைந்து வருஷமாய் யெருசலேமிலே அரசாண்டான். சில்கீயின் குமாரத்தியாகிய அவனுடைய தாயின் பேர் அசுபாள்.

௩௨. அவன் தன் தகப்பனாகிய ஆசாவின் வழியிலே நடந்து, அதைவிட்டு விலகாதிருந்து, கர்த்தரின் பார்வைக்குச் செம்மையானதைச் செய்தான்.

௩௩. ஆகிலும் மேடைகள் தள்ளப்பட்டதில்லை, என்னிலே சனங்கள் இருதயத்தைத் தங்கள் பிதாக்களின் பராபரனுக்கு இன்னம் நேராக்காதிருந்தது.

௩௪. யோசபாத்துடைய முன்பின்னடப்படியான மற்றவர்த்தமானங்களோவென்றால், இதோ, அதுகளிஸ்ரவேல் இராசாக்களின் புஸ்தகத்திலெழுதியிருக்கிற ஆனானியின் குமாரனாகிய யேகூவின் வசனங்களிலெழுதியிருக்குது.

௩௫. அதற்குப்பிறபாடு யூதாவின் இராசாவாகிய யோசபாத் பொல்லாப்பைச்செய்கிறவனான அகசியாவென்ற இஸ்ரவேலின் இராசாவோடே தோழமைபண்ணினான்.

௩௬. யாத்திரைபோகிறதற்குக் கப்பல்களைச் செப்பனிட அவனோடே தோழமைபண்ணினான், அப்படியேஎத்சேயோன் கேபேரிலேகப்பல்களைச்செப்பனிட்டார்கள்.

௩௭. ஆனாலுமரேசாவூரானாகியதோதாவாவின் குமாரனான எலியேசர்யோசபாத்துக்கு விரோதமாகத் தீர்க்கத்தெரிசனஞ்சொல்லி: நீர் அகசியாவோடே தோழமைபண்ணினபடியினாலே கர்த்தர் உம்முடைய கிரிகைகளை முறித்துப்போட்டாரென்றான். அப்படியே கப்பல்கள் யாத்திரைபோகக் கூடாமலுடைந்தது.

௨௧. அதிகாரம்.

யோசபாத்துக்குப்பிறபாடு யோராம் இராசாவாகிப்பண்ணின ஆகாத்தியமும் அடைந்த ஆக்கினையும்.

யோசபாத் தன் பிதாக்களோடே நித்திரையடைந்தபின் தாவீதின் பட்டணத்திலே தன் பிதாக்களண்டையிலே அடக்கம்பண்ணப்பட்டான், அவனிஸ்தலத்திலே அவன் குமாரனான யோராம் இராசாவானான்.

௨. யோசபாத்தின் குமாரராகிய அசரீயா, எகியேல், சகரீயா, ஆசரீயா, மிகவேல், செப்பத்தியாவென்ற சகோதரர் அவனுக்கிருந்தார்கள் இவர்களெல்லாம் இஸ்ரவேலின் இராசாவாகிய யோசபாத்தின் குமாரரானவர்கள்.

௩. இவர்களுக்கிவர்களுடைத்தகப்பன் வெள்ளியும்பொன்னும் உச்சிதங்களுமான அனேகங்காணிக்கைகளையும் யூதாவிலே அரணான பட்டணங்களையுங்கொடுத்தார். ஆனால் யோராந் தலைச்சனானபடியினாலே அவனுக்கு ராச்சியத்தைக்கொடுத்தான்.

௪. யோராந் தன்தகப்பனுடைய ராச்சிய பாரத்துக்குவந்து பெலன்கொண்ட பிற்பாடோவெனில், அவன் தன்னுடையெல்லாச் சகோதரரை யும் இஸ்ரவேலின் பிரபுக்களிலே சிலரையுங் கூடப்பட்டயத்தாலக்கொன்றுபோட்டான்.

௫. யோராம் இராசாவாகிறபோது முப்பத்திரண்டுவயதாயிருந்து, எட்டுவருஷமாக எருசலேமிலரசாண்டான்.

௬. அவன் இஸ்ரவேல் இராசாக்களின் வழியிலநடந்து, ஆகாபின் வீட்டார் செய்ததுபோலேசெய்தான், ஏனெனில் ஆகாபின் குமாரத்தி அவனுக்குப்பெண்சாதியாயிருந்தாள், அவன் கர்த்தரின் பார்வைக்குப்பொல்லாப்பானதைச்செய்தான்.

௭. கர்த்தரோவென்றால் தாவீதுக்கும் அவன் குமாரருக்குஞ்சகல நாளுமொருவிளக்கைக் கட்டளையிடுவோமென்றுசொல்லி அவனுக்குப்பண்ணின உடம்படிக்கையினிமித்தந் தாவீதின் வீட்டைக்கெடுக்கச்சித்தமில்லாதிருந்தார்.

௮. அவன் நாட்களிலே யூதாவுடைய கையின் கீழிருந்த ஏதோமியர் மருளவிழுந்து, தங்கள்மேலோரு இராசாவைவைத்தார்கள்.

௯. அதுக்காகயோராந் தன் பிரபுக்களோடுந் தன்னெல்லா ரதங்களோடும் புறப்பட்டுப்போனான். அவன் ராத்திரியிலெழுந்திருந்து, தன்னை வளைந்துகொண்ட ஏதோமியரையும் ரதங்களின் தலைவரையும் முறியடித்தான்.

௰. ஆகிலும் யூதாவுடைய கையின் கீழிருந்த ஏதோமியர் இந்நாள்வரைக்குமிருக்கிறதைப்போல மருளவிழுந்தார்கள். அவன் தன் பிதாக்களின் பராபரனாகிய கர்த்தரை விட்டபடியினாலே அக்காலத்திலே லிப்னாப்பட்டணமும் அவன் கையின் கீழிருந்து மருளவிழுந்தது.

௧௧. அவன் யூதாவுடைய மலைகளின்மேலே மேடைகளையுமுண்டாக்கி, எருசலேமின் குடிகளைச்சோரம்போகப்பண்ணி, யூதாவையதுக்கேவிவிட்டான்.

௧௨. அப்போது தீர்க்கதெரிசியாகிய எலியாவெழுதியிருந்த ஒருநிருபம் அவனண்டைக்கு வந்தது, அதின் விபரமாவது: உம்முடைத்தகப்பனான தாவீதின் பராபரனாகிய கர்த்தருரைக்கிறதேதெனில், நீயுன் தகப்பனாகிய யோசபாத்தின் வழிகளிலும், யூதாவின் இராசாவாகிய ஆசாவின் வழிகளிலும் நடவாமல்,

௧௩. இஸ்ரவேல் இராசாக்களின் வழியிலே நடந்து, ஆகாபுடவீட்டின் சோரமார்க்கத்துக்கொத்தபடியே யூதாவையும் எருசலேமின் குடிகளையுஞ்சோரம்போகப்பண்ணி, உன்னைப்

பார்க்க நல்லவர்களாயிருந்த உன் தகப்பன் வீட்டாரான உன் சகோதரரையுங் கொன்றுபோட்டபடியினாலே;

௰௪. இதோ, கர்த்தர் உன்னுடைய சனத்தையும் உன் பிள்ளைகளையும் உன் பெண்சாதிகளையும் உனக்குண்டானவதெல்லாத்தையும் மகா வாதையாக வாதிப்பார்.

௰௫. நீயோவென்றால் ரோகத்தினாலே உன் குடல்கள் நாளுக்குநாள் இற்றுவிழுந்தனினும் உன் குடல்களின் ரோகமான மகா வியாதிகளினாலே வாதிக்கப்படுவாயென்பதுதானே.

௰௬. அப்படியே கர்த்தர் பெலிஸ்தரின் ஆவியையுங் கூஷியரின் அசலத்தேசத்தாரான அறபியரின் ஆவியையும் யோறாமுக்கு விரோதமாக எழுப்பினார்.

௰௭. இவர்கள் யூதாவில் வந்தேறி அதுக்குள்ப்புகுந்து இராசாவின் வீட்டில் அகப்பட்ட வெல்லா ஆஸ்தியையும் அவன் பிள்ளைகளையும் அவன் பெண்சாதிகளையும் பிடித்துக்கொண்டுபோனார்கள், யோவாகாஸ் என்ற அவன் குமாரரில் இளையவனையல்லாமல் ஒரு குமாரனும் அவனுக்கு மீந்தியானதில்லை.

௰௮. இதுகளெல்லாத்துக்கும் பிறபாடு கர்த்தர் அவனை அவன் குடல்களிலுண்டான தீராத ரோகத்தினால் வாதித்தார்.

௰௯. அப்படி நாளுக்குநாளிருந்து, இரண்டு வருஷங்கள் முடிகிற காலத்திலே அவனுடைய குடல்கள் அவனுடைய ரோகத்தோடே சரிந்து, கடின வியாதிகளினாலே செத்துப்போனான். அவனுடைய பிதாக்களுக்காகச் செந்தவறங்களைக் கொளுத்தினதுபோலே அவனுடைய சனம் அவனுக்காகக் கொளுத்தினதில்லை.

௨௰. அவன் இராசாவாகிறபோது முப்பத்திரண்டு வயதாயிருந்து, எட்டு வருஷமாய் எருசலேமில் அரசாண்டு விருப்பப்படாமல் போனான், அவனைத் தாவீதின் பட்டணத்தில் அடக்கம்பண்ணினார்கள், ஆனால் இராசாக்களின் கல்லறைகளிலல்ல.

## ௨௨. அதிகாரம்.

*யோறாமுக்குப்பிறகு இராசாவான அகசீயா வெட்டுண்டுபோனபின் அத்தலியாள் பண்ணின கொடூரம்.*

எருசலேமின் குடிகள் அவன் இளைய குமாரனாகிய அகசீயாவை யவனிஸ்தலத்தில் இராசாவாக்கினார்கள், ஏனெனில் அறபியரோடே கூட வந்து பாளையமிறங்கின தண்டு மூத்தவர்களையெல்லாங் கொன்றுபோட்டது. அப்படியே அகசீயா வென்ற யூதாவின் இராசாவாகிய யோறாமின் குமாரன் அரசாண்டான்.

௨. அகசீயா இராசாவாகிறபோது இருபத்திரண்டு வயதாயிருந்து, ஒரு வருஷம் எருசலேமில் அரசாண்டான். ஒம்றியின் குமாரத்தியாகிய அவன் தாயின் பேர் அத்தலியாள்.

௩. இவனும் ஆகாப் வீட்டாரின் வழிகளில் நடந்தான். ஏனெனில் துன்மாறக்காரிய நடக்க அவனுடைய தாய் அவனுக்கு ஆலோசனைக்காறியாயிருந்தாள்.

௪. அவன் ஆகாபின் வீட்டாரைப்போலக் கர்த்தரின் பார்வைக்குப் பொல்லாப்பானதைச் செய்தான், ஏனென்றால் அவன் தகப்பன் செத்துப்போனபிறபாடு அவர்கள் அவனுக்குக் கேடாக அவனுடைய ஆலோசனைக்காறராயிருந்தார்கள்.

௫. அவர்களுடைய ஆலோசனைக்குள்பட்டவனுமாய் அவன் இஸ்றவேலின் இராசாவாகிய யோறாமென்ற ஆகாபின் குமாரனோடே கூடக் கீலேயாதிலுள்ள றாமோத்துக்கு, சூரியாவின் இராசாவாகிய ஆசகேலுக்கு விரோதமாக யுத்தம்பண்ணப்போனான், அங்கே சூரியர் யோறாமைக் காயப்படுத்தினார்கள்.

௬. அப்பொழுதுதான் சூரியாவின் இராசாவாகிய ஆசகேலோடு யுத்தம்பண்ணுகையில் தன்னை அவர்கள் றாமாவிலே வெட்டின காயங்களை யெஸ்றேயேலிலே ஆற்றிக்கொள்ள அவன் திரும்பினான். அப்பொழுது ஆகாபின் குமாரனாகிய யோறாம் வியாதியானபடியால் யூதாவின் இராசாவாகிய யோறாமின் குமாரன் அகசீயா யெஸ்றேயேலிலிருக்கிற அவனைப் பார்க்கிறதற்கிறங்கிப் போனான்.

௭. ஆனால் அகசியா யோறாமண்டைக்கு வந்து அவனுக்குப் பராபரனாலுண்டான அழியுதலாக லெபித்தது, அதேதென்றால் அவன் வந்தபோது அவன் யோறாமுடனே கூடக் கர்த்தர் ஆகாபின் வீட்டாரைச் சங்கரிக்க அபிஷேகம்பண்ணுவித்த நிம்சியின் குமாரனாகிய யேகூவுக்கெதிர்ப்பட வெளியே போனான்.

௮. யேகூ ஆகாபின் வீட்டாரையாக்கினையிடுகிறபோதே வெளியில் அவன் அகசியாவைச் சேவிக்கிற யூதாவின் பிரபுக்களையும் அகசியாவுடைய சகோதரரின் குமாரரையுங் கண்டுபிடித்துக் கொன்றுபோட்டான்.

௯.

௯. பிற்பாடவன் அகசீயாவைத் தேடினான், சமாரியாவிலொளித்துக்கொண்டடு அவனையவர்கள் பிடித்து யேகூவண்டைக்குக் கொண்டுவந்து அவனைக் கொன்றுபோட்டு: இவன் தன் முழு இருதயத்தோடுங் கர்த்தரைத் தேடின யோசபாத்தின் குமாரனென்று சொல்லி அவனையடக்கம்பண்ணினார்கள். அப்படியே ஆராசாளுகிறதுக்குப் பெலன்கொள்ளத்தக்க ஒருத்தரும் அகசீயாவின் வீட்டுக்கில்லாதேபோச்சுது.

௰. அகசீயாவின் தாயாகிய அத்தலீயாள் தன் குமாரன் செத்துப்போனதைக் கண்டபோதோவெனில் அவளெழும்பி யூதாவின் வீட்டிலுள்ள ராசவங்கிஷமான வித்தாரையெல்லாஞ் சங்காரம்பண்ணினாள்.

௰௧. ஆனால் இராசாவின் குமாரத்தியாகிய யோசேபாத் கொன்றுபோடப்படுகிற இராசகுமாரருக்குள்ளிருக்கிற அகசீயாவின் ஆண்பிள்ளையாகிய யோவாசைக் களவாயெடுத்து அவனையும் அவன் தாதியையுஞ் சயனவீட்டிலே வைத்தாள். அப்படியே அத்தலீயாள் அவனைக் கொன்றுபோடாதபடிக்கு, இராசாவாகிய யோராமின் குமாரத்தியும் ஆசாரியனாகிய யோய்தாவின் பெண்சாதியுமாகிய யோசேபாத் அவனை அத்தலீயாளுக்கிடைஞ்சலாயொளித்தாள், ஏனெனில் அவள் அகசீயாவின் சகோதரியாயிருந்தாள்.

௰௨. இவர்களோடவன் ஆறுவருஷமாய்க் கர்த்தருடைய வீட்டிலே மறைக்கப்பட்டிருந்தான்; அத்தலீயாளோவென்றால் தேசத்தின் மேலிராச்சியபாரம்பண்ணினாள்.

## ௨௩. அதிகாரம்.

### யோவாஸ் இராசாவாக வைக்கப்பட்டது.

ஏழாம் வருஷத்திலோவென்றால் யோய்தா திடன்கொண்டு நூற்றுக்குத் தலைவராகிய யெரோகாமின் குமாரன் அசரீயாவையும், யோகனானின் குமாரன் இஸ்மவேலையும், ஓபேதின் குமாரன் அசரீயாவையும், ஆதாயாவின் குமாரன் மாசேயாவையும், சிக்கிரியின் குமாரன் எலிஷாபாத்தையுந் தன்னுடம்படிக்கைக்குள்ளாக்கிக்கொண்டான்.

௨. இவர்கள் யூதாவிலே சுற்றித்திரிந்து, யூதாவின் பட்டணங்களிலெல்லாம் இருக்கிற லேவியரையும் இஸ்ரவேலுடைய பிதாக்களின் வங்கிஷத்தலைவரையுங் கூட்டிக்கொண்டு யெருசலேமுக்கு வந்தார்கள்.

௩. அந்தச் சபையெல்லாம் பராபரனுடைய வீட்டிலே இராசாவோடே உடம்படிக்கைபண்ணிற்று; யோய்தா அவர்களுடனே சொன்னதாவது: இதோ, கர்த்தர் தாவீதின் குமாரரைக் குறித்துச் சொன்னபடியே இராசாவின் குமாரன் இராசாவாகவேணும்.

௪. நீங்கள் செய்யவேண்டிய காரியமென்னவெனில், இவ்வாரத்தில் முறையிருக்க வருகிற ஆசாரியரும் லேவியருமான உங்களில் மூன்றத்தொருபங்கு ஒலிமுகவாசல்களையும்,

௫. மூன்றத்தொருபங்கு இராசாவின் வீட்டையும், மூன்றத்தொருபங்கு அஸ்திபாரவாசலையுங் காக்கவும், சனமெல்லாங் கர்த்தருடைய வீட்டுப் பிரகாரங்களிலிருக்கவும் வேணும்.

௬. ஆனால் ஆசாரியரையும் லேவியரில் உள்ளூழியஞ்செய்கிறவர்களையுந் தவிர ஒருத்தருங் கர்த்தருடைய வீட்டுக்குள் பிறவேசிக்கவேண்டாம்; அவர்களே யுள்பிறவேசிப்பார்களாக, ஏனெனில் அவர்கள் பரிசுத்தவான்கள், ஆனால் சனமெல்லாங் கர்த்தருடைய காவலைக் காப்பதாக.

௭. லேவியரோவெனில் அவரவர் தங்கள் ஆயுதங்களைத் தங்கள் கையிலே பிடித்துக்கொண்டவர்களாய் இராசாவைச் சுற்றிலும் வளைந்துகொள்வார்களாக, வீட்டுக்குட்படுகிறவனுங் கொல்லியுண்ணக்கடவான், இராசா உள்பிறவேசிக்கிறபோதும் புறப்படுகிறபோதும் நீங்கள் அவரோடிருங்கோளென்றான்.

௮. ஆசாரியனாகிய யோய்தா கற்பித்தபடியெல்லாம் லேவியரும் யூதாகோத்திரத்தாரனைவருஞ்செய்து, அவரவர் அவ்வாரத்து முறையிருக்கவருகிறவர்களும் முறைதீர்ந்து போகிறவர்களுமான தந்தம் மனுஷரைக் கூட்டிக்கொண்டார்கள், ஏனென்றால் வகுப்புகள் பிரிந்துபோக ஆசாரியனாகிய யோய்தா உத்தாரங் கொடுக்கவில்லை.

௯. தாவீது இராசாவுக்கிருந்த பராபரனுடைய வீட்டிலுள்ள ஈட்டிகளையுங் கேடயங்களையும் பரிசைகளையும் ஆசாரியனாகிய யோய்தா நூற்றுக்குத் தலைவருக்குக் கொடுத்தது,

௰. அவரவர் தங்கள் ஆயுதங்களைக் கையிலே பிடித்துக்கொண்டவர்களாய் வீட்டின் வலதுபக்கந்துவக்கி வீட்டின் இடதுபக்கமட்டுமே பலிபீடத்துக்கும் வீட்டுக்கும் எதிரே இராசாவை

ச்சுற்றிலும் நிற்க, சனத்தையெல்லாம் நிறுத்தினான்.

௰௧. பிற்பாடு இராசாவின் குமாரனைப் புறப்படுவரப்பண்ணி, அவன்மேலே கிரீடத்தை வைத்து, அவனுக்குச் சாட்சியின் ஆகமத்தைக் கொடுத்தவனை இராசாவாக்கினார்கள்; யோயதாவும் அவன் குமாரரும் அவனை அபிஷேகம்பண்ணி: இராசா வாழ்கவென்றார்கள்.

௰௨. சனம் ஓடிவந்து இராசாவைப் புகழுகிற சத்தத்தை அத்தலீயாள் கேட்டபோதோவெனில், அவள் கர்த்தருடைய வீட்டுக்குச் சனத்தண்டையிலே வந்து,

௰௩. இதோ, நடையிலுள்ள தன்னுடைய தூண்டையிலே இராசா நிற்கிறதையும் இராசாவண்டையில் நிற்கிற பிரபுக்களையும் பூரிகைகளையூதுகிறவர்களையும், தேசசனமெல்லாஞ் சந்தோஷப்பட்டுப் பூரிகைகளையூதுகிறதையும், பாட்டகர் கீதவாத்தியங்களைப் பிடித்துத் துதிக்கவகைகாண்பிக்கிறதையுங் கண்டாள். அப்பொழுது அத்தலீயாள் தன் வஸ்திரங்களைக் கிழித்துக்கொண்டு: ரோண்டகம் ரோண்டகமென்று கூப்பிட்டாள்.

௰௪. ஆனால் ஆசாரியனாகிய யோயதா சேனாவத்தை விசாரிக்கிற நூற்றுக்குச் சேர்வைக்காறரைப் புறப்படப்பண்ணி, அவர்களுடனே: அவளை வரிசைகளுக்குப் புறம்பே கொண்டுபோங்கோள், அவளைப் பின்செல்லுகிறவன் பட்டயத்தால் சாகக்கடவானென்றான். ஏனென்றால்: கர்த்தரின் வீட்டிலே அவளைக்கொன்றுபோடாதேயுங்கோளென்று ஆசாரியன் சொல்லியிருந்தான்.

௰௫. அவர்கள் அவளுக்கிடமுண்டாக்கினபோது, அவள் இராசாவின் வீட்டுக்கிருக்கிற குதிரைகளின் வாசலுக்குள் பிறவேசிக்குமிடமட்டும் போனாள்; அங்கே அவளைக் கொன்றுபோட்டார்கள்.

௰௬. பிற்பாடு யோயதா, தாங்கள் கர்த்தருடைய சனமாயிருக்கும்படிக்கு, தனக்குமெல்லாச் சனத்துக்கும் இராசாவுக்கும் உடம்படிக்கைபண்ணிக்கொண்டான்.

௰௭. அப்பொழுது சனமெல்லாம் பாகால் வீட்டிலே போய் அதையிடித்து, அதின் பெலிபீடங்களையும் அதின் சுரூபங்களையுந் தகர்த்து, பாகாலின் பூசாரியாகிய மாத்தானைப் பெலிபீடங்களுக்கு முன்பாகக் கொன்றுபோட்டார்கள்.

௰௮. தாவீது கட்டளையிட்ட பிறகாரமாக ச்சந்தோஷத்தோடுங் கீதத்தோடுங் கர்த்தரின் தகனப்பெலிகளை மோசேயின் நியாயப்பிரமாணத்திலெழுதியிருக்கிறபடியே செலுத்தத்தக்கதாக, யோயதா, கர்த்தருடைய வீட்டை விசாரிக்கும் உத்தியோகங்களை, தாவீது கர்த்தருடைய வீட்டுக்கென்று வகுத்துவைத்த லேவியரான ஆசாரியர்களின் கையிலொப்புவித்து;

௰௯. யாதொரு காரியத்திலுந் தீட்டுப்பட்டவன் கர்த்தருடைய வீட்டுக்குள் பிறவேசியாதபடிக்கு அதின் வாசல்களுக்கு வாசல்காப்பாளை நிறுத்தி,

௨௰. நூற்றுக்குச் சேர்வைக்காறரையும் பெரியவர்களையும் சனத்தை ஆளுகிறவர்களையும் தேசசனமனைத்தையுங் கூட்டிக்கொண்டு, இராசாவைக் கர்த்தருடைய வீட்டிலிருந்து இறங்கப்பண்ணி, உசந்த வாசல்வழியாய் இராசா அரமனைக்குளழைத்துவந்து, இராசாவை அரசாளும் ஆசனத்தின்மேல் உளுக்காரப்பண்ணினார்கள்.

௨௧. தேசசனமெல்லாம் மகிழ்ந்து, அத்தலீயாளைப் பட்டயத்தால் கொன்றபிற்பாடு பட்டணம் அமரிக்கைப்பட்டது.

௨௪. அதிகாரம்.

யோவாஸ் பண்ணின இராச்சியபாரம்.

யோவாஸ் இராசாவாகிறபோது ஏழுவயதாயிருந்து, நாற்பது வருஷமாய் எருசலேமில் அரசாண்டான். பெயர்செபா பட்டணத்தாளான அவன் தாயின் பேர் சிபியாள்.

௨. ஆசாரியனாகிய யோயதாவின் நாளெல்லாம் யோவாஸ் கர்த்தரின் பார்வைக்குச் செம்மையானதைச் செய்தான்.

௩. அவனுக்கு யோயதா இரண்டு பெண்சாதிகளை ஏற்படுத்தினான், அவர்களால் குமாரரையுங் குமாரத்திகளையும் பெற்றான்.

௪. அதற்குப்பிறகு கர்த்தருடைய வீட்டைப் புதுப்பிக்க யோவாசுக்கு மனதுவந்து,

௫. அவன் ஆசாரியனையும் லேவியரையுங் கூட்டி, அவர்களுடனே: நீங்கள் யூதா பட்டணங்களுக்குப் புறப்பட்டுப்போய், உங்கள் பராபரனுடைய வீட்டை வருஷத்துக்கு வருஷம் பழுதுபார்க்கிறதுக்கு இஸ்ரவேலெங்குந் திரவியஞ் சேருங்கோள், இந்தக் காரியத்தை நீங்கள் தீவரியுங்கோளென்றான். ஆனால் லேவியர் தீவரித்துக்கொண்டிலவில.

கா.

௬. அப்போதிராசா யோயதாவென்றதலைவனையழைப்பித்து அவனுக்குச் சொன்னதாவது: ஆசரிப்புக்கூடாரத்துக்குக்கொடுக்கக் கற்தரின தாசனாகிய மோசே கற்பித்தவரியை யூதாவினிடத்திலும் யெருசலேமியாரிடத்திலும் இஸ்ருவேல்சச்சபையாரிடத்திலும் வாங்கிவருகிறதற்கு லேவியரை நீர் விசாரிக்காதே போனதென்ன?

௭. என்னென்றால் அத்தலீயாளென்னுந் துன்மார்க்கமாயிருந்தவளுடைய குமாரர் பராபரனுடைய வீட்டை உடைப்பெடுத்தபோது கற்தருடைய வீட்டிலுள்ள பரிசுத்தம் பண்ணப்பட்டதுகளையெல்லாம் பாகால்களுக்காகச் சிலவுபண்ணினார்களென்றான்.

௮. அப்போ துராசாவின் சொற்படி ஒரு பெட்டியையுண்டாக்கி, அதைக் கற்தருடைய வீட்டுவாசலுக்குப் புறம்பே வைத்து,

௯. கற்தரின தாசனாகிய மோசே வனாந்தரத்திலே இஸ்ருவேலுக்குக் கற்பித்தவரியைக் கற்தருக்குக் கொண்டு வாருங்கோளென்று யூதாவிலும் யெருசலேமிலும் பறைமுறையிடுவித்தார்கள்.

௰. அப்போதெல்லாப் பிரபுக்களுஞ் சனமனைத்துஞ் சந்தோஷப்பட்டுப் பெட்டி நிறையுமட்டுக்குங் கொண்டுவந்து அதிலே போட்டார்கள்.

௰௧. அனேகந் திரவியமுண்டென்று கண்டு லேவியர் கையால் அந்தப் பெட்டி இராசாவின் விசாரிப்புக்காரனண்டையிலே கொண்டுவரப்படும்போதோவெனில், இராசாவின் சம்பிரதியும் பிரதான ஆசாரியனுடைய விசாரிப்புக்காரனும் வந்து பெட்டியிலிருக்கிறதைக் கொட்டியெடுத்துக்கொண்டு, அதைத் திரும்ப அதின் தானத்திலே வைப்பார்கள். இப்படி நாளுக்குநாள் செய்து, மிகுந்த திரவியத்தைச் சேர்த்தார்கள்.

௰௨. அதை இராசாவும் யோயதாவுங் கற்தருடைய வீட்டின் வேலையை விசாரிக்கும் ஊழியக்காறர் கையிலே கொடுத்தார்கள். அதினால் இவர்கள் கற்தருடைய வீட்டைப் புதுப்பிக்கும்படிக்குக் கற்றச்சரையுந் தச்சரையுங் கற்தருடைய வீட்டைப் பழுது பார்க்கக் கருமாரையுங் கன்னாரையுங் கூலிபொருந்திக்கொண்டார்கள்.

௰௩. அப்படி வேலையை விசாரிக்கிறவர்கள், தங்கள் கையினாலே வேலையை நடந்தேறப்பண்ணி, பராபரனுடைய வீட்டையதின் முந்தின சீராக வைத்துப் பெலப்படுத்தினார்கள்.

௰௪. அதை முடித்துத் தீர்ந்தபிறபாடு மீர்ந்த திரவியத்தை இராசாவுக்கும் யோயதாவுக்கும் முன்பாகக் கொண்டுவந்தார்கள், அதினாலே கற்தருடைய வீட்டுக்குப் பணிமுட்டுகளாகிய ஆராதனைக்கும் பெலியிடுகிறதற்குமான சட்டுமுட்டுகளையுங் கெண்டிகளையும் பொற்பாத்திரங்களையும் வெள்ளிப்பாத்திரங்களையும் பண்ணுவித்தான். யோயதாவின் நாளெல்லாம் நித்தங் கற்தருடைய வீட்டிலே தகனப்பெலிகளைச் செலுத்தி வந்தார்கள்.

௰௫. ஆனால் யோயதா கிழவனாகி நாள் நீடித்தவனாய் மரித்தான், அவன் மரணமடைகிறபோது நூற்றுமுப்பது வயதாயிருந்தான்.

௰௬. அவன் இஸ்ருவேலுக்கும் பராபரனுக்காகவும் அவருடைய வீட்டுக்காகவும் நன்மை செய்தபடியினாலே அவனைத் தாவீதின் பட்டணத்தில் இராசாக்களண்டையிலே யடக்கம் பண்ணினார்கள்.

௰௭. யோயதா மரணமடைந்தபிறபாடோவெனில், யூதாவின் பிரபுக்கள் வந்து இராசாவைப் பணிந்துகொண்டார்கள், அப்போது ராசா அவர்களுக்குக் கேழ்விகொடுத்தான்.

௰௮. அப்படியே அவர்கள் தங்கள் பிதாக்களின் பராபரனாகிய கற்தரின் வீட்டை விட்டுவிட்டுத் தோப்புகளையுஞ் சிலைகளையுஞ் சேவித்தார்கள். அப்போது இந்த அவர்களுடைய குற்றத்தினிமித்தியம் யூதாவின் மேலும் யெருசலேமின் மேலுங் கோபமுண்டாச்சுது.

௰௯. அவர்களைத் தம்மண்டைக்குத் திரும்பப்பண்ண, கற்தர் அவர்களிடத்திலே தீர்க்கதெரிசிகளையனுப்பினார், இவர்கள் அவர்களைத் திடசாட்சியாகக் கடிந்துகொண்டார்கள், ஆனால் அவர்கள் செவிகொடுக்கவில்லை.

௨௰. அப்போது பராபரனுடைய ஆவி ஆசாரியனாகிய யோயதாவின் குமாரனாகிய சகரியாவின் மேலிறங்கினதினால், அவன் சனத்துக்கெதிரே நின்றவர்களுடனே: நீங்கள் கற்தருடைய கற்பனைகளை மீறிப்போடுகிறதென்னவென்று பராபரன் சொல்லுகிறார், ஆகையால் நீங்கள் பாக்கியவான்களாயிருப்பதில்லை, நீங்கள் கற்தரை விட்டுவிட்டதினால் அவர் உங்களைக் கைவிடுவாரென்றான்.

௨௰௧. ஆனால் அவர்கள் அவனுக்கு விரோதமாக ஒப்பந்தம் பண்ணி, கற்தருடைய வீட்டுப் பிராகாரத்தில் இராசாவினுடைய கற்பனையின்படி அவனைக் கல்லெறிந்துகொன்றார்கள்.

௨௰௨. அப்படியே இவனுடைய தகப்பனாகிய யோயதா தனக்குச் செய்த தயவை இராசாவாகிய யோவாஸ் நினைக்காமல், அவனுடைய குமாரனைக்



கொ

கொன்றுபோட்டான். இவன் சாகையில்: கர்த்தர் இதைப் பார்த்துக் கணக்குக் கேட்பாரென்றான்.

௨௩. ஆனதுகொண்டு மறுவருஷத்திலே சூரியாவின் ராணுவத்தார் அவனுக்கு விரோதமாக வந்தேறி, யூதாவிலும் யெருசலேமிலும் வந்து சனத்திலிருக்கிற சனத்தின் பிரபுக்களையெல்லாம் அழித்துக் கொள்ளையிட்ட அவர்கள் உடைமைகளையெல்லாந் தமஸ்குவின் இராசாவுக்கனுப்பினார்கள்.

௨௪. ஏனென்றால் சூரியாவின் ராணுவங் கொஞ்ச மனுஷராய் வந்திருந்தாலும், இவர்கள் தங்கள் பிதாக்களின் பராபரனாகிய கர்த்தரை விட்டுவிட்டபடியினாலே கர்த்தர் மகா பெரிய ராணுவத்தை யவர்கள் கையிலொப்புக்கொடுத்தார். அவர்கள் யோவாசினிடத்திலும் நியாயத்தீர்ப்புகளை நிறைவேற்றினார்கள்.

௨௫. அவர்கள் அவனை மகா வேதனைகளுள்ளவனாக விட்டுப்போனார்கள், ஆனதுகொண்டு அவர்கள் புறப்பட்டபின் அவனுடைய ஊழியக்காரர் ஆசாரியனாகிய யோயதாவுடைய குமாரரின் இரத்தப்பழியினிமித்தியம் அவனுக்கு விரோதமா யொப்பந்தம்பண்ணி, அவனை யவன் படுக்கையிலே கொன்றுபோட்டார்கள், செத்துப்போன அவனைத் தாவீதின் பட்டணத்திலடக்கம் பண்ணினார்கள், ஆனால் இராசாக்களின் கல்லறைகளில் அவனை வைக்காதே போனார்கள்.

௨௬. அவனுக்கு விரோதமாக ஒப்பந்தம் பண்ணிக்கொண்டவர்கள் சீமாத்தின் குமாரனாகிய சாபாதென்ற அம்மோனியனுஞ் சிமரீத்தின் குமாரனாகிய யோசபாதென்ற மோபாவியனுந்தானே.

௨௭. அவன் குமாரரின் செய்தியும் அவன்மேலே சுமர்ந்த பெரிய சுமத்தலின் செய்தியும் பராபரனுடைய வீட்டை யவன் பெலப்படுத்தினதும் இதோ, இராசாக்களின் புஸ்தகமான சரித்திரத்திலே யெழுதியிருக்குது. அவன் குமாரனாகிய அமத்சியா அவனிஸ்தலத்திலிராசாவானான்.

௨௫. அதிகாரம்.

அமத்சியாவின் ராச்சியபாரம்.

அமத்சியா இருபத்தைந்தாம் வயதிலே இராசாவாகி, இருபத்தொன்பது வருஷமாக யெருசலேமில் அரசாண்டான், யெருசலேமூராளாகிய அவனுடைய தாயின் பேர் யோவாதானி.

௨. அவன் கர்த்தரின் பார்வைக்குச் செம்மையானதைச் செய்தான், ஆனால் முழுமனதோடேயல்ல.

௩. ராச்சியபாரம் அவனுக்குத் திடப்பட்டுப்போதோவென்றால், அவன் தன் தகப்பனாகிய இராசாவைக் கொலைசெய்த தன்னுடைய ஊழியக்காரரைக் கொன்றுபோட்டான்.

௪. ஆனால்: பிதாக்கள் பிள்ளைகளினிமித்தியமும் பிள்ளைகள் பிதாக்களினிமித்தியமுங் கொலையுண்கப்படாமல், அவனவன் தன்தன் பாவத்தினிமித்தியங் கொலையுண்பானாக வென்று மோசேயின் நியாயப்பிரமாணத்தின் புஸ்தகத்திலெழுதியிருக்கிறபடி கர்த்தர் கற்பித்தப்பிரகாரமாக அவர்களுடைய பிள்ளைகளைக் கொல்லாதிருந்தான்.

௫. அமத்சியா யூதா மனுஷரைக் கூட்டி, அவர்களிற் பிதாக்களுடைய வங்கிஷங்களின்படியே யூதா பென்யமீன் தேசங்களெங்கும் ஆயிரத்துக்குச் சேர்வைக்காறரையும் நூற்றுக்குச் சேர்வைக்காறரையும் வைத்து இருபதுவயது முதற்கொண்டு அதுக்குமேல்த்தரமானவர்களை லெக்கம்பார்த்து, யுத்தத்துக்குப் புறப்படவுங் கூடியையுங் கேடையத்தையும் பிடிக்கவுந் தக்கதென்று தெரிந்துகொள்ளப்பட்டவர்கள் மூன்னூறாயிரம் பேரென்றுகண்டான்.

௬. இஸ்ருவேலிலும் நூறாயிரம் பராக்கிரமக்காறரை நூறுதாலந்து வெள்ளிக்குச் சம்பளத்துக்குவைத்தான்.

௭. ஆனால் பராபரனுடைய மனுஷனொருத்தன் அவனண்டைக்குவந்து சொன்னதாவது: இராசாவே, இஸ்ருவேலின் ராணுவம் உம்முடனேவராதிருப்பதாக, ஏனெனில் கர்த்தர் இஸ்ருவேலாகிய எப்பிருயீமின் சகல புத்திரரோடும் இருக்கவில்லை.

௮. என்னென்றால் நீர்போய், யுத்தத்துக்குப் பெலத்துக்கொண்டாலும், பராபரனும்மைச் சத்துருவுக்குமுன்பாக விழப்பண்ணுவார், அதேதென்றால் உத்தாசை செய்யவும் விழப்பண்ணவும் பராபரனிடத்தில் பெலனுண்டென்றான்.

௯. அப்போ அமத்சியா: ஆனால் நான் இஸ்ருவேலின் தண்டுக்குக் கொடுத்த நூறுதாலந்துக்காகச் செய்வதென்னவென்று பராபரனுடைய மனுஷனைக் கேட்டான். அதற்குப் பராபரனுடைய மனுஷன்: அதைப்பார்க்க அதிகமாய் உமக்குக் கொடுக்கக் கர்த்தருக்கிருக்குதென்றான்.

௰. அப்போது அமத்சியா எப்பிராயீமிலிருந்து தன்னண்டைக்கு வந்த தண்டைத் தங்களிடத்துக்குப் போய்விடப் பிரித்தான், அதினால் அவர்களுக்கு யூதாவின்மேல் மகா கோபம் மூண்டு, உக்கிரமான எரிச்சலோடே தங்களிடத்துக்குத் திரும்பினார்கள்.

௰௧. அமத்சியாவோ தைரியங்கொண்டு தன் சனத்தைக் கூட்டி, உப்புப்பள்ளத்தாக்குக்குப் போய், சேயீர் புத்திரரில் பதினாயிரம்பேரை வெட்டினான்.

௰௨. யூதபுத்திரர் பதினாயிரம்பேரை உயிரோடே பிடித்து, ஒரு கன்மலைக்குன்றின் மேற்கொண்டுபோய் அவர்களெல்லாரும் நசுங்கிப்போகத் தக்கதாய் அந்தக் கன்மலையின் சிகரத்திலிருந்து தாழத் தள்ளினார்கள்.

௰௩. தன்னோடேகூட யுத்தத்துக்கு வராதபடிக்கு அமத்சியா திருப்பி விட்ட தண்டுமனுஷரோவென்றால் சமாரியா துவக்கிப் பெத்தொரோன் மட்டுமுள்ள யூத பட்டணங்களின்மேல் விழுந்து, அதுகளில் மூவாயிரம்பேரை வெட்டித் திரளாய்க் கொள்ளையிட்டார்கள்.

௰௪. அமத்சியா எதோமியரை முறியடித்து வந்து சேயீர் புத்திரரின் தேவர்களைக் கொண்டுவந்த பிறபாடோவென்றால், அவன் அதுகளைத் தனக்குத் தேவர்களாக வைத்து, அதுகளுக்கு முன்பாகப் பணிந்து, அதுகளுக்குத் தூபங்காட்டினான்.

௰௫. அப்போது கர்த்தர் அமத்சியாவின் பேரில் கோபமூண்டவராகி, அவனண்டைக்கு ஒரு தீர்க்கதெரிசியை அனுப்பினார். இவன் அவனுடனே: தங்கள் சனத்தை உமது கைக்குத் தப்புவிக்காதே போன சனத்தின் தேவர்களை நீர் தேடுவானேனென்றான்.

௰௬. தன்னோடே இவன் இப்படிப் பேசின போதோவென்றால், அவன் இவனுடனே: உன்னை இராசாவுக்கு ஆலோசனைக்காரனாக வைத்தார்களோ? அதைப் போட்டுவிடு, உன்னை ஏன் வெட்டிப்போடவேணுமென்றான். அப்போது அந்தத் தீர்க்கதெரிசி அதைப் போட்டுவிட்டு: நீர் இப்படிச் செய்து, என் ஆலோசனையைக் கேளாமல் போனபடியினாலே, பராபரன் உம்மை அழிக்க யோசனையாயிருக்கிறார் என்கிறதை அறிவேனென்றான்.

௰௭. பிறபாடு யூதாவின் இராசாவாகிய அமத்சியா யோசனைபண்ணி, யெகூவின் குமாரனாகிய யோவாகாசின் குமாரன் யோவாசென்ற இஸ்ரவேலின் இராசாவுக்கு: நம்முடைய சாமார்த்தியத்தைப் பார்ப்போம் வாவென்று சொல்லி அனுப்பினான்.

௰௮. ஆனால் இஸ்ரவேலின் இராசாவாகிய யோவாஸ் யூதாவின் இராசாவாகிய அமத்சியாவுக்குச் சொல்லியனுப்பினதாவது: லீபனோனிலிருக்கிற முள்செடி லீபனோனிலிருக்கிற கேதுரு மரத்துக்கு: உன் குமாரத்தியை என் குமாரனுக்குப் பெண்சாதியாகக் கொடுவென்று சொல்லியனுப்பித்து, ஆனால் லீபனோனிலிருக்கிற காட்டுமிருகங்கள் முள்செடியின்மேலோடி அதை மிதித்தது.

௰௯. இதோ, எதோமியரை அடித்தேனென்று நீ பெருமைபாராட்ட உன்னிருதயம் உன்னை மேட்டிமையாக்கிறது, இப்போது உன் வீட்டிலிருந்து நீயும் உன்னோடே யூதாவுங்கூட விழும்படிக்குப் பொல்லாப்பைத் தேடிக்கொள்வானேனென்று சொல்லியனுப்பினான்.

௨௰. ஆனால் அமத்சியா செவிகொடாதே போனான், ஏனென்றால் அவர்கள் எதோமின் தேவர்களைத் தேடின நிமித்தியம் அவர்களை ஒப்புக்கொடுக்கும்படிக்குப் பராபரனாலே அப்படி வந்தது.

௨௰௧. அப்படியே இஸ்ரவேலின் இராசாவாகிய யோவாஸ் எழும்பினான், யூதாவிலிருக்கிற பெத்சேமேசிலே அவனும் அமத்சியாவென்ற யூதாவின் இராசாவுந் தங்கள் சாமார்த்தியத்தைப் பார்த்தார்கள்.

௨௰௨. ஆனால் யூதா இஸ்ரவேலுக்கு முன்பாக முறிந்து அவரவர் தங்கள் கூடாரங்களுக்கோடிப்போனார்கள்.

௨௰௩. இஸ்ரவேலின் இராசாவாகிய யோவாஸ் ஆகசியாவின் குமாரனாகிய யோவாசுக்குப் பிறந்த அமத்சியாவென்ற யூதாவின் இராசாவைப் பெத்சேமேசிலே பிடித்து, அவனை எருசலேமுக்குக் கொண்டுவந்து, எருசலேமின் அலங்கத்திலே எப்பிராயீம் வாசல் துவக்கிக் கோடிவாசல்மட்டும் நானூறுமுழ நீளம் இடித்துப்போட்டு,

௨௰௪. பராபரனுடைய வீட்டில் ஒபேத்தேதோமின் வசத்திலே அகப்பட்ட சகல பொன்னையும் வெள்ளியையுஞ் சகல தட்டுமுட்டுகளையும், இராசாவின் வீட்டுப்பொக்கிஷங்களையும், கிரியிருப்பவர்களையும் பிடித்துக்கொண்டு சமாரியாவுக்குத் திரும்பிப்போனான்.

௰௧. நெத்தனியாவின் குமாரனாகிய இஸ்மவேல் செய்தபொல்லாப்பையெல்லாங் கரேயாவின் குமாரனாகிய யோகனானும் அவனோடிருந்த எல்லா இராணுவச்சேர்வைக்காறருங் கேட்டபோதோவெனில்,

௰௨. அவர்களெல்லாப் புருஷரையுங் கூட்டிக்கொண்டு, நெத்தனியாவின் குமாரனாகிய இஸ்மவேலோடே யுத்தம்பண்ணப்போய், அவனைக் கிபெயோனிலிருக்கும் பெருங்குளத்துத் தண்ணீரண்டையிலே கண்டார்கள்.

௰௩. அப்பொழுது சம்பவித்ததேதென்றால், இஸ்மவேலண்டையிலிருந்த சனமெல்லாங் கரேயாவின் குமாரனாகிய யோகனானையும், அவனோடிருந்த எல்லா இராணுவச்சேர்வைக்காறரையுங் காண்கையில் சந்தோஷப்பட்டு,

௰௪. இஸ்மவேல் மிஸ்பாவிலிருந்து சிறைப்பிடித்துக்கொண்டு போன சனமெல்லாம் பின்னிட்டுத் திரும்பி, கரேயாவின் குமாரனாகிய யோகனானண்டையிலே வந்துவிட்டார்கள்.

௰௫. நெத்தனியாவின் குமாரனாகிய இஸ்மவேலோவென்றால், எட்டுப்பேரோடுங் கூட யோகனானின் கைக்குத் தப்பி, அம்மோன் புத்திரரண்டைக்குப் புறப்பட்டுப்போனான்.

௰௬. ஆனால் கரேயாவின் குமாரனாகிய யோகனானும் அவனோடிருந்த எல்லா இராணுவச்சேர்வைக்காறரும் அகிக்காமின் குமாரனாகிய கெதலியாவை வெட்டிப்போட்ட நெத்தனியாவின் குமாரனாகிய இஸ்மவேல் கொண்டு போனதும், தாங்கள் கிபெயோனிலே விடுதலையாக்கித் திரும்பப்பண்ணினதுமான மீதியான சகல சனமுமாகிய சேவகரான மனுஷரையும் ஸ்திரிகளையும், குழந்தைகளையும், அரமனைப்பிரதானிகளையுஞ் சேர்த்துக்கொண்டு,

௰௭. பாபேலின் இராசா தேசத்தின்பேரில் அதிகாரியாக்கின அகிக்காமின் குமாரனாகிய கெதலியாவை நெத்தனியாவின் குமாரனாகிய இஸ்மவேல் வெட்டிப்போட்டதின் நிமித்தியமாக்கல்தேயருக்குப் பயப்படுகிறபடியினாலே,

௰௮. போய், தாங்கள் எகிப்துக்குப் புறப்பட்டுப் போகும்படிக்குப் பெத்லெகேமுருக்கருகான கிமகாமின் பேட்டையிலிறங்கித் தங்கினார்கள்.

* ௨. இராசா. ௨௫: ௨௬.

## ௪௨. அதிகாரம்.

எகிப்துக்குப் போகவேண்டாமென்று யெரேமியா யூதரில் மீதியானவர்களை எச்சரித்தது.

அப்பொழுதெல்லா இராணுவச்சேர்வைக்காறரும், கரேயாவின் குமாரனாகிய யோகனானும், ஓசாயாவின் குமாரனாகிய இசனியாவும், சிறியோர்முதற்கொண்டு பெரியோர்மட்டுமுண்டான எல்லாச் சனமுஞ் சேர்ந்துவந்து,

௨. தீர்க்கதெரிசியாகிய யெரேமியாவுடனே சொன்னதாவது: உம்முடைய பராபரனாகிய கர்த்தர் நாங்கள் நடக்கவேண்டிய வழியையுஞ் செய்யவேண்டிய காரியத்தையும் எங்களுக்குத் தெரியப்பண்ணும்படிக்கு, நீர் எங்கள் விண்ணப்பத்துக்கு இடங்கொடுத்து, மீதியாயிருக்கிற இந்தச் சகல சனமாகிய எங்களுக்காகவும் உம்முடைய பராபரனாகிய கர்த்தரை நோக்கிச் செபம்பண்ணும்.

௩. ஏனெனில், உம்முடைய கண்கள் எங்களைக் காண்கிறபடியே, திரளான சனங்களில் கொஞ்சம் பேராய் மீந்திருக்கிறோமென்றார்கள்.

௪. அப்பொழுது யெரேமியா தீர்க்கதெரிசியவர்களுடனே: நீங்கள் சொன்னதைக் கேட்டேன், இதோ, உங்கள் வார்த்தையின்படியே உங்கள் பராபரனாகிய கர்த்தரை நோக்கிச் செபம்பண்ணுவேன், கர்த்தர் உங்களுக்கு உத்தாரமாகச் சொல்லும் எல்லா வார்த்தையையும் நான் உங்களுக்கு ஒன்றையும் மறைக்காமல் அறிவிப்பேனென்றான்.

௫. அப்பொழுதவர்கள் யெரேமியாவுடனே சொன்னதாவது: உம்முடைய பராபரனாகிய கர்த்தர் உம்மைக்கொண்டு எங்களுக்குச் சொல்லியனுப்பும் எல்லா வார்த்தையின்படியேயும் நாங்கள் செய்யாவிட்டால், கர்த்தர் நமக்குள் சத்தியமும் உண்மையுமான சாட்சியாயிருக்கக்கடவார்.

௬. அது நன்மையானாலுந் தின்மையானாலுஞ்சரி, எங்கள் பராபரனாகிய கர்த்தரின் சத்தத்துக்கு நாங்கள் கீழ்ப்படிவதினாலே எங்களுக்கு நன்றாயிருக்கும்படிக்கு, நாங்கள் உம்மையனுப்புகிற எங்கள் பராபரனாகிய கர்த்தருடைய சத்தத்துக்குக் கீழ்ப்படிந்து நடப்போமென்றார்கள்.

௭. பத்துநாள் சென்றபோது கர்த்தருடைய வார்த்தை யெரேமியாவுக்குண்டாச்சுது.

௮. அப்பொழுதவன் கரேயாவின் குமாரனாகிய யோகனானையும் அவனோடிருந்த எல்லா இரா

ணுவ

னுவச்சேர்வைக்காரரையும், சிறியோர்முதற்கொண்டு பெரியோர்மட்டுமுண்டான சனமனைத்தையும் அழைத்து,

௯. அவர்களுடனே சொன்னதாவது: உங்களுக்காக விண்ணப்பஞ்செய்யும்படிக்கு நீங்கள் என்னை யனுப்பின இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தருரைக்கிறதேதென்றால்,

௰. நீங்களிந்தத் தேசத்தில்த் தரிக்கவே தரித்திருந்தால் * நாம் உங்களை நிர்மூலமாக்காமல் கட்டிவித்து, உங்களைப் பிடுங்காமல் நாட்டுவோம், ஏனெனில் நாமுங்களுக்குச் செய்திருக்கிற தீங்குக்கு மனஸ்தாப்பட்டோம். * ௨௪: ௯.

௰௧. * நீங்கள் பயப்படுகிற பாபேலின் இராசாவுக்குப் பயப்படவேண்டாம், அவனுக்குப் பயப்படாதிருப்பீர்களாகவென்று கர்த்தர் சொல்லுகிறார், ஏனெனில் உங்களை யிரட்சிக்கும்படிக்கும் உங்களை யவன் கைக்குத் தப்புவிக்கும்படிக்கும் நாமுங்களுடனேயிருந்து, * ௪௧: ௰௮.

௰௨. அவனுங்களுக்கிரங்குகிறதுக்கும், உங்களை யுங்கள் தேசத்துக்குத் திரும்பிவரப்பண்ணுகிறதுக்குமாக, உங்களுக்கிரக்கஞ்செய்வோம்.

௰௩. நீங்களுங்கள் பராபரனாகிய கர்த்தருடைய சத்தத்துக்குச் செவிகொடாமல், இந்தத்தேசத்திலே நாங்களிருக்கிறதில்லையென்றும்,

௰௪. நாங்கள் யுத்தத்தைக் காணாததும், எக்காளத்தின் சத்தத்தைக் கேளாததும் அப்பத்தாட்டியினாலே பட்டினியாயிராததுமான எகிப்துதேசத்துக்கே போய் அங்கே தரித்திருப்போமென்றுஞ் சொன்னீர்களேயாகில்;

௰௫. இப்போதும், யூதாவில் மீதியானவர்களே, அதைத்தொட்டு உண்டான கர்த்தருடைய வார்த்தையைக் கேளுங்கோள்; இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறதாவது: நீங்கள் எகிப்துக்குப் போக உங்கள் முகங்களைத் திருப்பவே திருப்பி அங்கே தங்கப் போனீர்களானால்,

௰௬. சம்பவிப்பதேதெனில், நீங்கள் பயப்படுகிற பட்டயம் அங்கே எகிப்து தேசத்திலே உங்களைப் பிடிக்கும், நீங்கள் ஐயப்படுகிற பஞ்சம் அங்கே எகிப்திலே உங்களைப் பின்பற்றிக்கொண்டிருக்கும், அங்கே சாவீர்கள்.

௰௭. எகிப்திலே தங்கவேணுமென்று அவ்விடத்துக்குத் தங்கள் முகங்களைத் திருப்பின எல்லா மனுஷருக்கும் என்ன சம்பவிக்குமெனில், பட்டயத்தாலும் பஞ்சத்தாலும், பெருவாரிக்காச்சலாலுஞ் சாவார்கள், நாம் அவர்கள் மேல் வரப்பண்ணுந் தீங்கினாலே அவர்களில் மீதியாவாருந் தப்புவாருமில்லை.

௰௮. ஏனெனில் இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறதாவது: நம்முடைய கோபமும் நம்முடைய உக்கிரமும் யெருசலேமுடைய குடிகளின் மேலெப்படி ஊற்றப்பட்டதோ அப்படி நம்முடைய உக்கிரம், நீங்கள் எகிப்துக்குப் போகும்போது, உங்கள் மேலூற்றப்படும், * நீங்கள் சாபமாகவும் பாழாகவும் பழிப்பாகவும் நிந்தையாகவுமிருந்து, இவ்விடத்தையினிக் காணாதிருப்பீர்களென்கிறார்.
* ௨௪: அதி. ௯. ௨௯: அதி. ௰௮. ௰௯.

௰௯. யூதாவில் மீதியானவர்களே, எகிப்துக்குப் போகாதிருப்பீர்களாகவென்று கர்த்தர் உங்களைக் குறித்துச் சொன்னாரென்பதையிந்நாளில் உங்களுக்குச் சாட்சியாக அறிவித்தேனென்பதை யறியவேயறிவீர்களாக.

௨௰. ஏனெனில் உங்களாத்துமங்களுக்கு விரோதமாய் உங்களை மோசம்போக்கினீர்கள்; அதேதென்றால்: நீர் எங்கள் பராபரனாகிய கர்த்தரை எங்களுக்காக விண்ணப்பம் பண்ணி, எங்கள் பராபரனாகிய கர்த்தர் சொல்லும்படியெல்லாம் எங்களுக்கறிவியும், அதின்படியே செய்வோமென்று நீங்கள் சொல்லி, என்னை யுங்கள் பராபரனாகிய கர்த்தரண்டைக்கு அனுப்பினீர்கள்.

௨௰௧. நானிந்நாளில் அதையுங்களுக்கு அறிவித்தேனே, ஆனால் உங்கள் பராபரனாகிய கர்த்தரின் சத்தத்துக்கும், அவர் என்னைக்கொண்டு உங்களுக்குச் சொல்லி யனுப்பினதெல்லாத்துக்குஞ் செவிகொடாதே போனீர்கள்.

௨௰௨. இப்போது தங்கியிருப்பதற்கு நீங்கள் போகவிரும்புகிற தலத்திலே தானே பட்டயத்தாலும் பஞ்சத்தாலும் பெருவாரிக்காச்சலாலுஞ் சாவீர்களென்று யறியவே அறிவீர்களாகவென்றேன்.

## ௪௩. அதிகாரம்.

தேவசொல்லைக் கேளாமல் எகிப்துக்குப் போன யூதருக்குப் பராபரன் சொல்லச் சொன்ன விசேஷம்.

யெரோமியா எல்லாச் சனத்துக்கும் அவர்களுடைய பராபரனாகிய கர்த்தர் தன்னைக்கொண்டு அவர்களுக்குச் சொல்லி அனுப்பின எல்லா

வார்த்தைகளையுஞ் சொன்னபின்பு, அவர்களுடைய பராபரனாகிய கர்த்தருடைய இந்தவெல்லாவார்த்தைகளையும் அவன் அவர்களுக்குச் சொல்லிமுடிந்தபோது, சம்பவித்ததேதென்றால்,

௨. ஓசாயாவின் குமாரனாகிய அசரியாவும், கரேயாவின் குமாரனாகிய யோகனானும், அகந்தையான எல்லா மனுஷரும் யெரேமியாவுடனே சொன்னதாவது: நீ பொய் சொல்லுகிறாய், எகிப்துக்கு அங்கே தங்கும்படிக்குப் போகாதேயுங்கோளென்று சொல்ல, எங்கள் பராபரனாகிய கர்த்தர் உன்னை எங்களண்டைக்கனுப்பினதில்லை.

௩. கல்தேயர் எங்களைக் கொன்றுபோடவும், எங்களைப் பாபேலுக்குச் சிறைகளாகக் கொண்டுபோகவும், எங்களை அவர்கள் கையிலொப்புக்கொடுக்கும்படிக்கு, நேரியாவின் குமாரனாகிய பாருக்தானே உன்னை எங்களுக்கு விரோதமாகப் பயித்திவிக்கிறானென்றார்கள்.

௪. அப்படியே, யூதாவின் தேசத்தில் தரிக்கவேணுமென்ற கர்த்தருடைய சத்தத்துக்குக் கரேயாவின் குமாரனான யோகனானும், சகல இராணுவச்சேர்வைக்காரருஞ் செவிகொடாதேபோனார்கள்.

௫. யூதேயா தேசத்தில்த் தங்கியிருப்பதற்குத் தாங்கள் துரத்துண்டிருந்த சகல சாதிகளிடத்திலுமிருந்து திரும்பிவந்த மீதியான யூதரெல்லாரையும், புருஷரையும் ஸ்திரிகளையுங் குழந்தைகளையும், இராசாவின் குமாரத்திகளையும், தலையாரிகளின் அதிபதியாகிய நேபூசார்அதானசாளின் குமாரனாகிய அகிக்காமின் மகனான கெதலியாவண்டையில் வைத்துப்போன சகல ஆத்துமாக்களையும், தீர்க்கதரிசியாகிய யெரேமியாவையும், நேரியாவின் குமாரனாகிய பாருக்கையும்,

௬. கரேயாவின் குமாரனான யோகனானுஞ் சகல இராணுவச்சேர்வைக்காரருங் கூட்டிக்கொண்டு,

௭. கர்த்தருடைய சத்தத்துக்குச் செவிகொடாதபடியினாலே எகிப்து தேசத்துக்குப் போய், தக்பானேசுமட்டும் வந்து சேர்ந்தார்கள்.

௮. தக்பானேசிலே கர்த்தருடைய வார்த்தை யெரேமியாவுக்குண்டாகி, அவர் சொன்னதாவது:

௯. நீ உன் கையிலே பெரிய கல்லுகளை எடுத்துக்கொண்டு, யூதாமனுஷர் பார்க்கக்கொள்ள அதுகளைத் தக்பானேசிலிருக்கிற பார்வோனுடைய வீட்டின் ஒலிமுகவாசலிலுண்டான சூளையின் களிமண்ணிலே புதைத்துவைத்து,

௰. அவர்களுடனே சொல்லவேண்டியதாவது: இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறதேதென்னில், இதோ, * நம்முடைய வேலைக்காரனாகிய நேபுகாத்நேசாரென்ற பாபேலின் இராசாவை நாம் அழைத்தனுப்பி, நாம் புதைப்பித்த இந்தக் கல்லுகளின்மேல் அவனுடைய ஆசனத்தை வைப்போம், அவன் தன் இராசகூடாரத்தை அதுகளின்மேலே விரிப்பான். * ௨௫: ௯. ௨௭: அதி. ௬.

௰௧. அவன் வந்து எகிப்து தேசத்தை யழிப்பான், *சாவுக்கேதுவானவன் சாவுக்கும், சிறையிருப்புக்கேதுவானவன் சிறையிருப்புக்கும், பட்டயத்துக்கேதுவானவன் பட்டயத்துக்குமுள்ளாவான். * ௰௫: அதி. ௨.

௰௨. எகிப்துவினுடைய தேவர்களின் வீடுகளில் அக்கினியைக் கொளுத்துவோம் அவன் அதுகளைச் சுட்டெரித்து, அதுகளைச் சிறைபிடித்துப்போய், ஒரு மேய்ப்பன் தன் கம்பளியைப் போர்த்துக்கொள்ளுமாப்போலே எகிப்து தேசத்தைப் போர்த்துக்கொண்டு அவ்விடத்திலிருந்து சுகமாய்ப் புறப்பட்டுப்போவான்.

* ௪௬: அதி. ௨௫. ௨௬.

௰௩. அவன் எகிப்து தேசத்திலிருக்கிற பெத்சேமேசின் சிலைகளை யுடைத்து, எகிப்துவினுடைய தேவர்களின் வீடுகளை யக்கினியாலே சுட்டுப்போடுவானென்கிறாரென்று சொல்லென்றார்.

## ௪௪. அதிகாரம்.

எகிப்திலே வந்த யூதருக்கு யெரேமியா பண்ணின கண்டிதமான பிரசங்கம்.

எகிப்து தேசத்திலே குடியேறி மிக்தோலிலும், தக்பானேசிலும், நோபிலும், பத்ரோஸ் சீர்மையிலும் வாசமான எல்லா யூதரையுங் குறித்து யெரேமியாவுக்குண்டான வசனம்.

௨. இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறதாவது: நாம் யெருசலேமின்மேலும் யூதாவுடைய எல்லாப் பட்டணங்களின்மேலும் வரப்பண்ணின தீங்கையெல்லாம் நீங்கள் கண்டீர்கள்.

௩. இதோ, அவர்களும், நீங்களும், உங்கள் பிதாக்களும் அறியாத தேவர்களுக்கு அவர்கள் தூபங்காட்டவும் ஆராதனை செய்யவும் போய், நமக்குக் கோபமுண்டாகும்படிக்குச் செய்த அவர்களு

களுடைய பொல்லாப்பின் நிமித்தியம் அதுகள் இந்நாளிலே பாழாய்க் கிடக்குது, அதுகளிலே குடியில்லை.

௪. நாம் பகைக்கிற இந்த அருவருப்பான காரியத்தைச் செய்யாதே யுங்கோ என்று, நாம் தீர்க்கதெரிசிகளாகிய நம்முடைய ஊழியக்காறரைக் கொண்டு உங்களுக்கு ஏற்கனவே சொல்லி அனுப்பிக்கொண்டேயிருந்தோம்.

௫. ஆனால் அவர்கள் அன்னிய தேவர்களுக்குத் தூபங்காட்டாதபடிக்குத் தங்கள் பொல்லாப்பை விட்டுத் திரும்புவதற்கு* செவி மனந் தங்கள் செவிகளைச் சாய்க்காமலும் போனார்கள்.

* எ: உ௫. உ௬.

௬. ஆகையால் நம்முடைய உக்கிரமும் நம்முடைய கோபமும் ஊற்றப்பட்டு, யூதேயாவின் பட்டணங்களிலும் யெருசலேமின் வீதிகளிலும் *பற்றியெரிந்தது, அதுகள் இந்நாளிலிருக்கிறபடி வனாந்தரமும் பாழுமாய்ப் போச்சுது. * எ: உ௰.

௭. இப்போதும் இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளுடைய பராபரனான கற்தர் சொல்லுகிறதாவது: நீங்கள் யூதாவில் ஒருத்தரையும் உங்களுக்கு மீதியாக்காகாமல், உங்களிலே புருஷனையும் இஸ்திரியையும், பிள்ளையையும் பாலகனையும் முதற்றுப் போகப்பண்ணும்படிக்கு, உங்கள் கைகளின் கிரிகைகளாலே நமக்குக் கோபமுண்டாகிற பெரிய பொல்லாப்பை யுங்கள் ஆத்துமங்களுக்கு விரோதமாகச் செய்து,

௮. உங்களைத்தானே வேரற்றுப் போகப்பண்ணுவதற்காகவும், பூமியினுடைய சகல சாதிகளுக்குள்ளும் சாபமும் நிந்தையுமாவதற்காகவும், நீங்கள் தங்கியிருக்க வந்த எகிப்துதேசத்திலே யன்னியதேவர்களுக்குத் தூபங்காட்டுவானேன்?

௯. யூதா தேசத்திலும் யெருசலேமின் வீதிகளிலும் உங்கள் பிதாக்கள் செய்த பொல்லாப்புகளையும், யூதாவின் இராசாக்கள் செய்த பொல்லாப்புகளையும் அவர்களுடைய பெண்சாதிகள் செய்த பொல்லாப்புகளையும், நீங்கள் செய்த பொல்லாப்புகளையும், உங்கள் பெண்சாதிகள் செய்த பொல்லாப்புகளையும் மறந்து போனீர்களோ?

௰. அவர்களிந்நாள்மட்டுக்கும் மனம் நொறுங்குண்டதுமில்லை பயப்படுகிறதுமில்லை, நாம் உங்கள் முன்னேயும் உங்கள் பிதாக்களின் முன்னேயும் வைத்த நமது வேதத்தின்படியேயும் நமது கட்டளைகளின்படியேயும் நடக்கிறதுமில்லை.

௰௧. ஆகையால் இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளுடைய கற்தர் சொல்லுகிறதாவது: இதோ நாம் * உங்களுக்குத் தீங்காகவும் யூதா வனைத்தையும் நிர்மூலமாக்கத்தக்கவனையாகவும் நமது முகத்தை உங்களுக்கு விரோதமாகத் திருப்பி,

* ஆமோ. ௯: ௪.

௰௨. எகிப்துதேசத்திலே தங்கும்படிக்கு வரத்தங்கள் முகங்களைத் திருப்பின மீதியான யூதரை வாரிக்கொள்ளுவோம், அவர்கள் அனைவரும் எகிப்துதேசத்தில் நிர்மூலமாவார்கள், அவர்கள் சிறியவன் துவக்கிப் பெரியவன்மட்டும் *பட்டயத்துக்கிரையாகி, பஞ்சத்தாலும் நிர்மூலமாவார்கள், அவர்கள் பட்டயத்தாலும் பஞ்சத்தாலுஞ் செத்து சாபமும் பாழும் பழிப்பும் நிந்தையுமாவார்கள். * ௪௨: அதி. ௰௭. ௰௮.

௰௩. நாம் யெருசலேமை விசாரித்தபடி, எகிப்துதேசத்திலே குடியிருக்கிறவர்களையும் பட்டயத்தாலும் பஞ்சத்தாலும் பெருவாரிக் கொள்ளையாலும் விசாரிப்போம்.

௰௪. எகிப்துதேசத்திலே தங்கவும், மறுபடி யுந்தங்கள் ஆத்துமம் வாஞ்சித்திருக்கிற யூதாதேசத்திலே தானே குடியேறுவதற்கு அங்கே திரும்பிப் போகவும் வேணுமென்று இங்கே வந்த மீதியான யூதரிலே தப்புவாரும் மீதியாயிருப்பாருமில்லை, தப்பிப்போபவர்களாகிய மற்றவர்களையே யொழிய அவர்களிலொருத்தரும் அங்கே திரும்புவதில்லையென்று சொன்னார்.

௰௫. அப்போது தங்கள் பெண்சாதிகள் வேறே தேவர்களுக்குத் தூபங்காட்டுகிறதையறிந்திருந்த எல்லாப் புருஷரும் பெரியகூட்டமாய் நின்றிருந்த எல்லா இஸ்திரிகளும், எகிப்துதேசத்திலே பத்ரோசிலே குடியிருந்த சகல சனமும் யெரேமியாவுக்குப் பிரதியுத்தரமாகச் சொன்னதாவது:

௰௬. நீ கற்தருடைய நாமத்திலே எங்களுக்குச் சொன்ன வார்த்தையின்படியே* நாங்கள் உனக்குச் செவிகொடாமல், * ௰௮: அதி. ௰௨.

௰௭. எங்கள் வாயிலிருந்து புறப்பட்ட எல்லா வார்த்தையின்படியேயும் நாங்கள் செய்யவே செய்து, * வானத்தின் இராசாத்திக்குத் தூபங்காட்டி அவளுக்குப் பானபலிகளை யூற்றுவோம், நாங்களும் எங்கள் பிதாக்களும் எங்கள் இராசாக்களும் எங்கள் பிரபுக்களும் யூதாபட்டணங்களிலும் யெருசலேமின் வீதிகளிலுஞ் செய்தது

த்துப்போலேதானே, அப்போது நாங்கள் அப்பத்தால் திருப்தியாகி வாழ்ந்து, ஒரு பொல்லாப்பையுங் காணாதிருந்தோம். * எ: அதி. ௰௮.

௰௮. நாங்கள் வானத்தின் இராசாத்திக்குத் தூபங்காட்டாமலும் அவளுக்கு உள்ளற்றுதல்களையூற்றாமலும் போனதுமுதல்க்கொண்டோவெனில், எல்லாமெங்களுக்குக் குறைப்பட்டது, பட்டயத்தாலும் பஞ்சத்தாலும் நிர்மூலமானோம்.

௰௯. அல்லாமலும் நாங்கள் வானத்தின் இராசாத்திக்குத் தூபங்காட்டி, அவளுக்கு உள்ளற்றுதல்களையூற்றுகிறபோது, நாங்கள் அவளை நமஸ்கரிக்கவும் அவளுக்கு உள்ளற்றுதல்களையூற்றவும் எங்கள் புருஷரை யல்லாமல் * அவளுக்கு அச்சுப்பணியாரங்களைச் சுடுகிறோமோ வென்றார்கள். * எ: அதி. ௰௮.

௨௰. அப்போது எரேமியா எல்லாச்சனத்துக்கும் புருஷருக்கும் இஸ்திரிகளுக்குந் தனக்கிப்படிக் கொடுத்த மறுமொழியைக் கொடுத்த சகலசனத்துக்குஞ் சொன்னதாவது:

௨௧. யூதாவின் பட்டணங்களிலும் எருசலேமின் வீதிகளிலும் நீங்களும் உங்கள் பிதாக்களும், உங்கள் இராசாக்களும் உங்கள் பிரபுக்களும், தேசத்தின் சனமுந் தூபங்காட்டின தூபங்களையல்லோ கர்த்தர் நினைத்துத் தம்முடைய மனதிலே வைத்துக்கொண்டார்?

௨௨. உங்கள் கிரிகைகளின் பொல்லாப்பையும் நீங்கள் செய்த அருவருப்புகளையுங் கர்த்தர் அப்புறம் பொறுத்திருக்கக் கூடாதபடியினாலேயல்லோ உங்கள் தேசம் இந்நாளிலிருக்கிறபடிக் குடியற்ற அந்தரவெளியும் பாழுஞ் சாபமுமாயிற்று?

௨௩. நீங்கள் தூபங்காட்டி, கர்த்தருக்கு விரோதமாகப் பாவஞ்செய்து, கர்த்தருடைய சத்தத்துக்குச் செவிகொடாமலும் அவருடைய வேதத்துக்கும், அவருடைய கட்டளைகளுக்கும், அவருடைய சாட்சிகளுக்கும் இணங்கி நடவாமலும் போனபடியினாலே தானே இந்தத் தீங்கு இந்நாளிலிருக்கிறபடி உங்களுக்கு நேரிட்டதென்றான்.

௨௪. பின்னையும் எரேமியா எல்லாச்சனத்துக்கும் எல்லா இஸ்திரிகளுக்குஞ் சொன்னதாவது: எகிப்துதேசத்திலிருக்கிற யூதராகிய நீங்களெல்லாருங் கர்த்தருடைய வார்த்தையைக் கேளுங்கோள்.

௨௫. இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறதாவது: வானத்தின் இராசாத்திக்குத் தூபங்காட்டவும் அவளுக்கு உள்ளற்றுதல்களையூற்றவும் நாங்கள் நேர்ந்துகொண்ட பொருத்தனைகளைச் செலுத்தவே செலுத்துவோமென்று, நீங்களும் உங்கள் பெண்சாதிகளும் உங்கள் வாயினாலே சொல்லி, உங்கள் கைகளினாலும் நிறைவேற்றினீர்கள், நீங்கள் உங்கள் பொருத்தனைகளைத் திடப்படுத்தவே திடப்படுத்திச் செலுத்தவே செலுத்தினீர்கள்.

௨௬. ஆகையால் எகிப்துதேசத்திற் குடியிருக்கிற யூதராகிய நீங்களெல்லாருங் கர்த்தருடைய வார்த்தையைக் கேளுங்கோள்: இதோ, கர்த்தராகிய ஆண்டவருடைய சீவனுவின, எகிப்துதேசமெங்கும் ஒரு யூதமனுஷன் வாயினாலும் இனி நம்முடைய நாமம் அழைக்கப்படுவதில்லையென்று நாம் நம்முடைய பெரிய நாமத்தைக்கொண்டு ஆணையிட்டோமென்கிறதைக் கர்த்தர் சொல்லுகிறார்.

௨௭. இதோ, * நாம் அவர்கள் பேரிலே நன்மைக்கல்ல தின்மைக்கே சாக்கிறதையாயிருப்போம், எகிப்துதேசத்திலிருக்கிற யூதமனுஷரெல்லாம் ஒழிந்து தீருமளவும் பட்டயத்தாலும் பஞ்சத்தாலுஞ் சங்காரமாவார்கள்.

* ௩௧: அதி. ௨௮.

௨௮. ஆனாலும் பட்டயத்துக்குத் தப்புபவர்கள் எகிப்துதேசத்திலிருந்து யூதேசத்துக்குக் கொஞ்சம்பேராய்த் திரும்புவார்கள், அப்படியே எகிப்துதேசத்தில் தங்கியிருக்கவந்த மீதியான யூதரெல்லாரும் ஆருடைய வார்த்தை மெய்ப்படும், தங்களுடையதோ நம்முடையதோ வென்று அறிவார்கள்.

௨௯. கர்த்தர் சொல்லுகிறதேதெனில், நாம் இவ்விடத்தில் உங்களுக்கு விரோதமாய் விசாரிக்கிறவராயிருப்பதற்கும், நம்முடைய வார்த்தைகளுங்கள் பேரில் தின்மையாக மெய்ப்படுமென்று நீங்களறிவதற்கும், உங்களுக்கடையாளமாவது:

௩௰. இதோ, நாம் யூதாவின் இராசாவாகிய சிதேக்கியாவை அவனுடைய சத்துருவும், அவன் பிராணனை வாங்கத் தேடினவனுமாகிய நேபுகாத்நேசாரென்கிற பாபேலுடைய இராசாவின் கையில் ஒப்புக்கொடுத்ததுபோலே, நாம் பார்வோன் ஒப்பிரு வென்கிற எகிப்தின் இராசாவையும் அவனுடைய சத்துருக்களின் கையிலும் அவன் பிராணனை வாங்கத் தேடுகிறவர்களின் கையிலும் ஒப்புக்கொடுப்போமென்பதுதானே என்று கர்த்தர் சொல்லுகிறாரென்றான்.

## ௪௫. அதிகாரம.

### பாருக்குச்சொலலபபட்ட ஆறுதல.

யோசியாவின குமாரனாகிய யோயாக்கிமெனறயூதாவுடைய இராசாவின நாலாமவருஷத்திலே நேரியாவின குமாரனாகிய பாருக் இநத வசனஙகளை *யெரேமியாவின வாயசொலலின்படி புஸ்தகத்தில எழுதுகையில, யெரேமியா தீர்க்கதெரிசி அவனுடனே சொனனவாறதை:

* ௩௬: அதி. ௪.

௨. பாருக்கே, உனனைககுறிதது இஸ்ரவேலின பராபரனாகிய கர்த்தர்சொலலுகிறதாவது:

௩. நீ: ஆ, எனககையோ! எனெனிலக்கர்த்தர எனனுடைய நோவைச்சஞசலத்தால வருத்திககப்பணணினாரெனறும* என தவிப்பினாலஇளைததேன, இளைப்பாறுதலைககாணேனேயெனறும்சொலலுகிறாய. * ௩௯. ௬: எ.

௪. கர்த்தர்சொலலுகிறதாவது; இதோ, நாமகட்டினதைநாம இடிககிறோம, நாமநாட்டினதைநாம பிடுஙகுகிறோம, இநதமுழுதேசத்தையுங கூடததானே.

௫. நீயோவெனில உனககுபபெரிய காரியஙகளைத தேடுகிறாயோ? தேடாயாக, எனெனில இதோ, எலலாமாமிஷத்தின மேலுந தீஙகைவரப்பணணுகிறோமெனறுகர்த்தர் சொலலுகிறார்; ஆனால நீபோகுஞ்சகல ஸதலஙகளிலும * உனனுடைய ஆத்துமத்தையுனககுககிடைககுங கொளளையுடைமையைப்போலே தருகிறோமெனகிறதை அவனுடனே சொலலெனறு எனனுடனே சொனனார. * ௩௯: ௰௮.

## ௪௬. அதிகாரம.

### எகிபதியருக்குவிரோதமான தீர்க்கதெரிசனம.

புறசசாதிகளுக்குவிரோதமாய் யெரேமியா தீர்க்கதெரிசிககுணடான கர்த்தருடைய வசனம.

௨. * எகிபததுககுசசொலவது: ஐப்பிருத் நதியண்டையில கர்கேமிசுலேயிருநததும, பாபேலின இராசாவாகிய நேபுகாத்நேசார், யோசியாவின குமாரனாகிய யோயாக்கிமெனற யூதாவுடைய இராசாவின நாலாமவருஷத்திலே முறியடிததது மான பார்வோனநேகோவெனனப்பட்ட எகிபததுவினுடைய இராசாவின இராணுவத்தின பேரிலே அவர்சொனனதாவது:

* ௪ரா. ௰௩: ௧. மிடீ எசேக்கி. ௨௯: ௨. மிடீ.

௩. கேடயஙகளையுமபரிசைகளையுமஆயித்தமபணணி, யுத்ததுககுச்சேருஙகோள.

௪. குதிரைகளைககாத்தி, குதிரைகளின மேலேசேணஙகளை வைததேறி, தலைச் சோடுகளைப போடடுககொணடவர்களாய, ஈட்டிகளைத தீடடிக், கவசஙகளைத தரிததுககொளளுஙகோள.

௫. அவர்கள கலஙகிப்பினவாஙகுகிறார்களெனறுநாம காணகிறதெபபடி? அவர்களுடைய பிராக்கிரமசாலிகள நருககுணடு திருமபிப்பாராமல ஓட்டமாய் ஓடுகிறார்கள, சுற்றிலும பயஙகரமுணடெனறுகர்த்தர்சொலலுகிறார.

௬. வேகமானவன ஓடிப்போகானாக, பராக்கிரமசாலி தப்பிப்போகானாக, வடக்கே ஐப்பிருத் நதியணடையிலேஇடறி, விழுவார்கள.

௭. நீரோட்டத்தைப்போலேயுநதணணீர்கள, மோதியடிககிற ஆறுகளைப்போலேயுமஎழும்பிவருகிறவனார்?

௮. எகிபதியனநீரோட்டத்தைப்போலேயுந தணணீர்களமோதியடிககிற ஆறுகளைப் போலேயுமஎழுமபுகிறது: நான போயேறி, தேசத்தைமூடி, பட்டணத்தையும அதிலேகுடியிருககிறவர்களையும அழிப்பேனெனறான.

௯. குதிரைகளே, போயேறுஙகோள, இரதஙகளே, கடகடெனறோடுஙகோள, பராக்கிரமசாலிகளும, கேடயமபிடிககிற எதியோப்பியரும, பூத்தியரும, வில்லைப்பிடிததுநாணேற்றுகிற லீதியரும புறப்படக்கடவர்கள.

௰. ஆனாலிது சேனைகளுடைய கர்த்தராகிய ஆணடவரின நாளும, அவர்தமமுடைய சத்துருக்களுககுநீதியைச்சரிக்கட்டுகிறநாளுமாயிருககுது, ஆகையாலபட்டயமபட்சிதது, அவர்களுடைய இரத்ததாலேதிருப்தியாகிவெறிததிருககும, எனெனில வடதேசத்தில ஐப்பிருத் நதியணடையிலேசேனைகளுடைய கர்த்தராகிய ஆணடவருககுபபலியடிககுதலுணடு.

௰௧. எகிபதுகுமாரததியாகிய கனனியாஸ்திரியே,* கீலேயாததுககுபபோய்ஏறி, பிசின தயிலமவாஙகு, விருதாவாகத்திரள அவிழ்தஙகளைககூட்டுகிறாய, உனககு ஆரோககியமுணடாகாது. * ௮: அதி. ௨௨.

௰௨. சாதிகள் உன் இலச்சையைக் கேட்கிறார்கள், உன் கூக்குரலால் தேசம் நிறைந்தது, ஏனெனில் பராக்கிரம சாலியின் மேல் பராக்கிரம சாலி இடறி, இருவருமன ஏகமாய் விழுந்தார்களென்றார்.

௰௩. எகிப்துதேசத்தை யழிக்கப் பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேசார் வருவானென்பதைக் குறித்து யெரேமியா தீர்க்கதெரிசியுடனே கற்தர் சொன்ன வசனமாவது:

௰௪. உன்னை நிறுத்தி, ஆயித்தப்படு, ஏனெனில் பட்டயம் உன்னைச் சுற்றிலுமுண்டானதைப் பட்சித்துப் போடுமென்று சொல்லி, எகிப்திலே அறிவித்து மிக்தோலிலே கேள்க்கப் பண்ணி நோப்பிலும் தக்பானேசிலுங் கேள்க்கப் பண்ணுங்கோள்.

௰௫. உன்னில் வல்லவர்கள் அடித்துக் கொண்டு போகப்படுகிறதெப்படி? நில்லுகிறதுமாட்டார்கள், ஏனெனில் கற்தர் அவர்களைத் தள்ளினார்.

௰௬. அநேகரை இடறப்பண்ணுகிறார், அவனவனுந்தன் அயலவன் மேலவிழுந்து: எழுந்திரு, கெடுக்கிற பட்டயத்துக்குத் தப்ப, நம்முச் சனத்தண்டைக்கும் நாம் பிறந்த தேசத்துக்கும் திரும்பிப் போவோமென்கிறார்கள்.

௰௭. எகிப்துவின் இராசாவாகிய பார்வோன் பாழ்க்கடிக்கப்பட்டான், அவன் திட்டமான காலத்தைத் தப்பவிட்டானென்று அங்கே கூப்பிடுகிறார்கள்.

௰௮. பருவதங்களில் தாபோரும், சமுத்திரத்தின் கற்மேலுமிருக்கிற உயரமாயவருவானென்று * சேனைகளின் கற்தரென்ற நாமமுள்ள இராசா தம்முடைய சீவனைக் கொண்டு சொல்லுகிறார்.

* சங்கீதம். ௨௪: ௰.

௰௯. எகிப்துதேசத்துக் குடியாகிய குமாரத்தியே, சிறையிருப்புக்குப் போகும் பயணமூட்டுகளை யுனக்குண்டாக்கு, ஏனெனில் நோப் பாழாகும், அது குடியில்லாமல் சுட்டுப் போட்டப்பட்டுக் கிடக்கும்.

௨௰. எகிப்து மகா நேர்த்தியான கன்றுக்குட்டியாயிருக்குது, அடிக்கிறவன் வடக்கேயிருந்து வருகிறான்.

௨௧. அதின் நடுவிலிருக்கிற அதினுடைய கூலிப்படைகள் கொழுத்த கன்றுக்குட்டிகள் போலிருக்கிறார்கள், ஆகையால் இவர்களும் நிற்காமல், திரும்பிக் கொண்டு ஏகமாயோடிப் போவார்கள், ஏனெனில் * அவர்கள் விசாரிக்கப்படுகிற அவர்களுடைய ஆபத்துநாள் அவர்கள் மேல் வந்தது.

* ௫௰: அதி. ௩௧.

௨௨. அதினுடைய சத்தம் பாம்பின் சத்தம் போல் புறப்படும், ஏனெனில் இராணுவப் பெலத்தோடே நடந்து மரங்களை வெட்டுகிறவர்களைப் போல் கோடாலிகளோடே அதின் மேல் வருவார்கள்.

௨௩. எண்ணப்படாதமரங்களாயிருந்தாலும் அதின் காட்டை வெட்டுவார்களென்று கற்தர் சொல்லுகிறார், ஏனெனில் வெட்டுக்கிளிகளைப் பார்க்க அதிகமாயிருக்கிறார்கள், அவர்களுக்கு இலக்கமில்லை.

௨௪. எகிப்துக் குமாரத்தி வெட்கப்பட்டிருக்கிறாள், வடக்கத்திச் சனத்தின் கையில் ஒப்புக் கொடுக்கப்படுகிறாள்.

௨௫. இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளுடைய கற்தர் சொல்லுகிறதாவது: இதோ, நாம் நோப்பட்டணத்திலுள்ள திரளசனத்தையும், பார்வோனையும், எகிப்துவையும், * அதின் தேவர்களையும், அதின் இராசாக்களையும், பார்வோனையும், அவனை நம்பியிருக்கிறவர்களையும் விசாரித்து,

* ௩௰: ௰௨. எசாயா. ௰௯: ௧.

௨௬. அவர்களை யவர்கள் பிராணனை வாங்கத் தேடுகிறவர்களின் கையிலும், பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேசாரின் கையிலும், அவனுடைய வேலைக்காறரின் கையிலும் ஒப்புக்கொடுப்போம், அதற்குப் பிறபாடோவெனில் அது பூருவநாளங்களிலிருந்ததும் போலக் குடியேற்றப்படுப்போமென்று கற்தர் சொல்லுகிறார்.

சிறையிருப்பான யூதருடைய இரட்சிப்பின் தீர்க்கதெரிசனம்.

௨௭. ஆனால் * நம்முடைய தாசனாகிய யாக்கோபே, நீ பயப்படாயாக, இஸ்ரவேலே, நீ கலங்காயாக, ஏனெனில் இதோ, நாம் உன்னைத் தூரத்திலும், உன் வித்தை யவர்கள் சிறையிருப்பின் தேசத்திலுமிருந்து விடுவித்து இரட்சிப்போம், அப்போது யாக்கோப் திரும்பிவந்து, அமைச்சலோடுஞ் சாங்கபாங்கத்தோடுமிருப்பான், அவனைத் தத்தளிக்கப்பண்ணுவாரில்லை.

* ௩௰: அதி. ௰.

௨௮. நம்முடைய தாசனாகிய யாக்கோபே, நீ பயப்படாயாகவென்று கற்தர் சொல்லுகிறார், ஏனெனில் நாமுன்னுடனே யிருக்கிறோம், நாமுன்னைத் துரத்திவிட்ட எல்லாச் சாதிகளையும் நிர்மூலமாக்குவோம், உன்னையோ நாம் நிர்மூல

மாககாமல், உனவினை * நியாயமடடாய்தணடிககபபோம, ஆனால உனவின நாயகுறறமிலலாமல நீஙகலாக்கவேவிடுவதிலலையெனறார்.
* ஙு: அதி. உச.

## சஎ. அதிகாரம.

### பெலிஸதருககுவிரோதமான தீர்ககதெரிசினம.

பார்வோனகாத்சாவை அழிககாததுககுமுனனே, * பெலிஸதருககு விரோதமாகத் தீர்கக தெரிசியாகிய யெரோமியாவுககுணடான கர்த்தருடையவசனம. * ஏசா. ௧ச: உகூ. மிடீ ஏசேக. உரு: ௧ரு. மிடீ செப. உ: ச. ரு. சககரி. கூ: ருசு.

உ. கர்த்தர்சொலலுகிறதாவது: இதோ, வடககே யிருநது தணணீர்களெழுமபி, வெளளநதியாகி, தேசத்தின மேலும அதிலுளளவைகளினமேலும, படடணததினமேலும, அதிலகுடியிருககிறவர்களினமேலும, பிரணடோடும, அபபோமனுஷர் கூபபிடடுதேசததின குடிகளெலலாரும அலறுவார்கள.

௩. அவர்களுடையவலுவான்குதிரைகளின குளமபுகளாஇரைகிறசத்ததததையும, அவர்களுடைய இரதஙகளின கடகடப்பையும, அவர்களுடைய உருளிகளின இரைசசலையுநதொடடு தகபபமார் தஙகளகைகளின அசருகையினாலேபிளளைகளைநோககிப்பாராதிருபபார்கள.

ச. பெலிஸதரையெலலாம பாழ்ககடிககவும, தீருவுககுஞ சீதோனுககும மீதியான சகாயரையெலலாஞ சஙகாரம பணணவும வருகிற நாளினிமிததமே. ஏனெனறால * கபதோரெனற கரைதுறையான தேசததாரிலமீதியாகிய பெலிஸதரையுங கர்த்தர்பாழ்ககடிபபார்.
ஆமோ. கூ: எ.

ரு. காத்சாவுககுமொடடையிடுதலவருகுது, அவர்களுடையபளளததாககிலேமீதியாகிய அஸ்கலோனசஙகாரமாகுது, எநதமடடுமஉனவினைக்கீறிக்கொளளுவாயெனறார்.

சு. ஆ, கர்த்தரின படடையமே, எநதமடடும அமராதிருபபாய? உனஉறையிலததிருமபு, ஓயநதமர்நதிரு.

எ. எபபடியமர்நதிருபபாய? அஸ்கலோனுககு விரோதமாகவுங கடறகரையோருககு விரோதமாகவுங கர்த்தர் அதுககுககடடளைகொடுதது அவவிடததுககொனறு அதைககுறிததாரே.

## சஅ. அதிகாரம.

### மோவாபியருககு விரோதமானதீர்க கதெரிசினம.

மோவாபுககு சசெலவது. இஸரவேலின பராபரனாகிய சேனைகளுடைய கர்த்தர் சொலலுகிறதாவது: நேபோவுககையோ! ஏனெனில அதுபாழ்ககடிககபபடடது, கீரியததாயீம வெட்கபபடடுபபிடிககபபடடுபபோயிறறு, மிஸகாப்வெட்கபபடடுககலஙகிபபோயிறறு.
* ஏசாயா. ௧ரு: க. மிடீ

உ. எஸ்போனிலதமதொடடுமோவாபுககிருநதபெததரிககமஇனியிலலை. அதுசாதியாயிராதபடிககு, அதை நிர்மூலமாககுவோம வாருஙகோளெனறு அதுககுவிரோதமாகபபொலலாபபை நினைததிருககிறார்கள. மத்மேனே, நீயுஞ சஙகாரமாவாய, படடையமுனனைததொடரும.

௩. பாழ்ககடிபபினாலுமபெரியநொறுககுதலினாலும உணடாகிற கூபபிடுதலின சததமஒரோனாயிமிலிருநதுகேடகபபடும.

ச. மோவாப் நொறுஙகுணடுது, அதிலசிறியவர்கள கூபபிடுதலைககேடகபபணணினார்கள.

ரு. ஏனெனில லூகிததுககேறுகிற வழியிலே அழுகையினமேல அழுகையெழுமபும; ஒரோனாயிமுககிறஙகிபபோகிற வழியிலே சததுருககளநொறுககுதலசெய்கிறதினால உணடாகிய கூபபிடுதலைககேடகிறார்கள.

சு. உஙகளபிராணனைததபபுவிககஓடிபபோஙகோள, ஆனால * வனாநதரததில இளபபமான செடியைபபோலிருபபீர்கள. * ௰எ: அதி. சு.

எ. ஏனெனில நீயுன கிரியைகளையும உனபொககிஷஙகளையும நமபுகிறபடியினாலே, நீயுமபிடிககபபடுவாய, அபபோது * காமோஸ சிறையாககபபடடுபபோகும, அதின ஆசாரியருமபிரபுககளுஙகூடபபோவார்கள.
* க. இராசா. ௧க: எ.

அ. பாழ்ககடிககிறவனெலலாபபடடணஙகளினமேலும வருவான ஒருபடடணமுநதபபிபபோவதிலலை, பளளததாககுகளுஙகெடடுப்போகும, சமனான பூமியுமஅழிககபபடுமெனறு கர்த்தர்சொனனார்.

௯. மோவாபுககுசசெடடைகளைககொடுஙகோள, ஏனெனில அது பறநது போகும, அ
திய

தின பட்டணங்களோ குடிகளில்லாதபடியாய்ப் பாழாகும்.

௰. கர்த்தருடைய கிரியையை வஞ்சனையாய்ச் செய்கிறவன் சபிக்கப்பட்டவன், இரத்தத்தைச் சிந்தாதபடிக்குத் தன் பட்டயத்தை யடக்கிக் கொள்ளுகிறவன் சபிக்கப்பட்டவன்.

௰௧. மோவாப் தன் சிறுவயது துவக்கிச் சாங்கோபாங்கத்தோடேயிருந்து, தன் வண்டல்களின் மேல் அசையாமல் நின்று, ஒரு பாத்திரத்திலிருந்து வேறொரு பாத்திரத்தில் இறக்கிக் கொள்ளப்படாமலுஞ் சிறையிருப்பில் போகாமலுமிருந்தது; ஆனதுகொண்டு அதின் ருசி அதிலே நிலைத்தது, அதின் வாசனை வேறுபட்டுப்போனதில்லை.

௰௨. ஆகையால் இதோ, நாட்கள் வருமென்று கர்த்தர் சொல்லுகிறார், அப்போது இறக்கிறவர்களை யதுக்கனுப்புவோம், அவர்கள் அதை யிறக்கி, அதின் பாத்திரங்களை வெறுமையாக்கி, அதின் சாடிகளை யுடைப்பார்கள்.

௰௩. அப்போது, இஸ்ரவேலின் வீட்டார் தங்கள் நம்பிக்கையான *பெத்தேலாலே வெட்கப்பட்டதுபோலே, மோவாப் காமோசாலே வெட்கப்படும். * ௧. இராசா. ௰௨: ௨௯. ௩௰.

௰௪. நாங்கள் பராக்கிரமசாலிகளென்றும், நாங்கள் யுத்தத்துக்கான பெலத்த மனுஷரென்றும் நீங்கள் சொல்லுகிறதெப்படி?

௰௫. மோவாப் தன் பட்டணங்களுக்கேறிப்போகக் கொள்ளைப்பாழ்க்கடிக்கப்படும், தெரிந்துகொள்ளப்பட்ட அதினுடைய வாலிபர் கொலைக்களத்துக் கிறங்குகிறார்களென்கிறதைச் சேனைகளுடைய கர்த்தரென்ற நாமமுள்ள இராசா சொல்லுகிறார்.

௰௬. மோவாபின் ஆபத்து வரச்சமீபமாயிருக்குது, அதின் தீங்கு மிகவுந் தீவிரித்துக்கொள்ளுகுது.

௰௭. அதின் சுற்றுப்புறத்தாரும் அதின் பேரையறிந்தவர்களுமாகிய நீங்களெல்லாரும் அதுக்காக அங்கலாய்த்துக் கொள்ளுங்கோள், பெலனான மிலாறும் அலங்காரமான தடியும் எப்படியுடைந்ததென்று சொல்லுங்கோள்.

௰௮. தீபோனின் குடியாகிய குமாரத்தியே! நீ மகிமையைவிட்டிறங்கித் தவனத்தோடே உட்காரு, ஏனெனில் மோவாபைப் பாழ்க்கடிக்கிறவன் உனக்கு விரோதமாய் வந்தேறி, உன் அரண்களை யழித்துப்போடுவான்.

௰௯. ஆரோவேரில் குடியிருக்கிறவளே! நீ வழியிலே நின்று, கண்ணோக்கிக் கொண்டிரு; நடந்ததென்னவென்று ஓடிவருகிறவனையுந் தப்பிவந்தவளையுங் கேள்.

௨௰. மோவாப் முறியடிக்கப்பட்டபடியினாலே வெட்கப்பட்டது, அலறிக் கூப்பிடுங்கோள், மோவாப் பாழ்க்கடிக்கப்பட்டதென்று *அர்னோனில் அறிவியுங்கோள்.

* ௪. மோசே. ௨௧: ௰௩.

௨௧. சமனான பூமியாகிய ஓலோனின் மேலும், யாத்சாவின் மேலும் மேப்காத்தின் மேலும்,

௨௨. தீபோனின் மேலும், நேபோவின் மேலும், பெத்திபலத்தாயிமின் மேலும்,

௨௩. கீரியத்தாயிமின் மேலும், பெத்கமூலின் மேலும், பெத்மெயோனின் மேலும்,

௨௪. கேரியோத்தின் மேலும், பாத்ஸ்ருவின் மேலும், மோவாப் தேசத்திலே தூரத்திலுஞ் சமீபத்திலுமிருக்கிற எல்லாப் பட்டணங்களின் மேலும் நியாயத்தீர்ப்பு வரும்.

௨௫. மோவாபின் கொம்பு வெட்டுண்டது, அவன் புயம் உடைக்கப்பட்டதென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௨௬. அவனை வெறியாக்குங்கோள், ஏனெனில் கர்த்தருக்கு விரோதமாய்ப் பெருமையானான், அப்படியே மோவாப் தான் வாந்திபண்ணுகையில் தன் விளையடித்துக்கொண்டு, தானும் பரியாசமாவான்.

௨௭. ஏனெனில் இஸ்ரவேல் உனக்குப் பரியாசமாயிருந்ததல்லவோ? அவன் திருடருக்குள்ளே கண்டுபிடிக்கப்பட்டானோ? நீ யவனைக் குறித்துப் பேசுகிறபோதெல்லாம், தலையைத் துலுக்குகிறாயே,

௨௮. மோவாபுடைய தேசத்தின் குடிகளே! நீங்கள் பட்டணங்களை விட்டுப்போய்க் கன்மலையில் தங்கி, குகையுடையவாயின் ஓரங்களில் கூடுகட்டுகிற புறாவுக்கொப்பாகுங்கோள்.

௨௯. *மெத்தப் பெருமையாயிருக்கிற மோவாபின் பெருமையையும், அதின் மேட்டிமையையும், அதின் அகந்தையையும் அதின் பெத்தரிக்கத்தையும், அதினுடைய இருதயத்தின் உயர்த்தலையுங் கேட்டோம்.

௩௰. அதின் மூர்க்கத்தை நாம் அறிவோமென்று கர்த்தர் சொல்லுகிறார், ஆனால் அப்படியாகாது, அதின் வீம்பு அதை யப்படி நடப்பிப்பதில்லையென்கிறார்.

௩௧. ஆகையால் மோவாபின் நிமித்தியம் நான் அலறி, மோவாபுடைய தேசமனைத்தின் நிமித்தி

யமு

யமுங கூக்குரலிடுவேன, கீராரேசுடைய மனுஷரின்நிமித்தியம பெருமூச்சுவிடப்படும.

௩௨. சிப்மாவூரின திராட்சப்பயிரே, யாசேரினமேல அழப்பட்டதுபோல உனமேல அழுவேன, உன கொடிகள கடலுக்கடந்துபோகசுது, அதுகள யாசேருடைய கடலமட்டும வந்துசேர்ந்தது, பாழ்க்கடிக்கிறவன உன விளைச்சலினமேலும உன திராட்சப்பழ அறுப்பினமேலும விழுந்தான.

௩௩. * சந்தோஷமுங களிப்பும பயிர்வெளியிலும மோவாப்தேசத்திலும இருந்து வாங்கிப்போசசுது, ஆலைகளில த்திராட்சிப்பழரசத்தின பொழியுதலை ஒயப்பண்ணினேம, ஆலையைமிதிக்கிறகொக்கரிப்பில்லை, கொக்கரிப்புவிலகொக்கரிப்பல்ல. * ஏசாயா. ௰௬: ௰.

௩௪. எஸ்போனிலதுவக்கி எலேயாலேமட்டாகவுமயாகாஸமட்டாகவும உண்டாகுங்கூப்பிடுதலைத்தொட்டு அவர்கள மூன்றுவயசு கிடாரியைப்போலே, சோவாரைத் துவக்கி ஒரோனயிம மட்டாகவுந் தங்களசத்தத்தைக் காட்டுவார்கள, எனனில்நிமிரீமின்நீர்பாச்சல்களும பாழ்த்துப்போய்க்கிடக்கும.

௩௫. மோவாப்தேசத்திலே மேடைகளிலபலியிடுகிறவனையுந்தன தேவர்களுக்குத் தூபங்காட்டுகிறவனையும ஒயப்பண்ணுவேனென்று கர்த்தர்சொல்லுகிறார்.

௩௬. ஆகையால மோவாபின்நிமித்தியம * என இருதயமநாகசாரங்களைப்போல துயரமாய்த்தொனிக்கும, கீராரேசின மனுஷரின் நிமித்தியமுமென இருதயமநாகசாரங்களைப்போலே துயரமாய்த்தொனிக்கும, அவர்களமீதியாகவைத்து வைத்தது அழிந்துப்போகிறபடியினாலே தானே. ஏசாயா. ௰௬: ௰௧.

௩௭. எனனில்த்தலைகளெல்லாம மொட்டையிட்டுந் தாடிகளெல்லாஞ் கத்தரித்துமிருக்கும, கைகளிலெல்லாங் கீறுதல்களும அரைகளில்இரட்டுடையுமுண்டு.

௩௮. மோவாபுடையசகலவீடுகளினமேலும அதினுடைய தெருக்களிலேயும ஏகபுலம்பலுண்டாம, எனனிலவிருப்பமில்லாதபாண்டத்தைப்போலே மோவாபையுடைத்துப்போட்டேனென்று கர்த்தர்சொல்லுகிறார்.

௩௯. எத்தனையாய்முறிந்துபோசசுதெனறலறுகிறார்கள. மோவாப் எத்தனையாய முதுகைககாட்டிவெட்கப்படும? இப்படி மோவாப்தனசுற்றுப்புறத்தார் அனைவருக்கும பரியாசமுந்திகைப்புமாயிருக்கும.

௪௰. எனனில, இதோ, * கழுகைப்போலேபறந்துவந்து, மோவாபினமேல்த்தன செட்டைகளைவிரிப்பான. * ௪௯: ௨௨.

௪௧. பட்டணங்களவாங்கப்படும, கோட்டைகளபிடிக்கப்படும, அந்நாளிலேமோவாபுடைய பராக்கிரமசாலிகளின இருதயமவாதைப்படுகிற இஸ்திரியின இருதயத்தைப்போலிருக்கும.

௪௨. மோவாப்சனமாயிராதபடிக்கு அழிக்கப்படும, எனனில்க்கர்த்தருக்குவிரோதமாகப் பெருமையாய்ப்போசசுது.

௪௩. மோவாபுடையதேசத்தின குடியே * திகிலும, படுகுழியுங, கண்ணியும உனமேலவருமென்று கர்த்தர்சொல்லுகிறார். * ஏசா. ௨௪: ௰௭. ௰௮.

௪௪. திகிலுக்கிலக்காடுகிறவன படுகுழியிலேவிழுவான, படுகுழியிலிருந்தேறுகிறவனோ கண்ணியிலேபிடிபடுவான; எனனில அவர்களவிசாரிக்கப்படுமவருஷத்தையதினமேலே, அதாவது மோவாபினமேலேதானே, வரப்பண்ணுவேனென்று கர்த்தர்சொல்லுகிறார்.

௪௫. வல்லமைக்குத்தப்ப ஓடிப்போகிறவர்களெஸ்போனின்நிழலில்த்தரித்துக்கொளளுகிறார்கள, ஆனால * நெருப்புஎஸ்போனிலும, அக்கினிச்சுவாலை சீகோனுடையஊரின் நடுவிலுமிருந்துப்புறப்பட்டு மோவாப்தேசத்தின மூலைகளையும, அமளிக்காறரின உச்சந்தலையை பட்சிக்கும. * ௪. மோசே. ௨௧: ௨௮. ௨௯.

௪௬. மோவாபே, உனக்கையோ! காமோஸின்கிராசத்தின சனம அழியும, எனனில உனகுமாரருஞ்சிறைபிடிக்கப்பட்டு உனகுமாரத்திகளுஞ்சிறைபிடிக்கப்பட்டுப்போகிறார்கள.

௪௭. ஆனால * கடைசிநாள்களில மோவாபின சிறையிருப்பைத்திருப்புவேனென்று கர்த்தர்சொல்லுகிறார், மோவாபினமேலவருமநியாயத்தீர்ப்பினசெயதியிதமட்டுஞ்சரி.

* ௪௯: அதி. ௩௯.

## ௪௯. அதிகாரம்.

அம்மோன்புத்திரருக்கும, ஏதோமியருக்குந், ஆரியருக்கும, அரபருக்கும, ஏலாமியருக்குமவிரோதமான தீர்க்கதெரிசனங்கள.

அம்மோன் புத்திரருக்குச்செலவது, கர்த்தர் சொல்லுகிறதாவது: இஸ்ரவேலுக்குப்பி



ளைகளி

ளவர்களில்லையோ? அவனுககுசசுதநதிரவாளியி ல்லையோ? மல்காம் காத் தேசததைசசுதநதரிதது கொண்டு அதினசனம இவன பட்டணங்களில் ககுடியிருபபானேன? * எசேக. ௨௫: ௧—௭.

௨. ஆகையாலஇதோ, நாளககள வருமெனறு கறதர் சொல்லுகிறுர், அபபோது அம்மோன் புததிரின பட்டணமாகியரபாவிலேஉயித்ததின ஆறபரிபபை ககேள்கக பபணணுவோம, அது பாழான மணமேடாகும, அதறகடுதத ஊர்க ளுமஅககினியால் சசுட்டெரிககபபடும, ஆனல இஸ்ருவேல் தனதேசததை சசுதநதரிதது ககொ ணடவர்களின தேசததை சசுதநதரிதது ககொள ளுமெனறுகறதர்சொலலுகிறுர்.

௩. எஸபோனே, அலறு, எனனெனறலஆயி பாழ்ககடிககபபட்டது, ரபாவினகுமாரததி களே, கூபபிடுஙகோள, இரட்டையுடுததிககொ ணடு புலமபி, வேலிகளில்சசுறறிததிரியுஙகோள, ஏனெனிலமல்காம்* சிறையிருபபிலேபோகுது, அதினஆசாரியர்களும அதினபிரபுககளுஙகூட ததானே. * ௪அ: ௭.

௪. எனககுவிரோதமாய வருபவனர் எனறு சொலலி, உனபொககிஷஙகளை நமபின மாறு பாடானகுமாரததியே, நீபளளததாககுகளைபப றறிபபெருமைபாராட்டுவானேன? உனனுடை யபளளததாககுசசோநதுபோகுது.

௫. இதோ, உனசுறறுபபுறததாரராலே எல லாமஉனமேல்ததிகிலை வரபபணணுவோமென றுசேனைகளின கறதராகியஆணடவர் சொலலு கிறுர், நீஙகளஅவரவர் தனதன முனனிருககுமவ ழியே ஒட்டததுரத்தபபடுவீர்கள, வலசை வருகிற வர்களைசசேர்பபாருமிலலை.

௬. * அதுககுபபிறபாடோவெனறல அம மோன் புததிரருடைய சிறையிருபபை ததிருபபு வோமெனறுகறதர்சொல்லுகிறுர். * ௪அ: ௪௭.

௭. * எதோமுககுசசெலவது. சேனைகளு டைய கறதர் சொலலுகிறதாவது: தேமானிலே இனிஞானமிலலையோ? ஆலோசனையுணர்வுள்ள வர்களைவிட்டழிநததோ? அவர்களுடையஞான ஙகெட்டுபபோசசுதோ? * எசேக. ௨௫: ௰௨-௰௪.

௩௫: ௧. மிட. ஒபதி. ௧. வசன. மிட.

௮. தேதானின்குடிகளே, ஓடுஙகோள, முது கை ககாட்டுஙகோள, தஙகிறதுககாக ஆழ ஙகளில்பபதுஙகுஙகோள, ஏனெனில ஏசாவின ஆபததையும அவனைவிசாரிககுங காலததையும அவனமேலேவரபபணணுவோம.

௯. திராட்சபபழஙகளையறுககிறவர்கள உனனிடததிலேவநதார்களாகில, பினனறுவடை க்கொளுசசம வையார்களோ, ராததிரியில்திருடர் வநதார்களாகில, தஙகளுககுபபோதுமெனறம ட்டாகவலலோகெடுசெயவார்தள.

௰. நாமோவெனிலஏசாவை ததிறபபாககி, அவனஒளிததுககொளள ககூடாதபடிககு அவ னுடையமறைவுகளைவெளியாககிபபோடுவோ ம, அவனுடையவிததாயிருககிறவர்களும, அவ னுடையசகோதரரும அவனுடைய அயலாரும பாழ்ககடிககபபடுவார்கள, அவனினியிலலை.

௰௧. திககறறிருககபபோகிற உனபிளளைகளை த்தளரவிடு, நாம அதுகளைஉயிரோடே காபபா றறுவோம, உன விதவைகள நமமையேநமபுவா ர்களாக.

௰௨. ஏனெனில்க்கறதர் சொலலுகிறதாவது: இதோ *பாததிரததில்ககுடிககவேணுமெனற நியாயததீர்பபுககுளளாயிராதவர்கள அதில்சகு டிககவேகுடிததார்கள, நீ குறறமறறநீஙகலா யிருபபவனே? நீநீஙகலாயிராமல், அதில்ககுடி ககவேகுடிபபாய. * ௨௫: அதி. ௨௯.

௧. பேதுரு. ௪: ௰௭.

௰௩. ஏனெனில * பொத்ஸ்ருபாழுமநிநதை யும அபாநதிரையும பழிபபுமாக இருககுமென றும, அதின பட்டணஙகளெல்லாம நிததியவனு நதரஙகளாயிருககுமெனறும நமமைககொணடு ஆணையிட்டோமெனறுகறதர்சொல்லுகிறுர்.

* எசாயா. ௩௪: ௬. ௬௩: அதி. ௧.

எசேகி. ௩௫: ௯.

௰௪. * நீஙகளகூடிககொணடு, அதுககுவி ரோதமாகவநது, உயிததமபணணுகிறதுககேழுமபுங கோளெனறுசொலலி, சாதிகளணடை ககுததானுபததியம அனுபபப்படுகிற செயதி யைககறதரிடததிலேகேள்விபபட்டேன.

* ஒபதி. ௧. வசனம

௰௫. ஏனெனிலஇதோ, உனனைசசாதிகளு ககுளளே சிறியதும, மனுஷருககுளளே அசட் டைபணணபபட்டதுமாககிறேனெனகிறுர்.

௰௬. கன்மலைவெடிபபுகளிலவாசமபணணி மேடுகளின உயரததை பபிடிததிருககிற உனனை உன னுடையபயஙகரநிலையுமஉனனிருதயததின அகநதையும மோசமபோககிறது. * நீகழுகை பபோல உயரததிலே யுனகூணடை ககட்டினு லும, அஙகேயிருநதுனனை விழபபணணுவோ மெனறுகறதர்சொலலுகிறுர். ஒபதி. ௪. வசன. ௰௭.

௰௭. அப்படியே எதோம் கெடியாகவிருக்கும், * அதைக் கடந்து போகிறவனெல்லாம் அதினுடைய எல்லா வாதைகளின் நிமித்தியம் பிரமித்து ஈசல்போடுவான். * ௱௰: அதி. ௰௩.

௰௮. * சோதோமும் கொமோராவும் அதுகளின் அசலூர்களுங் கவிழ்க்கப்பட்டதுக்குச் சமானமாயிருக்குமென்று கர்த்தர் சொல்லுகிறார், அங்கே ஒருத்தனுங் குடியிருப்பதில்லை, அதிலே ஒரு மனுஷன் தங்குவதுமில்லை.

* ௱௰: ௪௰. க. மோசே. ௰௯: ௨௫.

௰௯. * இதோ, பிரவாகிக்கிற யோர்தானிடத்திலிருந்து சிங்கத்தைப்போலே பெலவானுடைய தாபரத்துக்கு விரோதமாக வருகிறான், என்னாலே அவனை யங்கேயிருந்து அசப்பிலே ஓடிவரப்பண்ணுவோம், நாம் அதுக்கு விரோதமாகக் கட்டளை யிடலாப்பத் தெரிந்து கொள்ளப்பட்டவனார்? என்னிலே நமக்குச் சமானமானவனார்? நமக்குத் திடன் சொல்பவனார்? நமக்கு முன்பாக நிலைநிற்கப்போகிற மேய்ப்பனார்?

* ௱௰: அதி. ௪௪—௪௬.

௨௰. ஆகையால் கர்த்தர் எதோமுக்கு விரோதமாக யோசித்த ஆலோசனையையும், அவர் தேமானின் குடிகளுக்கு விரோதமாக நினைத்திருக்கிற நினைவுகளையுங் கேளுங்கோள், மெய்யாகவே மந்தையிற் சிறியவர்கள் அவர்களையிழுத் திழுப்பார்கள், மெய்யாகவே அவர்களிருக்கிற அவர்களுடைய தாபரங்களைப் பாழாக்குவார்.

௨௧. அதுகளுடைய விழுகுதலின் சத்தத்தினாலே பூமியதிரும், கூப்பிடுதலின் சத்தம் நாணல்கடலமட்டுங் கேட்கப்படும்.

௨௨. இதோ, ஒரு கழுகைப்போலெழும்பிப் பறந்துவந்து, தன் செட்டைகளை போத்சிறுவின் மேல் விரிப்பான், அந்நாளிலே எதோமுடைய பராக்கிரமசாலிகளின் இருதயம் * வாதைப்படுகிற இஸ்திரீயின் இருதயத்தைப்போலிருக்குமென்கிறார். * ௱௰: அதி. ௪௩.

௨௩. * தமஸ்குவுக்குச் செல்வனூ.காமாத்தும் அர்ப்பாத்தும் வெட்கப்படுகுது, பொல்லாத செய்தியை யவர்கள் கேட்டபடியினாலே கரைந்துபோகிறார்கள், சமுத்திரத்தோரமாய் விசாரமுண்டு, அது அமர்ந்திருக்கக்கூடாது.

* எசாயா. ௰௭: க. ஆமோ. க: ௩—௫.

௨௪. தமஸ்கு தளரும், ஓடிப்போகும்படிக்கு முதுகைக்காட்டும், திகில் அதைப்பிடித்தது, பிரவலிப்பெறுகிறவளைப்போலிருக்கமும் வேதனைகளும் அதைப்பிடித்தது.

௨௫. என்னுடைய சந்தோஷமான உளராகிய அந்தப் புகழ்ச்சியுள்ள பட்டணந்தப்பவிடப்படாதேபோனதெப்படி?

௨௬. ஆனதுகொண்டு அதின் வாலிபர் அதின் வீதிகளில் விழுந்து, உயித்த மனுஷரெல்லாம் அந்நாளிலே சங்காரமாவார்களென்று சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறார்.

௨௭. தமஸ்குவின் மதில்களில் அக்கினியைக் கொளுத்துவோம், அது பென்னாதாத்தின் அரமனைகளைப் பட்சிக்குமென்கிறார்.

௨௮. பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேசார் முறியடித்த கேதாருக்குங் காத்சோருடைய இராசசியத்துகளுக்குஞ் செல்வது. கர்த்தர் சொல்லுகிறதாவது: எழும்பி, கேதாருக்கு விரோதமாகப் போயேறி, கிழக்கத்தி புத்திரரைப் பாழ்க்கடியுங்கோள்.

௨௯. அவர்களுடைய கூடாரங்களையும் அவர்கள் மந்தைகளையும் வாங்கி, அவர்கள் திரைகளையும் அவர்களுடைய எல்லா தட்டுமுட்டுகளையும், அவர்களுடைய ஒட்டகங்களையுந் தங்களுக்கென்று கொண்டுபோய்: பயஞ் சூழ்ந்திருக்குமென்று சொல்லி, அவர்கள் பேரிலே ஆர்ப்பரிப்பார்கள்.

௩௰. காத்சோரின் குடிகளே, ஓடி, மிகவும் அலைந்துங்கோள், தங்கும்படிக்கு ஆழங்களில் பதுங்குங்கோளென்று கர்த்தர் சொல்லுகிறார், என்னில் பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேசார் உங்களுக்கு விரோதமாக ஆலோசனையை யோசித்து, உங்களுக்கு விரோதமாக நினைவுகளை நினைத்திருக்கிறான்.

௩௧. அநுசாமல் சாங்கோபாங்கத்தோடே குடியிருக்கிற சாதிக்கு விரோதமாக எழும்பிப் போயேறுங்கோளென்று கர்த்தர் சொல்லுகிறார், அதுக்கு வாசல்களுமில்லை, தாழ்ப்பாள்களுமில்லை, அவாந்தரையாய்த் தங்கிக்கொண்டிருக்கிறார்கள்.

௩௨. அவர்களுடைய ஒட்டகங்கள் கொள்ளையும், அவர்களுடைய ஆடுமாடுகளின் ஏராளங் கூறையுமாய்ப்போகும், நாம் அவர்களைச் சகல காற்றுத்திசைகளுமான கடையாந்தர மூலைகளிலிருக்கிறவர்களண்டைக்குச் சிதறவடித்துவிட்டு, அதினுடைய சகல புறங்களிலுமிருந்து அவர்களுடைய ஆபத்தை வரப்பண்ணுவோமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௩௩. காத்சோர் வலுவான சர்ப்பங்களின் தாபரமாகி,

மாகி, என்றென்றைக்கும் பாழாய்க்கிடக்கும், ஒருத்தனும் அங்கே குடியிருப்பதில்லை, ஒரு மனுப்புத்திரனும் அதிலே தங்குவதுமில்லையென்கிறார்.

௩௪. யூதாவின் இராசாவாகிய சிதேக்கியாவினுடைய இராச்சியபாரத்தின் துவக்கத்திலே ஏலாமுக்கு விரோதமாக யெரேமியா என்கிற தீர்க்கதெரிசிக்குண்டான கர்த்தருடைய வசனம்.

௩௫. சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறதாவது: இதோ, நாம் ஏலாமுடைய வில்லென்கிற அவர்களுடைய பிரதான வல்லமையை முறித்துப்போட்டு,

௩௬. வானத்தின் நாற்றிசைகளிலிருந்து நாலு காற்றுகளை ஏலாமின்மேல் வரப்பண்ணி, அவர்களை இந்த எல்லாக் காற்றுத்திசைகளிலுஞ் சிதறவடிப்போம், ஏலாமுடைய தேசத்திலிருந்து துரத்துண்டவர்கள் வராதிருக்குஞ் சாதியில்லை.

௩௭. நாம் ஏலாமியரை யவர்கள் சத்துருக்களுக்கு முன்பாகவும் அவர்கள் பிராணனை வாங்கத்தேடுகிறவர்களுக்கு முன்பாகவுங் கலங்கப்பண்ணி, நமது கோபத்தின் உக்கிரமாகிய தீங்கை யவர்கள் மேல் வரப்பண்ணுவோமென்று கர்த்தர் சொல்லுகிறார், நாம் அவர்களை நிர்மூலமாக்குமட்டும் பட்டயத்தை யவர்களுக்குப் பின்னுக அனுப்பி,

௩௮. நம்முடைய ஆசனத்தை ஏலாமிலே வைத்து, அங்கேயிருந்து இராசாவையும் பிரபுக்களையும் அழித்துப்போடுவோமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௩௯. ஆனால் * கடைசிநாள்களிலே நாம் ஏலாமின் சிறையிருப்பைத் திருப்புவதுண்டென்று கர்த்தர் சொல்லுகிறார். * ௪௮: அதி. ௪௭.

## ௫௰. அதிகாரம்.

*பாபேலின் அழிவும், இஸ்ரவேலின் மீட்பும் முன்னறிவிக்கப்பட்ட தீர்க்கதெரிசினம்.*

கர்த்தர் தீர்க்கதெரிசியாகிய யெரேமியாவைக்கொண்டு *பாபேலுக்குங் கல்தேயர் தேசத்துக்கும் விரோதமாக உரைத்த வசனமாவது:

* ௫௧: ௧. மிட எசாயா. ௰௩: ௧. மிட ௰௪: ௧. மிட

௨. பாபேல் பிடிப்பட்டது, பேல் வெட்கப்பட்டது, மேரோதாக் கலங்கிப்போச்சுது, அவர்களுடைய விக்கிரகங்கள் வெட்கப்பட்டது, அவர்களுடைய நரகலான தேவர்கள் கலங்கிப்போச்சுதென்று சாதிகளுக்குள்ளே அறிவித்துக் கேள்க்கப்பண்ணுங்கோள், அதை மறைக்காமல் கொடியேற்றிக் கேள்க்கப்பண்ணுங்கோள்.

௩. என்னென்றால் அதுக்கு விரோதமாய் வடக்கேயிருந்து ஒரு சாதி போயேறுகுது, இது அதின் தேசத்தைப் பாழாக்கிப்போடும், அதிலே குடியிருப்பாரில்லை, மனுஷரோடே மிருகங்களும் ஓடிப்பேயவிடும்.

௪. அந்நாள்களிலும் அக்காலத்திலும் இஸ்ரவேல் புத்திரர் வருவார்கள், அவர்களும் யூதா புத்திரரும் ஏகமாய் * அழுதுநடந்துவந்து, தங்கள் பராபரனாகிய கர்த்தனைத் தேடுவார்களென்று கர்த்தர் சொல்லுகிறார். * ௩௪: அதி. ௯.

௫. மறக்கப்படாத நித்திய உடன்படிக்கையாய்க் கர்த்தனைச் சேர்ந்துகொள்ளுவோம் வாருங்கோளென்று, இவ்விடத்துக்கு முகங்களைத் திருப்பினவர்களாயிருந்து சீயோனுக்குப் போகிற வழியேதென்று விசாரித்துக் கேட்பார்கள்.

௬. நமது சனங்கள் காணாமல்போன ஆடுகளானவர்கள், அவர்களுடைய மேய்ப்பர் அவர்களைச் சிதறப்பண்ணி, பருவதங்களில் அலையத்திருப்பிவிட்டார்கள், ஒரு பருவதத்திலிருந்து மற்றமேட்டின்மேல் போனார்கள், தங்கள் தொழுவத்தை மறந்துவிட்டார்கள்.

௭. அவர்களைக் கண்டு பிடித்தவர்களெல்லாம் அவர்களைப் பட்சித்தது, அவர்களுடைய சத்துருக்கள்: எங்கள் மேல் குற்றமில்லை, ஏனெனில் அவர்கள் நீதியின் வாசஸ்தலத்திலே கர்த்தருக்கு விரோதமாய், தங்கள் பிதாக்கள் நம்பின கர்த்தருக்கு விரோதமாய்த் தத்தானே பாவஞ் செய்தார்களென்றார்கள்.

௮. * பாபேலின் நடுவிலிருந்தோடி, கல்தேயர் தேசத்தைவிட்டுப் புறப்படும், மந்தையின்முன் நடக்குங்கடாய்களைப்போலிருங்கோள்.

* ௫௧: அதி. ௬: ௪௫.

௯. ஏனெனில் இதோ, நாம் பாபேலுக்கு விரோதமாக வடதேசத்திலிருக்கும் பெரியசாதிகளின் கூட்டத்தை யெழுப்பி, அதைப் போயேறப்பண்ணுவோம், அவர்கள் அதுக்கு விரோதமாய் ஆயித்தம் பண்ணுவார்கள். அங்கேயிருந்துவருகிறவர்களால் அது பிடிக்கப்படும், அவர்களுடைய அம்புகள் உணர்வுள்ள பராக்கிரமசாலியின் அம்புகளைப்போலிருக்குது, அதுகள் பழுதாய்த் திரும்புவதில்லை.

௰. கல்தேயர் கொள்ளையாம், அதைக் கொள்ளையிடுகிறவர்களெல்லாரும் பரிபூரணமடைவார்களென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௰௧. அதேனென்றால் நமது சுதந்தரத்தைக் கொள்ளையிட்ட நீங்கள் சந்தோஷித்தீர்களே, களிகூர்ந்தீர்களே, கொழுத்திருக்குங் கன்றுக்குட்டியைப்போல்ப் பூரித்து, வலுவான புரவிகளைப் போலக் கனைப்பீர்களே.

௰௨. உங்கள் தாய் மிகவும் வெட்கி உங்களைப் பெற்றவள் நாணமடைகிறாள், இதோ, அவள் சாதிகளுக்குள்ளே கடைசியானவளும் வனாந்தரமும் வறட்சியும் அந்தரவெளியுமாம்.

௰௩. கர்த்தரின் கடுமையினாலே அது *குடியற்றதும் முழுதும் பாழுமாயிருக்கும், பாபேலைக் கடந்துபோகிறவனெல்லாம் அதினுடைய எல்லா வாதைகளினிமித்தியமும் விறுமித்து ஈச்சுப் போடுவான். * ௪௯: அதி. ௰௭.

௰௪. வில் நாணேற்றுகிற நீங்களெல்லாரும் பாபேலுக்கு விரோதமாகச் சுற்றிலும் பவுஞ்சிட்டு, அதிலெய்யுங்கோள், அம்புச் செலவைக் குறைக்காதேயுங்கோள், ஏனெனில் கர்த்தருக்கு விரோதமாய்ப் பாவஞ்செய்தது.

௰௫. அதுக்கு விரோதமாகச் சுற்றிலும் ஆர்ப்பரியுங்கோள், அது தன்னைக் கையளித்தது, அதின் அஸ்திவாரங்கள் விழுந்தது, அதின் மதில்கள் இடிக்கப்பட்டது, ஏனெனில் இது கர்த்தர் நீதியைச் சரிக்கட்டுதலாயிருக்குது, அதுக்கு நீதியைச் சரிக்கட்டுங்கோள், *அது செய்ததுபோலே நீங்கள் அதுக்குச் செய்யுங்கோள். * அறி. ௰௮: ௬.

௰௬. விதைவிதைக்கிறவனையும் அறுப்புக்காலத்தில் அரிவாளைப் பிடிக்கிறவனையும் பாபேலிலிராதபடிக்குச் சங்காரம் பண்ணுங்கோள், அழிக்கிற பட்டயத்துக்குத் தப்ப *அவரவர் தங்கள் சனத்தண்டைக்குத் திரும்பிக்கொண்டு, அவரவர் தங்கள் தேசத்துக்கு ஓடிப்போவார்கள். * ௪௬: அதி. ௰௬.

௰௭. இஸ்ரவேல் சிங்கங்கள் துரத்திச் சிதறுண்ட ஆடு, முதல் ஐசூரியாவின் இராசா அதைப் பட்சித்தான், இப்போது கடைசியிலே பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேசார் அதின் எலும்புகளை முறித்தான்.

௰௮. ஆகையால் இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறதாவது: இதோ, நாம் ஐசூரியாவின் இராசாவை விசாரித்ததுபோலே பாபேலின் இராசாவையும் அவன் தேசத்தையும் விசாரித்து,

௰௯. இஸ்ரவேலையதினுடைய வாசஸ்தலத்துக்குத் திரும்பிவரப்பண்ணுவோம், அப்போது அது கர்மேலிலும் பாசானிலும் மேயும், எப்பிராயீம் மலைகளிலும் கிலேயாத்திலும் அதின் ஆத்துமம் திருப்தியடையும்.

௨௰. அந்நாட்களிலும் அக்காலத்திலும் இஸ்ரவேலின் அக்கிரமம் தேடப்பட்டால், அதில்லாதிருக்கும், யூதாவின் பாவங்கள் தேடப்பட்டால் அதுகளிடையாதிருக்கும், ஏனென்றால் நாம் மீதியாக வைக்கிறவர்களுக்கு மன்னிப்போமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௨௧. கலகங்களுள்ள தேசத்துக்கு விரோதமாகவும், விசாரிக்கப்படுங் குடிகளுக்கு விரோதமாகவும் போயேறு, நீயவர்களைத் துரத்துகையிலே யாவையும் பாழ்க்கடித்துச் சங்காரம் பண்ணி, நாம் உனக்குக் கற்பித்தபடியெல்லாஞ் செய்யென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௨௨. தேசத்திலே யுத்தத்தின் சத்தமும் மகா நொறுக்கலுமுண்டு.

௨௩. பூமியனைத்தின் சம்மட்டியெத்தனையாய் முறித்துடைக்கப்பட்டது பாபேல் சாதிகளுக்குள்ளே யெத்தனையாய்ப் பாழாச்சுது?
* ௫௧: அதி. ௨௰.

௨௪. பாபேலே, உனக்குக் கண்ணியை வைத்தோம், நீயதை யறியாமல் அதிலே சிக்குண்டும் போனாய், நீயகப்பட்டும் பிடிபட்டும் போனாய், ஏனென்றால் கர்த்தரோடே யுத்தங்கலந்தாய்.

௨௫. கர்த்தர் தம்முடைய ஆயுதச்சாலையைத் திறந்து, தம்முடைய சினத்தின் பணிமுட்டுகளை யெடுத்துவந்தார், ஏனெனில் இது கல்தேயர் தேசத்திலே சேனைகளின் கர்த்தராகிய ஆண்டவர் செய்கிற கிரிகை.

௨௬. கடையாந்தரத்திலிருந்து அதுக்கு விரோதமாக வந்து, அதின் களஞ்சியங்களைத் திறந்து அதைப் போர்களைப் போலே போரப்பி அடித்து, அதிலொன்றும் மீதியாகாதபடிக்கு அதைச் சங்காரம் பண்ணுங்கோள்.

௨௭. அதின் காளையெருதுகளையெல்லாம் பட்டயத்தால் வெட்டுங்கோள், அதுகள் அடிக்கப்பட இறங்கிப்போகக்கடவது, அவர்களுக்கையோ! ஏனெனில் அவர்கள் விசாரிக்கப்படும் அவர்களுடைய நாள் வந்தது.

௨௮. நம்முடைய பராபரன் நீதியைச் சரிக்கட்டினதையும், அவர் தமது தேவாலயத்துக்காக நீதியைச் சரிக்கட்டினதையுஞ் சீயோனிலே அறி

விசகும படிசகுபாபேல் தேசததிலிருநது ஓடித்தபபிவநதவர்களின சததஙகேள்ககபபடும.

௨௯. எயயிறஎல்லாவில்லககாறருமாகியநீஙகள பாபேலுககு விரோதமாக ச்சததஙகேள்ககசபபணணுஙகோள, ஒருததருநதபபிபபோகாதபடிககுஅதுசகு விரோதமாக சசுறறிலும பாளயமிறஙகுஙகோள, அதின கிறிகைககுததககசபலனை அதுககுசசரிககட்டுஙகோள * அதுசெயததின படியெல்லாம அதுசகு சசெயயுஙகோள, எனனறுலககறதருசகுவிரோதமாகஇடுமபுசெயதது, இஸ்றுவேலின பரிசுததருசகுவிரோதமாகத்தானே. * சஙகீ. ௱௩௭: அ.

௩௰. ஆகையால அதின்வாலிபர்அதின்வீதிகளில விழுவார்கள, அதின உயித்த மனுஷரெல்லாம அநநாளிலே சஙகாரமாவார்களென்றுகறதர்சொல்லுகிறார்.

௩௧. இதோ, இடுமபுளளவனே,நாமுனககு விரோதமாகவருகிறேமென்றுசேனைகளினகறதாகியஆணடவர்சொல்லுகிறார்,ஏனெனில உன னைவிசாரிககுங காலமாகிய உனனுடைய நாள வநதது.

௩௨. இடுமபுளளவன இடறிவிழுவான,அவனையெடுததுநிறுததுவாரிலலை,நாம அவனபட்டணஙகளில அககினியைககொளுததுவோம, அது அவனசுறறுபபுறததாரையெல்லாம பட்சிககும.

௩௩. சேனைகளுடையகறதர்சொல்லுகிறதாவது: இஸ்றுவேலபுததிரருமயூதாபுததிரருமஏககமாய ஒடுஙகுணடார்கள, அவர்களை சசிறையாககினயாவரும அவர்களைவிட மாட்டோமென்றுகெட்டியாய்ப்பிடிததார்கள.

௩௪. அவர்களுடைய மீட்பரோவெனில வலலமையுளளவர், சேனைகளுடையகறதரெனபது அவருடையநாமம்,தேசததையிளைபபாறப்பணணுவதறகும,பாபேலின குடிகளைத்ததளிககபபணணுவதறகுமாக அவர்களுடைய வழககைஅவர்வழககாட்டவேவழககாடுவார்.

௩௫. பட்டயஙகல்தேயரினமேலுமபாபேலுடையகுடிகளினமேலும, அதினுடைய பிரபுககளின மேலும, அதினுடைய ஞானிகளின மேலுமவருமென்றுகறதர்சொல்லுகிறார்.

௩௬. பட்டயஙகட்டுகசுதைககாறர்மேலும வரும, அவர்களபயிததியககாறராவார்கள, பட்டயம அதினுடையபராககிறம சாலிகளமேல் வரும, அவர்கள கலஙகுவார்கள.

௩௭. பட்டயம அதினுடையகுதிரைகளின மேலும, அதினுடையரதஙகளினமேலும, அதின நடுவிலிருககிறபலவிதசனக்கலப்பினததின மேலுமவரும, அவர்களபெணசாதசளாவார்கள, பட்டயம அதினுடைய பொககிஷஙகளினமேல வரும, அதுகளகொளளையாம.

௩௮. வறட்சி அதினுடைய தணணீர்களின மேலவரும, அதுகளவறணடுபோம,ஏனெனில அது சுருபஙகளின தேசம, அருககளிபபானதுகளினபேரிலேபெருமைபாராட்டுகிறார்கள.

௩௯. ஆகையால * வனநதரசீவனகளுமஓரிகளும அதிலேகுடியிருககும,கோட்டானகளஅதிலேதஙகும, இனி என்றைககும அது குடியேறறபபடுவதிலலை, தலைமுறைதலைமுறையாகஒருததரும அதில்த்தாபரிபபதுமிலலை.

* எசயா. ௰௩: ௨௧. ௨௨.அறிவி. ௰௮: ௨.

௪௰. * பராபரனசோதோமையுஙகொமோறாவையும அதின அசலூர்களையுஙகவிழ்து மேலுதாககிபபோட்டதுபோலேயிருசகுமென்றுகறதர்சொல்லுகிறார், ஒருததரும அதில்ககுடியிருபபதிலலை, ஒரு மனுபுததிரனும அதில த்தஙகுவதுமிலலை. * சசூ: அதி. ௰௮.

௪௧. இதோ, * வடககேயிருநதுசனசதனமும பெரிய சாதியுமவரும, பூமியின பககஙகளிலிருநதுபெலதத இராசாககளஎழுமபுவார்கள.

* சூ. வசனம.

௪௨. அவர்கள வில்லுகளையும ஈட்டிகளையுமபிடிததுவருவார்கள, அவர்கள இரககமலக்கொடூரராயிருபபார்கள, அவர்கள சததமசமுததிரததை பபோலிரையும, பாபேல குமாரததியே, அவர்கள உனசகு விரோதமாக உயித்தத்துககாயித்தபபட்ட ஆள்களாயககுதிரைகளின மேலேறிவருவார்கள.

௪௩. அவர்களவருகிற செயதியை பபாபேலின இராசாகேள்க்கையில, அவனகைகளதளரும இக்கசமும பிளளைபபெறுகிறவளைபபோல வாதையும அவனைபபிடிககும.

௪௪. * இதோ, பிரணடோடுகிறயோர்தானிலிருநது சிஙகததைபபோலே பெலவானுடையத பாததுககு விரோதமாகவருகிறான, எனனறுல அவனையஙகேயிருநது அசுபபிலேஓடிவரபபணணுவோம, நாம அதுககுவிரோதமாகக்கட்டளையிடடனுபபத்தெரிநதுகொளளபபட்டவனார்? ஏனெனில நமககுசசமானமானவனார் நமககுததிட்டஞசொல்பவனார்?நமககுமுனபாக

நிறக

கிறக்கப்போகிறமேய்ப்பனார்? * ௪௯: ௰௯—௨௧.

௪௫. ஆகையால் கர்த்தர் பாபேலுக்கு விரோதமாகயோசித்த ஆலோசனையையும், அவர் கல்தேயர் தேசத்துக்கு விரோதமாக நினைத்திருக்கிற நினைவுகளையுங்கேளுங்கோள், மெய்யாகவே மந்தையிற்சிறியவர்கள் அவர்களைப் பிடித்திழுப்பார்கள், மெய்யாகவே அவர்களமேலிருக்கிற தாபரங்களைப் பாழாக்குவார்.

௪௬. பாபேல் பிடிபட்டதின் சத்தத்தினால் பூமியதிரும், அதின் கூப்பிடுதல் சாதிகளுக்குள்ளே கேள்கப்படும்.

## ௫௧. அதிகாரம்.

அப்பாலும் பாபேலுடைய அழிவின் தீர்க்கதெரிசனமும் அதின் திடப்படுத்தலும்.

கர்த்தர் சொல்லுகிறதாவது: இதோ, நாம் பாபேலுக்கு விரோதமாகவும், நமக்கு விரோதமாயெழும்புகிறவர்களின் நடுமையத்திலேக்குடியிருக்கிறவர்களுக்கு விரோதமாகவுங்கேடுள்ளகாற்றையெழும்பப்பண்ணி,

௨. தூற்றுவாரைப் பாபேலுக்கனுப்புவோம், அவர்கள் அதைத்தூற்றி, வெறுமையாக்கிப்போடுவார்கள், ஏனெனில் தீங்கின் நாளிலே அதுக்குவிரோதமாய்ச்சூழ்ந்து கொண்டிருப்பார்கள்.

௩. நாணேற்றுகிறவனுக்கு விரோதமாகவும், தன் சீராவிலேமன மேட்டிமையானவனுக்கு விரோதமாகவும், வில்க்காறன் தன் வில்லிலே நாணேற்றக்கடவான், அதின் வாலிபரைத்தப்பவிடாமல் அதின் சேனையையெல்லாஞ்சங்காரம்பண்ணுங்கோள்.

௪. கல்தேயரின் தேசத்தில் கொலைசெய்யப்பட்டவர்களுமாய், அதின் வீதிகளில் குத்திப்போடப்பட்டவர்களுமாய் விழுவார்கள்.

௫. ஏனெனில் இஸ்ரவேலும் யூதாவுந்தங்கள் தேசம் இஸ்ரவேலின் பரிசுத்தருக்கு முன்பாகக்குற்றங்களால் நிறைந்தபடியினாலே, உள்ப்பட்ட * விதவையிருப்பிலே சேனைகளின் கர்த்தராகிய தங்கள் பராபரனாலே வைக்கப்படுவதில்லை.

* எசாயா. ௫௪: ௪.

௬. * நீங்கள் பாபேலின் அக்கிரமத்திலேச்சங்காரமாகாதபடிக்கு, அதின் நடுவிலிருந்தோடி, அவரவர்தங்களாத்துமத்தைத்தப்புவியுங்கோள், ஏனெனில் இது ** கர்த்தர் அதுக்கு நீதியைச்சரிக்கட்டுகிற காலமாயிருக்குது, அவர் அதுக்கு வதிலச்செலுத்துவார். * ௫௰: அதி. ௮. அறிவி. ௰௮: ௪. ** எசாயா. ௩௪: ௮.

௭. கர்த்தருடைய கையிலே பாபேல் பூமியனைத்தையும் வெறிக்கப்பண்ணின பொற்பாத்திரமாயிருந்தது, அதின் மதுபானத்திலே சாதிகள் குடித்தார்கள், ஆகையாலே சாதிகள் மதிகெட்டுப்போனார்கள்.

௮. * அசுப்பிலே பாபேல் விழுந்து தகர்ந்தது, அதுக்காக அலறுங்கோள், அதின் நோவையாற்றப்பிசின்தயிலத்தை வாங்குங்கோள், ஒருவேளை குணமாம். * அறிவி. ௰௮: ௨.

௯. பாபேல் குணமாகும்படிக்குப்பார்த்தோம், அது குணமானதில்லை, அதைவிட்டுவிடுங்கோள், நாம் அவரவர் நம்முடைய தேசங்களுக்குப்போகக்கடவோம், ஏனெனில் * அதின் ஆக்கினைவானமட்டும் மெட்டி, ஆகாசமண்டலங்கள் பரியந்தமேறிப்போயிற்று. * அறி. ௰௮: ௫.

௰. கர்த்தர் * நம்முடைய நீதியை வெளிப்படுத்தினார், நம்முடைய பராபரனாகிய கர்த்தரின் செய்கைச்சீயோனிலே விவரிப்போம் வாருங்கோள். * சங்கீ. ௩௭: ௬.

௰௧. அம்புகளைத்துலக்குங்கோள், கேடயங்களை நன்றாய்ச்செப்பனிடுங்கோள், கர்த்தர் மேதியாவுடைய இராசாக்களின் ஆவியையெழுப்பினார், ஏனெனில் அவருடைய நினைவு பாபேலுக்கு விரோதமாய் அதையழிப்பதற்கிருக்குது, அதேதென்றால் இது கர்த்தர்சரிக்கட்டுகிற நீதி, இது தம்முதேவாலயத்துக்காக அவர்சரிக்கட்டுகிற நீதிதானே. * ௫௰: அதி. ௨௮.

௰௨. பாபேலுடைய மதில்களின்மேல்க்கொடியேற்றுங்கோள், காவலைப்பெலப்படுத்துங்கோள், சாமங்காக்கிறவர்களை நிறுத்துங்கோள், பதிவிருப்பாரை வையுங்கோள், ஆனால் கர்த்தர் எப்படி நினைத்தாரோ அப்படியேதாம் பாபேலின் குடிகளுக்கு விரோதமாகச்சொன்னதைச்செய்வார்.

௰௩. * திரளான தண்ணீர்களின் மேல்வாசம்பண்ணுகிறவளே, பொக்கிஷங்கள் பெருத்தவளே, உன்முடிவும் உன்பொருளாசைக்கு ஒழிவும்வந்தது. * அறிவி. ௰௭: ௧.

௰௪. மெய்யாகவே, பச்சைக்கிளிகளத்தனை மனுஷராலே உன்னை நிரம்பப்பண்ணுவோம், அவர்கள் உன்பேரிலே ஆற்பரிப்பாக பாடுவார்க

ளென்று சேனைகளின் கர்த்தர் தம்முடைய ஜீவனைக் கொண்டாணையிட்டார்.

௰௫. * பூமியைத் தமது பெலத்தினால் உண்டாக்கி, பூச்சக்கரத்தைத் தமது ஞானத்தால் படைத்து, வானத்தைத் தமது உணர்வினால் விரித்தவர் அவர்தானே. * ௰: அதி: ௰௨.

௰௬. * அவர் சத்தமிடுகையில், திரளான தண்ணீர் வானத்திலுண்டாகுது, அவர் பூமியின் துவல்வுகளிலிருந்து மேகங்களை எழும்பப்பண்ணி, மழையுடனே மின்னல்களையுண்டாக்கி, காற்றைத் தமது பண்டகசாலையிலிருந்தேவி விடுகிறார். * ௰: அதி. ௰௩.

௰௭. * மனுஷரனைவர் அறிவில்லாமல், மிருகக்குணமானார்கள், தட்டாரனைவர் சுரூபங்களாலே வெட்கிப்போகிறார்கள், ஏனெனில் அவர்கள் வார்ப்பித்தது பொய்யே, அதுகளில் ஆவியில்லை. * ௰: ௰௪. ௰௫.

௰௮. அதுகள் மாயையும் மகா எத்துகளுமான கிறிகையுமாயிருக்குது, அதுகள் விசாரிக்கப்படுநாளிலே யழியும்.

௰௯. *யாக்கோபின் பங்காயிருக்கிறவர் அதுகளைப்போல அல்ல, ஏனெனில் அவர் சர்வத்தையும் உண்டாக்கினவர், அவன் அவருடைய சுதந்தரமான கோத்திரம், சேனைகளுடைய கர்த்தரென்பது அவருடைய நாமம். * ௰: அதி. ௰௬.

௨௰. நீ எனக்கு*ச் சம்மட்டியும் யுத்தஆயுதமுமானவன், நானுன்னைக் கொண்டு சாதிகளை நொறுக்கி, உன்னைக்கொண்டு இராச்சியங்களை யழித்துப்போட்டு, * ௫௰: அதி. ௨௩.

௨௧. உன்னைக்கொண்டு குதிரையையும் அதின்மேலேறியிருக்கிறவனையும் நொறுக்கி, உன்னைக்கொண்டு இரதத்தையும் அதின்மேலேறியிருக்கிறவனையும் நொறுக்கி,

௨௨. உன்னைக்கொண்டு புருஷனையும் ஸ்திரியையும் நொறுக்கி, உன்னைக்கொண்டு கிழவனையும் இளைஞனையும் நொறுக்கி, உன்னைக்கொண்டு வாலிபனையும் கன்னியாஸ்திரியையும் நொறுக்கி,

௨௩. உன்னைக்கொண்டு மேய்ப்பனையும் அவனுடைய மந்தையையும் நொறுக்கி, உன்னைக்கொண்டு உழுகிறவனையும் அவனுடைய ஏர்க்குண்டையையும், தலைவனையும் அதிகாரியையும் நொறுக்கிப்போடுகிறேன்.

௨௪. ஆனால் பாபேலுக்கும் கல்தேயர் தேசத்தினுடைய சகல குடிகளுக்கும் நாம், அவர்கள் உங்கள் கண்களுக்கு முன்பாக *சீயோனில் பண்ணின அவர்களுடைய எல்லாப் பொல்லாப்பையுஞ் சரிக்கட்டுவோமென்று கர்த்தர் சொல்லுகிறார். * ௫௰: அதி. ௨௯.

௨௫. இதோ, பூமியையெல்லாங் கெடுக்கிற கேடான பருவதமே, நானுனக்கு விரோதமாக வந்து, நமது கையையுனக்கு விரோதமாக நீட்டி, உன்னைக் கன்மலைகளிலிருந்து உருட்டி, உன்னை வெந்தப்பருவதமாக்கிப்போடுவோமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௨௬. கோடிக்கல்லையாகிலும் அஸ்திபாரங்களைப்போடுகிறதற்கல்லையாகிலும் உன்னிலெடுக்கார்கள், ஏனெனில் என்றென்றைக்கும் பாழாய்க்கிடக்கிறவளாவாயென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௨௭. தேசத்திலே கொடியேற்றுங்கோள், சாதிகளுக்குள் எக்காளமூதுங்கோள், சாதிகளை யதுக்கு விரோதமாகப் பரிசுத்தமாக்குங்கோள், ஆறாத், மின்னி, அஸ்கேனாஸ் என்னும் இராச்சியங்களை யதுக்கு விரோதமாய் வரக்கூப்பிடுங்கோள், தளகர்த்தனை யதுக்கு விரோதமாகப் பட்டங்கட்டுங்கோள், சிறகடிக்கும் வண்டுகளுக்குச் சாயலாகக் குதிரைகளைப் பேயேறப்பண்ணுங்கோள்.

௨௮. மேதியா தேசத்து இராசாக்களும் அதின் தலைவரும் அதினுடைய சகல அதிகாரிகளும், அவரவருடைய இராச்சியபாரத்துக்குக் கீழான சகல தேசத்தாருமாகிய சாதிகளை யதுக்கு விரோதமாகப் பரிசுத்தமாக்குங்கோள்.

௨௯. அப்போது தேசம் அதிர்ந்து, வாதைப்படும், ஏனெனில் பாபேல் தேசத்தைக் குடியில்லாதபடியாகப் பாழாக்கும்படிக்குப் பாபேலுக்கு விரோதமாய்க் கர்த்தர் நினைத்ததுகள் நிலைக்கும்.

௩௰. பாபேலின் பராக்கிரமசாலிகள் யுத்தம்பண்ணவோய்ந்து, கோட்டைகளில் தரித்திருக்கிறார்கள், அவர்கள் பராக்கிரமம் அழிந்து, பெண்டுகளானார்கள், அதின் வாசஸ்தலங்களைக் கொளுத்திப்போட்டார்கள், அதின் தாழ்ப்பாள்கள் உடைக்கப்பட்டது.

௩௧. கடையாந்தரமுனை துவக்கி அவனுடைய பட்டணம் பிடிபட்டதென்றும், துறைவழிகள் அகப்பட்டுப்போயினவென்றும், நாணல்கள் அக்கினியாலே சுட்டெரிக்கப்பட்டதென்றும், யுத்தமனுஷர் கலங்கியிருக்கிறார்களென்றும், பாபேலின் இராசாவுக்கறிவிக்க,

௩௨. ஓட்டக்காறனுக்கெதிராக ஓட்டக்கா

றனு

றானும், அறிவிக்கிறவனுக்கெதிராக அறிவிக்கிறவனும் ஓடுகிறான்.

௩௩. ஏனெனில் பாபேல் குமாரத்தி மிதிக்கப்படுங் களத்துக்கொப்பானது; அதை மிதித்தடிக்குங் காலமாயிருக்குது, இன்னுங் கொஞ்சக் காலத்திலே அறுப்புக்காலம் அதுக்கு வருமென்று இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறார்.

௩௪. பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேச்சார் என்னைப் பட்சித்தான், என்னைக் கலங்கடித்தான், என்னை வெறும் பாத்திரமாக வைத்துப் போனான், முதலையைப் போல என்னை விழுங்கி, என் செல்விக்கைகளால் தன் வயிற்றை நிரப்பினான், என்னைத் துரத்தினான்.

௩௫. எனக்கும் என் மாங்ஷத்துக்குஞ் செய்த கொடுமையின் பழி பாபேலின் மேல் வரவேண்டுமென்று சீயோனில் வாசமானவளும், என் இரத்தப்பழி கல்தேயர் தேசத்துக் குடிகளின் மேல் வரவேண்டுமென்று எருசலேமுஞ் சொல்லுகிறது.

௩௬. ஆகையால் கர்த்தர் சொல்லுகிறதாவது: இதோ, நாம் உன் வழக்கை வழக்காடி, உன் பழிக்குப் பழிவாங்கி, * அதின் கடலை வறளவும் அதின் ஊற்றைச் சுவறவும் பண்ணுவோம்.

* ௫௰: ௩௮.

௩௭. அப்போது பாபேல் * குடியில்லாமல் மேடுகளும், வலுசர்ப்பங்களின் தாபரமும், பாழும் ஈசல் போடப்படுதலுமாய்ப் போகும்.

* ௫௰: அதி. ௰௩.

௩௮. ஏகமாய்ச் சிங்கங்களைப் போல் கெர்ச்சித்து, சிங்கக் குட்டிகளைப் போல் சத்தமிடுவார்கள்.

௩௯. அவர்களுடைய கொதிப்பிலே நாம் அவர்கள் குடிக்கும் பானத்தை அவர்களுக்குக் குடிக்கக் கொடுத்து, அவர்கள் துள்ளத்தக்கவர்களாக அவர்களை வெறியாக்குவோம், அதனாலே அவர்கள் என்றைக்கும் முழிக்காத நித்திரையை அடைவார்களென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௪௰. அவர்களை ஆட்டுக்குட்டிகளைப் போலவும், ஆட்டுக்கடாய்களையும் வெள்ளாட்டுக்கடாய்களையும் போலவும் அடிக்கப்படத் திறங்கிப் போகப்பண்ணுவோம்.

௪௧ * சேசாக்குப் பிடிபட்டு, பூமியனைத்தின் புகழ்ச்சி வாங்கப்பட்டதெப்படி? பாபேல் சாதிகளுக்குள்ளே திகைப்பானதெப்படி?

* ௨௫: அதி. ௨௬.

௪௨. சமுத்திரம் பாபேலின் மேற் பிரண்டுவந்தது, அதினுடைய அலைகளின் திரட்சியால் அது மூடப்பட்டது.

௪௩. அதின் பட்டணங்கள் பாழுமாய், வறட்சியும் வனாந்தரமுமான பூமியுமாய், ஒரு மனுஷனுங் குடியிராததும், ஒரு மனுபுத்திரனுங் கடவாததுமான பூமியுமாய்ப் போச்சுது.

௪௪. நாம் பாபேலிலிருக்கிற பேலின் மேல் விசாரிப்பாகி, அது விழுங்கினதை அதின் வாயிலிருந்து வெளியாக்கப்பண்ணுவோம், சாதிகள் இனி அதினண்டைக்கு ஓடிவரார்கள், பாபேலின் மதிலும் விழும்.

௪௫. நம் ஜனமே, * அதின் நடுவிலிருந்து புறப்படுங்கோள், கர்த்தருடைய கோபத்தின் உக்கிரத்துக்குத் தப்ப, அவனவன் தன் ஆத்துமத்தைப் பிரட்சித்துக் கொள்ளக்கடவான்.

* ௫௰: அதி. ௮. அறிவி. ௰௮: ௪.

௪௬. உங்களிருதயந் துவளாமலும், தேசத்திலே கேட்கப்படுஞ் செய்தியினாலே நீங்கள் பயப்படாமலுமிருக்கவுந்தானே. ஏனெனில் ஒரு வருஷத்திலே செய்தி கேட்கப்பட்டு, அதற்குப் பிறகு ஒரு வருஷத்திலே செய்தி கேட்கப்படும், தேசத்திலே கொடுமையுண்டாகும், ஆளுகிறவன் மேல் ஆளுகிறவன் வருவான்.

௪௭. ஆகையால் இதோ, நாம் பாபேலுடைய சுரூபங்களுக்கு விரோதமாய் விசாரிப்பாகும் நாட்கள் வரும், அப்போது அதின் தேசமெல்லாம் வெட்கப்படும், அதில் கொலையுண்கிற யாவரும் அதின் நடுவிலே விழுந்து கிடப்பார்கள்.

௪௮. * வானங்களும் பூமியும் அதுகளிலுள்ள யாவும் பாபேலின் பேரில் கெம்பீரிக்கும், ஏனெனில் பாழாக்கடிக்கிறவர்கள் அதுக்கு வடக்கேயிருந்து வருவார்களென்று கர்த்தர் சொல்லுகிறார். * அறிவி. ௰௮: ௨௰.

௪௯. பாபேல் இஸ்ரவேலில் கொலையுண்டவர்களை விழப்பண்ணினதுபோலே, பாபேலிலேயுந் தேசமெங்குங் கொலையுண்கிறவர்கள் விழுவார்கள்.

௫௰. பட்டயத்துக்குத் தப்பினவர்களே, தரித்தரியாமல் நடந்துவாருங்கோள், தூரத்திலே கர்த்தரை நினைப்புங்கோள், எருசலேம் உங்கள் நினைவிலே ஏறக்கடவது.

௫௧. நிந்தையைக் கேட்டதினாலே வெட்கப்பட்டோம், கர்த்தருடைய வீட்டுப் பரிசுத்த ஸ்தலங்களின் மேலே அன்னியர் வந்ததினாலே நாணம் நம்முடைய முகங்களை மூடிற்று.

௫௨. ஆகையால் கர்த்தர் சொல்லுகிறதாவது: இதோ, நாம் அதின் சுரூபங்களுக்கு விரோதமாய் விசாரிப்பாகும் நாட்கள் வரும், அப்போது அதின் தேசமெங்கும் கொலையுண்கிறவர்கள் கதறுவார்கள்.

௫௩. பாபேல், * வானபரியந்தம் ஏறினாலும், அது தன் பெலத்தின் உயர்ச்சியை அரணிப்பாக்கினாலும், நம்மாலே அதுக்குப் பாழ்க்கடிக்கிறவர்கள் வருவார்களென்று கர்த்தர் சொல்லுகிறார்.

* ௪௯: அதி. ௰௬.

௫௪. பாபேலிலிருந்து கூப்பிடுதலின் சத்தமும், கல்தேயர் தேசத்திலிருந்து மகா நொறுக்குதலுஞ் சேர்க்கப்படும்.

௫௫. ஏனெனில் கர்த்தர் பாபேலைப் பாழ்க்கடித்து, அதிலுள்ள பெரிய சத்தத்தையொழியப்பண்ணுவார், அதேனென்றால் அவர்களுடைய அலைகள் திரளான தண்ணீர்களைப்போல இரையும், அவர்களுடைய சத்தம் அமளியாயிருக்கும்.

௫௬. ஏனெனில் அதின் மேலே, பாபேலின் மேலேதானே, பாழ்க்கடிக்கிறவன் வருகிறான், அதின் பராக்கிரமசாலிகள் பிடிபடுவார்கள், அவர்களுடைய வில்லுகள் முறிந்துபோம், அதேனென்றால் சரிக்கட்டுதல்களின் பராபரனாகிய கர்த்தர் வதில் அளிக்கவே அளிப்பார்.

௫௭. அதின் பிரபுக்களையும், அதின் ஞானிகளையும், அதின் தலைவரையும், அதின் அதிகாரிகளையும், அதின் பராக்கிரமசாலிகளையும் வெறியாக்குவோம், அப்போது அவர்கள் என்றென்றைக்கும் முழிக்காத தூக்கமாய்த் தூங்கி விழுவார்களென்று * சேனைகளுடைய கர்த்தரென்ற நாமமுள்ள இராசா சொல்லுகிறார். ௪௩. ௨௪: ௰.

௫௮. பாபேலின் விஸ்தாரமான மதில்கள் தரையாகத் தரையாக்கப்பட்டு, அதினுடைய உயரமான வாசல்கள் அக்கினியாற் சுட்டெரிக்கப்படும், அப்படியே சனங்கள் பிரயாசப்பட்டது விருதாவும், சனத்தனங்கள் உழண்டது அக்கினிக்கிரையுமாம் என்று சேனைகளின் கர்த்தர் சொல்லுகிறார்.

௫௯. யூதாவின் இராசாவாகிய சிதேக்கியா இராச்சியபாரம் பண்ணும் நாலாம் வருஷத்திலே பாபேலுக்குப் போகையில் அவனோடே கூடப்போகிற மக்சேயாவின் மகனாகிய நேரியாவின் குமாரனான சேராயாவுக்கு யெரேமியா தீர்க்கதெரிசி கற்பித்த வார்த்தை. சேராயா வோவெனில் அமர்ந்த குணமான பிரபுவாயிருந்தான்.

௬௰. பாபேலின் மேல் வருமெல்லாத் தீங்கையும், பாபேலுக்கு விரோதமாக எழுதப்பட்ட இந்த எல்லா வசனங்களையும் யெரேமியா ஒரு புஸ்தகத்தில் எழுதினான்.

௬௧. பிறகு யெரேமியா சேராயாவுடனே சொன்னதாவது: நீ பாபேலுக்கு வந்த பிறபாடு, நீ இதைப் பார்த்து, இந்த எல்லா வசனங்களையும் வாசித்து, சொல்லவேண்டியதாவது:

௬௨. கர்த்தாவே, இந்த ஸ்தலத்திலே மனுஷனும் மிருகமும் முதலாய்த் தங்கித் தரிக்காதபடிக்கும், அது என்றென்றைக்கும் பாழாய்க் கிடக்கும்படிக்கும் அதையழித்துப் போடுவோமென்று தேவரீர் அதைக்குறித்து உரைத்தீரென்கிறதை நீ சொல்லி,

௬௩. நீ இந்தப் புஸ்தகத்தை வாசித்துத் தீர்ந்தபோது, அதிலே ஒரு கல்லைக் கட்டி, அதை ஐப்பிறாத்தின் நடுவிலே எறிந்துவிட்டு,

௬௪. * இப்படியே பாபேல் அழிந்துபோகும், நாம் அதின் மேல் வரப்பண்ணுந் தீங்கினாலே எழுந்திருக்கமாட்டாமல், இளைத்து விழுவார்களென்றார் என்று சொல்லுவாயாக வென்றான். யெரேமியாவின் வசனங்கள் இந்தமட்டுந்தானே. * அறிவிப்பு. ௰௮: ௨௧.

## ௫௨. அதிகாரம்.

யூதர் பாபிலோனியச் சிறையிருப்புக்குக் கொண்டுபோகப்பட்டதுக்குத் தச்சரித்திரம்.

சிதேக்கியா இராசாவாகிற போது, இருபத்தொரு வயதாயிருந்தான், அவன் பதினொரு வருஷம் யெருசலேமில் இராச்சியபாரம் பண்ணினான், அவனுடைய தாயின் பேர் அமீத்தாள், இவள் லிப்னா ஊராளாகிய யெரேமியாவின் குமாரத்தி.

* ௩௭: அதி. ௧. ௨. இராசாக். ௨௪: ௰௮. ௨. நாளாக. ௩௬: ௰. ௰௧.

௨. யோயாக்கீம் செய்தபடியெல்லாந் துக்குணமாய் அவன் கர்த்தருடைய பார்வைக்குப் பொல்லாப்பானதைச் செய்தான்.

௩. ஏனென்றால் யெருசலேமையும் யூதாவையுங் கர்த்தர் தம்முடைய சமுகத்தைவிட்டுத் தள்ளித்தீருமளவும், அதுகளில் அவருடைய கோபத்தினாலே சம்பவித்ததேதெனில், சிதேக்கியா பாபேலின் இராசாவைவிட்டு * மறுளவிழுந்தான்.

* ௨. இராசா. ௨௪: ௨௰.

௪. ஆகையால் * அவன் இராச்சியபாரம் பண்ணும் ஒன்பதாம் வருஷத்துப் பத்தாம் மாதம் பத்தாந் தேதியிலே சம்பவித்ததேதென்றால், பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேசார், அவனும் அவனுடைய எல்லா இராணுவமும் யெருசலேமுக்கு விரோதமாய் வந்து, அதுக்கெதிராசப் பாளயமிறங்கி, சுற்றிலும் அதுக்கெதிராகக் கொத்தளங்களைக் கட்டினார்கள். * ௩௯: ௧. மு.

௨. இராசாக். ௨௫: ௧. மு.

௫. அப்படியே பட்டணஞ் சிதேக்கியா இராசாவின் பதினோராம் வருஷமட்டும் முத்திகைப் போட்டப்பட்டிருந்தது.

௬. நாலாம் மாதம் ஒன்பதாந் தேதியிலே, பஞ்சம் பட்டணத்திலே மிஞ்சி, தேசத்தின் சனத்துக்கு ஆகாரமில்லாதே போனபோது,

௭. பட்டணத்தின் மதில் திறப்பாச்சுது, அப்போது யுத்த மனுஷரெல்லாம் ஓடி, கல்தேயர் பட்டணத்தைச் சூழ்ந்திருக்கக்கொள்ள இராத்திரிகாலத்திலே இராசாவுடைய தோட்டத்தின் வழியே இரண்டு மதில்களுக்கு நடுவான வாசலாலே பட்டணத்திலிருந்து புறப்பட்டு, வயல்வழியே போய்விட்டார்கள்.

௮. ஆனால் கல்தேயருடைய இராணுவம் இராசாவைப் பின்தொடர்ந்து, யெரிகோவின் வயல்வெளிகளில் சிதேக்கியாவைக் கிட்டினார்கள், அப்போது அவன் இராணுவமெல்லாம் அவனைவிட்டுச் சிதறிப்போனார்கள்.

௯. அவர்கள் இராசாவைப் பிடித்து, அவனை காமாத்தேசத்தின் ஊராகிய ரிப்லாவுக்கு * பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேசாரண்டையிலே போயேறப்பண்ணினார்கள், இவன் அவன் பேரிலே சும்மருமம் ஆக்கினைகளைச் சொன்னான்.

* ௫. மோசே ௨௮: ௩௬.

௰. பிறகு பாபேலின் இராசா சிதேக்கியாவின் பிள்ளைகளை அவன் கண்களுக்கு முன்பாக வெட்டி, யூதாவின் பிரபுக்களையுமெல்லாம் ரிப்லாவிலே வெட்டி,

௰௧. சிதேக்கியாவின் கண்களைக் குருடாக்கி, அவனுக்கிரண்டு வெண்கல விலங்குகளைப் போடுவித்தான், பிற்பாடு பாபேலின் இராசா அவனைப் பாபேலுக்குக் கொண்டு போய், அவன் மரணமடையும் நாளமட்டும் அவனைக் காவல் வீட்டிலிருக்கப்பண்ணினான்.

௰௨. ஐந்தாம் மாதம் பத்தாந் தேதியிலே, பாபேலின் இராசாவுக்கு முன்பாக நிற்கிறவனாகிய தலையாரிகளின் அதிபதியான நேபூசார்அதான் யெருசலேமுக்கு வந்தான், அது நேபுகாத்நேசாரென்ற இராசா பாபேலில் அரசாளுகிற பத்தொன்பதாம் வருஷமாயிருந்தது.

௰௩. அவன் கர்த்தருடைய வீட்டையும் இராசாவின் வீட்டையும், யெருசலேமிலுள்ள எல்லா வீடுகளையும் ஒவ்வொரு பெரியவனுடைய வீட்டையும் அக்கினியால் சுட்டெரித்துப்போட்டான்.

௰௪. தலையாரிகளின் அதிபதியோடிருந்த கல்தேயரின் இராணுவமெல்லாம் யெருசலேமைச் சுற்றிலுமிருந்த மதில்களனைத்தையும் இடித்துப்போட்டார்கள்.

௰௫. சனத்தில் ஈனமானவர்களில் சிலரையும், பட்டணத்தில் மீதியான குறைச்சனத்தையும், பாபேலுடைய இராசாவின் வசமாக ஓடிவந்துவிட்டவர்களையும், குறைச்சனக் கூட்டத்தையுந் தலையாரிகளின் அதிபதியாகிய நேபூசார்அதான் சிறைகளாகக் கொண்டுபோனான்.

௰௬. ஆனால் ஈனமான தேசத்தாரில் சிலரைத் தலையாரிகளின் அதிபதியாகிய நேபூசார்அதான் திராட்சத்தோட்டக்காரராகவும் பயிர்க்குடிகளாகவும் விட்டுவைத்தான்.

௰௭. * கர்த்தருடைய வீட்டிலிருந்த வெண்கலத் தூண்களையும், கர்த்தருடைய வீட்டிலிருந்த ஆதாரங்களையும், வெண்கலக் கடல் தொட்டியையும், கல்தேயர் உடைத்துப்போட்டு, அதுகளின் வெண்கலத்தையெல்லாம் பாபேலுக்கு எடுத்துக்கொண்டுபோனார்கள். * ௨௭: ௰௯. மு.

௰௮. செப்புச்சட்டிகளையும் சாம்பலெடுக்குங் கரண்டிகளையும், வெட்டுக் கத்திகளையும், கலங்களையுங் கலயங்களையும் ஆராதனை செய்யப்பட்ட சகல வெண்கல மூட்டுகளையும் எடுத்துக்கொண்டார்கள்.

௰௯. சுத்தப் பொன்னுஞ் சுத்த வெள்ளியுமான கிண்ணிகளையுந் தூபக்கலசங்களையுங் கலங்களையுஞ் சட்டிகளையும் விளக்குத்தண்டுகளையுங் கலயங்களையுங் கரகங்களையுந் தலையாரிகளின் அதிபதி எடுத்துக்கொண்டான்.

௨௰. * சாலொமோன் இராசா கர்த்தருடைய வீட்டுக்காகச் செய்வித்து வைத்த இரண்டு தூண்களும் ஒரு கடல் தொட்டியும், ஆதாரங்களின் கீழ் நின்ற பன்னிரண்டு வெண்கல மாடுகளும் இருந்ததே, இந்தச் சகல மூட்டுகளுடைய வெண்கலத்துக்கும் நிறையில்லை. * ௧. இரா. ௭: ௰௫.

௨. நாளாக. ௪: ௰௫. மு.

௨௧. அந்தத் தூண்களோவென்றால், ஒவ்வொரு தூண் பதினெட்டு முழ உயர்த்தியாயிருந்தது, பனிரண்டு முழ நூல் அதைச் சுற்றும், நாலுவிரல்கடை யதின் கனம், உள்ளே குழாயாயிருந்தது.

௨௨. அதின்மீதில் வெண்கலக் குமிழ் உண்டாயிருந்தது, ஒருகுமிழ் உயர்த்தி ஐந்துமுழமானது, குமிழின்மேல் சுற்றிலும் பின்னலும் மாதளம்பழங்களுமாயிருந்தது, எல்லாம் வெண்கலந்தான், அதுக்குச் சரியாய் மற்றத் தூணுக்கும் அதுவும் மாதளம்பழங்களுமுண்டாயிருந்தது.

௨௩. தொண்ணூற்றாறு மாதளம்பழங்கள் காற்றுத் திசைகளுக்கெதிராக இருந்தது, குமிழின்மேல் சுற்றிலுமிருந்த மாதளம்பழங்கள் நூறு.

௨௪. தலையாரிகளின் அதிபதி பிரதான ஆசாரியனாகிய செராயாவையும், இரண்டாம் ஆசாரியனாகிய செப்பனியாவையும், வாசல்படியின் மூன்று காவல்காரரையும் பிடித்தான்.

௨௫. பட்டணத்திலோவென்றால் அவன் யுத்தமனுஷரின் விசாரிப்புக்காரனாகிய பிரதானியொருத்தனையும், இராசாவின் மந்திரிகளில் பட்டணத்தில் அகப்பட்ட ஏழுபேரையும், தேசத்தின் சனத்தைச் சேவகம் எழுதுகிற தலையான சம்பிரதியையும், தேசத்துச் சனத்திலே பட்டணத்தின் நடுவில் அகப்பட்ட அறுபது பேரையும் பிடித்தான்.

௨௬. அவர்களைத் தலையாரிகளின் அதிபதியாகிய நேபூசார்அதான் பிடித்து, அவர்களை ரிப்லாவுக்குப் பாபேலுடைய இராசாவண்டையிலே கொண்டுபோய்விட்டான்.

௨௭. அப்போது பாபேலின் இராசா காமாத்தென்ற தேசத்தின் பட்டணமாகிய ரிப்லாவிலே அவர்களை வெட்டிக்கொன்றுபோட்டான். யூதர்கள் தங்கள் தேசத்திலிருந்து சிறைகளாய்க் கொண்டுபோகப்பட்டார்கள்.

௨௮. நேபுகாத்நேசார் சிறைபிடித்துப் போன சனம் எத்தனையென்றால், ஏழாம் வருஷத்திலே மூவாயிரத்திருபத்துமூன்று யூதரும்,

௨௯. நேபுகாத்நேசாருடைய பதினெட்டாம் வருஷத்தில் யெருசலேமிலிருந்து எண்ணூற்று முப்பத்திரண்டு ஆத்துமாக்களுங் கொண்டுபோகப்பட்டார்கள்.

௩௰. நேபுகாத்நேசாருடைய இருபத்துமூன்றாம் வருஷத்தில் தலையாரிகளின் அதிபதியாகிய நேபூசார்அதான் யூதரில் எழுநூற்று நாற்பத்தைந்து ஆத்துமாக்களைச் சிறைபிடித்துப்போனான். ஆக நாலாயிரத்தறுநூறு ஆத்துமாக்களே.

## யோயாக்கீனென்ற இராசாவுக்குப் பாபேலிலே செய்யப்பட்ட தயவு.

௩௧. * யூதாவின் இராசாவாகிய யோயாக்கீனுடைய சிறையிருப்பின் முப்பத்தேழாம் வருஷத்துப் பனிரண்டாம் மாதம் இருபத்தைந்தாந் தேதியிலே சம்பவித்ததேதென்றால், எவில்மெரோதாக்கென்ற பாபேலின் இராசா, தான் இராசாவான வருஷத்திலே யூதாவின் இராசாவாகிய யோயாக்கீனின் தலையை யுயர்த்தி, அவனைக் காவல்வீட்டிலிருந்து புறப்படப்பண்ணி, * ௨. இரா. ௨௫: ௨௭. மு.

௩௨. அவனோடே யன்பாய்ப்பேசி, அவனுடைய ஆசனத்தைத் தன்னோடே பாபேலிலிருந்த இராசாக்களுடைய ஆசனங்களுக்கு மேலாக்க வைத்து,

௩௩. அவனுக்குக் காவல்வீட்டிலிருந்த வஸ்திரங்களை மாற்றினான், அவன் உயிரோடிருந்த சகலநாளும் அவனுக்கு முன்பாக நித்தம் அப்பஞ் சாப்பிட்டான்.

௩௪. அவனுடைய செலவுக்கோவென்றால், அவனுயிரோடிருந்த நாளெல்லாம் அவனுடைய மரணநாள் பரியந்தமும் அவனுக்குப் பாபேலினுடைய இராசாவினாலே அனுதினக் கட்டளையான திட்டமப்போதும் அனுதினமுங் கொடுக்கப்பட்டது.

எரேமியாவின் தீர்க்கதரிசனம் முடிந்தது.



# எரேமியாவின் புலம்பல்.

## ௧. அதிகாரம்.

யூதசனத்தின் துயரமான நிலைமையின் கசப்பினாலே அங்கலாய்க்கிற புலம்பல்.

சனம் பெருத்திருந்த பட்டணமானவள் எத்தனை தனிமையாக உளுக்கார்ந்திருக்கிறாள்! விதவைக்கொப்பானாள்! சாதிகளில் பெரியவளும் சீர்மைகளில் நாயகியுமாயிருந்தவள் கப்பங்கட்டுகிறவளானாள்!

௨. இராக்காலத்திலே அழவே அழுகிறாள், அவளுடைய கண்ணீர் அவள் கன்னங்களில் ஓடும், அவளுடைய எல்லா நேசரிலும் அவளைத் தேற்றரவு பண்ணுவாரொருவரும் அவளுக்கில்லை, அவளுடைய சிநேகிதரெல்லாம் அவளுக்குத் துரோகிகளாகி அவளுக்குச் சத்துருக்களாய்ப்போனார்கள்.

௩. உபத்திரவப்படவும் அடிமைவேலையை வெகுதரஞ்செய்யவும் யூதசனம் ஒடுபட்டுப்போச்சுது, அவள் புறச்சாதிகளுக்குள்ளே தங்குகிறாள், இளைப்பாறுதலை அடையாள், அவளைத் துன்பப்படுத்துகிற யாவரும் அவளை நெருக்கஸ்தலங்களின் இடுக்கிலே தொடர்ந்து பிடித்தார்கள்.

௪. பண்டிகைக்கு வருவாரில்லாததினால் சீயோனின் வழிகள் புலம்புகிறதுகளாயிருக்குது, அதின் வாசல்களெல்லாம் பாழாய்க்கிடக்குது, அதின் ஆசாரியர் தவிக்கிறார்கள், அதின் கன்னியாஸ்திரீகள் சஞ்சலப்படுகிறார்கள், அதுக்குக் கசப்பே உண்டாயிருக்குது.

௫. அதின் சத்துருக்கள் தலையானார்கள், அதின் பகைஞர் சுகித்திருக்கிறார்கள், ஏனெனில் அதினுடைய திரளான பாதகங்களின் நிமித்தியங் கர்த்தர் அதைச் சஞ்சலப்படுத்தினார், அதின் பிள்ளைகள் சத்துருவுக்கு முன்பாகச் சிறையிருப்புக்குப் போனார்கள்.

௬. சீயோன் குமாரத்தியின் மகத்துவமெல்லாம் அதை விட்டுப்போச்சுது, அதின் பிரபுக்கள் மேய்ச்சலைக்காணாத மான்களுக்கொப்பாகி, தொடருகிறவனுக்கு முன்பாகச் சத்துவமில்லாமல் நடந்துபோனார்கள்.

௭. தனக்குச் சிறுமையுந் தவிப்பும் உண்டாகிய நாள்களிலே யெருசலேம் பூருவநாள்கள் முதற்கொண்டு தனக்குண்டாயிருந்த இச்சிக்கப்படத்தக்க நன்மைகளையெல்லாம் நினைக்குது. அதுக்கொத்தாசை செய்வாரில்லாமல் அதினுடைய சனம் சத்துருவின் கையிலே விழுகையில் சத்துருக்கள் அதைப்பார்த்து, அதினுடைய ஓய்வுநாள்களின் பேரிலே நகைத்தார்கள்.

௮. யெருசலேமென்பவள் பாவஞ்செய்யவே செய்தாள், ஆனபடியினாலே தூரஸ்திரீயைப்போலானாள், அவளைக் கனம்பண்ணினவர்களெல்லாரும் அவளையசட்டைபண்ணுகிறார்கள், ஏனென்றால் அவளுடைய அபிமானத்தைக் கண்டார்கள், அவளும் பெருமூச்சுவிட்டுப் பின்னிட்டுத் திரும்பினாள்.

௯. அவளுடைய அசுத்தம் அவள் வஸ்திரங்களிலிருந்தது,* தனக்கு வரப்போகிற முடிவை நினையாதிருந்தாள், ஆகையால் அதிசெயமாய்த் தாழ்ந்துபோனாள், தேற்றரவுபண்ணுவார் அவளுக்கில்லை. கர்த்தாவே, என் சிறுமையைப் பாரும், ஏனெனில் பகைஞன் பெருமையடைந்தான்.

* ௫. மோசே. ௩௨: ௨௯.

௰. அவளுடைய இச்சிக்கப்படத்தக்க நன்மைகளின்மேல் சத்துரு தன் கையை நீட்டினான், அதேனெனில் உம்முடைய சபையிலே வரவொண்ணாதென்று தேவரீர் கற்பித்த புறச்சாதியார் உமது பரிசுத்தஸ்தலத்துக்குள் பிறவேசித்ததைக் கண்டாள்.

௰௧. அவளுடைய சனமெல்லாம் அப்பந்தேடித் தவிக்கிறார்கள், தங்கள் பசியையாற்றும்படிக்குத் தாங்கள் இச்சிக்கப்படத்தக்க நன்மைகளை ஆகாரத்துக்கென்று கொடுத்துவிட்டார்கள். கர்த்தாவே, நோக்கிப்பாரும், ஏனெனில் நான் மற்றவளானேன்.

௰௨. வழியில்க்கடந்து பபோகிறஎல்லாசசனங்களே, இதுஉங்களுக்குச் சேராதோ? கறத்தர்தமதுகோபத்தினுடைய உக்கிரத்தின நாளிலேஎனனைச்சலுசலப்படுத்தினதினால் எனக்குணடுபணணப்பட்டஎனனுடையநோவுக்குச்சரியானநோவுணடோவெனறுநோக்கிப்பாருங்கோள.

௰௩. உயரத்திலிருந்துஎனன எலும்புகளில அக்கினியையனுப்பிவிட்டார், அது அதுகளைப் பிடித்தது, எனகால்களுக்குவலையைவீசினார்,எனனைப்பினனிட்டுவிழப்பணணினார், எனனைப்பாழ்க்கடித்தார், நித்தமநானபெலட்சயமானவள.

௰௪. எனபாதகங்களின நுகத்தடி அவருடையகையால்க்கட்டியிருக்குது, அதுகளபிணைக்கப்பட்டுஎனகழுத்தினமேல ஏறிறறு, எனபெலனைவிழப்பணணினார். ஆணடவரெனனை நானஎழுந்திருக்கக்கூடாதபடிக்குஒடுக்கிறவர்களினகையிலேயொப்புக்கொடுத்தார்.

௰௫. எனனிலுளளபெலசாலிகளாகியஎனனுடையவர்களையெல்லாம ஆணடவர் மிதித்துப்போட்டார், எனவாலிபரை நொறுக்கும்படிக்கெனமேலொருகூட்டத்தைவரவழைத்தார், யூதாகுமாரத்தியாகிய கனனியாஸ்திரியை ஆணடவர் ஆலையாக மிதித்தார்.

௰௬. * இதுகளினநிமித்தியமாக நானஅழுகிறேன, எனகண, எனனுடையகணணே நீராகச்சொரியுது, எனனில்எனனாத்துமத்தைமுசிப்பாற்றுந்தேற்றரவாளனஎனனைவிட்டுத்தூரமானார். பகைஞனமேலக்கொணடதினாலஎனபிளளைகளபாழ்க்கடிக்கப்பட்டார்கள.

* யெரேமி. ௰௩: ௰௭. ௰௪: ௰௭.

௰௭. சீயோனெனபவளதனகைகளைவிரிக்கிறாள, தேற்றரவுபணணுவார்அவளுக்கில்லை,கறதர்யாக்கோபினசுற்றுப்புறத்தாரையவனுக்குச்சத்துருக்களாகக்கட்டளையிட்டார், யெருசலேமெனபவள அவர்களுக்குளளே தூரஸ்திரிக்கொப்பானாள.

௰௮. கறதர்நீதிபரர், அவருடையவாக்குக்குவிரோதமாயநானஎழும்பினேன, ஆனபடியினாலேசனங்களே, நீங்களெல்லாருமஇதைக்கேட்டுஎனவேதனையைப்பாருங்கோளேன, எனகனனியாஸ்திரிகளுமஎனவாலிபருஞ்சிறையிருப்பிலேபோனார்கள.

௰௯. எனனைச்சினேகித்தவர்களைக்கூப்பிட்டேன, * அவர்களோஎனனைமோசமபோக்கினார்கள, என ஆசாரியர்களும ஏனமூப்பருந்தங்களபசியையாற்றத்தங்களுக்கு அப்பந்தேடுகையிலமூச்சொடுங்கிமாணடார்கள.

* யெரேமி. ௬௰: ௰௪.

௨௰. கறதாவே, பாரும,எனனிலநெருக்கப்படுகிறேன,* எனகுடலகளபொங்குது,நானமிகவும்மறள விழுந்தபடியினாலேஎனனிருதயமஎனக்குளதுவணடது,**வெளியிலேபட்டயமஎனனைப்பிளளையற்றவளாக்கிறது, வீட்டுக்குளளேமரணசாயலாயிருக்குது. * சங்கீ. ௨௫: ௰௭.

* * ரு. மோசே. ௩௨: ௨௫.

௨௧. நானதவிக்கிறதையவர்கள கேட்டாலுந்தேற்றரவுபணணுபவன எனக்கில்லை, எனபகைஞரெல்லாரும எனதீங்கைக்கேட்டு, தேவரீர்அதைச்செய்தபடியினாலே சந்தோஷமாயிருக்கிறார்கள,நீர்கூறினநாளைவரப்பணணுவீர், அப்போதுஎனனைப்போலிருப்பார்கள.

௨௨. அவர்களுடையபொல்லாப்பெல்லாமஉமதுமுகத்துக்குமுனபாகவரக்கடவது, எனனுடையஎல்லாப்பாதகங்களினநிமித்தியமுமநீர்எனக்குச்செய்ததுபோலே, அவர்களுக்குச்செய்யும, ஏனெனறால எனபெருமூச்சுகளதிரளானதுகள, எனனிருதயமபெலட்சமாயிருக்குது.

## ௨. அதிகாரம.

### இறங்கினஆக்கினைகளினதுயரமானவிவரிக்குதல.

சீயோனகுமாரத்தியை ஆணடவர் தமமுடையகோபத்திலெத்தனைமந்தாரத்தாலேமூடினார்? தமமுடையகோபத்தினநாளிலேஅவர்*தமதுபாதப்படியைநினைக்காமல, இஸ்ரவேலினமகிமையைவானத்திலிருந்துதரையில விழத்தளளினார். * சங்கீதம. ௱௩௨: ௭.

௨. ஆணடவர்தப்பவிடாமல,யாக்கோபினவாசஸ்தலங்களையெல்லாம முழுங்கினார், அவர் யூதா குமாரத்தியின அரணகளையெல்லாந்தமமுடையசினத்திலே யிடித்து, தரையோடேதரையாக்கிப் போட்டார், இராச்சியத்தையுமஅதின பிரபுக்களையுமபரிசுத்தமறப்பணணினார்.

௩. தமமுடைய கோபத்தின உக்கிரத்திலேஇஸ்ரவேலின கொமபையெல்லாமவெட்டிப்போட்டார், அவர்பகைஞனுக்குமுனபாகத்தமமுடையவலதுகையைப்பினனுக்குத்திருப்பி, சுற்றிலுமிருக்கிறதைப் பட்சிக்கிற அக்கினி சுவாலையபு

யைபபோலேயாககோபுககுவிரோதமாக பபறறியெரிநதார்.

௪. பகைஞனைபபோல * தத்தமமுடையவிலலை நாணேறறினார், சததுருவைப போலத்தமமுடையவலதுகையை நீட்டிநின்று, பார்வைககுவிருபபமானதையெல்லாங கொன்றுபோடடார், சீயோன குமாரததியின கூடாரததிலே தமமுடைய உககிரததையககினியைபபோலேஊறறிபபோடடார். * சஙகீ. எ: ௰௩.

௫. ஆண்டவர் பகைஞனுககொபபானார், இஸருவேலைவிழுஙகினார், அதின அரமனைகளை யெல்லாம் விழுஙகினார், அதின அரண்களை யழிதது, சீயோனகுமாரததிககுததிரளான துககிபபையுஞ்சலிபபையுமுண்டாககினார்.

௬. தோட்டததின வேலியைபபோலிருநத தமமுடையவேலியைபபெலவநதமாயபிடுஙகிபபோடடார், சபைகூடுகிற தமமுடைய ஸதலததையழிததார், கறதர்சீயோனிலேபண்டிகையையுமஓய்வுநாளையுமமறககபபணணி, தமதுகோபததின தாககலில இராசாவையும ஆசாரியனையுமபிறககணிததுபபோடடார்.

௭. ஆண்டவர் தமது பலிபீடததை யொழிததுவிடடார், தமது பரிசுததஸதலததை யருவருததார், அதினுடைய அரமனைகளின மதிலகளைப்பகைஞனின கையிலபபதிரபபடுததிவிடடார், பண்டிகை நாளுககொபபாக ககறதரின வீட்டிலேசததமிடடார்கள்.

௮. கறதாசீயோனகுமாரததியின அலஙகாரததை நிறமூலமாககநினைததார், நூலபபோடடார், அழிககாதபடிககுததமதுகையையவர் முடககிககொணடதிலலை, அரணிபபையும அலஙகததையும புலமபலாககினார், அதுகள ஏகமாயபபெலனறறுககிடககுது.

௯. அதின வாசலகள தறையில அமிழநதிககிடககுது, அதின தாபபாளகளைககெடுததுடைததுபபோடடார், அதின இராசாவும அதினபிரபுககளுமபுறசசாதியாருககுளளிருககிறார்கள், வேதமிலலை, அதின தீர்ககதெரிசிகளுககுககறததராலத்தெரிசினங கிடைககிறதுமிலலை.

௰. சீயோன குமாரததியின மூபபர் தறையிலுககாரநது மவுனமாயிருககிறார்கள், தஙகள தலைகளினமேல புழுதியைபபோடடுககொளளுகிறார்கள், இரட்டுடுததியிருககிறார்கள், யெருசலேமின கனனியாஸதிரிகளதஙகள தலைகளைத்தறையைநோககியிறககிககொண்டிருககிறார்கள்.

௰௧. என சனமாகிய குமாரததியினுடைய நொறுஙகுதலினநிமிததியமஎன கணகள கணணீரையுதிர்ககிறதினாலபூததுபபோசசுது, என குடலகளபொஙகுது, என ஈரலதறையிலசசரிகுது, ஏனெனில குழநதைகளும பாலகருமபட்டணததின வீதிகளில ததொயநதுகிடககுது.

௰௨. அதுகள குததுணடவர்களைபபோலப்பட்டணததின வீதிகளில ததொயயககொளளவுநதஙகளாததுமததைத்தஙகளதாயகளின மடியிலூறறசகொளளவும, தஙகள தாயகளுடனே: கோதுமையுந திராட்சிபபழரசமுமெஙகேயெனகுது.

௰௩. யெருசலேம்குமாரததியே! என்னத்தையுனககுசசாட்சியாகசசொலலுவேன? என்னததுககுனனையொபபிடுவேன? சீயோன குமாரததியாகியகனனியாஸதிரியே! நானுனனைததேறறுமபடிககு என்னததுககுனனைச சரியிடுவேன? உன நொறுஙகுதல சமூததிரததைபபோல விஸதாரமாயிருககுதே, உனனைககுணமாககுபவனார்?

௰௪. உன தீர்ககதெரிசிகள அபததமும மதியிலலாமையுமான தெரிசினததையுனககுததெரிசிததார்கள், அவர்கள உன சிறையிருபபை விலககுமபடிககு உன அககிரமததைததிறநதுவைககாமல, அபததககாரியஙகளையும, நீ துரததபபடுகிறததுககான துகளையுமஉனககுததெரிசிததார்கள்.

௰௫. வழிபோகிறயாவரும உனபேரிலகைகொட்டிககொளளுகிறார்கள், யெருசலேமகுமாரததியினபேரில ஈசலபபோடடு, தஙகள தலைகளைததுலுககி: பூரணவடிவுமஎலலாபபூமியின மகிழ்ச்சியுமான தெனனபபட்ட பட்டணமிதுவோவெனகிறார்கள்.

௰௬. உனபகைஞர் உனபேரில தஙகளவாயைததிறககிறார்கள், ஈசலபபோட்டுப்பலக்கடிககிறாகள: அதை விழுஙகினோம நாஙகாததிருநதநாள இதுவே, இபபோநமககு கிடைததது, அதைககணடோமெனகிறார்கள்.

௰௭. * கறதர் தாமநினைததததைசசெயதார், தாம பூருவநாளககள முதற்கொண்டு கட்டளைபபணணின தமது வாறததையை நிறைவேறறிபபோடடார், அவர் தபபவிடாமல நிர்மூலமாககி, உனனாலபபகைஞனுககுசசநதோஷமுணடுபணணினார், உனசததுருககளின கொமபையுயர்ததினார். * ௩. மோசே. உ௬: ௰௫. மு

௰௮. அவர்கள இருதயம ஆணடவரைநோக

சகிக்கப்படுகுது, சீயோன்குமாரத்தியின் மதிலே, இரவும்பகலும் * நதியத்தவின் கண்ணீரை விடு, உனக்கு ஓய்வைக்கொடாயாக, உன் கண்களின் கறுப்புமுழி சும்மாயிராதாக. * யெரேமி ௰௪: ௰௭.

௰௯. எழுந்திரு, முன்சாம இராத்திரியிலே கூப்பிடு, ஆண்டவரின் முகத்துக்குமுன்பாகவுன் னிருதயத்தை தண்ணீரைப்போல் ஊற்று, எல்லாத்தெருக்களின் முலையிலும் பசியினாலேதொய்கிற உன் குழந்தைகளின் பிராணனுக்காக உன் கைகளை யுயரவெடுக்கக்கேடு.

௨௰. கர்த்தாவே, ஆருக்கிந்தப்பிரகாரமாகச் செய்தீரென்று * நோக்கிப்பாரும், ஸ்திரிகள் ** கைக்குழந்தைகளாகிய தங்களுடைய கெற்பத்தின் கனியை தின்னவேணுமோ? ஆண்டவருடைய பரிசுத்தஸ்தலத்தில் ஆசாரியருந்தீர்க்கதெரிசியுங் கொலைசெய்யப்படவேணுமோ?

* ௧: அதி. ௨௰. ** ௪: அதி. ௰.
௫. மோசே. ௨௮: ௫௩.

௨௧. தெருக்களில் இளைஞனும் முதிர்ந்தவயதுள்ளவனுந் தரையிலேகிடக்கிறார்கள், என் கன்னியாஸ்திரிகளும் என் வாலிபரும் பட்டயத்தால் விழுந்தார்கள், உமது கோபத்தின் நாளிலேகொன்று, தப்பவிடாமல்வெட்டிப்போட்டீர்.

௨௨. பண்டிகைநாளுக்கொப்பாகச் சுற்றிலுமிருந்து என் திகில்களை வரவழைத்தீர், கர்த்தருடைய கோபத்தின் நாளிலே தப்பினவனும் மீதியானவனுமில்லை, நான் கைகளில் ஏந்திக்கொண்டு வளர்த்தவர்களை யென்பகைஞன் நாசம் பண்ணினான்.

## ௩. அதிகாரம்.

தனக்குந் தன் சனத்துக்குமுண்டான நிர்ப்பந்தத்தை யெரேமியா விவரித்தது.

ஆண்டவருடைய சினத்தின் மிலாறினாலுண்டான சிறுமையைக்கண்டபுருஷன் நான்.

௨. அவரென்னை வெளிச்சத்துக்குள் அல்ல, இருளுக்குள்ளே அழைத்து நடத்திவந்தார்.

௩. அவரெனக்கு விரோதமாகவே நித்தம் தம்முடைய கையைநேரிடத்திருப்பினார்.

௪. என் சதையையும் என் தோலையும் மூத்ததாக்கினார், என் னெலும்புகளை யுடைத்தார்.

௫. அவரெனக்குவிரோதமாகக்கொத்தளங் கட்டி, பிச்சினாலும் வருத்தத்தினாலும் என்னை வளைந்துகொண்டார்.

௬. * நித்தியகாலஞ் செத்துக்கிடக்கிறவர்களைப்போலென்னை இருளான விடங்களிலிருக்கப்பண்ணினார். * சங்கீ. ௱௪௩: ௩.

௭. நான் புறப்படக்கூடாதபடியாய் என்னைச்சுற்றிவேலியடைத்தார், என் விலங்குகளைப் பாரமாக்கினார்.

௮. நான் சத்தமிட்டுக்கூப்பிட்டாலும், என் செபத்துக்குவழியையடைத்துப்போட்டார்.

௯. வெட்டின கல்லுகளாலே என் வழிகளை யடைத்துப்போட்டார், என் பாதைகளை மாறுபாடாக்கினார்.

௰. எனக்கவர் பதிவிருக்கிற கரடியும், மறைவிடங்களிலிருக்கிற சிங்கமுமாயிருக்கிறார்.

௰௧. என் வழிகளை விலக்கி, என்னைத் துண்டித்துப்போட்டார், என்னைப்பாழாக்கிவிட்டார்.

௰௨. தமது வில்லைநாணேற்றி, என்னை யம்புக்கு இலக்காக வைத்தார்.

௰௩. தம்முடைய அம்புறாத்தோணியின் அம்புகளை யென் உள்ளிந்திரியங்களில் படப்பண்ணினார்

௰௪. * நான் என் சனமனைத்தின் பரியாசமும், நித்தமவர்கள் கின்னரப்பாடலுமாயிருந்தேன்.

௰௫. கசப்புகளால் என்னை திருப்தியாக்கி, எட்டியினால் என்னை நிரப்பினார்.

௰௬. அவர் பருக்கைக்கல்லுகளால் என் பல்லுகளை நொறுக்கி, என்னைச்சாம்பலில் புரளப்பண்ணினார்.

௰௭. என் ஆத்துமத்தைச் சமாதானத்துக்குத் தூரமாக்கினார், நன்மையைமறந்தேன்.

௰௮. ஆகையால்: என்பெலனும், நான் கர்த்தருக்காகக் காத்திருந்த நம்பிக்கையும் அழிந்ததென்றேன்.

நம்பிக்கைக்கும் பொறுமைக்குந் தெய்வீக மனஸ்தாபத்துக்குஞ் செபத்துக்கும் எழுப்பின புத்தி.

௰௯. என் சிறுமையையும் என் தவிப்பையும் எட்டியையும் பிச்சையும் நினைத்துக்கொள்ளும்.

௨௰. என் ஆத்துமம் எனக்குள் முறிந்துபோகுதென்கிறதை நினைக்கவேண்டியதீர்.

௨௧. இதை யென் மனதிலே வைப்பேன், இதுநிமித்தமாகக் காத்திருப்பேன்.

௨௨. * நாங்கள் நிர்மூலமாய் அழியாதிருக்கிறது கர்த்தருடைய கிருபைகள், ஏனெனில் அவ

டைய

டைய இரககஙகள முடிவடைநததிலலை.

* நெகே. ௯: ௩௧. ஏசாயா. ௧: ௯.

௨௩. *அதுகள காலமேதாறு புதியதுகள அவருடைய உணமைபெருததிருககுது.

* சஙகீ. ௩௰: ௬.

௨௪. *கரததரே எனபஙகாயிருககிருரெனறெனனுதது மனுசொலலுகிறது, ஆகையால அவருககுக காததிருபபேன. * சஙகீ. ௭௩: ௨௬.

௨௫. * தமககுககாததிருககிறவர்களுககுந தமமைததேடுகிற ஆததுமாவுககுங கரததர் நலலவர். * சஙகீ. ௪௰: ௨.

௨௬. கரததருடைய இரட்சிபபுககுககாததும அமாநதுமிருககிறது நலலது.

௨௭. தன சிறுவயதிலே நுகததடியைச சுமககிறது புருஷனுககு நலலது.

௨௮. அவர் அதைத்தனமேல வைததார்எனறு அவன தனிததுஉளுககார்நது மவுனமாயிருபபானுக.

௨௯. நமபிககை யுணடாயிருககு தாககுமெனறு தனவாயைததூளில நுழுநதுவானுக.

௩௰. தனனையடிககிறவனுககுத தனகனனததையொபபுககொடுதது, நிநதையால ததிறிததியாவானுக.

௩௧. ஏனெனறால ஆணடவர் எனறெனறைககுமஒழிததுவிடாமல,

௩௨. * தாருசஞசலபபடுததினபிறபாடுதமமுடையமிகுநதகிருபையினபடியிரஙகுகிருர்.

* ஏசாயா. ௫௪: ௮.

௩௩. ஏனெனில அவர்மனபபூருவமாயமனுபுததிரரைசசிறுமையாககி, சஞசலபபடுததுகிறதிலலை.

௩௪. ஒருததன பூமியிலுளள கட்டுணடவர்களையெலலாநதன காலகளின கீழ்நசுககிறதையும

௩௫. உனனதமானவரின முகததுககு முனபாக மனுஷருடைய நியாயததைப பிரட்டுகிறதையும,

௩௬. மனுஷனையவனுடையவழககிலேமாறுபாடாககுகிறதையும ஆணடவர் காணுதிருபபாரோ?

௩௭. * ஆணடவர் கட்டளையிடாததகாரியஞ சமபவிககுமெனறுசொல்பவனுர்?

* உ. சாமு. ௰௬: ௰.

௩௮. * தினமையும நனமையுமஉனனதமானவருடையவாயிலிருநதுபுறபபடாதோ?

* ஏசாயா. ௪௫: ௭. ஆமோ. ௩: ௬.

௩௯. நரசீவனுள மனுஷன முறையிடுவானேன? அவனவன தனபாவததினபேரில முறையிடுவானுக.

௪௰. நாமநமமுடைய வழிகளைச சோதிதது ஆராயநது, கரததரிடமட்டுஞசேரததிருமபககடவோம.

௪௧. நாமநமமுடைய இருதயததைககைகளோடுஙகூடப்பரமணடலஙகளிலிருககிற பராபரனணடைககுஏறெடுதது,

௪௨. நாஙகளதுரோகஞசெயது கலகமபணணினோம, ஆகையாலத்தேவரீர்மனனிககாதிருநதீர்.

௪௩. தேவரீர்கோபததால மூடிககொணடு எஙகளைததபபவிடாமலபபினதொடர்நதுகொனறீர்.

௪௪. செபமஉள்பபிரவேசிககககூடாதபடிககுஉமமைமேகததால மூடிககொணடீர்.

௪௫. சனசதளஙகளின நடுவிலே எஙகளைககுபபையுநதளளுபடியுமாககினீர்.

௪௬. எஙகளபகைஞரெலலாம எஙகளமேலததஙகளவாயைததிறநதார்கள.

௪௭. திகிலுமபடுகுழியும, பாழ்ககடிபபுமநொறுககுதலும எஙகளுககுணடாசசுதெனறு விணணபபஞசெயயககடவோம.

௪௮. எனசனமாகியகுமாரததியின நிமிததியம* நீர்ககாலகளஎனகணகளிலிருநதுபாயுது.

* ௧: ௰௬. ௨: ௰௮.

௪௯. கரததர்பரமணடலஙகளிலிருநதுநோககிபபார்ககுமட்டுககும,

௫௰. எனகணகளஅமரிககையற ஓய்விலலாமலசசொரியுது.

### யெரேமியாவின விணணபபம.

௫௧. எனபட்டணததிலுடையஎலலாககுமாரததிகளினிமிததியமும, எனனுடையகண எனனுததுமததுககுநோவுணடாககுது.

௫௨. முகாநதரமிலலாமல எனனைபபகைககிறவர்கள எனனையொருபட்சியைபபோலவேட்டையாடவேவேட்டையாடினுர்கள.

௫௩. எனபிராணனைப்பளளததிலே சஙகரிதது,எனமீதிலக்கலலுககளைப போட்டார்கள.

௫௪. தணணீர் எனதலையினமேலப்பிரணடுது, நாசமானேனெனறேன.

௫௫. மகாஆழமான பளளததிலிருநது, கரததாவே,

தாவே, உம்முடையநாமத்தைப்பற்றிக்கூப்பிட்டேன்.

௫௬. என்சத்தத்தைக்கேட்டீர், என்பெருமூச்சுக்கும்என்கூப்பிடுதலுக்கும் உமது செவியைமறைக்காதேயும்.

௫௭. நானஉம்மைநோக்கிக்கூப்பிட்டநாளிலே நீர்சேர்ந்து: பயப்படாதேயென்றீர்.

௫௮. ஆண்டவரே, என்ஆத்துமத்தின்வழக்கைவழக்காடினீர், என்பிராணனைமீட்டீர்.

௫௯. கர்த்தாவே, நானபட்ட அநியாயத்தைக்கண்டீர், என்நியாயத்தைத்தீரும்.

௬௰. அவர்களுடையகுரோதந்தீர்த்துக்கொள்ளுதலெல்லாவற்றையும், அவர்கள்எனக்குவிரோதமாகநினைத்தநினைவுகளெல்லாவற்றையுங்கண்டீர்.

௬௧. கர்த்தாவே! அவர்களுடைய நிந்திக்குதலையும், அவர்கள்எனக்குவிரோதமாய நினைத்தநினைவுகளெல்லாவற்றையும்,

௬௨. எனக்குவிரோதமாய்எழும்பினவர்களின்பேச்சுகளையும், அவர்கள நித்தமஎனக்குவிரோதமாய்யோசிக்கும்வினைகளையுங்கேட்டீர்.

௬௩. அவர்களுடையஉளுக்காருதலையும்அவர்களுடையஎழுந்திருக்குதலையும் நோக்கிப்பாரும், நான் அவர்களுடையகின்னரப்பாட்டாயிருக்கிறேன்.

௬௪. கர்த்தாவே! அவர்கள கைகளின்செய்கைக்குத்தக்கவதிற்பலனையவர்களுக்கு அளிப்பீர்.

௬௫. அவர்களுக்குஇருதயத்தின்மூனைக்கேடைக்கொடுப்பீர், உம்முடைய சாபம் அவர்களமேலிருக்கும்.

௬௬. கோபமாயவர்களைப்பின்தொடர்ந்து, அவர்களை கர்த்தருடைய வானங்களின் கீழிராதபடிக்குஅழித்துவிடுவீர்.

## ௪. அதிகாரம்.

யூதசனத்துக்குவந்தசிறுமையின்புலம்பல்.

எத்தனையாய்ப்போன்மங்கி,நல்லதங்கம்மாறி, பரிசுத்தஸ்தலத்தின் கல்லுகள் சகல வீதிகளின்முகனையிலுங்கொட்டுண்டுபோச்சுது!

௨. எத்தனையாய் அபராஞ்சிக்கொப்பிட்டப்பட்டவிலையேறப்பெற்ற சீயோன குமாரர்குயவனுடையகைகளின வேலையானமண் பாண்டங்களுக்குச்சரியாகஎண்ணப்பட்டிருக்கிறார்கள்!

௩. திமிங்கலங்கள் முதலாய்க்கொங்கைகளை நீட்டித்தங்கள குட்டிகளுக்கு முலைக்கொடுக்குது, என்சனமாகியகுமாரத்தியோ வனாந்தரத்திலுள்ள தீக்குருவியைப்போலக்கொடூரமாயிருக்கவேணும்.

௪. பாலகனுடையநாவுதாகத்தால்அதினமேலவாயோடே ஒட்டிக்கொண்டிருக்குது, குழந்தைகள அப்பங்கேழ்க்குது, அதுகளுக்குக்கொடுப்பாரில்லை.

௫. ருசிவறசங்களைச்சாப்பிட்டவர்கள்வீதிகளிலப்பாழ்த்துக்கிடக்கிறார்கள், இரத்தாம்பரஉடுப்பிலவளர்க்கப்பட்டவர்கள்குப்பைமேடுகளைஅணைத்துக்கொள்ளுகிறார்கள்.

௬. * கைகளினிறையாமல்லொருநிமிஷப்பொழுதிலேகவிழ்ந்துபோனசோதோமின் பாவத்தைப்பார்க்கிலும் என்சனமாகிய குமாரத்தியின அக்கிரமம பெரிதானது. * ௧. மோசே. ௰௯: ௨௪. ௨௫.

௭. அவர்களுடையநசரேயர் உறைந்தமழையைப்பார்க்கச் சுத்தமும், பாலைப்பார்க்கிலும் வெளுப்பும், முத்துகளைப்பார்க்கச்சுத்தாங்கமும், நீலக்கல்லிழைத்தமேனியுமாயிருந்தார்கள்.

௮. அவர்களுடையரூபங்கறுப்பினால இருண்டுபோச்சுது, வீதிகளில் அறியப்படமாட்டார்கள், அவர்களதோலஅவர்களஎலும்புகளுக்கொட்டிக்கொண்டு, காய்ந்தமரத்துக்கொப்பாச்சுது.

௯. பட்டயத்தாலக்கொலையுண்டவர்கள்பசியினாலக்கொலையுண்டவர்களைப்பார்க்கப்பாக்கியவான்களாயிருக்கிறார்கள், ஏனெனில்இவர்கள வயலகளுடையவரத்தில்லாமையாலக்குத்துண்டுகரைந்துபோகிறார்கள்.

௰. * இரக்கமுள்ள ஸ்திரீகளின கைகள்தங்கள பிள்ளைகளைச்சமைத்தது, என்சனமாகியகுமாரத்தியின நொறுங்குதலில் அதுகளஅவர்களுக்குஆகாரமாச்சுது. * உ: ௨௰.

௰௧. கர்த்தர்தம்முடையசினத்தைநிறைவேற்றி, தம்முடையகோபத்தின உக்கிரத்தை ஊற்றிப்போட்டு, சீயோனில அக்கினியை கொளுத்தினார், அது அதின அஸ்திவாரங்களைப் பட்சித்துப்போட்டது.

௰௨. சத்துருவும்பகைஞனுமயெருசலேமின வாசல்களுக்குள் பிறவேசிப்பாரென்கிறதைப பூமியின இராசாக்களும பூச்சக்கரத்திலுடைய சகலகுடிகளுமநம்பாதேபோனார்கள்.

௰௩. அதினநடுவில நீதிமான்களின இரத்தத்

தைச்சி

னாச்சிந்தப்போட்ட அதினுடைய தீர்க்கதெரிசிகளின் பாவங்களினாலும் அதினுடைய ஆசாரியர்களின் அக்கிரமங்களினாலும் அப்படி வந்தது.

௰௪. குருடர் வீதிகளில் அலைந்து அந்த இரத்தத்தால் கறைப்பட்டு, ஒத்திப்போகக்கூடாததினால் இவர்கள் வஸ்திரங்களைத் தொட்டார்கள்.

௰௫. விலகுங்கோள், தீட்டுண்டாயிருக்குது, தொடாமல் விலகுங்கோள் விலகுங்கோளென்று அவர்களை நோக்கிக் கூப்பிட்டார்கள், மெய்யாய்ப் பறந்தும் அலைந்தும் போனார்கள்; இனித் தங்கித்தரிக்க மாட்டார்களென்று புறசசாதிகளுக்குள்ளே தான் சொல்லப்பட்டது.

௰௬. கர்த்தருடைய முகம் அவர்களைப் பிரித்துப் போட்டது, அவர்களையினி நோக்கார், ஆசாரியர்களுடைய முகத்தைப் பாராமலும், மூதூர்ந்த வயதுள்ளவர்களுக்கிரங்காமலும் போனார்கள்.

௰௭. இன்னம் நாங்களெங்கள் அவத்தமான சகாயத்துக்குக் காத்திருந்ததினாலே எங்கள் கண்கள் பூத்துப்போச்சுது, இரட்சிக்கமாட்டாத சாதிக்குக் காத்திருக்கக் காத்திருந்தோம்.

௰௮. நாங்களெங்கள் வீதிகளில் நடக்கக்கூடாதபடிக்கு எங்கள் நடைகளை வேட்டையாடினார்கள், எங்கள் முடிவு சேர்ந்தது, எங்கள் நாள்கள் நிறைவேறிப்போச்சுது, ஏனெனில் எங்கள் முடிவு வந்தது.

௰௯. எங்களைப் பின்தொடர்ந்தவர்கள் ஆகாசத்துக் கழுகுகளைப் பார்க்கிலும் வேகமாயிருந்தார்கள், பருவதங்களின்மேல் எங்களைக் கடிசாயத் தொடர்ந்தார்கள், வனாந்தரத்தில் எங்களுக்குப் பதிவிருந்தார்கள்.

௨௰. எங்கள் நாசியின் சுவாசமாகிய கர்த்தர் அபிஷேகம் பண்ணிவித்தவனுடைய நிழலின் கீழ்ச் சாதிகளுக்குள்ளே பிழைப்போமென்றோமே, *அவனிவர்கள் படுகுழிகளில் பிடிபட்டான்,

* யெரேமியா. ௫௨: ௯.

அறிவிக்கப்பட்ட ஆறுதல்.

௨௧. ஊத்ஸ் தேசத்தில் குடியிருக்கிற *ஏதோம்குமாரத்தியே! சந்தோஷித்து மகிழு, பாத்திரம் உன்னண்டைக்கும் வந்துசேரும், அப்போ வெறித்து, நிர்வாணமாவாய். *யெரே. ௪௯: ௰௨. சங்கீ. ௱௩௭: ௭.

௨௨. சீயோன் குமாரத்தியே, *உன் அக்கிரமந் தீர்ந்தது, உன்னை அவர் இனிச் சிறைப்படுத்திப்போகப் பண்ணார், ஏதோம்குமாரத்தியே, உன் அக்கிரமத்தை விசாரிப்பார், உன் பாவங்களைத் திறந்து வைப்பார். * ஏசாயா. ௪௰: ௧. ௨.

௫. அதிகாரம்.

யெரேமியா தன் சனத்துக்காகப் பண்ணின விண்ணப்பம்.

௧. கர்த்தாவே, எங்களுக்கென்ன வந்ததென்று நினைத்துக்கொள்ளும், எங்கள் நிந்தையை நோக்கிப் பாரும்.

௨. எங்கள் சுதந்தரம் அன்னியர் வசமாகவும், எங்கள் வீடுகள் புறத்தேசத்தார் வசமாகவும் புரண்டுபோச்சுது.

௩. திக்கற்றவர்களானோம், தகப்பனில்லை, எங்கள் தாய்கள் விதவைகளைப் போலிருக்கிறார்கள்.

௪. எங்கள் தண்ணீரைப் பணத்துக்கு வாங்கிக் குடிக்கிறோம், எங்கள் விறகு விலைக்கிரயமாய் வருகுது.

௫. எங்கள் கழுத்துக்குப் பாரமாக ஓட்டப்படுகிறோம், நாங்கள் உழைத்தாலும் எங்களுக்கிளைப்பாறுதலில்லை.

௬. அப்பத்தால் திர்ப்தியாகும்படிக்கு, எகிப்தியருக்கும் அசூரியருக்குமெங்கள் கையைக் கொடுத்தோம்.

௭. எங்கள் பிதாக்கள் பாவஞ்செய்தார்கள், அவர்களில்லை, *நாங்கள் அவர்களுடைய அக்கிரமங்களைச் சுமக்கிறோம். * யெரே. ௭: ௨௬.

௮. அடிமைகள் எங்களையாளுகிறார்கள், எங்களை அவர்கள் கையிலிருந்து பறிப்பாரில்லை.

௯. வனாந்தரத்திலிருக்கிற பட்டயத்தைத் தொட்டு எங்கள் அப்பத்தைப் பிராண மோசத்தோடே கொண்டுவருகிறோம்.

௰. பசியின் கடினத்தினாலெங்கள் தோல் அடுப்பங்கரையைப்போல் கறுத்துப்போச்சுது.

௰௧. சீயோனிலிருந்த ஸ்திரீகளையும் யூதாப் பட்டணங்களிலிருந்த கன்னியாஸ்திரீகளையும் அவமானப்படுத்தினார்கள்.

௰௨. பிரபுக்கள் அவர்கள் கையினால் தூக்கிப் போடப்பட்டார்கள், *மூதூர்ந்த வயதுள்ளவர்களின் முகங்கள் எண்ணப்படவில்லை.

* ௫. மோசே. ௨௮: ௪௯. ௫௰.

௰௩. வாலிபரை எந்திரம் அரைக்கக் கொண்டுபோகிறார்கள், இளைஞர் விறகு சுமந்து இடறுண்கிறார்கள்.

௰௪. முதிர்நதவயதுளளவர்கள வாசலகளிலுளுககாருகிறதும, வாலிபர்கிணணரஙகளைவாசிககிறதும ஒய்நதுபோசசுது.

௰௫. எஙகளிருதயததின சநதோஷம ஒழிநதுபோசசுது, எஙகள களிகூருதல் துககமாகமாறிறறு.

௰௬. *எஙகள தலையின கிரீடம விழுநதது, ஆ, நாஙகள பாவஞசெயததினால் எஙகளுககை யோ! * எரே. ௰௩: ௰௮.

௰௭. அதினாலே எஙகளிருதயம பெலட்சயமாசசுது, அதினாலே எஙகளகண்கள இருணடுபோசசுது.

௰௮. பாழாய்ககிடககிற சீயோன பருவதத்தினமேலநரிகளஓடிததிரிகுது.

௰௯. கறதாவே, தேவரீரோனறெனறைககுமிருககிறீர், * உமமுடைய ஆசனந தலைமுறை தலைமுறையாககிலைநிறகும. * சங. ௱சரு:௰௩.

௨௰. *தேவரீர் எனறைககும எஙகளைமறநது, நெடுஙகாலமாகஎஙகளைககைவிடடிருபபானேன? சஙகீ. ௰௩: ௨.

௨௧. கறதாவே, * எஙகளையுமமணடைககுத்திருபபிககொளளும, அபபோ திருமபுகிறோம, பூருவகாலததுககுசசமானமாக எஙகள நாள்ககளைப புதுசாககும. எரேமி. ௩௧: ௰௮.

௨௨. எனனில எஙகளைவெறுககவே வெறுபபீரோ? மிகுதியாகவும எஙகளபேரிலேகடுமையாயிருபபீரோ?

எரேமியாவினபுலமபலமுடிநதது.

---

# எசேககியேலின
# தீர்ககதெரிசினம

---

## ௧. அதிகாரம.

கறதர்கெருபினகளாகியமகிமையானவாகனததினமீதிலிருககிறவராய
எசேககியேலுககுததெரிசிவைனயானது.

முபபதாம வருஷததது நாலாம மாதம ஐநதாநதேதியிலேநான *கேபார்நதியணடையிலே சிறையிருபபானவர்களின நடுவிலிருககும போதுசமபவிததசேதெனறால, வானஙகளதிறவுணடு நான பராபரனுடைய தெரிசிவைனகளைககணடேன. * சஙகீ. ௱௩௭: ௧.

௨. அபபோது *யோயாககீனெனற இராசாவுடையசிறையிருபபின ஐநதாமவருஷம.

* ௨. இராசா. ௨௪: ௰௫.

௩. அநத ஐநதாநதேதியிலே, கல்தேயர்தேசததிலுளள கேபார்நதியணடையிலிருநதபூசியெனற ஆசாரியனின குமாரனாகிய எசேககியேலுககு கறதருடைய வாறதையுணடாகவேயுணடாகி, அஙகே கறதருடையகை அவனமேலவநதது.

௪. இதோ, வடககேயிருநதுபுசல்க்காறறும பெரியமேகமும அததோடேகலநதஅககினியும வநததெனறு கணடேன, அதைசசுறறிலும பிரகாசமும, அதினநடுவில அககினிககுளளிருநதுவிளஙகியசொருசாவின ரூபமுமுணடாயிருநதது.

௫. அதின நடுவிலிருநது புறபபடுகிறநாலு சீவனகளின உரு காணபபடடது, அதுகளின ரூபமெபபடியெனில அதுகளமனுஷசாயலாயிருநதது.

௬. * அதுகளில் ஒவ்வொன்றுக்கு நவ்வாலு முகங்களும், ஒவ்வொன்றுக்கு நவ்வாலு செட்டைகளுமிருந்தது. * ௰: அதி. ௰௪.

௭. அதுகளுடைய கால்கள் செம்மையான காலானது, அதுகளுடைய உள்ளங்கால்கள் கன்றுக்குட்டியின் உள்ளங்கால்களுக்கொப்பாயிருந்தது, துலக்கப்பட்ட வெண்கலத்தின் வருணமாய் மின்னிக்கொண்டிருந்தது.

௮. அதுகளுடைய செட்டைகளின் கீழ் அதுகளின் நாலுபக்கங்களிலும், * மனுஷகைகளிருந்தது, நாலுக்கும் அதின்தின் முகங்களும் அதின்தின் செட்டைகளுமுண்டாயிருந்தது.
* ௰: அதி. ௰௮.

௯. அதுகள் ஒவ்வொன்று தன் தன் செட்டைகளை மற்றதின் செட்டைகளோடே சேர்த்தது, அதுகள் நடக்கையில் திரும்பிக்கொள்ளாமல் ஒவ்வொன்று தன் தன் முகத்துக்கெதிரான திசைக்கு நெடுக்க நடந்தது.

௰. * அதுகளுடைய முகங்களின் சாயலேதெனில், அதுகளுக்கு மனுஷமுகங்களும், அதுகள் நாலுக்கும் வலதுபுறத்திலே ** சிங்கமுகங்களும், அதுகள் நாலுக்கும் இடதுபுறத்திலே எருதுமுகங்களும், அதுகள் நாலுக்குங் கழுகு முகங்களுமிருந்தது. * ௰: அதி. ௰௪. அறிவி. ௪: ௭.
** ௧. இராசா. ௭: ௨௯.

௰௧. அதுகளுடைய முகங்களும் அதுகளுடைய செட்டைகளும் உயரப் பிரிந்திருந்தது, ஒன்றோடொன்று சேர்ந்த ரெவ்வெண்டு செட்டைகள் ஒவ்வொன்றுக்கிருந்தது, ரெவ்வெண்டு செட்டைகளோ அதுகளுடைய சரீரங்களை மூடிற்று.

௰௨. ஒவ்வொன்று தன்தன் முகத்துக்கெதிரான திக்குக்கு நெடுக்க நடந்தது, ஆவி போகவேணுமென்றிருந்த எவ்விடத்துக்கும் அதுகள் போச்சுது, போகையில் அதுகள் திரும்பிக்கொண்டதில்லை.

௰௩. சீவன்களுடைய சாயல் என்னமாயிருந்ததெனில், அதுகள் எரிகிற அக்கினியினுடைய தணலின் ரூபும் தீப்பட்டிகளின் ரூபுமானதுகள், இந்த அக்கினி சீவன்களுக்குள்ளே நடமாடிக்கொண்டு, பிரகாசமாயிருந்தது. அக்கினியிலிருந்து மின்னல் புறப்பட்டது.

௰௪. சீவன்கள் மின்னலின் ரூபாக ஓடித்திரிந்தது.

௰௫. நானிந்தச் சீவன்களைப் பார்த்துக்கொண்டிருக்கையில், இதோ, பூமியிலே சீவன்களண்டையிலே ஒரு உருளை தனக்கிருக்கும் நாலுமுகங்களின்படி நின்றது.

௰௬. * உருளைகளின் ரூபும் அதுகளின் வேலையும் தர்ஷீஸ் இரத்தினத்தின் வருணமானது, அதுகள் நாலுக்கும் ஒரேவிதச் சாயலுண்டாயிருந்தது, அதுகளின் ரூபும் அதுகளின் வேலையும் உருளையின் நடுவில் உருளையிருக்குமாப்போலே காணப்பட்டது. * ௰: அதி. ௯. ௰.
௧. இராசா. ௭: ௩௰.

௰௭. அதுகள் ஓடுகையில் தங்கள் நாலுபக்கங்களிலும் ஓடும், ஓடுகையில் அதுகள் திரும்பிக்கொண்டதில்லை.

௰௮. அதுகளின் சக்கரங்களோவென்றால் பயங்கரமான உசத்தியாயிருந்தது, நாலினுடைய சக்கரங்களுஞ் சுற்றிலும் * கண்களால் நிறைந்திருந்தது. * ௰: அதி. ௰௨.

௰௯. சீவன்கள் நடக்கையில் உருளைகள் அதுகளருகேயோடிற்று, சீவன்கள் பூமியிலிருந்தெழும்புகையில் உருளைகளுமெழும்பிற்று.

௨௰. ஆவி போகவேணுமென்றிருந்த எவ்விடத்துக்கும் அதுகள் போச்சுது, அவ்விடத்துக்கு அதுகளின் ஆவியும் போகவேணுமென்றிருந்தது, உருளைகளும் அதுகளருகே யெழும்பிற்று, ஏனென்றால் சீவனுடைய ஆவி உருளைகளிலிருந்தது.

௨௰௧. அதுகள் போகையிலிதுகள் போச்சுது, அதுகள் நிற்கையிலிதுகள் நின்றது, அதுகள் பூமியிலிருந்தெழும்புகையில், உருளைகள் அதுகளருகேயெழும்பிற்று, ஏனெனில் சீவனுடைய ஆவி உருளைகளிலிருந்தது.

௨௰௨. சீவனுடைய தலைகளின் மேலோவென்றால் பயங்கரமான பளிங்கின் துலக்கமாய் ஒரு மண்டலமிருந்தது, அதுகள் உயர அதுகளுடைய தலைகளின் மேல் விரித்திருந்தது.

௨௰௩. மண்டலத்தின் கீழ் அதுகளுடைய செட்டைகள் ஒன்றுக்கொன்றெதிராகச் செம்மையாய் விரித்திருந்தது, தங்கள் தங்கள் சரீரங்களை மூடிக்கொள்ளுகிற ரெவ்வெண்டு செட்டைகள் இந்தண்டையும் அந்தண்டையுமிருக்கிற ஒவ்வொன்றுக்குமிருந்தது.

௨௰௪. அதுகள் நடக்கையில் நானதுகளுடைய செட்டைகளின் இரைச்சலைத் திரளான தண்ணீர்களின் இரைச்சலாகவும், சருவத்துக்கும் வல்லவருடைய சத்தமாகவுங் கேட்டேன், ஒரு இராணுவத்

தின் இரைச்சலுக்கொத்த அரவத்தின் சத்தமாயிருந்தது, அதுகள் நிற்கையில் தங்கள் செட்டைகளைத் தளரவிட்டது.

௨௫. அதுகள் நின்று தங்கள் செட்டைகளைத் தளரவிட்டிருக்கையில் அதுகளுடைய தலைகளுக்குமேலான மண்டலத்தின் மீதிலிருந்து சத்தம் பிறந்தது.

௨௬. அதுகளுடைய தலைகளுக்கு மேலான மண்டலத்தின் மீதில் நீலக்கல்லின் ரூபுக்கொத்த இராசாசனத்தினுடைய சாயலும், உயர இராசாசனத்தினுடைய சாயலின் மேலே மனுஷனுக்கொத்த சொரூபமுமிருந்தது.

௨௭. அவருடைய இடுப்பின் ரூபைத் துவக்கி மேலெல்லாம் உள்ப்புறஞ்சுற்றிலும் அக்கினிகாந்தியான சொகுசாவின் நிறமாகக் கண்டேன், அவருடைய இடுப்பின் ரூபைத் துவக்கிக் கீழெல்லாம் அக்கினிரூபமாகவும், அதைச் சுற்றிலும் பிரகாசமாகவுங் கண்டேன்.

௨௮. மழைநாளில் மேகத்தில் வானவில் எப்படிக் காணப்படுதோ, அப்படிச் சுற்றிலுமுண்டான அந்தப் பிரகாசங் காணப்பட்டது, இது கர்த்தருடைய மகிமையினுடைய சாயலின் தெரிசனையாயிருந்தது,* அதை நான் பார்த்தபோது நான் முகங்குப்புற விழுந்து, பேசுகிற ஒருத்தருடைய சத்தத்தைக் கேட்டேன்.

* தானியேல். ௰: ௯.

## ௨. அதிகாரம்.

எசேக்கியேல் இஸ்ரவேல் வீட்டாருக்குத் தீர்க்கதெரிசியாயிருக்கக் கர்த்தரால் அழைக்கப்பட்டது.

அவர் என்னுடனே: மனுஷபுத்திரனே, * உன் பாதங்களின் மேல் நில்லு, உன்னுடனே பேசுவோமென்றார். * தானியே. ௰: ௰௧.

௨. இப்படி அவர் என்னுடனே சொல்லுகிறபோது,* ஆவி எனக்குள் வந்து, என்னை என் பாதங்களின் மேல் நிறுத்திற்று, அப்போது என்னுடனே பேசுகிறவருடைய வசனத்தைக் கேட்டேன்.

* ௩: அதி. ௨௪.

௩. அவர் என்னுடனே சொன்னதாவது: மனுஷபுத்திரனே, நமக்கு விரோதமாய் எழும்பின கலகக்கார சாதியாகிய இஸ்ரவேல் புத்திரரண்டைக்கு நாம் உன்னை அனுப்புகிறோம், அவர்களும் அவர்கள் பிதாக்களும் இந்நாள்வரைக்குமே நமக்கு விரோதமாய்த் துரோகஞ்செய்தார்கள்.

௪. * அவர்கள் கடின முகமும் முரட்டாட்ட இருதயமுமுள்ள புத்திரர், அவர்களண்டைக்கு நாம் உன்னை அனுப்புகிறோம். கர்த்தராகிய ஆண்டவர் இன்னின்னதை உரைக்கிறாரென்று அவர்களோடே சொல்வாயாக.

* எசாயா. ௪௮: ௪. யெரேமி. ௫: ௩.

௫. கலகவீட்டாராகிய அவர்கள் கேட்டாலுங் கேளாவிட்டாலுந் * தங்களுக்குள்ளே ஒரு தீர்க்கதெரிசியிருக்கிறதை அவர்கள் அறியவேணும்.

* ௩: அதிகாரம். ௰௭.

௬. மனுஷபுத்திரனே, * நீ அவர்களுக்குப் பயப்படாயாக, அவர்கள் வார்த்தைகளுக்கும் பயப்படாயாக, முரட்டாட்டக்காரரும் முள்ளுகளும் உன்னிடத்திலிருந்தாலும், * நீ தேள்களிடத்தில் தங்கியிருந்தாலும், நீ அவர்கள் வார்த்தைகளுக்குப் பயப்படாமலும் * * அவர்கள் முகத்துக்குக் கலங்காமலுமிருப்பாயாக, ஏனெனில் அவர்கள் கலகவீட்டார். * யெரே. ௧: ௮.

* * ௧. பேதுரு. ௩: ௰௪.

௭. கலககாரராகிய அவர்கள் கேட்டாலுங் கேளாவிட்டாலும் நீ நம்முடைய வார்த்தைகளை அவர்களோடே சொல்வாயாக.

௮. மனுஷபுத்திரனே, நீயோவென்றால் கலகவீட்டாரைப்போலக் கலகக்குணமாயிராமல், நாம் உன்னோடே சொல்லுகிறதைக் கேள், உன் வாயைத் திறந்து * நாம் உனக்குக் கொடுக்கிறதைப் புசியென்றார். * அறிவி. ௰: ௯.

௯. அப்போது இதோ, என்னண்டைக்கு நீட்டப்பட்ட கையைக் கண்டேன்; இதோ, அதிலே ஒரு புஸ்தகச்சுருள்.

௰. அவர் அதை என் முன்பாக விரித்தார், அது முற்புறமும் பிற்புறமும் எழுதப்பட்டதாயிருந்தது, அதிலே புலம்பல்களும் தவிப்பும் ஐயோ என்பதும் எழுதியிருந்தது.

## ௩. அதிகாரம்.

கர்த்தர் தீர்க்கதெரிசியாக வைத்த எசேக்கியேலுக்கிட்ட கட்டளைகள்.

பிற்பாடு அவர் என்னுடனே: மனுஷபுத்திரனே * நீ காண்கிறதைப் புசி, இந்தச் சுருளை நீ புசித்து, போய் இஸ்ரவேல் வீட்டாரோடே பேசு என்றார். * அறிவி. ௰: ௯.

௨. அப்படியே என் வாயைத் திறந்தேன், அப்போதவர் அந்தச் சுருளை யெனக்குப் புசிக்கக் கொடுத்து,

௩. என்னுடனே: மனுப்புத்திரனே, நாமுனக்குக் கொடுக்கிற இந்தச் சுருளை நீயுன் வயிற்றிலே யுட்கொண்டு, அதினாலுன் குடல்களை நிரப்புவாயாக வென்றார்; அப்போதிதைப் புசித்தேன், * அது என் வாயிலே தேனைப்போல் தித்திப்பாயிருந்தது. * அறிவி. ௰: ௰.

௪. பிறகு அவர் என்னுடனே சொன்னதாவது: மனுப்புத்திரனே, நீ போய், இஸ்றேவேல் வீட்டாரிடத்திலே சேர்ந்து, நம்முடைய வார்த்தைகளைக் கொண்டு அவர்களோடே பேசு.

௫. ஏனென்றால் அடக்கமான உதடும் அறிய அரிதான பாஷையுமுள்ள சனத்தண்டைக்கல்ல, இஸ்றேவேல் வீட்டாரண்டைக்கே நீ யனுப்பப்படுகிறாய்.

௬. அடக்கமான உதடும், தாங்கள் சொல்லும் வார்த்தைகளை நீ யுணரமாட்டாத அரிதான பாஷையுமுள்ள அநேக சனசதளங்களண்டைக்கு நீ யனுப்பப்படுகிறதுமில்லையே, நாம் அவர்களண்டைக்குன்னை யனுப்பினாலும், அவர்களுனக்குக் கேள்வி கொடாதிருப்பார்களோ?

௭. இஸ்றேவேல் வீட்டாரோவெனில் உனக்குக் கேள்வி கொடுக்க மாட்டோமென்பார்கள், ஏனெனில் நமக்குத்தானே கேள்வி கொடுக்கமாட்டோமென்கிறார்கள், அதேனென்றால் இஸ்றேவேல் வீட்டார் அனைவரும் * முரட்டாட்ட நெற்றியுங் கடின இருதயமுமுள்ளவர்கள். * ௨: அதி. ௪.

௮. இதோ, * உன் முகத்தையவர்கள் முகத்துக்கெதிராகக் கெட்டியும், உன் நெற்றியையவர்கள் நெற்றிக்கெதிராகக் கெட்டியுமாக்குகிறோம். * எரேமி. ௧: ௰௮.

௯. உன் நெற்றியை வச்சிரத்தைப் போலவுங் கன்மலையைப் பார்க்கிலுங் கெட்டியுமாக்கினோம், அவர்கள் கலகமுள்ள வீட்டாரென்று நீயவர்களுக்குப் பயப்படாமலும் அவர்கள் முகங்களுக்குக் கலங்காமலுமிருப்பாயாக வென்றார்.

௰. பின்னையும் அவர் என்னோடே சொன்னதாவது: மனுப்புத்திரனே, நாம் உன்னுடனே சொல்லும் நம்முடைய வார்த்தைகளையெல்லாம் நீ யுன் இருதயத்துக்குள்ளேர்த்துக் கொண்டு உன் செவிகளாலே கேட்டு,

௰௧. நீ போய், சிறையிருப்பான உன் சனத்தின் புத்திரரிடத்திலே சேர்ந்து, * அவர்கள் கேட்டாலுங் கேளாவிட்டாலும், அவர்களுடனே பேசி, கர்த்தராகிய ஆண்டவர் இன்னின்னதை யுரைக்கிறாரென்று அவர்களோடே சொல்வாயாக வென்றார். * ௨: அதி. ௫. ௭.

௰௨. * அப்போது ஆவியென்னையெடுத்துக் கொண்டது: தன் தானத்திலிருந்து விளங்கிய கர்த்தருடைய மகிமை இஸ்தோத்தரிக்கப்படக்கடவதென்று, எனக்குப் பின்னுக்குக் கூப்பிட்ட மகா அதிர்த்தலின் சத்தத்தையும், * ௮: அதி. ௩.

௰௩. ஒன்றோடொன்று சேருகிற சீவன்களுடைய செட்டைகளின் இரைச்சலையும் அதுக்கெதிரே ஓடிய உருளைகளின் இரைச்சலையும் மகா அதிர்த்தலின் சத்தத்தையுங் கேட்டேன்.

௰௪. ஆவியென்னையெடுத்துக் கொண்டது, நானென் ஆவியின் உக்கிரத்தினாலே கசப்போடேபோனேன், ஆனால் கர்த்தருடைய கையென்மேல் பெலனாகவிருந்தது.

௰௫. சேபார் நதியண்டையில் தெல்அவீபிலே தாபரிக்கிற சிறையிருப்பானவர்களண்டைக்கு நான் வந்து: அவர்கள் தாபரிக்கிற தலத்திலே தாபரித்து, ஏழுநாள் அவர்கள் நடுவிலே பிரமித்தவனாய்த் தங்கினேன்.

௰௬. ஏழுநாளின் முடிவிலே சம்பவித்ததேதென்றால், கர்த்தருடைய வார்த்தை யெனக்குண்டாகி, அவர் சொன்னதாவது:

௰௭. மனுப்புத்திரனே, * உன்னை இஸ்றேவேல் வீட்டாருக்குக் காவல்க்காரனாக வைத்தோம், நீ நம்முடைய வாயினாலே வார்த்தையைக் கேட்டு, நம்முடைய நாமத்திலே அவர்களை யெச்சரிப்பாயாக. * ௩௩: அதி. ௭—௯.

௰௮. சாகவே சாவாயென்று நாம் ஆகாதவனுக்குச் சொல்லுகையில் நீயவனை யெச்சரிக்காமலும், நீ ஆகாதவனைத் தன் ஆகாதவழியிலிராதபடிக்கு எச்சரிக்கத்தக்கதாகவும் அவனை யுயிரோடே காக்கத்தக்கதாகவும் அதையவனுக்குச் சொல்லாமலுமிருந்தால், அந்த ஆகாதவன் தன் அக்கிரமத்திலே சாவான், ஆனால் அவன் இரத்தப்பழியை யுன் கையிலே கேட்போம்.

௰௯. நீ ஆகாதவனை யெச்சரித்தும், அவன் தன் ஆகாத்தியத்தையுந் தன் ஆகாதவழியையும் விட்டுத் திரும்பாதே போனானேயாகில், அவன் தன் அக்கிரமத்திலே சாவான், நீயோவெனில் உன்னாத்துமத்தைத் தப்பப்பண்ணினாய்.

௨௰. அப்படியே, * நீதிமான் தன் நீதியைவிட்

ட்டுத்திரும்பி, நீதிகேடுசெய்யும்போதும், நாம் அவன்முன் இடறலை வைக்கும்போதும், அவன் சாவான், நீ அவனை எச்சரிக்காதபடியினாலே தன் பாவத்திலே சாவான், அவன் செய்த நீதிகள் நினைக்கப்படுவதில்லை, அவனுடைய இரத்தப்பழியையோ உன் கையிலே கேட்போம்.

* ௰௮: அதி. ௨௪. ௩௩: ௰௨. ௰௩.

௨௧. நீயோவென்றால், நீதிமான் பாவஞ்செய்யாதபடிக்கு நீதிமானை எச்சரித்த பிறகு, அவன் பாவஞ்செய்யாவிட்டால், அவன் பிழைக்கவே பிழைப்பான், ஏனெனில் எச்சரிக்கப்பட்டுப்போனான், நீயும் உன்னாத்துமத்தைத் தப்பப்பண்ணினாயென்றார்.

௨௨. அவ்விடத்திலே *கர்த்தருடைய கை என்மேல் வந்து, அவர் என்னுடனே: நீ எழுந்திருந்து, பள்ளத்தாக்குக்குப் புறப்பட்டுப்போ, அங்கே உன்னுடனே பேசுவோமென்றார்.

* ௧: அதி. ௩.

௨௩. அப்படியே எழுந்திருந்து பள்ளத்தாக்குக்குப் புறப்பட்டுப்போனேன், இதோ, *நான் கேபார் நதியண்டையிலே கண்ட மகிமைக்குச் சரியாக, அங்கே கர்த்தருடைய மகிமை நின்றது; அப்போது நான் முகங்குப்புற விழுந்தேன்.

* ௧: அதி. ௨௮.

௨௪. ஆனால் *ஆவியெனக்குள் வந்து, என்னை என் பாதங்களின்மேல் நிறுத்தினார், அப்போதவர் என்னுடனே பேசி எனக்குச் சொன்னதாவது: நீ போய் உன் வீட்டுக்குள்ளே உன்னை அடைத்துக்கொண்டிரு, *௨: அதி. ௨.

௨௫. ஏனெனில் இதோ, மனுஷபுத்திரனே, உன்மேல் கயிறுகளைப் போட்டு, அதுகளால் உன்னைக் கட்டப்போகிறார்கள், ஆகையால் நீ அவர்களுக்குள் புறப்படாயாக.

௨௬. நாம் உன் நாவையும் உன் மேல்வாயோடே ஒட்டிக்கொள்ளப்பண்ணுவோம், நீ அவர்களுக்குக் கடிந்துகொள்ளுகிற மனுஷனாயிராமல் ஊமையாயிருப்பாய்; ஏனென்றால் அவர்கள் கலகவீட்டார்.

௨௭. நாம் உன்னோடே சொல்லும்போதோவெனில், உன் வாயைத் திறப்போம், அப்போது: கர்த்தராகிய ஆண்டவர் இன்னின்னதை உரைத்தாரென்று அவர்களோடே சொல்வாயாக; *கேட்கிறவன் கேட்பான், கேளாதவன் கேளாதிருப்பான், ஏனென்றால் அவர்கள் கலகவீட்டார்.

* ௨: ௫. ௭.

## ௪. அதிகாரம்.

யெருசலேம் முத்திகைபோடப்படுவதையும், அதிலே மகா பஞ்சமுண்டாவதையும், பாபேல் தேசத்திலே சிறையிருப்பாயிருந்த யூதருக்கு ஒப்பனையடையாளமாய்க் காண்பிக்கப்பான எசேக்கியேலுக்கிட்டகட்டளை.

இப்போதும், மனுஷபுத்திரனே, நீயொரு செங்கலையெடுத்துக்கொண்டு அதையுன் முன்னே வைத்து, அதின்மேல் யெருசலேமென்ற பட்டணத்தைப் பதித்து,

௨. அதுக்கு விரோதமாக முத்திகைப்போட்டு, அதுக்கு விரோதமாகக் கொத்தளங்களைக் கட்டி, அதுக்கு விரோதமாக அணைபோட்டு, அதுக்கு விரோதமாக இராணுவங்களை நிறுத்திச் சுற்றிலும் அதுக்கு விரோதமாக மதில்முட்டும் எந்திரங்களை வை. * ௨. இராசா. ௨௫: ௧.

௩. நீயோவென்றால் இருப்புச்சட்டியை வாங்கிக்கொண்டு, இதை உனக்கும் பட்டணத்துக்கும் நடுவாக இருப்புச்சுவராக்கி, அது முத்திகையாய்க் கிடக்கும்படிக்கு உன் முகத்தை அதுக்கு நேராகத் திருப்பி, அதை முத்திகைப்போட்டுக்கொண்டிரு, அது இஸ்ரவேல் வீட்டுக்கடையாளம்.

௪. நீயோவெனில் உன் இடதுபக்கமாய் ஒருக்களித்து, இஸ்ரவேல் வீட்டாரின் அக்கிரமத்தை அதின்பேரிலே சுமத்திக்கொள், நீ அந்தப்பக்கமாய் ஒருக்களித்திருக்கும் நாள்களின் இலக்கத்துக்குத் தக்கதாக அவர்களுடைய அக்கிரமத்தைச் சுமப்பாயாக.

௫. ஏனெனில் அவர்களுடைய அக்கிரமத்தின் வருஷங்களை நாள்களாக எண்ணுகைக்காய் உனக்குக் கட்டளையிட்டோம், முன்னூற்றுத்தொண்ணூறு நாள்களாக நீ இஸ்ரவேலின் வீட்டாரின் அக்கிரமத்தைச் சுமக்கவேணும்.

௬. நீ இதுகளை நிறைவேற்றின பிற்பாடு, மறுபடியும் உன் வலதுபக்கமாய் ஒருக்களித்து, யூதா வீட்டாரின் அக்கிரமத்தை நாற்பது நாளாகச் சுமக்கவேணும், ஒவ்வொரு வருஷத்துக்கு ஒவ்வொரு நாளை உனக்குக் கட்டளையிட்டோம்.

௭. நீ யெருசலேமின் முத்திகைக்கு நேராகத் திருப்பிக்கொண்ட முகமாகவும், திறந்த புயமாகவும் இருந்து, அதுக்கு விரோதமாகத் தீர்க்கதெரிசனஞ்சொல்வாயாக.

அ.

௮. இதோ, நீ முற்றிக்கைப்போடுகிற நாட்களை நிறைவேற்றுமட்டாக ஒருபக்கத்திலிருந்து மறுபக்கத்திலே புரளக்கூடாதபடிக்கு, உன் பேரிலே கயிறுகளைப்போடுவோம்.

௯. இப்போதும், நீ கோதுமையையும் வாற்கோதுமையையும் பெரும்பயற்றையும் சிறுபயற்றையும் சாமையையும் கம்பையும் வாங்கி, அதுகளை ஒருபாண்டத்திலே போட்டு, அதுகளால் உனக்கு அப்பங்களைச் சுடுவாயாக, நீ ஒருக்களித்துப்படுக்கும் நாட்களுடைய இலக்கத்தின்படியே முந்நூற்றுத்தொண்ணூறு நாள் அதிலே சாப்பிடுவாயாக.

௰. நீ சாப்பிடும் போசனப்படி நாளொன்றுக்கு இருபது சேக்கல் நிறையாயிருப்பது, அப்படி நாளுக்கு நாள் சாப்பிடுவாயாக.

௰௧. தண்ணீரையும் அளவாய், ஹீனிலே ஆறிலொருபங்கைக் குடிப்பாயாக, அப்படி நாளுக்குநாள் குடிக்கக்கடவாய்.

௰௨. அதை வாற்கோதுமை பணியாரத்தின்படியே சாப்பிடுவாயாக, அதும் மனுஷனிலிருந்து கழிந்த கஷ்டத்தின் வறட்டிகளால் அவர்கள் கண்களுக்கு முன்பாகச் சுடப்படுவதாக.

௰௩. அதுக்கொத்தபடியே இஸ்ரவேல் புத்திரர், நான் தங்களைத் துரத்துகிற புறசாதிகளுக்குள்ளே தங்கள் அப்பத்தைத் தீட்டுள்ளதாகச் சாப்பிடுவார்களென்று கர்த்தர் சொன்னார்.

௰௪. அப்போது நான்: ஆ, கர்த்தராகிய ஆண்டவரே, இதோ, என் ஆத்துமம் தீட்டுப்பட்டதில்லை, தானாய்ச் செத்ததையாகிலும் பீறுண்டதையாகிலும் நான் என் சிறுவயதுதுவக்கி இதுவரைக்குஞ் சாப்பிட்டதில்லை, அருவருப்பான இறைச்சி என் வாய்க்குள் பட்டதுமில்லையென்றேன்.

௰௫. அப்போது அவர் என்னுடனே: பார், மனுஷ கஷ்டத்தின் வறட்டிகளுக்கு பதிலாக உனக்குமாட்டுச் சாணி வறட்டிகளைக் கட்டளையிடுகிறேன், அதுகளின்மேல் உன் அப்பத்தைச் சுடுவாயாகவென்றார்.

௰௬. பிற்பாடு அவர் உரைத்ததாவது: மனுப்புத்திரனே, இதோ, அப்பமுந் தண்ணீரும் அவர்களுக்குக் குறையவும், அவனவன் திகைக்கிடவும், அவர்கள் தங்கள் அக்கிரமத்திலே வாடிப்போகவும்,

௰௭. நாம் எருசலேமிலே * அப்பத்தின் ஆதாரக்கோலை முறிக்கிறோம், அவர்கள் அப்பத்தை நிறையின்படியேயும் விசாரத்தோடேயுஞ் சாப்பிட்டு, தண்ணீரை அளவின்படியேயுந் திகைத்திடுதலோடேயுங் குடிப்பார்கள்.

* ரு: அதி ௰௬. ௰௪: அதி. ௰௩.
௩. மோசே. ௨௬: ௨௬.

## ௫. அதிகாரம்.

யூதருக்கு வரும் ஆக்கினைகளைப் பாரபரன் சொன்ன எசேக்கியேலுடைய தலைமயிரினுந் தாடியின்மயிரினும் உவமையாகக் காண்பித்தது.

பின்னையும் மனுப்புத்திரனே, சவரகர்த்தியாகிய கருக்கான கத்தியை வாங்கிக்கொள், அதை வாங்கி, அத்தால் உன் தலையையும் உன் தாடியையுஞ் சிரைத்துக்கொண்டு, பிறகு நிறுக்குந் தராசை வாங்கி மயிரைப் பங்கிடக்கடவாய்.

௨. மூன்றத்தொருபங்கை முற்றிக்கைப்போடும் நாட்கள் முடிகிறபோது நீ பட்டணத்தின் நடுவிலே அக்கினியாற் சுட்டெரித்து, மூன்றத்தொருபங்கை வாங்கி அதையிதைச் சுற்றிலுங் கத்தியாலே தட்டி, மூன்றத்தொருபங்கைக் காற்றில் தூற்றக்கடவாய், அதுகளின் பிறகாலே நாம் பட்டயத்தையுருவுவோம்.

௩. இதுகளில் கொஞ்சமாத்திரம் எடுத்து அதுகளை உன் வஸ்திரத் தொங்கல்களில் முடிந்து வைப்பாயாக.

௪. இன்னம் இதுகளிற் சிலதுகளையெடுத்து, அதுகளைத் தீயின் நடுவில் எறிந்து அதுகளை அக்கினியாற் சுட்டெரிப்பாயாக, இதிலிருந்து இஸ்ரவேல் வீட்டாரனைவருக்கும் விரோதமாக அக்கினி புறப்படும்.

௫. கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது: இது புறசாதிகளின் நடுவிலே நாம் வைத்ததும், சுற்றிலுந் தேசங்களிருக்கிறதுமான எருசலேம்.

௬. அது புறசாதிகளைப்பார்க்கிலும் நம்முடைய நியாயங்களையும், தன்னைச் சுற்றிலுமிருக்கிற தேசங்களைப்பார்க்கிலும் நம்முடைய கட்டளைகளையும் அக்கிரமமாக மாற்றிப்போட்டது, ஏனெனில் நம்முடைய நியாயங்களை வெறுத்து, நம்முடைய கட்டளைகளில் நடவாதே போனார்கள்.

௭. ஆகையாற் கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது, * உங்களைச் சுற்றிலுமிருக்கிற புறசா

றச்சாதிகளைப் பார்க்கிலும் அதிகரிக்கிறவர்களாயி நீங்கள் நம்முடைய கட்டளைகளிலே நடவாமலும் நம்முடைய நியாயங்களைச் செய்யாமலும், உங்களைச் சுற்றிலுமிருக்கிற புறச்சாதிகளுடைய நீதிநியாயங்களின்படி முதலாய்ச் செய்யாமலும் போனபடியினாலே,

* ௰௧: அதி. ௰௨.

௮. கற்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது: இதோ, நாம் நாமே உனக்கு விரோதமாக வந்து, புறச்சாதிகளுடைய கண்களுக்கு முன்பாக உன் நடுவிலே நியாயங்களைச் செய்து,

௯. நாம் செய்யாதிருக்கிறதும் இனிச் செய்யாதிருப்பதுமான விதமாய் உனக்கு உன்னுடைய எல்லா அருவருப்புகளின் நிமித்தியமுமாய்ச் செய்வோம்.

௰. ஆனதுகொண்டு, * உன் நடுவிலே பிதாக்கள் பிள்ளைகளைத் தின்பார்கள், பிள்ளைகள் பிதாக்களைத் தின்பார்கள். நாம் உன்னில் நியாயங்களைச் செய்து உன்னில் மீதியாயிருப்பவர்களை யெல்லாஞ் சகல காற்றுத் திசைகளிலுஞ் சிதறிப்போகப் பண்ணுவோம். * ௫. மோசே. ௨௮: ௫௩. யெரேமியா. ௰௯: ௯.

௰௧. ஆனதுகொண்டு, சீயென்ன பயட்டத்தக்கதும், அருவருக்கப்பட்டத்தக்கதுமான உன் கிரிகைகளாலே நீ நம்முடைய பரிசுத்தஸ்தலத்தைத் தீட்டுப்படுத்தினபடியினாலே * நம்முடைய கண் உன்னைத் தப்பவிடாமல், நாமும் உன்னை வாங்கிப்போடுவோம், நாமும் மன்னியோமென்று நம்முடைய சீவனைக் கொண்டு சொல்லுகிறோமென்று கற்தராகிய ஆண்டவருரைக்கிறார். * ௭: அதி. ௪. ௮: ௰௮.

௰௨. உன்னில் மூன்றத்தொரு பங்கு பெருவாரிக்காய்ச்சலால் சாவார்கள், பஞ்சத்தாலும் உன் நடுவிலே மடிந்துபோவார்கள், மூன்றத்தொரு பங்கு உன்னைச் சுற்றிலுமிருக்கிற பட்டையத்தால் வெட்டுண்டு விழுவார்கள், மூன்றத்தொரு பங்கை நாலு சகல காற்றுத் திசைகளிலுஞ் சிதறிப்போகப்பண்ணி, அவர்கள் பிறகாலே பட்டையத்தை யுருவுவோம்.

௰௩. இப்படி நம்முடைய கோபம் நிறைவேறும், இப்படி நாம் நம்முடைய உக்கிரத்தை அவர்கள் பேரிலே தங்கப்பண்ணுகிறதினாலே * நம்மை யாற்றிக்கொள்ளுவோம், நாம் நம்முடைய உக்கிரத்தை யவர்களில் நிறைவேற்றுகையில், அப்போது கற்தராகிய நாம் நம்முடைய வயிராக்கியத்திலே இதைப் பேசினோமென்றறிவார்கள்.

* ௰௬: அதி. ௪௨.

௰௪. கடந்துபோகிற யாவருடைய கண்களுக்கு முன்பாகவும் நாம் உன்னை யுன் சுற்றுப்புறத்தாராகிய சாதிகளுக்குள்ளே பாழும் நிந்தையுமாக்கிப்போடுவோம்.

௰௫. நாங் கோபத்தாலும் உக்கிரத்தாலும் உக்கிரமான தெண்டனைகளினாலும், உன்னில் நியாயங்களைச் செய்யும்போது * அந்த நிந்தையுந் தூற்கீறதியுமுன் சுற்றுப்புறத்தாராகிய சாதிகளுக்குப் புத்தியாகவும் பிரமிப்பாகவு மிருக்குமென்று கற்தராகிய நாமிதைச் சொன்னோம்.

* ௫. மோசே. ௨௮: ௩௭. ௨௯: அதி. ௨௪.

௰௬. உங்களை யழிப்பதற்கு நாம் அனுப்பும் அழிப்புக்கான பஞ்சத்தின் பொல்லாத அம்புகளை நாம் அவர்களுக்குள்ளே எய்யும்போது * நாம் பஞ்சத்தை யுங்கள் மேல் அதிகரிக்கப்பண்ணி, உங்கள் ஆகாரத்தின் ஆதரவுகோலையுடைப்போம்.

* ௪: அதி. ௰௬. ௩. மோசே. ௨௬: ௨௬. ஏசாயா. ௩: ௧.

௰௭. பஞ்சத்தையும் * உன்னைப் பிள்ளைகளில்லாமல் போகப்பண்ணுந் துஷ்டமிருகங்களையும் உங்களுக்கு விரோதமாக அனுப்புவோம், பெருவாரிக்காய்ச்சலும் இரத்தஞ் சிந்துதலும் உன்னில் சுற்றித்திரியும், பட்டையத்தை நாம் உன்மேல் வரப்பண்ணுவோம்; கற்தராகிய நாமிதைச் சொன்னோமென்றார். * ௩. மோசே. ௨௬: ௨௨.

## ௬. அதிகாரம்.

யூதேயா தேசத்தின் மேல் வருந் தெய்வாக்கினைகளைப் பராபரன் முன்னறிவித்தது.

கற்தருடைய வாற்தையெனக்குண்டாகி அவர் சொன்னதாவது:

௨. மனுப்புத்திரனே, * நீ இஸ்ரவேலின் பருவதங்களுக்கு நேராக உன் முகத்தைத் திருப்பி, அதுகளுக்கு விரோதமாகத் தீர்க்கதெரிசனம் உரைத்துச் சொல்லவேண்டியதேதென்னில்,

* ௩௬: அதி. ௧.

௩. இஸ்ரவேலின் பருவதங்களே, கற்தராகிய ஆண்டவரின் வாற்தையைக் கேளுங்கோள். பருவதங்களோடுங் குன்றுகளோடும், ஓடைகளோடும் பள்ளத்தாக்குகளோடுங் கற்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது: இதோ, உங்கள் மேல் நாம் பட்டையத்தை வரப்பண்ணி, உங்கள் மேடைகளை அழித்துப்போடுவோம்.

௫.

௪. உங்கள் பெலிபீடங்கள் பாழ்க்கடிக்கப்பட்டு, உங்கள் சிலைகள் தகர்க்கப்படும், உங்களில் கொலையுண்கிறவர்களை யுங்கள் நரகலான தேவர்களின் முகத்துக்கு முன்பாக விழப்பண்ணுவோம்.

௫. நாம் இஸ்ருவேல் புத்திரருடைய பிரேதங்களை அவர்களுடைய நரகலான தேவர்களின் முன்னே கிடக்கப்பண்ணி உங்கள் எலும்புகளை யுங்கள் பெலிபீடங்களைச் சுற்றிலுஞ் சிதறப்பண்ணுவோம்.

௬. உங்கள் பெலிபீடங்கள் நிர்மூலமும் பாழுமாகும்படிக்கும், உங்கள் நரகலான தேவர்கள் தகர்க்கப்பட்டோய்ந்து, உங்கள் சிலைகள் வெட்டுண்டு, உங்கள் கிரிகைகள் குலைந்து போகும்படிக்கும், உங்களுடைய வெல்லா வாசஸ்தலங்களிலுமுள்ள பட்டணங்கள் நிர்மூலமும் உங்கள் மேடைகள் பாழுமாம்.

௭. கொலையுண்கிறவர்கள் உங்கள் நடுவில் விழுவார்கள், அப்படியே * நாங் கர்த்தரென்றறிந்து கொள்ளுவீர்கள். * ௭: அதி. ௨௭.

௮. நீங்கள் தேசங்களில் சிதறவடிக்கப்படும் போதோவெனில், புறச்சாதிகளுக்குள்ளே பட்டயத்துக்குத் தப்புவாரை யுங்களுக்கு மீதியாக வைப்போம்.

௯. நம்மை விட்டகன்ற விபசார இருதயத்தைத் தொட்டும், தங்கள் நரகலான தேவர்களின் பின் பற்றின தங்கள் விபசாரக் கண்களைத் தொட்டும் மனமடிவானேமென்று, உங்களில் தப்பிப்போன அவர்கள் தாங்கள் சிறைப்பட்டிருக்கும் புறச்சாதிகளுக்குள்ளே நம்மை நினைத்து, தங்களுடைய வெல்லா அருவருப்புகளிலுந் தாங்கள் செய்த பொல்லாப்புகளின் நிமித்தியந் தங்களைத் தானே ரோசித்து,

௰. இந்தத் தீங்குகளை யெல்லாந் தங்களுக்குச் செய்வோமென்று கர்த்தராகிய நாம் விருதாவாய்ச் சொன்னதில்லையென்றறிந்து கொள்ளுவார்களென்றார்.

௰௧. கர்த்தராகிய ஆண்டவர் சொன்னதாவது: நீயுன் கையிலடித்து, உன் காலால் தட்டி, இஸ்ருவேல் வீட்டாருடைய வெல்லாப் பொல்லாத அருவருப்புகளின் நிமித்தியமும் ஐயோ வென்று சொல்லு, ஏனென்றால் * பட்டயத்தாலும் பருத்தாலும் பெருவாரிக்காய்ச்சலாலும் விழுவார்கள்.
* ௫: ௰௭.

௰௨. தூரமாயிருக்கிறவன் பெருவாரிக்காய்ச்சலால் சாவான், சமீபமாயிருக்கிறவன் பட்டயத்தாலே விழுவான், மீதியாயிருந்து முத்திக்கை போடப்பட்டவன் பஞ்சத்தினாலே சாவான், இப்படியவர்களில் நம்முடைய உக்கிரத்தைத் தீர்த்துக் கொள்ளுவோம்.

௰௩. அவர்கள் தங்கள் நரகலான தேவர்களுக்கெல்லாம் மதுரவர்க்கமான தூபத்தைக் காட்டின தலங்களாகிய உயர்ந்த சகல மேட்டிலும், பருவதங்களுடைய சகல சிகரங்களிலும், பச்சையான சகல விருட்சத்தின் கீழும், தழைந்திருக்கிற சகல கர்வாலி மரத்தின் கீழும், அவர்களில் கொலையுண்டவர்கள் அவர்களுடைய நரகலான தேவர்களின் நடுவிலும் அவர்களுடைய பெலிபீடங்களைச் சுற்றிலுங் கிடந்திருக்கையில், அப்போது நாங் கர்த்தரென்றறிந்து கொள்ளுவார்கள்.

௰௪. நாம் நம்முடைய கையையவர்களுக்கு விரோதமாக நீட்டி, அவர்களுடைய வெல்லா வாசஸ்தலங்களுமுள்ள தேசத்தைப் பாழாசப்பண்ணி, அதைத் தீபலாத்தின் வனாந்தரத்தைப் பார்க்கிலும் பாழாகவே பண்ணுவோம், அப்போது நாங் கர்த்தரென்றறிந்து கொள்ளுவார்களென்றார்.

## ௭. அதிகாரம்.

அப்பாலும் யூதேயா தேசத்துக்குத் தேவ ஆக்கினைகள் முன்னறிவிக்கப்பட்டது.

பின்னியுங் கர்த்தருடைய வார்த்தை யெனக்குண்டாகி, அவர் சொன்னதாவது:

௨. மனுப்புத்திரனே, இஸ்ருவேல் தேசத்தைக் குறித்துக் கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதேதென்றால், முடிவு வருகுது, தேசத்தினுடைய நாலு மூலைகளின் மேலும் முடிவே வருகுது.

௩. இப்போதுன் மேல் முடிவு வருகுது, நாம் நம்து கோபத்தை யுன் மேல் போகவிட்டு, உன் வழிகளுக்குத் தக்கதாக உன்னை நியாயந்தீர்த்து, உன்னுடைய எல்லா அருவருப்புகளின் பலனையும் உன் மேல் வரப்பண்ணுவோம்.

௪. * நம்து கண் உன்னைத் தப்பவிடாது, நாம் மன்னியாமலுன் வழிகளுக்குத் தக்கதை யுன் மேல் வரப்பண்ணுவோம், உன் அருவருப்புகளுக்குத் தக்கது உன் நடுவில் வந்திருக்கும், அப்படியே நாங் கர்த்தரென்றறிந்து கொள்ளுவீர்கள். * ௫: ௰௧. அ: ௰அ.

௫. கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது:

வது: தீங்குவருகுது, ஏகமான தீங்கு இதோ வருகுது.

௬. முடிவுவருகுது, முடிவுவருகுது, அது உனக்கு விரோதமாக முழிக்குது, இதோ வருகுது.

௭. தேசத்தில் குடியிருக்கிறவனே, அந்நாளின் விடியற்காலம் வருகுது, காலம் வருகுது அமளியின் நாள் சமீபித்திருக்குது, மலைகளில் கொக்கரிப்பில்லை.

௮. இப்போது கிட்டின காலத்திலே நம்முடைய உக்கிரத்தை யுன் மேலூற்றி, நம்முடைய கோபத்தையுன்னில் தீர்த்துக்கொண்டு, உன்னை யுன் வழிகளுக்குத்தக்கதாக நியாயந்தீர்த்து, உன்னுடைய எல்லா அருவருப்புகளின் பலனையும் உன் மேல் வரப்பண்ணுவோம்.

௯. நம்முடைய கண் உன்னைத் தப்பவிடாது, நாம் மன்னியாமல் உன் வழிகளுக்குத் தக்கதை யுன் மேல்வரப்பண்ணுவோம், உன் அருவருப்புகளுக்குத்தக்கது உன் நடுவில் வந்திருக்கும், அப்படியே அடிக்கிறவராகிய நாங் கர்த்தரென்றறிந்து கொள்ளுவீர்கள்.

௰. இதோ, அந்தநாள், இதோ வருகுது, அந்நாளின் விடியற்காலம் உதிக்குது, மிலாறு பூக்குது, அகந்தை செழிக்குது.

௰௧. ஆகாமியத்துக்கு மிலாறாகக் கொடுமை யெழும்புகுது, அவர்களிலும் அவர்களுடைய திரளான கும்பிலும் அவர்களுடைய அமளியிலும் ஒன்றும் மீதியாயிருப்பதில்லை, அவர்கள் நிமித்தியம் புலம்பலுண்டாயிருப்பதுமில்லை.

௰௨. அந்தக்காலம் வருகுது, அந்நாள் கிட்டுகுது, கொள்ளுகிறவன் சந்தோஷப்படாமலும் விற்கிறவன் துக்கப்படாமலுமிருப்பானாக, ஏனென்றால் அதினுடைய திரளான கும்பின் மேலெல்லாம் உக்கிரமிறங்கும்.

௰௩. ஏனெனில் அவர்கள் சீவனுள்ளோருக்குள்ளே இன்னமுயிரோடிருந்தாலும், விற்றவன் விற்கப்பட்டதுக்குத் திரும்பி வருவதில்லை, அதேனென்றால் அதினுடைய திரளான கும்பின் மேலெல்லாமுண்டான தெரிசனந் திரும்பாது, தன்னுடைய அக்கிரமத்திலே தன் சீவனை யனுபவிக்கிற ஒருத்தனுந் தன்னைத் திடப்படுத்தமாட்டான்.

௰௪. அவர்கள் எக்காளமூதி, எல்லாத்தையும் ஆயித்தம்பண்ணியும் யுத்தத்துக்குப் போகிறவனில்லை, ஏனெனில் நம்முடைய உக்கிரம் அதினுடைய திரளான கும்பின் மேலெல்லாமிறங்குது.

௰௫. வெளியே பட்டயமும், உள்ளே பெருவாரிக்காச்சலும் பஞ்சமுமுண்டு, வயல் வெளியிலிருக்கிறவன் பட்டயத்தால் சாவான், பட்டணத்திலிருக்கிறவனையோ பஞ்சமும் பெருவாரிக்காச்சலும் பட்சிக்கும்.

௰௬. அவர்களில் தப்புவர்கள் தப்புவார்கள், ஆனால் இவர்கள் அனைவரும் அவனவன் தன்தன் அக்கிரமத்தினிமித்தியந் துக்கித்துக் கூப்பிடுகிற பள்ளத்தாக்குகளின் * புறாக்களைப்போலே பருவதங்களிலிருப்பார்கள். *எசா. ௫௯: ௰௧.

௰௭. எல்லாக் கைகளுந் தளர்ந்து, எல்லா முழங்கால்களுந் தண்ணீரைப்போல் அலையுணகும்.

௰௮. இரட்டையுடுத்துக்கொள்ளுவார்கள், தத்தளிப்பு அவர்களை மூடும், எல்லா முகங்களையும் வெட்கமும் எல்லாத் தலைகளையும் மொட்டையிடுதலுமிருக்கும்.

௰௯. தங்கள் வெள்ளியைத் தெருக்களிலே யெறிந்துவிடுவார்கள், அவர்களுடைய பொன் வேண்டாவெறுப்பாக விருக்கும், *கர்த்தருடைய சினத்தின் நாளிலே அவர்கள் வெள்ளியும் அவர்கள் பொன்னும் அவர்களை விடுவிக்கக்கூடாது. அவர்கள் அதினால் தங்கள் ஆத்துமத்தைத் திருத்தியாக்குவதுமில்லை, தங்கள் குடல்களை நிரப்புவதுமில்லை, ஏனென்றால் அது அவர்கள் அக்கிரமத்துக்கான இடறலாயிருந்தது. * வாக்கி. ௰௧: ௪. எசாயா. ௨: ௨௰. செப்னி. ௧: ௰௮.

௨௰. அவருடைய சிங்காரத்தின் மகிமையை அகந்தைக்கென்று வைத்தது, அதிலே அருவருக்கப்படத்தக்கதும் சீயென்னப்படத்தக்கதுமான காரியங்களின் சுரூபங்களையுண்டுபண்ணினார்கள், ஆகையால் நாம் அதுகளையவர்களுக்கு வேண்டாவெறுப்பாக்கி,

௨௰௧. அதையன்னியர்கையிலே கொள்ளையாகவும், பூமியில் ஆகாதவர்களுக்குச் சூறையாகவுங் கொடுப்போம், இவர்கள் அதின் பரிசுத்தத்தைக் குலைப்பார்கள்.

௨௰௨. * நம்முடைய முகத்தை யவர்களை விட்டுத் திருப்பிப்போடுவோம், ஆனதுகொண்டு நம்முடைய அந்தரங்கஸ்தலத்தைப் பரிசுத்தக்குலைச்சலாக்குவார்கள், பறிகாறர் அதுகளுள் பிரவேசித்து அதின் பரிசுத்தத்தைக் குலைப்பார்கள்.

* ௫. மோசே. ௯௨: ௨௰.

௨௰௩. ஒருசங்கிலியைப்பண்ணிவை, ஏனென்றால்

ருல் தேசம் நியாயத்தீர்ப்புக்குள்ளான இரத்தப்பழிகளால் நிறைந்திருக்குது, பட்டணங் கொடுமையாலே நிறைந்திருக்குது.

௨௪. ஆகையால் புறச்சாதிகளில் பொல்லாதவர்களை வரப்பண்ணுவோம், இவர்கள் அவர்களுடைய வீடுகளைச் சுதந்தரித்துக்கொள்ளுவார்கள், பெலவான்களின் பெருமையை ஓயப்பண்ணுவோம், அவர்கள் பரிசுத்தமாக்கிறவர்களின் பரிசுத்தங் குலைக்கப்படும்.

௨௫. சங்காரம் வருகுது, அப்போது சமாதானத்தைத் தேடுவார்கள், ஆனால் இல்லாதிருக்கும்.

௨௬. விக்கினத்தின் மேல் விக்கினம் வரும், துற்செய்தியின் மேல் துற்செய்தி பிறக்கும், அப்போது தீர்க்கதரிசியினிடத்திலே தெரிசனத்தைத் தேடுவார்கள், ஆனால் ஆசாரியனிடத்திலே வேதமும் மூப்பர்களிடத்திலே ஆலோசனையுமிராமல் அழிந்திருக்கும்.

௨௭. இராசா துக்கித்துக்கொண்டிருப்பான், பிரபு திகைப்பைத் தரித்துக்கொண்டிருப்பான், தேசத்துச் சனத்தின் கைகள் கலங்கியிருக்கும், நாம் அவர்கள் வழிகளின்படியே அவர்களுக்குச் செய்து, அவர்கள் நியாயங்களின்படியே அவர்களை நியாயந்தீர்ப்போம், அப்படியே நான் கர்த்தரென்றறிந்துகொள்ளுவார்களென்றார்.

## ௮. அதிகாரம்.

யெருசலேம் தேவாலயத்தில் நடக்கும் அருவருப்பான விக்கிரக ஆராதனை எசேக்கியேலுக்கு ஒரு தெரிசனையிலே காண்பிக்கப்பட்டது.

ஆறும் வருஷத்து ஆறும் மாதம் ஐந்தாந்தேதியிலே சம்பவித்ததென்றால், நான் என் வீட்டில் உட்கார்ந்திருக்கிறபோதும், யூதாவின் மூப்பர்கள் என் முன்பாக உட்கார்ந்திருக்கிறபோதும், கர்த்தராகிய ஆண்டவருடைய கை அங்கே என்மேல் வந்தது.

௨. அப்போது இதோ, அக்கினி ரூபின் சாயலானவரைக் கண்டேன், அவருடைய இடுப்பின் ரூபைத் துவக்கிக் கீழெல்லாம் அக்கினியும், அவருடைய இடுப்பைத் துவக்கி மேலெல்லாம் சொக்குசாவைப் போலொத்த மினுக்கின் ரூபுமாயிருந்தது.

௩. அவரொரு கைக்குச் சாயலானதை நீட்டி, என்னை என் தலையின் மயிர்களைப் பிடித்துத் தூக்கினார், ஆவி என்னைப் பூமிக்கும் வானத்துக்கும் நடுவாகக் கொண்டுபோய், தேவ தெரிசனைகளில் என்னை யெருசலேமிலே வடதிசைக்கெதிரான உள்வாசலின் நடையிலே விட்டார். அங்கே எரிச்சலுண்டாக்கிற விக்கிரகச்சுரூபத்தின் இருப்பிடம்.

௪. இதோ, * நான் பள்ளத்தாக்கிலே கண்டிருந்த தெரிசனைக்கொப்பாக இஸ்ரவேலுடைய பராபரனின் மகிமை அங்கேயிருந்தது. * ௩:௨௩.

௫. அவர் என்னுடனே: மனுஷபுத்திரனே, உன் கண்களை ஏறெடுத்து வடக்கே பாரென்றார். அப்போது என் கண்களை ஏறெடுத்து வடக்கே பார்த்தேன், இதோ, பலிபீடத்தின் வாசலுக்கு வடக்கே பார்த்தேன் நடையிலே எரிச்சலுண்டாக்கிற அந்தச் சுரூபமுமிருந்தது.

௬. அவர் என்னுடனே சொன்னதாவது: மனுஷபுத்திரனே, அவர்களென்ன செய்கிறார்களென்கிறதை நீ காண்கிறாயோ? நம்மை நம்முடைய பரிசுத்தஸ்தலத்தை விட்டுத் தூரமாய்ப் போகப்பண்ண இஸ்ரவேல் வீட்டாரிங்கே செய்கிற பெரிய அருவருப்புகளையல்லவோ காண்கிறாய்? ஆனால் இன்னம் பெரிய அருவருப்புகளைத் திரும்பவுங் காண்பாயென்று சொல்லி,

௭. என்னை முற்றத்தின் வாசலுக்குக் கொண்டுபோனார். அப்போது இதோ, சுவரில் ஒரு துவாரத்தைக் கண்டேன்.

௮. அவர் என்னுடனே: மனுஷபுத்திரனே, நீ துவாரமிடென்றார், நான் சுவரிலே துவாரமிடுகிறபோது, இதோ, ஒரு திறப்பாயிச்சுது.

௯. அவர் என்னுடனே: நீ உட்பிரவேசித்து அவர்களிங்கே செய்கிற பொல்லாத அருவருப்புகளைப் பாரென்றார்.

௰. நான் உட்பிரவேசித்தபோது, இதோ, சகலவித ஊர்வனங்களும் அருவருப்பான மிருகங்களுமான பட்டச்சுரூபங்களும், இஸ்ரவேல் வீட்டாருடைய நரகலான எல்லா தேவர்களும் சுவரில் சுற்றிலுஞ் சித்திரந்தீரப்பட்டிருந்தது.

௰௧. இஸ்ரவேல் வீட்டாரின் மூப்பரில் எழுபது பேரும், அவர்களின் நடுவிலே சாப்பானுடைய குமாரனாகிய யாசனியாவும் அவனவன் தன்தன் கையிலே தன் தூபக்கலசத்தைப் பிடித்துக்கொண்டு அதுகளுக்கு முன்பாக நின்றார்கள், தூபவர்க்கத்தினால் மிகுந்த புகைக்காடெழும்பிற்றுதென்று கண்டேன்.

௰௨. அப்பொழுது அவர் என்னுடனே சொன்னதாவது: மனுஷபுத்திரனே, இஸ்ரவேல் வீட்டாரின் மூப்பர்கள் இருளிலே அவரவர் தங்கள் சுரூபங்களின் அறைகளில் செய்கிறதைக் கண்டாயோ? எனனில் * கர்த்தர் எங்களைப் பார்க்கிறதில்லை, கர்த்தர் தேசத்தைக் கைவிட்டார் என்கிறார்கள்.

* ௯: ௯.

௰௩. இன்னம் அவர்கள் செய்கிற பெரிய அருவருப்புகளைத் திரும்பவுங் காண்பாயென்று அவர் என்னுடனே சொல்லி,

௰௪. என்னைக் கர்த்தருடைய வீட்டின் வடக்கேயிருக்கிற வாசலின் நடையிலே கொண்டுபோனார், இதோ, அங்கே தம்மூசுக்காக அழுதுகொண்டிருக்கிற ஸ்திரீகள் உட்கார்ந்திருந்தார்கள்.

௰௫. அப்பொழுதவர்: மனுஷபுத்திரனே, இதைக் கண்டாயோ? இன்னமிதுகளிலும் பெரிய அருவருப்புகளைத் திரும்பவுங் காண்பாயென்றென்னுடனே சொல்லி,

௰௬. என்னைக் கர்த்தருடைய வீட்டின் உள்முற்றத்திலே கொண்டுபோனார், இதோ, கர்த்தருடைய தேவாலயத்தின் வாசல் நடையிலே மண்டபத்துக்கும் பீடத்துக்கும் நடுவே ஏறக்குறைய இருபத்தைந்துபுருஷர், * தங்கள் பிற்புறங்களைக் கர்த்தருடைய தேவாலயத்துக்கும் தங்கள் முகங்களைக் கிழக்குக்கும் திருப்பினவர்களாயிருந்தார்கள், அவர்கள் கிழக்கேயிருக்கும் சூரியனைப் பணிந்துகொண்டார்கள். * ௨. நாளாக. ௨௯: ௬.

௰௭. அப்பொழுது அவர் என்னுடனே சொன்னதாவது: மனுஷபுத்திரனே, இதைக் கண்டாயோ? இங்கே தாங்கள் செய்கிற அருவருப்புகளைச் செய்கிறது இஸ்ரவேல் வீட்டாருக்கு லேசான காரியமோ? அவர்கள் தேசத்தைக் கொடுமையினாலே நிரப்பி என்னைப் பின்னுங் கோபமூட்டுகிறார்கள், இதோ, அவர்கள் திராட்சக்கொடியைத் தங்கள் நாசியண்டைக்குச் சேர்க்கிறார்கள்.

௰௮. ஆகையால் நானும் உக்கிரத்தோடே காரியம் நடத்துவேன், என்னுடைய கண் தப்பவிடுவதில்லை, நான் மன்னிப்பதுமில்லை, அவர்கள் மகா சத்தமாய் என்னுடைய செவிகளில் கூப்பிட்டாலும், அவர்களை நான் கேட்பதில்லையென்றார்.

## ௯. அதிகாரம்.

பாபரான தேவாலயத்திலும், பட்டணத்திலும் யூதனாசசங்காரம் பண்ணிவிக்குந்தெரிசனம் எசேக்கியேலுக்குக் காண்பிக்கப்பட்டது.

பின்பு அவர் என்காதுகள் கேட்க மகாசத்தத்தோடே: பட்டணத்தின் விசாரிப்புக்காரர் அவரவர் கெடுக்கிறதுக்கான தங்கள் ஆயுதங்களைத் தங்கள் கைகளில் பிடித்துச் சேரட்டுமென்று கூப்பிட்டார்.

௨. அப்பொழுது இதோ, ஆறுபுருஷர், அவரவர் வெட்டுகிறதுக்கான தங்கள் ஆயுதங்களைத் தங்கள் கைகளில் பிடித்து, வடக்குக்கெதிரான வாசலின் வழியிலிருந்து வந்தார்கள், அவர்களுக்குள்ளே வெள்ளைப்புடவை வஸ்திரங்களைத் தரித்து, தன் அரையிலே எழுத்தாணிக்கூட்டைச் சொருகிக்கொண்டிருக்கிற ஒருத்தனிருந்தான். அவர்கள் உள்ளே பிரவேசித்து, வெண்கலப்பீடத்தண்டையிலே நின்றார்கள்.

௩. அப்பொழுது இஸ்ரவேலுடைய தேவனின் மகிமை கேருபீனின் மேலிருந்தெழும்பி, வீட்டின் வாசற்படியிலே வந்து வெள்ளைப்புடவை வஸ்திரங்களைத் தரித்தவனாகத் தன் அரையிலே கணக்கனின் எழுத்தாணிக்கூட்டைச் சொருகிக்கொண்டிருக்கிறவனுமான புருஷனைக் கூப்பிட்டு,

௪. அவனுடனே கர்த்தர் சொன்னதாவது: நீ யெருசலேமின் நடுப்பட்டணத்தை உருவப்போய், அதுக்குள்ளே செய்யப்படுகிற சகல அருவருப்புகளின் நிமித்தியம் பெருமூச்சு விட்டழுகிற மனுஷரின் நெற்றிகளில் * அடையாளம் போடென்றார். * ௨. மோசே. ௰௨: ௰௩. அறிவி. ௭: ௨. ௩.

௫. அவர்களோடே வெனில் அவர் என்காதுகள் கேட்கச் சொன்னதாவது: நீங்கள் இவன் பிறகாலே பட்டணத்தை உருவப்போய் வெட்டுங்கோள், உங்கள் கண் * தப்பவிடாமலும், நீங்கள் மன்னியாமலும், * அ: ௰அ.

௬. முதிர்ந்தவயதுள்ளவனையும் வாலிபனையும் கன்னியாஸ்திரிகளையுங் குழந்தைகளையும் ஸ்திரிகளையுஞ் சங்கரித்துக் கொன்றுபோட்டு, அடையாளம் போட்டிருக்கிற ஒருத்தனையும் மோதிடாதிருந்து * நம்முடைய பரிசுத்தஸ்தலத்தி

லத்திலே துவக்குங்கோளென்றார், அப்போது அவர்கள் வீட்டின் முன்னேயிருந்த முதிர்ந்த வயதுள்ள மனுஷரிடத்திலே துவக்கம்பண்ணினார்கள். * க. பேதுரு. ௪: ௰௭.

௭. அவர் இவர்களுடனே: நீங்கள் வீட்டைத் தீட்டுப்படுத்தி, முற்றங்களைக் கொலையுண்டவர்களால் நிரப்பி, புறப்படுங்கோளென்றார்; அவர்கள் புறப்பட்டுப் பட்டணத்திலே வெட்டினார்கள்.

௮. அப்போது சம்பவித்ததேதென்றால், அவர்கள் வெட்டித்தீருகையில், நானே மீதியானவன், அப்போது நான் * முகங்குப்புற விழுந்து: ஆ, கர்த்தராகிய ஆண்டவரே! தேவரீர் யெருசலேமின் மேல் உமது உக்கிரத்தை ஊற்றுகையில், இஸ்ரவேலில் மீதியானவர்களையெல்லாம் அழிப்பீரோ வென்றுகூப்பிட்டேன். * ௰௧: ௰௩.

௯. அவரென்னுடனே சொன்னதாவது: இஸ்ரவேலும் யூதாவுமாகிய வீட்டாரின் அக்கிரமம் மிகுதியும் பெரிதானது, தேசம் இரத்தப்பழிகளினாலும் நிறைந்திருக்குது, எப்படியெனில்: * கர்த்தர் தேசத்தைக் கைவிட்டார், கர்த்தர் பார்க்கிறதில்லையென்றார்கள். * அ: ௰௨.

௰. ஆகையால் நம்முடைய கண் தப்பவிடுவதுமில்லை நாம் மன்னிப்பதுமில்லை, அவர்களுடைய வழியை யவர்கள் சிரசின்மேல் இறங்கப் பண்ணுவோமென்றார்.

௰௧. இதோ, வெள்ளைப்பிடவை வஸ்திரங்களைத் தரித்து, தன் அரையில் எழுத்தாணிக்கூட்டைச் சொருகிக்கொண்டிருக்கிற புருஷன்: நீர் எனக்குக் கற்பித்ததின்படியே செய்தேனென்று மறுசெய்திகொண்டுவந்தான்.

௰. அதிகாரம்.

கேருபீன்களென்ற மகிமையான வாகனத்தையும், யெருசலேமின் மேல் அக்கினித்தணலிறைக்கப்படுவதையுங் குறித்து எசேக்கியேல் கண்ட தெரிசனம்.

இதோ, கேருபீன்களுடைய தலையின் மேலிருந்த மண்டலத்தில் * நீலக்கல்லுக்கொப்பாய் இராசாசனசாயலான ரூபமிருந்ததென்று கண்டேன், அது அதுகளின் மேல் காணப்பட்டது. * க: ௨௬.

௨. அவர் வெள்ளைப்பிடவை வஸ்திரங்களைத் தரித்துக்கொண்டிருந்த புருஷனோடே சொன்னதாவது: நீ கேருபீனின் கீழிருக்கிற உருளைகளின் நடுவில் பிரவேசித்து, கேருபீன்களின் நடுவேயிருக்கிற அக்கினித்தணலினால் உன் கைப்பிடிகளை நிரப்பி, அதைப் பட்டணத்தின் மேலிறையென்றார், அப்படியே என் கண்களுக்காண உள் பிரவேசித்தான்.

௩. அந்தப் புருஷன் உள் பிரவேசிக்கையில், கேருபீன்கள் வீட்டின் வலதுபுறத்திலே நின்றது, ஒரு மேகம் உள் முற்றத்தை நிரப்பிற்று.

௪. * கர்த்தருடைய மகிமை கேருபீனின் மேலிருந்தெழும்பி, வீட்டின் வாசற்படியிலே வந்தது, ** வீடு மேகத்தினாலே நிரம்பிற்று, முற்றமுங் கர்த்தருடைய மகிமையின் பிரகாசத்தினால் நிரம்பிற்று. * ௯: ௩. ** ஏசாயா. ௬: ௪.

௫. கேருபீன்களுடைய செட்டைகளின் இரைச்சல் முற்றமட்டும், சர்வவல்லமையுள்ள தேவன் பேசுகையிலிருக்கிற சத்தமாகக் கேட்கப்பட்டது.

௬. சம்பவித்ததேதென்றால், அவர் வெள்ளைப்பிடவை வஸ்திரங்களைத் தரித்துக்கொண்ட புருஷனுக்கு நீ கேருபீன்களுக்குள்ளிருக்கிற உருளைகளின் நடுவிலே அக்கினியை வாங்கென்று கற்பிக்கையில், அவன் உள் பிரவேசித்து உருளைகளண்டையிலே நின்றான்.

௭. அப்போது கேருபீன்களுக்குள்ளே ஒரு கேருபீன் தன் கையைக் கேருபீன்களின் நடுவிலிருக்கிற அக்கினியண்டைக்கு நீட்டி, எடுத்து, வெள்ளைப்பிடவை வஸ்திரங்களைத் தரித்துக்கொண்ட புருஷனுடைய கைப்பிடிகளில் கொடுத்தான், இவன் அதை வாங்கிப் புறப்பட்டான்.

௮. கேருபீன்களிலே அதுகளுடைய செட்டைகளின் கீழ் மனுஷர் கையின் சாயலானது காணப்பட்டது.

௯. இதோ, கேருபீன்களண்டையில் நாலு உருளைகளிருக்கிறதைக் கண்டேன், ஒவ்வொரு கேருபீனண்டையில் ஒவ்வொரு உருளையிருந்தது, * உருளைகளின் ரூபு தர்சீஸ் இரத்தினத்தின் வருணத்தைப்போலானது. * க: ௰௬.

௰. அதுகள் நாலுக்கும் ஒரே விதச்சாயலிருந்தது, உருளையின் நடுவில் உருளையிருக்குமாப்போலே காணப்பட்டது.

௰௧. அதுகள் ஓடுகையில் தங்கள் நாலுபக்கங்களிலும் ஓடும், ஓடுகையில் அதுகள் திரும்பிக்கொண்டதில்லை, தலை நோக்கும் இடத்துக்கே அது

அதுகள் அதின் பிறகாலேயோடிற்று, ஓடுகையில் அதுகள் திரும்பிக்கொண்டதில்லை.

௰௨. *அதுகளின் சரீரமனைத்தும், அதுகளின் முதுகுகளும், அதுகளின் கைகளும், அதுகளின் செட்டைகளும், ** அந்த உருளைகளும் சுற்றிலுங் கண்களினாலே நிறைந்திருந்தது, அதுகள் நாலுக்குமிருந்த உருளைகளும் அப்படியேதானே.

* அதி. ௧: ௧௮. ** ௧: ௰௫. ௰௮.

௰௩. அந்த உருளைகளெனக் காதுகள் கேள்க்க, சுழல்கால் என்றழைக்கப்பட்டது.

௰௪. *ஒவ்வொன்றுக்கு நாலுமுகங்களிருந்தது, முதலாம் முகம் கேருபீனின் முகமும், இரண்டாம் முகம் மனுஷர் முகமும், மூன்றாவது சிங்க முகமும், நாலாவது கழுகு முகமுமானது.

* ௧: ௬.

௰௫. கேருபீன்கள் எழும்பிற்று, இதுதான் * கேபார் நதியண்டையிலே கண்டிருந்த அந்தச் சீவன் தானே. * ௧: ௩.

௰௬. கேருபீன்கள் நடக்கையில், உருளைகள் அதுகளருகேயோடிற்று, பூமியிலிருந்தெழும்ப கேருபீன்கள் தங்கள் செட்டைகளை விரிக்கையில், உருளைகளும் அதுகளை விட்டுத் திரும்பினதில்லை.

௰௭. அதுகள் நிற்கையில் இதுகள் நின்றது, அதுகள் எழும்புகையில் இதுகளெழும்பிற்று, என்றால் சீவனுள்ள ஆவி இதுகளிலிருந்தது.

௰௮. கர்த்தருடைய மகிமை வீட்டின் வாசற்ப்படியை விட்டுப் புறப்பட்டு, கேருபீன்களின் மேலே நின்றது.

௰௯. அப்போது கேருபீன்கள் தங்கள் செட்டைகளை விரித்து, என் கண்கள் காணப் பூமியை விட்டெழும்பிற்று, அதுகள் புறப்படுகையில், உருளைகளும் அதுகளுக்குச் சரியாய்ப் புறப்பட்டது, கர்த்தருடைய வீட்டின் கிழக்கான ஒலிமுகவாசலிலே வந்து நின்றது, இஸ்ரவேல் தேவனுடைய பராபரனின் மகிமையானது அதுகளின் மேலிருந்தது.

௨௰. இதுதான் * கேபார் நதியண்டையிலே இஸ்ரவேலுடைய பராபரனின் கீழிருக்கக் கண்ட அந்தச் சீவன் தானே, அதுகள் கேருபீன்களென்றறிந்து கொண்டேன். * ௧: ௩.

௨௧. அதுகளில் ஒவ்வொன்றுக்கு நாலு முகமும், ஒவ்வொன்றுக்கு நாலு செட்டைகளுமிருந்தது. அதுகளுடைய செட்டைகளின் கீழ் மனுஷக் கைகளின் சாயலிருந்தது.

௨௨. அதுகளுடைய முகங்களின் சாயல் நான் கேபார் நதியண்டையிலே கண்டிருந்த அந்த முகங்கள் தானே, ஒவ்வொன்றும் தன்தன் முகத்துக்கு நேரான திக்குக்கு நேர்கொண்டு நடந்தது.

## ௰௧. அதிகாரம்.

*ஆகாதவர்களின் மேல் வருங் கோபாக்கினைகள் அறிவிக்கப்பட்டதும், சிறைப்பட்டுப் போனவர்களுக்குக் கிருபையுள்ள வாக்குத்தத்தம் பண்ணப்பட்டதும்.*

பிற்பாடு ஆவியானவர் என்னை எடுத்து, என்னைக் கர்த்தருடைய வீட்டில் கிழக்குக்கு நேரான கீழ்வாசலுக்குக் கொண்டுபோனார்; இதோ, அந்த வாசலின் நடையிலிருபத்தைந்து புருஷரிருந்தார்கள், *அவர்களின் நடுவே சனத்தின் பிரபுக்களாகிய அசூரின் குமாரனாகிய யாசனியாவையும், பெனாயாவின் குமாரனாகிய பெலத்தியாவையுங் கண்டேன்.

௨. அப்போதவர் என்னோடே சொன்னதாவது: மனுஷபுத்திரனே, இவர்களிந்தப் பட்டணத்திலே அக்கிரமம் நினைவாயிருந்து பொல்லாத யோசனையை யோசிக்கிறானுஷர்.

௩. இதின் வீடுகளைக் கட்டினது கொஞ்சக் காலமல்லவென்றும், இது பானை, நாங்கள் அதிலுள்ள இறைச்சியென்றுஞ் சொல்லுகிறார்கள்.

௪. ஆகையால் அவர்களுக்கு விரோதமாய்த் தீர்க்கதரிசனஞ்சொல்லு, மனுஷபுத்திரனே தீர்க்கதரிசனஞ்சொல்லென்றார்.

௫. அப்போது கர்த்தருடைய ஆவியென்மேலிறங்கி, அவர் என்னோடே சொன்னதாவது: நீ சொல்லவேண்டியதேதெனில் இஸ்ரவேல் வீட்டாரே, இப்படிப்பேசுகிறீர்கள், உங்கள் ஆவியிலெழும்புகிறதோ, அதை நாம் அறிவோம்.

௬. இந்தப் பட்டணத்தில் உங்களால் கொலையுண்டவர்களை அனேகமாக்கினீர்கள், அதின் வீதிகளைக் கொலையுண்டவர்களாலே நிரப்பினீர்களென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௭. ஆகையால் நீங்கள் கொலைசெய்து அதின் நடுவிலே போட்டுவிட்டவர்களே, இறைச்சியும் அது பானையுந்தானே, உங்களையோ அதின் நடுவிலிராதபடிக்குப் புறம்பாக்குவோமென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.

௮. பட்டயத்துக்குப் பயப்பட்டீர்கள், பட்டை

உடையத்தைப் உங்கள்மேல் வரப்பண்ணுவோமென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.

௯. நாம் உங்களை அதற்குள்ளிராதபடிக்குப் புறம்பாக்கி, உங்களை அன்னியரின் கையிலொப்புக்கொடுத்து, உங்களில் நியாயத்தீர்ப்புகளைச் செய்வோம்.

௰. பட்டயத்தால் விழுவீர்கள் இஸ்ரவேல் தேசத்தின் எல்லையிலே * உங்களை நியாயந்தீர்ப்போம், அப்போது நான் கர்த்தரென்றறிந்து கொள்ளுவீர்கள். * ௭: ௨௭.

௰௧. இது உங்களுக்குப் பானையாயிருப்பதுமில்லை, நீங்கள் அதிலுள்ள இறைச்சியாயிருப்பதுமில்லை, இஸ்ரவேல் தேசத்தின் எல்லையிலே உங்களை நியாயந்தீர்ப்போம்.

௰௨. அப்போது நான் கர்த்தரென்றறிந்துகொள்ளுவீர்கள், ஏனெனில் நீங்கள் நம்முடைய கட்டளைகளில் நடவாமலும், நம்முடைய நியாயங்களின்படி செய்யாமலும், உங்களைச் சுற்றிலுமிருக்கிற புறச்சாதிகளுடைய நியாயங்களின்படி செய்தீர்களென்று சொல்லென்றார்.

௰௩. சம்பவித்ததேதென்றால், நானிப்படித் தீர்க்கதரிசனஞ் சொல்லுகையில் பெனாயாவின் குமாரனாகிய பெலத்தியா செத்தான், அப்போது நான் முகங்குப்புற விழுந்து, மகா சத்தமாய்: * ஆ கர்த்தராகிய ஆண்டவரே! தேவரீர் இஸ்ரவேலின் மீதியானதைச் சருவசங்காரஞ்செய்வீரோவென்று கூப்பிட்டேன். * ௯: அதி. ௮.

௰௪. அப்போது கர்த்தருடைய வார்த்தையெனக்கு உண்டாகி, அவர் சொன்னதாவது:

௰௫. மனுப்புத்திரனே: கர்த்தரைவிட்டுத் தூரமாய்ப் போங்கோள், எங்களுக்கிந்தத் தேசஞ் சுதந்தரமாகக் கொடுக்கப்பட்டதென்று எருசலேமின் குடிகள் எவரைக் குறித்துச் சொல்லுகிறவர்கள் உன்னுடைய சகோதரர். உன் சகோதரரையும் உன் பந்துசனங்களையும் இஸ்ரவேல் வீட்டாரனைவரையும் ஏகமாகக் குறித்து அப்படிச் சொல்லுகிறார்கள்.

௰௬. ஆகையால் நாம் அவர்களைத் தூரமாகப் புறச்சாதிகளுக்குள்ளே துரத்தியிருந்தாலும், நாம் அவர்களைத் தேசங்களிலே சிதறவடித்திருந்தாலும், நாங்கொஞ்சத்துக்குள்ளே * அவர்களுக்கு அவர்கள் போன தேசங்களில் பரிசுத்தஸ்தலமாக விருப்போமென்கிறதைக் கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறாரென்று சொல்லு. * யெரே. ௨௪: ௫.

௰௭. ஆனதுகொண்டு: நாமுங்களை * ச்சனங்களிடத்திலிருந்து சேர்த்து, உங்களை நீங்கள் சிதறவடிக்கப்பட்ட தேசங்களிலிருந்து கூட்டிக்கொண்டு, இஸ்ரவேல் சீமையையுங்களுக்குக் கொடுப்போமென்கிறதைக் கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறாரென்று சொல்லு.

யெரேமி. ௨௩: ௩.

௰௮. அவர்கள் அங்கே வந்து, அதிலுள்ள சீயென்னப்பட்டதைக்கதும் அருவருக்கப்பட்டதைக்கதுமாயிருக்கிறதையெல்லாம் அதிலிருந்தகற்றுவார்கள்.

௰௯. அவர்கள் நம்முடைய கட்டளைகளில் நடந்து, நம்முடைய நியாயங்களைக் கைக்கொண்டு, அதுகளின்படி செய்யும்படிக்கு நாம் * அவர்களுக்கு ஒருமனப்பட்ட இருதயத்தைத் தந்து, அவர்கள் உள்ளத்தில் புதிதான ஆவியைக் கொடுத்து, கல்லான இருதயத்தை அவர்கள் மாங்கிஷத்திலிருந்தெடுத்துப்போட்டு, சதையான இருதயத்தையவர்களுக்குக் கொடுப்போம். * ௩௬: ௨௬. ௨௭.

யெரேமி. ௩௨: ௩௯.

௨௰. அவர்கள் நம்முடைய சனமாகவிருப்பார்கள், நாம் அவர்களுக்குப் பராபரனுமாகவிருப்போம். * ௩௬: ௨௮. யெரேமி. ௩௨: ௩௮.

௨௧. ஆனால் எவர்களுடைய இருதயஞ் சீயென்னப்பட்டதைக்கதும், அருவருக்கப்பட்டதைக்கதுமான தங்கள் காரியங்களின் இச்சையிலே நடக்குமோ * அவர்களுடைய வழியை அவர்கள் தலைகளின்மேலே சுமரப்பண்ணுவோமென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறாரென்றார்.

* ௯: அதி. ௰. ௰௬: ௪௩.

௨௨. அப்போது கேருபீன்கள் தங்கள் செட்டைகளை விரித்தெழும்பிற்று, உருளைகளும் அதுகளுக்குப் போனது * இஸ்ரவேலுடைய பராபரனின் மகிமையும் அதுகளின்மீதிலிருந்தது.

* ௰: அதி. ௰௯.

௨௩. கர்த்தருடைய மகிமை பட்டணத்தின் நடுவிலிருந்தெழும்பி, பட்டணத்துக்குக் கிழக்கேயிருக்கிற மலையின்மேல் வந்து நின்றது.

௨௪. ஆனால் ஆவியானவர் என்னை யேற்றெடுத்து, என் பராபரனுடைய ஆவிக்குள்ளான தெரிசனையிலே கல்தேயாவுக்குச் சிறையிருப்பானவர்களண்டையிலே கொண்டுவந்து விட்டார், அப்போது நான் கண்ட தெரிசனை என்னிலிருந்தெடுபட்டுப் போனது.

௨௫. கர்த்தர் எனக்குக் காண்பித்த அவருடைய வார்த்தைகளையெல்லாஞ் சிறையிருப்பானவர்களுக்குச் சொன்னேன்.

## ௰௨. அதிகாரம்.

செதேக்கியா இராசாவுக்கும் மற்ற யூதர்களுக்கும் வருமாக்கினையிரண்டடையாளங்களால் நிழலாட்டமாய்க் காண்பிக்கப்பட்டது.

கர்த்தருடைய வார்த்தை என்னக்குண்டாகி, அவர் சொன்னதாவது:

௨. மனுஷபுத்திரனே, நீ கலகவீட்டாரின் நடுவிலே தங்கியிருக்கிறாய் * காணும்படிக்கு அவர்களுக்குக் கண்களிருந்தாலுங் காணாதே போகிறார்கள், கேள்க்கும்படிக்கு அவர்களுக்குக் காதுகளிருந்தாலுங் கேளாதே போகிறார்கள், ஏனெனில் அவர்கள் கலகவீட்டார். * எசாயா. ௬: ௯. ௰. யெரோமியா. ௫: ௨௧.

௩. இப்போதும், மனுஷபுத்திரனே, பரதேசம் போகும் பயணமூட்டுகளை நீயுனக்காயத்தமாக்கி, பகல்க்காலத்திலே அவர்கள் கண்களுக்கு முன்பாகப் புறப்படு, உன் தலத்தைவிட்டு வேறே தலத்துக்கு அவர்களுடைய கண்களுக்கு முன்பாகப் புறப்பட்டுப் போவாயாக, தாங்கள் கலகவீட்டாரென்று * ஒருவேளை கண்டுணர்வார்கள்.

* யெரோமி. ௨௬: ௩. ௩௬: அதி. ௩.

௪. பரதேசம் போகும் பயணமூட்டுகளாகவுன்னுடைய தட்டுமுட்டுகளை நீ பகல்க்காலத்திலே அவர்கள் கண்களுக்கு முன்பாக வெளியே வைத்து, நீயோவென்றால் சாயுங்காலத்திலே அவர்கள் கண்களுக்கு முன்பாகப் பரதேசம் போகிறவனைப்போலப் புறப்படுவாயாக.

௫. அவர்களுடைய கண்களுக்கு முன்பாகச் சுவரிலே துவாரமிட்டு, அதுவழியாய் அதுகளை வெளியே கொண்டுபோவாயாக.

௬. அவர்களுடைய கண்களுக்கு முன்பாக அதுகளை உன் தோளின் மேலெடுத்து, இருட்டிலே வெளியே கொண்டுபோவாயாக, நீ தேசத்தைக் காணாதபடியாக உன் முகத்தை மூடிக்கொள்வாயாக, ஏனெனில் இஸ்ரவேல் வீட்டாருக்கு உன்னை * அற்புத அடையாளமாக்கினேனென்றார்.

* ௨௪: அதி. ௨௪.

௭. எனக்குக் கற்பிக்கப்பட்டபடியே நான் செய்தேன், பரதேசம் போகும் பயணமூட்டுகளாக என் தட்டுமுட்டுகளைப் பகல்க்காலத்திலே வெளியே வைத்தேன், சாயுங்காலத்திலோ கையினாலே சுவரிலே எனக்குத் துவாரமிட்டு, இருட்டிலே அதுகளை வெளியே கொண்டுபோய் அவர்கள் கண்களுக்கு முன்பாக அதுகளைத் தோளின் மேலெடுத்துக்கொண்டேன்.

௮. விடியுங்காலத்திலே கர்த்தருடைய வார்த்தை என்னக்குண்டாகி, அவர் சொன்னதாவது:

௯. மனுஷபுத்திரனே, கலகவீட்டாராகிய இஸ்ரவேல் வீட்டார் உன்னிடத்தில்: நீ செய்கிறதேதென்று சொல்லவில்லையோ?

௰. இது எருசலேமிலிருக்கிற அதிபதியின் மேலும் அதின் நடுவிலிருக்கிற இஸ்ரவேல் வீட்டார் அனைவரின் மேலுஞ் சுமருகிற தீர்க்கதெரிசனமென்கிறதாய்க் கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறாரென்றவர்களோடே சொல்லு.

௰௧. நீ சொல்லவேண்டியதேதெனில், நான் உங்கள் அற்புத அடையாளம் நானே செய்தபடியே அவர்களுக்குச் செய்யப்படும், பரதேசமாய்ச் சிறையிருப்பிலே போவார்கள்.

௰௨. அவர்கள் நடுவிலிருக்கிற அதிபதி * இருட்டிலே தோளின் மேலெடுத்துப் புறப்படுவான், வெளியே கொண்டுபோகச் சுவரிலே துவாரமிடுவார்கள், தேசத்தைத் தன் கண்ணினாலே காணாதபடியாக அவன் தன் முகத்தை மூடிக்கொள்ளுவான். * யெரோமி. ௩௯: ௪.

௰௩. அவன் நம்முடைய வேட்டைக்குள்ப் பிடிபடும்படிக்கு நாம் நம் துவலையை அவன் மேல் வீசி, அவனைக் கல்தேயர் தேசமாகிய பாபேலுக்குக் கொண்டுபோவோம். * * ஆகிலும் அதைக் காணாதிருப்பான், அங்கே தானே சாவான்.

* யெரோமி. ௩௯. ௫. * * யெரோ. ௩௬: ௭.

௰௪. அவனுக்கொத்தாசையாக அவனைச் சுற்றிலுமிருக்கிறயாவரையும் அவனுடைய எல்லாச் சேனைகளையும் நாலுக்கல்காற்றுத் திசைகளிலுந் தூற்றி, அவர்களின் பிறகாலே பட்டயத்தை உருவுவோம்.

௰௫. அப்படி நாம் அவர்களைச் சாதிகளுக்குள்ளே தூற்றி, அவர்களைத் தேசங்களிலே சிதறவடிக்கையில், அப்போது நாங் கர்த்தரென்றறிந்துகொள்ளுவார்கள்.

௰௬. ஆனால் தாங்கள் வந்துசேருஞ் சாதிகளுக்குள்ளே தங்கள் அருவருப்புகளையெல்லாம் விவரிக்கும்படிக்கு, நாம் அவர்களில் * கொஞ்சப்பேரைப் பஞ்சத்துக்கும் பட்டயத்துக்கும் பெருவாரிக் காய்ச்சலுக்குந் தப்பி மீந்திருக்கப்பண்ணுவோம், அப்போது நாங் கர்த்தரென்றறிந்துகொள்ளுவார்களென்று சொல்லென்றார்.

* ௫: அதி. ௰௨.

௰௭. பின்னையுங் கர்த்தருடைய வார்த்தை யெனக்குண்டாகி, அவர் சொன்னதாவது:

௰௮. மனுஷபுத்திரனே, நீயுன் அப்பத்தை அதிர்ச்சியோடே புசித்து, உன் தண்ணீரைத் தத்தளிப்போடும் விசாரத்தோடுங் குடித்து,

௰௯. தேசத்திலுள்ள சனத்தோடே சொல்லவேண்டியதாவது: இஸ்ரவேல் தேசத்திலுள்ள யெருசலேமின் குடிகளைக் குறித்துக் கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது: தங்கள் அப்பத்தை விசாரத்தோடே புசித்துத் தங்கள் தண்ணீரைத் திகிலோடே குடிப்பார்கள், ஏனென்றால் அவர்களுடைய தேசத்துக் குடிகளுடைய கொடுமைகளின் நிமித்தியம் அதின் நிறைவழிந்து, அது பாழாகும்.

௨௰. குடியேறியிருக்கிற பட்டணங்கள் வனாந்தரங்களாகி, தேசம் பாழாய்ப்போம், அப்படியே நான் கர்த்தரென்றறிந்து கொள்ளுவீர்களென்று சொல்லென்றார்.

தீர்க்கதெரிசனத்தைச் சட்டைபண்ணாதவர்களைக் கண்டித்தது.

௨௧. பின்னையுங் கர்த்தருடைய வார்த்தை யெனக்குண்டாகி, அவர் சொன்னதாவது:

௨௨. மனுஷபுத்திரனே: * நாட்கள் நீடிக்கும், தெரிசனமெல்லாம் அழியுமென்கிற இஸ்ரவேல் தேசத்திலே உங்களுக்கிருக்கிற பழமொழியென்ன? ௨. பேதுரு. ௩: ௩. ௪.

௨௩. ஆகையால் நீயவர்களோடே சொல்லவேண்டியதாவது: கர்த்தராகிய ஆண்டவருரைக்கிறதேதெனில், அவர்கள் இனி இஸ்ரவேலிலே யிந்தப் பழமொழியைச் சொல்லிவராதபடிக்கு நாமிதையோயப்பண்ணுவோம், நாட்களும் எல்லாத் தெரிசனத்தின் பொருளுங் கிட்டியேவந்ததென்று அவர்களோடே சொல்லு.

௨௪. ஏனென்றால் இஸ்ரவேல் வீட்டாரின் நடுவிலினிச் சகல கள்ளத்தெரிசனமும் இச்சகமான குறிசொல்லுதலுமிராதேபோம்.

௨௫. ஏனெனில் கர்த்தராகிய நானு சொல்லுகிறேம், நானு சொல்லும் வார்த்தை நிறைவேறும், இனித் தாமதமில்லை, ஏனெனில், கலகவீட்டாரே, உங்கள் நாட்களிலே நாம் வார்த்தையைச் சொல்லுகிறேம், அதை நிறைவேறவும் பண்ணுகிறேமென்று கர்த்தராகிய ஆண்டவருரைக்கிறாரென்றார்.

௨௬. பின்னையுங் கர்த்தருடைய வார்த்தை யெனக்குண்டாகி, அவர் சொன்னதாவது:

௨௭. மனுஷபுத்திரனே: இதோ, இஸ்ரவேல் வீட்டார்: இவன் காண்கிற தெரிசனம் வர அநேக நாளைச் செல்லும், தூரமாயிருக்கிற காலங்களைக் குறித்து இவன் தீர்க்கதெரிசனஞ் சொல்லுகிறானென்கிறார்கள்.

௨௮. ஆகையால் நம்முடைய வார்த்தைகளிலொன்றிலும் இனித் தாமதிப்பதில்லையென்று கர்த்தராகிய ஆண்டவருரைக்கிறார், நானு சொன்ன வார்த்தை நிறைவேறுமென்று கர்த்தராகிய ஆண்டவருரைக்கிறாரென்றவர்களோடே சொல்லென்றார்.

## ௰௩. அதிகாரம்.

கள்ளத்தீர்க்கதெரிசிகளினளத்தைக் கண்டித்தது,
அவர்களுக்கு வரும் ஆக்கினைகளை
முன்னறிவித்தது.

கர்த்தருடைய வார்த்தை யெனக்குண்டாகி, அவர் சொன்னதாவது:

௨. மனுஷபுத்திரனே * தீர்க்கதெரிசனஞ் சொல்லுகிற இஸ்ரவேலுடைய தீர்க்கதெரிசிகளுக்கு விரோதமாக நீ தீர்க்கதெரிசனமுரைத்து, தங்களிருதயத்திலிருக்கிறதையெடுத்துத் தீர்க்கதெரிசனஞ் சொல்லுகிறவர்களோடே நீ சொல்லவேண்டியதாவது: கர்த்தருடைய வார்த்தையைக் கேளுங்கோள். * ௩௪: அதி. ௨. ௰௬.

௩. கர்த்தராகிய ஆண்டவருரைக்கிறதாவது: * தங்களுடைய ஆவியையுந் தாங்கள் கண்டதையும் பின்தொடருகிற மதிகெட்ட ** தீர்க்கதெரிசிகளுக்கையோ! * யெரே. ௨௩: ௧.
** யெரே. ௨௩: ௨௧.

௪. இஸ்ரவேலே, உன் தீர்க்கதெரிசிகள் வனாந்தரங்களிலுள்ள நரிகளுக்கொப்பாயிருக்கிறார்கள்.

௫. நீங்கள் கர்த்தருடைய நாளிலே, யுத்தத்தில் நிற்கும்படிக்கு, திறப்புகளில் ஏறினதுமில்லை, இஸ்ரவேல் வீட்டுக்காகச் சுவரையடைத்ததுமில்லை. * ௨௨: ௩௰. ஏசா. ௩௪: ௭.

௬. அவர்கள் அவத்தத்தையும், * பொய்ச்சாஸ்திரத்தையுந் தெரிசித்து, கர்த்தர் தங்களையனுப்பாதிருந்தும்: கர்த்தருரைத்தாரென்று சொல்லி காரியத்தைத் திறுவாக்கம்பண்ண நம்பிக்கையுமாயிருக்கிறார்கள். * ௨௨: அதி. ௨௮.
யெரேமி. ௨௩: ௩௨.

௭. நாமுரைக்காதிருந்தும், நீங்கள்: கர்த்தருரைத்தாரென்று சொல்லும்போது, அவத்த

மானதெரிசினையைத் தெரிசித்து, பொய்ச்சாஸ்திரத்தைச் சொல்லுகிறவர்களல்லவோ?

௮. ஆகையால் கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறதாவது: நீங்கள் அவத்தமானதைச் சொல்லிப் பொய்யானதைத் தெரிசிக்கிறபடியினாலே, இதோ! நாம் உங்களுக்கு விரோதமானவரென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.

௯. அவத்தமானதைத் தெரிசித்துப் பொய்ச்சாஸ்திரத்தைச் சொல்லுகிற தீர்க்கதெரிசிகளுக்கு நம்முடைய கை விரோதமாயிருக்கும், அவர்கள் *நம்முடைய ஜனத்தின் சங்கத்திலிருப்பதுமில்லை, இஸ்ரவேல் வீட்டாரின் அட்டவணையில் எழுதப்படுவதுமில்லை, இஸ்ரவேல் தேசத்துக்குள் பிரவேசிப்பதுமில்லை, அப்படியே நாங் கர்த்தராகிய ஆண்டவரென்றறிந்து கொள்ளுவீர்கள். *௰௪:௯.

௰. அதெனத்தினாலே என்றால் *சமாதானமில்லாதிருந்தும், அவர்கள் சமாதானமென்று சொல்லி நம்முடைய ஜனத்தை மோசம்போக்குகிறபடியினாலேதானே. ஒருத்தன் மண்சுவரை யெடுக்கிறான், இதோ! மற்றவர்கள் சாரமில்லாத சாந்தையதுக்குப் பூசுகிறார்கள்.

* மிகா. ௩: ௫.

௰௧. சாரமில்லாத சாந்தைப் பூசுகிறவர்களோடே, அது இடிந்து விழுமென்று சொல்லு. வெள்ளமாகப் பெருகிற மழையுண்டாம், பெருங்கன்மழையின் கல்லுகளே, நீங்களுமிறங்குவீர்கள், அப்போது மகா புசல் காற்றதைப் பிளக்கும்.

௰௨. இதோ, சுவர் விழும்போது, உங்களோடே: நீங்கள் பூசின சாந்து பூச்செங்கே யென்று சொல்லார்களோ?

௰௩. ஆகையால் கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது: நம்முடைய உக்கிரத்திலே மகா புசல் காற்றை யெழும்பியடிக்கப் பண்ணுவோம், நம்முடைய கோபத்திலே வெள்ளமாகப் பெருகிற மழையும், நம்முடைய சினத்திலே நிர்மூலமாக்கத்தக்க பெருங் கன்மழையின் கல்லுகளுமுண்டாகும்.

௰௪. அப்போது நீங்கள் சாரமில்லாத சாந்தைப் பூசின சுவரை நாம் இடித்தல்லாக்கி, அதின் அஸ்திவாரந் திறந்து கிடக்கும்படியாக அதைத் தரையிலே படுக்கப் பண்ணுவோம், அப்படியே அதுக்குள்ளேயிருக்கிற நீங்கள் நிர்மூலமாகும்படிக்கு அது விழும், அப்போது நாங் கர்த்தரென்றறிந்து கொள்ளுவீர்கள்.

௰௫. அப்படி நாம் சுவரிலும், அதுக்குச் சாரமில்லாத சாந்தைப் பூசினவர்களிலும் நம்முடைய உக்கிரத்தைத் தீர்த்துக்கொண்டு: சுவருமில்லை யதுக்குச் சாந்து பூசினவர்களுமில்லை யென்று உங்களுக்குச் சொல்லுவோம்.

௰௬. யெருசலேமைக் குறித்துத் தீர்க்கதெரிசினஞ் சொல்லி, சமாதானமில்லாதிருந்தும், அதுக்குச் சமாதானத்தின் தெரிசினையைத் தெரிசிக்கிற இஸ்ரவேலின் தீர்க்கதெரிசிகளேயில்லையே யென்போமென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.

௰௭. மனுஷபுத்திரனே, தங்களுடைய இருதயத்திலிருக்கிறதை யெடுத்துத் தீர்க்கதெரிசினஞ் சொல்லுகிற உன் ஜனத்தின் குமாரத்திகளுக்கெதிராக உன் முகத்தைத் திருப்பி, அவர்களுக்கு விரோதமாகத் தீர்க்கதெரிசினமுரைத்து,

௰௮. சொல்லவேண்டியதாவது: கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறதேதென்னில், ஆத்துமங்களை வேட்டையிடும்படிக்குச் சகல அக்குளுகளுக்கும் தலையணைகளைத் தைத்து, சகல வளர்த்தியானவர்களின் தலைகளுக்கும் மூடுசீலைகளையுண்டுபண்ணுகிறவர்களுக்கையோ! நீங்கள் நமது ஜனத்தின் ஆத்துமங்களை வேட்டையாடி, அவைகளையுங்களுக்கு உயிரோடே காப்பாற்றுவீர்களோ?

௰௯. *சாகத்தகாத ஆத்துமாக்களைக் கொல்லச் செய்வதற்கும், உயிரோடிருக்கத்தகாத ஆத்துமாக்களையுயிரோடே காப்பாற்றுவதற்குமாக நீங்கள், பொய்யைக் கேட்கிற நமது ஜனத்துக்குப் பொய் சொல்லுகிறதினாலே நம்மை நம்முடைய ஜனத்துக்குள்ளே சில சிறங்கை வாற் கோதுமைக்காகவும் அப்பத் துண்டுகளுக்காகவும் பரிசுத்தக் குலைச்சலாக்குவீர்களோ? *வாக. ௰௭: ௫௰.

௨௰. ஆகையால் கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதேதென்னில், இதோ! நீங்கள் ஆத்துமாக்களைப் பறந்து போகப்பண்ண வேட்டையாடுகிற உங்கள் தலையணைகளுக்கு விரோதமாக நாம் வந்து, அதுகளை உங்கள் புயங்களிலிருந்து பிடுங்கிக் கிழித்து, நீங்கள் பறந்து போகப்பண்ண வேட்டையாடுகிற ஆத்துமாக்களை விடுதலைப்பண்ணி,

௨௧. உங்கள் மூடுசீலைகளைக் கிழித்து நமது ஜனத்தை யுங்கள் கைகளுக்கு நீங்கலாக்கி விடுவோம், அவர்கள் இனி உங்கள் கைகளில் வேட்டையாடப்பட்டிருப்பதில்லை. அப்போது நாங் கர்த்தரென்றறிந்து கொள்ளுவீர்கள்.

௨௨. நாம் கோவுண்டாக்காத நீதிமானின் இருதயத்தை நீங்கள் வீணாய் முறியப்பண்ணின படியினாலும், * ஆகாதவன் தன் பொல்லாத வழியை விட்டுத் திரும்பவும் நாம் அவனை உயிரோடே காக்கவுங்கூடாதபடிக்கு நீங்கள் அவனுடைய கைகளைத் திடப்படுத்தின படியினாலும்,

* யெரேமி. ௨௩: ௰௪.

௨௩. நீங்கள் இனி மாயமானதைத் தெரிசிப்பதுமில்லை, சாஸ்திரம் பார்ப்பதுமில்லை, ஏனெனில் நாம் நம்முடைய சனத்தை உங்கள் கைகளுக்கு நீங்கலாக்கி விடுவோம், அப்போது நாங் கர்த்தரென்றறிந்து கொள்ளுவீர்களென்று சொல்லுகிறார்.

## ௰௪. அதிகாரம்.

இஸ்ரவேலின் மூப்பர் மேலுங் கள்ளத் தீர்க்கதெரிசிகளின் மேலுந் தேவ ஆக்கினைகள் வருவது.

௧. இஸ்ரவேலுடைய மூப்பரில் சில மனுஷர் என்னண்டைக்கு வந்து, எனக்கு முன்பாக உட்கார்ந்தார்கள். * ௨௰. ௧.

௨. அப்பொழுது கர்த்தருடைய வார்த்தை யெனக்குண்டாகி, அவர் சொன்னதாவது:

௩. மனுபுத்திரனே, இந்த மனுஷர் தங்கள் நரகலான தேவர்களைத் தங்கள் இருதயத்தின் மேலேற்றி, தங்கள் அக்கிரமமான இடறுதலைத் தங்கள் முகத்துக்கெதிராக வைத்துக்கொண்டிருக்கிறார்கள், நம்மை யவர்கள் கேள்க்கவே கேள்க்கிறார்களோ?

௪. ஆகையால் நீ யவர்களோடே பேசி அவர்களோடு சொல்லவேண்டியதாவது: கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறதேதெனில், இஸ்ரவேல் வீட்டாரில் தன்னுடைய நரகலான தேவர்களைத் தன் இருதயத்தின் மேலேற்றித் தன் அக்கிரமமான இடறுதலைத் தன் முகத்துக்கெதிராக வைத்துக்கொண்டிருக்கிறவனெவனுந் தீர்க்கதெரிசியண்டைக்கு வந்தால், கர்த்தராகிய நாம் இஸ்ரவேல் வீட்டாருடைய இருதயத்திலிருக்கிறதைப் பிடிக்கும்படியாக நரகலான தன்னுடைய திரளான தேவர்களோடே வருகிற அப்படிக்கொத்தவனுக்கு உத்தரவு கொடுப்போம்.

௫. ஏனெனில் அவர்களெல்லாருந் தங்கள் நரகலான தேவர்களைப் பற்றி நம்மை விட்டுப் பேதித்தார்கள்.

௬. ஆகையால் இஸ்ரவேல் வீட்டாரோடே நீ சொல்லவேண்டியதாவது: கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறதேதெனில், * திரும்புங்கோள், உங்கள் நரகலான தேவர்களை விட்டுத் திரும்பிக்கொண்டு, உங்களுடைய எல்லா அருவருப்புகளையும் விட்டு உங்கள் முகங்களைத் திருப்பிக்கொள்ளுங்கோள். * எசாயா. ௩௧: ௬.

௭. ஏனெனில் இஸ்ரவேல் வீட்டாரிலும், இஸ்ரவேலில் தங்குகிற பரதேசிகளிலும் நம்மைப் பின்பற்றாமல் பேதலித்து, தன்னுடைய நரகலான தேவர்களைத் தன்னிருதயத்தின் மேலேற்றி, தன் அக்கிரமமான இடறுதலைத் தன் முகத்துக்கெதிராக வைத்துக்கொண்டிருக்கிறவனெவனுந் தீர்க்கதெரிசியண்டைக்கு, அவனைக்கொண்டு நம்மைக் கேள்க்கிறதுக்காக வந்தால், அவனுக்குக் கர்த்தராகிய நாந்தானே நம்மாலே உத்தரவு கொடுத்து,

௮. அப்படிக்கொத்த மனுஷனுக்கு விரோதமாக * நம்முடைய முகத்தைத் திருப்பி, அவனை ** அடையாளமாகவும் பழமொழிகளாகவும் வைத்து, அவனை நம்முடைய சனத்தின் நடுவிலிராதபடிக்குச் சங்கரித்துப்போடுவோம், அப்போது நாங் கர்த்தரென்றறிந்து கொள்ளுவீர்கள்.

* ௰௫: ௭. ** ௫: ௰௫.

௯. ஒரு தீர்க்கதெரிசி யெத்தப்பட்டு ஒரு விசேஷத்தைச் சொன்னானாகில், அப்படிக்கொத்த தீர்க்கதெரிசியைக் கர்த்தராகிய நாம் எத்தப்படப்பண்ணினோம், * நாம் அவனுக்கு விரோதமாக நமது கையை நீட்டி, அவனை இஸ்ரவேல் சனத்தின் நடுவிலிராதபடிக்கு அழிப்போம். * ௰௩: ௯.

௰. அப்படியே தங்கள் தங்கள் அக்கிரமத்தைச் சுமப்பார்கள், கேள்க்கிறவனுடைய அக்கிரமத்தின் சுமையெப்படியிருக்குமோ அப்படித் தீர்க்கதெரிசியினுடைய அக்கிரமத்தின் சுமையுமிருக்கும்.

௰௧. இஸ்ரவேல் வீட்டார் இனி நம்மைப் பின்பற்றுதலை விட்டு வழுதிப்போகாமலும், தங்களுடைய எல்லா மீறுதல்களாலும் இனி யசுசிப்படாமலுமிருக்கும் பொருட்டாகத்தானே. அப்போது அவர்கள் நம்முடைய சனமாக இருப்பார்கள்; நாம் அவர்களுக்குப் பராபரனுமாக இருப்போமென்று கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறாரென்று சொல்லுகிறார்.

இஸ்ரவேல் தேசத்தின் மேலும் யெருசலேமின் மேலுந் தேவ ஆக்கினைகள் இறங்குமென்பது.

௰௨. கர்த்தருடைய வார்த்தை எனக்குண்டாகி, அவர் சொன்னதாவது:

௰௩. மனுஷபுத்திரனே, ஒரு தேசம் நமக்கு விரோதமாகத் துரோகம் பண்ணிக்கொண்டேயிருந்து பாவஞ்செய்தால், நாம் அதுக்கு விரோதமாக நம்முடைய கையை நீட்டி, *அதிலே அப்பமென்கிற ஆதாரக்கோலையுடைத்து, அதிலே பஞ்சத்தையனுப்பி, மனுஷரையும் மிருகங்களையும் அதிலிராதபடிக்கு நாசம்பண்ணுவோம்.

* ௪: ௰௬.

௰௪. அப்போது *நோவாவுந் தானியேலும் யோபுமென்கிற மூன்று புருஷர் அதின் நடுவிலிருந்தாலும், அவர்கள் தங்களுடைய ஆத்துமத்தையே தங்கள் நீதியினாலே தப்பப்பண்ணுவார்களென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.

* யெரேமி. ௰௫: ௧.

௰௫. நாம் *துஷ்ட மிருகங்களைத் தேசத்திலே போகவிடுகையால் இதுகள் தேசத்தைப் பாழாக்கத்தக்கவையாகவும், மிருகங்களின் நிமித்தியம் ஒருத்தரும் அதிலே நடக்கக்கூடாதிருக்கத்தக்கவையாகவும், அதிற் சனச்சேதம் பண்ணிக்கொள்ள,

* ௩. மோசே. ௨௬: ௨௨.

௰௬. அந்த மூன்று புருஷர் அதின் நடுவிலிருந்தாலும், அவர்கள் குமாரரையாகிலுங் குமாரத்திகளையாகிலுந் தப்பப்பண்ணாமல், அவர்கள் மாத்திரமே தப்புவார்கள், தேசமோ பாழாமென்று நம்முடைய சீவனைக்கொண்டு சொல்லுகிறோமென்பதைக் கர்த்தராகிய ஆண்டவருரைக்கிறார்.

௰௭. அல்லது நாம் அந்தத் தேசத்தின் மேலே பட்டயத்தை வரப்பண்ணி: பட்டயமே, தேசத்தையுருவப்போவென்று சொல்லி, மனுஷரையும் மிருகங்களையும் அதிலே நாசம்பண்ணிக்கொள்ள,

௰௮. அந்த மூன்று புருஷர் அதின் நடுவிலிருந்தாலும், அவர்கள் குமாரரையாகிலுங் குமாரத்திகளையாகிலுந் தப்பப்பண்ணாமல், அவர்கள் மாத்திரமே தப்புவார்களென்று நம்முடைய சீவனைக்கொண்டு சொல்லுகிறோமென்பதைக் கர்த்தராகிய ஆண்டவருரைக்கிறார்.

௰௯. அல்லது நாம் அந்தத் தேசத்துக்குப் பெருவாரிக்காச்சலையனுப்பி, அதிலே மனுஷரையும் மிருகங்களையும் நாசம்பண்ணும்படிக்கு அதின்மேல் நம்முடைய உக்கிரத்தை இரத்தப்பழியாக ஊற்றிக்கொள்ள,

௨௰. நோவாவுந் தானியேலும் யோபும் அதின் நடுவிலிருந்தாலும், அவர்கள் குமாரனையாகிலுங் குமாரத்தியையாகிலுந் தப்பப்பண்ணாமல், அவர்கள் தங்கள் ஆத்துமத்தையே தங்கள் நீதியினாலே தப்பப்பண்ணுவார்களென்று நம்முடைய சீவனைக்கொண்டு சொல்லுகிறோமென்பதைக் கர்த்தராகிய ஆண்டவருரைக்கிறார்.

௨௧. ஆகையால் கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது: நாம் எருசலேமிலே மனுஷரையும் மிருகங்களையும் நாசம்பண்ணும்படிக்கு, அதுக்கு விரோதமாகப் பட்டயம் பஞ்சந் துஷ்ட மிருகங்கள் பெருவாரிக்காச்சலென்கிற நம்முடைய *நாலு பொல்லாத ஆக்கினைகளையும் அனுப்பினால், எத்தனையதிகம்? * ௫: ௰௭.

௨௨. ஆகிலும் இதோ, அதிலே தப்பி, மீதியாகி வெளியே கொண்டு வரப்படுகிற குமாரருங் குமாரத்திகளுமுண்டாயிருப்பார்கள், இதோ, அவர்கள் உங்களண்டைக்குப் புறப்பட்டு வருவார்கள், அப்போது நீங்கள் அவர்கள் மார்க்கத்தையும் அவர்கள் கிரிகைகளையுங்கண்டு, நாம் எருசலேமின் மேல் வரப்பண்ணின தீங்கினாலும் அதின்மேல் நாம் வரப்பண்ணின எல்லாத்தினாலுந் தேற்றப்படுவீர்கள்.

௨௩. நீங்கள் அவர்கள் மார்க்கத்தையும் அவர்கள் கிரிகையையுங் காணும்போதினாலே அவர்கள் உங்களுக்குத் தேற்றரவாயிருப்பார்கள், நாம் அதிலே செய்ததெல்லாத்தையும் முகாந்திரமில்லாமல் செய்ததில்லையென்று அப்போது அறிந்துகொள்ளுவீர்களென்கிறதைக் கர்த்தராகிய ஆண்டவருரைக்கிறாரென்று சொன்னார்.

## ௰௫. அதிகாரம்.

ஒரு வேலைக்கும் ஆகாதமரமான திராட்சையின் செடிகளுக்குச் சனம் ஒப்பிடப்பட்டது.

கர்த்தருடைய வார்த்தை எனக்குண்டாகி அவர் சொன்னதாவது:

௨. மனுஷபுத்திரனே, காட்டுச்செடிகளுளிருக்கிற மற்றெல்லாக் கொடிச்செடிகளைப்பார்க்கிலுந் திராட்சச்செடியின் மேன்மை யென்ன?

௩. அதிலே வேலைசெய்ய ஒரு கட்டை யெடுக்கப்படுமோ? பலவித தட்டுமுட்டுகளைத் தூக்கிவைக்கும் முளையை அதிலே செய்ப்பார்களோ?

௪. இதோ *அது அக்கினிக்கிரையாக எறியப்பட்டுக் கொளுத்தப்படும், அதின் இரண்டு முனைகளையும்

யும அககினியெரிததுபபோடடது, அதினநடுத துணடுமவேகுது, ஒருவேலைககுமோ?
* யோவா. ௰௫: ௬.

௫. இதோ, அதுவேகாதிருககிறபோது, ஒருவேலைசகுதவினதிலலை, அககினியதையெரித தபிறபாடும அது வெநதபிறபாடும அதுஇனி ஒருவேலைககுதவுவதெபபடி?

௬. ஆனதுசொனனகறததாகிய ஆணடவர் சொலலுகிறதாவது: நீவிதாடசிசசெடிநாம அககினிககிரையாகவொபபுககொடுததககாடடுசசெடிகளோடொததிருககிறதுபோலே, நாமயெருசலேமின குடிகளை யபபடியே ஒபபுககொடுததது,

௭. நமதுமுகததையவர்களுககுவிரோதமாகத்திருபபுவோம, அவர்களொரு அககினியிலிருநதுநீஙகித்தபபினனும, வேறெயககினியவர்களைப்பட்சிககும, அபபடியேநாம நமது முகததையவர்களுககுவிரோதமாகததிருபபுகையில, நாஙகறததரெனறறிநதுகொளவீர்கள.

௮. அவர்களதுரோகமபணணிககொணடேயிருநதபடியினால, நாந்தேசததை பபாழாய்பபோகபபணணுவோமெனறுகறததர் சொலலுகிறுரொனறுர்.

௰௬. அதிகாரம.

தெயவஉபகாரஙகளைநனறியறியாதேபோனயூதசனததைச்சுறுககாய்ககணடிததது.

கறததருடைய வாறதை யெனககுணடாகி, அவர்சொனனதாவது:

௨. மனுபபுததிரனே, நீயெருசலேமுககதின அருவருபபுகளைஅறிவிதது,

௩. சொலலவேணடியதாவது: கறததாகிய ஆணடவர் யெருசலேமுககு சசொலலவேணடியதேதெனில, உனபூருவோததிரமுமஉனபிறபபுகளுஙகானனியர் தேசததினுடையது, உனதகபபன எமோரியனும, உனதாய் கேததிததியுந தானே.

௪. நீபிறககிறநாளிலேயுனபிறபபினசமாச்சாரஙகளெனனமாயிருநதுதெனறால, உனதொபபுள அறுககபபடடதுமிலலை, நீநமது பார்வைககுபபிரியபபடததணணீரினால் கழுவபபடடதுமிலலை, உபபால்ச்சுததிகரிககபபடடதுமிலலை, பிடவைகளிலச்சுறறபபடடதுமிலலை.

௫. உனககுபபரதபிததுஇதுகளிலொனறையாகிலும உனககுசசெயயஒருககணணுமஉனபேரிலஇரககமாயிருநததிலலை, நீபிறநதநாளிலுனனுததுமம அரோசிககபபடடதினால, வெளியிலெறிநதுவிடபபடடாய.

௬. நாமோவெனில உனககருகாய் ககடநது வநது, நீயுனனுடைய இரத்ததததிலே மிதிபடுவதைககணடு, உனஇரத்தத்தில கிடககிற உனனுடனே: பிழையெனறுசொலலி, உனஇரததததிலக்கிடககிற உனனுடனே: பிழையெனறு தானசொனனோம.

௭. உனனை வயலினபயிரைபபோல, அனேகமாயிரமாகுமபடிசசெயவைததோம, நீ வளர்நது, பெரியவனாகி மகாசவுநதரியததை யடைநதாய, ஸ்தனஙகளெழுமபிறறு, உனமயிர் வளர்நதது, ஆனால நீ நிறுமாணமும அமமணமுமாயிருநதாய.

௮. நாமோவெனிலுனககருகாசக்கடநது, உனனைபபார்ததோம, இதோ, உனனுடையகாலமபருவகாலமாயிருநதது, அபபோது* நமமுடையவஸ்திரததையுனபேரிலேவிரிதது உனநிறுமாணததைமூடி, உனககாணையிடடுககொடுததது, உனனோடுடனபடிககைசசெய்தோமெனறு, கறததாகிய ஆணடவர்சொலலுகிறுர்; அபபடியேநமமுடையவளானாய. * ரூத. ௩: ௯.

௯. நாமுனனைததணணீரினால் கழுவி, உனனை இரததமறவிஙனம பணணிவிதது, உனககெணணெய்பூசி,

௰. சிததிரத்தையலாடையையுனககுடுததிச்சாயநதீர்நத பாதரடசைகளையுனககுததரிபபிதது, மெலலிய பபிடவையை ககடடவும, படடுசசாலவையை மூடிசகொளளவும உனககுககொடுததது,

௰௧. உனனையாபரணஙகளால அலஙகரிதது, உனகைகளில்சசரிகைகளையும, உனகழுததில்சஙகிலியையுமபோடடு,

௰௨. உனநெறறியிலநெறறிபபடடததையும, உனகாதுகளில ககடுககனையும, உன தலையினமேற்சிஙகாரமான கிரீடததையுமபோடடோம.

௰௩. அபபடியேபொனனினாலும வெளளியினாலும அலஙகரிககபபடடாய, உனனுடுபபு மெலலிய பிடவையும, படடுஞசிததிரத்தையலாடையுமாயிருநதது, நலலமாவையுநதேனையுமெணணெயையுஞசாபபிடடாய, நீமிகுதியும அழகாகி இராசசியம அடையும அனுகூலததைபபெறறாய.

௰௪. உன்னழகினலேயுன்னுடைய கீர்த்தி புறசசாதிகளுக்குள்ளே பிரசசித்தமாசசுது, ஏனெனில் நாமஉன்மேலவைத்தநம்முடையமகிமையினலே அதுகுறையறறதாயிருந்ததென்று சறததாகியஆண்டவர்சொல்லுகிருர்.

௰௫. நீயோவென்ருல உன்னழகை நமபி, உன கீர்த்தியினல் வேசித்தனமபணணி, கடந்து போகிறவனுககெல்லாம நேரபபடஉனவேசித்தனஙகளைபபுரளபபணணி,

௰௬. உனவஸதிரஙகளில சிலதுகளையெடுத்து, பலவருணச்சோடிபபானமேடைகளையுனககுணடாககி, அதுகளினமேலவேசித்தனம பணணினுய, அபபடி கொதத க்காரியஙகளொருககாலுஞசமபவித்ததுமிலலை, நடககபபோவதுமிலலை.

௰௭. நாம உனககு கொடுத்த நமமுடைய பொனனுமநமமுடையவெளளியுமான உனசிஙகாரஆபரணஙகளை நீயெடுத்து, உனககு ஆணசுருபஙகளையுணடாககி, அதுகளோடே வேசித்தனமபணணி,

௰௮. உனனுடையசித்திரத்தையலாடைகளையெடுத்து, அதுகளை மூடி, நமமுடைய எணணெயையும நமமுடைய தூபவறககத்தையுமஅதுகளினமுனபடைத்து,

௰௯. நாமஉனககுககொடுத்தநமமுடைய அபபத்தையும, உனககு சசாபபிடககொடுத்தநலலமாவையும, எணணெயையுநதேனையுமநீயதுகளினமுன ஆறறுகிற வாசனையாக பபடைத்தாய, அபபடியாசசுதென்று சறததாகியஆணடவர்சொலலுகிருர்.

௨௰. நீ நமககுபபெறற உனகுமாரரையும உனகுமாரத்திகளையும எடுத்து,* அவர்களையதுகளுககிரையாக பபெலியிட்டாய, உனவேசித்தனஙகளின செயல அற்பககாரியமோ?

* யெரே. ௭: ௩௧.

௨௧. நீநமமுடையபிளளைகளையடித்து, அவர்களையதுகளுககுத்தீயிலநடககபபணணியொபபுககொடுத்தாய.

௨௨. உனனுடையவெலலா அருவருபபுகளிலுமவேசித்தனஙகளிலுமே யென்ருல, நீநிறுமாணமும அம்மணமுமாயிருந்ததும, உன இரத்தத்திலேமிதிபடககிடந்ததுமான உனசிறுவயதினநாளககளை நினையாதேபோனுய.

௨௩. உனககையோ! ஐயோவென்றுகறததர்சொலலுகிருர், ஏனெனில, நீசெயதவெலலாபபொலலாபபுககும பினபுசமபவித்ததேதென்ருல,

௨௪. நீயுனககுககோவிலகளைககட்டி, உனககுசசகலவீதியிலும உயர்ந்த மேடைகளைசசெப்பனிட்டாய,

௨௫. நீசகலவழிமுகஙகளிலுமஉனனுடைய உயர்ந்தமேடைகளைககட்டி, உனனழகையருவருபபாககி, கடநதுவருகிறவனுசசெலலாமஉனகாலகளையசசட்டி, உன வேசித்தனஙகளை திரளாய்பபெருககபபணணி,

௨௬. சதை பெருத்த உன அசல்தேசததாராகியஎகிப்த்துவினபுத்திரரோடேவேசித்தனம பணணி, நமககுககோபமுணடாககும படிககு உனவேசித்தனஙகளைத்திரளாககினுய.

௨௭. ஆனதுகொணடு இதோ, நாம நமது கையையுனககு விரோதமாசநீட்டி, உனககுககுறித்தகட்டளையை சசுருககி, உனபகையாளிகளாகிய *பெலிஸதருடைய குமாரத்திகளின இசசைசசுகனையொபபுககொடுத்தோம, இவர்களுந தோஷமானமார்சகததுககு நாணபபட்டார்கள். * நிதி. ௰௪: ௧. ௨. நாளா. ௨௮:௰௮.

௨௮. நீதிறிததியடையமாட்டாததினல அசூர்குமாரரோடுமவேசித்தனம பணணினுய, அவர்களோடேவேசித்தனமபணணியும, நீதிறிததியடையாதேபோனுய.

௨௯. கானனதேசத்திலே கல்தேயர்மட்டுககுமஉனவேசித்தனஙகளை திரளாககி, இதிலுந திறிததியடையாதேபோனுய.

௩௰. வனுவேசியான ஸதிரீயின கிரிகையாகிய இதுகளையெலலாம நீசெயது,

௩௧. சகல வழிமுகஙகளிலும உனனுடைய கோவிலகளை ககட்டி, சகலவீதியிலும உனமேடைகளைசசெபபனிட்டதினல உனனிருதயமெததளையாய் ககளை பட்டிருககுதென்று சறததாகிய ஆணடவர்சொலலுகிருர். நீபணையததைநிஸகாரமபணணுகிறதினல நீவேசியை பபோலிராமல,

௩௨. தனபுருஷனுககுவதிலாக அனனியனைசசேர்ககிற விபசாரஸதிரியைபபோலிருககிருய.

௩௩. எலலாவேசிகளுககுமபணையஙகொடுககிருர்கள, ஆனலஉனசிநேகிதர் சுறறுபபுறஙகளிலிருந்துன வேசித்தனஙகளுககாக உனனணடைககுவருமபடிககு, அவர்களுககெலலாமநீயேபணையஙகொடுத்து, அவர்களுககு ககாணிககைகளைததருகிருய.

௩௪. அபபடியே உனனுடைய வேசித்தன

தசவில

௰௨. ஒரு மேய்ப்பன் சிதறுண்ட தன்னுடைய ஆடுகளின் நடுவேயிருக்கிற நாளிலே தன் மந்தையைத் தேடிக்கொண்டிருக்கிறதுபோலே * நாம் * நம்முடைய ஆடுகளைத் தேடி, அதுகள் மப்பும் மந்தாரமுமான நாளிலே சிதறுண்டுபோன எல்லாவிடங்களிலுமிருந்து அதுகளைத் தப்பிவிப்பப்பண்ணி, * மத்தே. ௰அ: ௰௧. ௰௨.
* லூக்கா. ௰௫: ௪.

௰௩. அதுகளைச் சனங்களிடத்திலிருந்து புறப்படவும், அதுகளைத் தேசங்களிலிருந்து சேரவும்பண்ணி, அதுகளை அதுகளுடைய சீமையிலே கொண்டுவந்து, அதுகளை இஸ்ரவேலுடைய பர்வதங்களின் மேலும் ஆறுகளண்டையிலும், தேசத்தின் சகல வாசஸ்தலங்களிலும் மேய்ப்போம்.

௰௪. அதுகளை * நல்ல மேய்ச்சலிலே மேய்ப்போம், இஸ்ரவேலுடைய உயர்ந்த பர்வதங்களில் அதுகளுடைய தொழுமுண்டாயிருக்கும் அங்கே அதுகள் நல்ல தொழுத்திலே படுத்துக்கொண்டு இஸ்ரவேலுடைய பர்வதங்களின் மேல் புஷ்டியான மேய்ச்சலிலே மேயும். * சங்கீ. ௨௩: ௨.

௰௫. நம்முடைய ஆடுகளை நாம் மேய்த்து அதுகளை நாம் மடக்குவோமென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.

௰௬. நாங் காணாமல்ப்போனதைத் தேடி, துரத்துண்டதைத் திரும்பிவரப்பண்ணி, நசுக்கப்பட்டதைக் காயங்கட்டி, நசல்கொண்டதைத் திடப்படுத்தி, கொழுப்பும் வல்லமையுமாயிருக்கிறதையோவென்றால் அழிப்போம், நியாயமாய் அதுகளை மேய்ப்போம்.

௰௭. அதேதெனில் நம்முடைய மந்தையே, கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது: இதோ * நாம் ஆட்டுக்கும், ஆட்டுக்கும், ஆட்டுக்கடாய்களுக்கும் வெள்ளாட்டுக்கடாய்களுக்கும் நியாயந்தீர்ப்போம். * மத்தே. ௨௫: ௩௨. ௩௩.

௰௮. நீங்கள் நல்ல மேய்ச்சலை மேய்ந்து உங்கள் மேய்ச்சல்களில் மீதியாயிருக்கிறதை உங்கள் கால்களால் மிதித்துப்போடுகிறதும், தெளிந்திருக்கிற தண்ணீரைக் குடித்து, மீதியாயிருக்கிறதை உங்கள் கால்களால் கலுழப்பிப்போடுகிறதும், உங்களுக்குக் கொஞ்சக் காரியமோ?

௰௯. நம்முடைய ஆடுகள் உங்கள் கால்களால் மிதிக்கப்பட்டதை மேயவும், உங்கள் கால்களால் கலுழப்பப்பட்டதைக் குடிக்கவும் வேணுமோ?

௨௰. ஆகையால் கர்த்தராகிய ஆண்டவர் அதுகளோடே சொல்லுகிறதாவது: இதோ, நாம் நாமே கொழுத்த ஆடுகளுக்கும் இளைத்த ஆடுகளுக்கும் நியாயந்தீர்ப்போம்.

௨௧. நீங்கள் பெலவீனமாயிருக்கிறதுகளை எல்லாம் புறம்பாகச் சிதறப்பண்ணுமட்டுக்கும், அதுகளைப் பக்கத்தினாலும் முன்னந்தொடையினாலுந்தள்ளி, உங்கள் கொம்புகளினாலே முட்டுகிறபடியினாலே,

௨௨. நாம் நம்முடைய ஆடுகளினிச் சூறையாகாதபடிக்கு இரட்சித்து, ஆடுகளுக்கும் ஆடுகளுக்கும் நியாயந்தீர்ப்போம்.

௨௩. * அதுகளை மேய்க்கப்போகிற நம்முடைய பணிவிடைக்காரனாகிய தாவீதென்கிற ஒரே மேய்ப்பனை நாம் அதுகளின் மேல் விசாரிப்பாயிருக்க ஏற்படுத்துவோம், இவர் அதுகளை மேய்த்து இவரே அதுகளுக்கு மேய்ப்பராகவிருப்பார்.
* சங்கீ. ௨௩: ௧. எசாயா. ௪௰: ௧.
எசாயா. ௰: ௰௧. ௰௪. ௧. பேது. ௨: ௨௫.

௨௪. கர்த்தராகிய நாம் அவர்களுக்குப் பராபரனாயிருப்போம், நம்முடைய * பணிவிடைக்காரனாகிய ** தாவீதென்பவர் அவர்கள் நடுவில் † தலைவராயிருப்பார், கர்த்தராகிய நாம் இதைச் சொன்னோம். * எசாயா. ௪௨: ௧.
* ௫௨: ௰௩. ௫௩: ௰௧. ** யெரே. ௩௰: ௯.
† எசாயா. ௫௫: ௪.

௨௫. நாம் அவர்களோடே * சமாதானத்தின் உடன்படிக்கையைப்பண்ணி, பொல்லாமிருகங்களைத் தேசத்திலிராதபடிக்கொழிப்போம், அவர்கள் சுகமாய் வனாந்தரத்திலே தாவரித்துக் காடுகளிலே நித்திரைபண்ணுவார்கள். * ௩௭: ௨௬.

௨௬. நாம் அவர்களையும் நம்முடைய மேட்டின் சுற்றுப்புறங்களையும் ஆசீர்வாதமாக வைத்து, ஏற்ற காலத்திலே மழையைச் சொரியப்பண்ணுவோம், அதுகள் * ஆசீர்வாதமான மழைகளாயிருக்கும். * சங்கீ. ௬௮: ௯. எசா. ௪௪: ௩.

௨௭. வெளியின் விருட்சங்கள் தங்கள் கனியைத் தரும், பூமி தன் பலனைக் கொடுக்கும், அவர்கள் தங்கள் தேசத்தில் சுகமாயிருப்பார்கள், நாம் அவர்கள் நுகத்தடிக்கயிறுகளை அறுத்து அவர்களை அடிமைகொண்டவர்களின் கைக்கு அவர்களை நீங்கலாக்கி விடுவிக்கும்போது, நாங் கர்த்தரென்றறிந்துகொள்ளுவார்கள்.

௨௮. இனி அவர்கள் புறசாதிகளுக்குச் சூறையாவதில்லை, பூமியின் மிருகங்கள் அவர்களைப் பட்சிப்பதுமில்லை, தத்தளிக்கப்பண்ணுவாரில்லாமல் சுகமாய்த் தங்குவார்கள்.

௨௯. நாம் அவர்களுக்குக் கீர்த்தியான நாற்றை முளைத்தெழுப்புவோம், அவர்கள் இனி தேசத்திலே பஞ்சத்தால் வாரிக்கொள்ளப்படுவதுமில்லை, இனி புறச்சாதிகளின் இலச்சையைச் சுமப்பதுமில்லை.

௩௰. தங்கள் பராபரனாகிற கர்த்தராயிருக்கிற நாம் தங்களோடே கூடவிருக்கிறதையும், இஸ்ரவேல் வீட்டாராகிய தாங்கள் நம்முடைய சனமாயிருக்கிறதையும் அவர்கள் அறிந்துகொள்ளுவார்களென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.

௩௧. * நம்முடைய மேய்ப்பாடுகளாகிய நம்முடைய மந்தையாயிருக்கிற நீங்களோவெனில் மனுஷர், நாமோவெனில் உங்கள் பராபரனென்று கர்த்தராகிய ஆண்டவருரைக்கிறாரென்று சொல்லென்றார்.

## ௩௫. அதிகாரம்.

எதோமியர் மேல்வருந்தேவ ஆக்கினைகளை முன்னறிவித்தது.

கர்த்தருடைய வார்த்தை யெனக்குண்டாகி, அவர் சொன்னதாவது:

௨. மனுஷபுத்திரனே, நீயுன் முகத்தை * சேயீர் பருவதத்துக்கு நேராகத் திருப்பி, அதுக்கு விரோதமாகத் தீர்க்கதெரிசனமுரைத்து,

* ௨௫: ௰௨—௰௪. எரே. ௪௯: ௭. மீ.

௩. அதுக்குச் சொல்லவேண்டியதாவது: கர்த்தராகிய ஆண்டவருரைக்கிறதேதெனில், சேயீர்பருவதமே, இதோ, நாம் உனக்கு விரோதமாக வந்து, நமது கையையுனக்கு விரோதமாக நீட்டியுன்னைப் பாழும் அவாந்தரையுமாக்குவோம்.

௪. உன் பட்டணங்களை வனாந்தரமாக்கிப் போடுவோம், நீ பாழாய்ப்போவாய், நாங் கர்த்தரென்றறிந்துகொள்ளுவாய்.

௫. நீ நித்திய பகையை வைத்து, இஸ்ரவேல் புத்திரருடைய அக்கிரமம் நிறைவேறுகையில் அவர்களுக்குண்டான ஆபத்தின் காலத்திலே அவர்களைப் பட்டயத்தின் கூர்மையினாலே கரையப்பண்ணினபடியினாலே,

௬. நாம் உன்னை இரத்தமாக்குவோம், இரத்தப்பழியுன்னைப் பின்தொடருமென்று கர்த்தராகிய ஆண்டவராயிருக்கிற நாம் நமது சீவனைக்கொண்டு சொல்லுகிறோம், நீ இரத்தஞ்சிந்துதலைப் பகைக்காதபடியினாலே யிரத்தப்பழி யுன்னைப் பின்தொடரும்.

௭. நாம் சேயீர்பருவதத்தைப் பாழும் அவாந்தரையுமாக்கி, அதிலே போகிறவர்களைச் சஞ்சரியலாதபடிக்குச் சங்காரஞ்செய்து,

௮. அதின் பருவதங்களைக் கொலையுண்டவர்களாலே நிரப்புவோம், உன் மேடுகளிலும் உன் பள்ளத்தாக்குகளிலும் உன்னுடைய வெள்ளாறுகளிலும் பட்டயத்தால் வெட்டுண்டவர்கள் விழுவார்கள்.

௯. உன்னை நித்திய அவாந்தரைகளாக்குவோம், உன் பட்டணங்கள் குடியேற்றிவிக்கப்படுவதில்லை, அப்படியே நாங் கர்த்தரென்றறிந்துகொள்ளுவார்கள்.

௰. இரண்டு சாதிகளும் இரண்டு தேசங்களும் என்னுடையதாகுமென்றும், * கர்த்தர்வசமாயிருந்த அதுகளைச் சுதந்தரித்துக்கொள்ளுவோமென்றும் நீ சொல்லுகிறபடியினாலே,

* சங். ௮௩: ௰௩.

௰௧. நீயவர்களுக்கு விரோதமான பகையினாலே செய்த உன்னுடைய கோபத்துக்குத் தக்கதாகவும், உன்னுடைய பொறாமைக்குத் தக்கதாகவும் நாஞ் செய்வோமென்று கர்த்தராகிய ஆண்டவராயிருக்கிற நாம் உன்னை நியாயந்தீர்க்கும் போது, அவர்களுக்குள் நம்மையதினால் அறியப்பண்ணுவோம்.

௰௨. இஸ்ரவேலின் பருவதங்கள் பாழாகிவிட்டன, எங்களுக்கு அனுபவமாகக் கொடுக்கப்பட்டதென்று நீ அதுகளுக்கு விரோதமாகச் சொன்ன உன் நிஷ்காரங்களையெல்லாங் கர்த்தராகிய நாங்கேட்டோமென்று அப்போது அறிந்துகொள்ளுவாய்.

௰௩. நீங்கள் உங்கள் வாயினால் நமக்கு விரோதமாகப் பெருமை பாராட்டி நமக்கு விரோதமாக உங்கள் வார்த்தைகளைப் பெருகப்பண்ணினீர்கள், அதை நாங்கேட்டோம்.

௰௪. தேசமெல்லாம் மகிழ்ந்துகொண்டாட உன்னைப் பாழாக்குவோமென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.

௰௫. இஸ்ரவேல் வீட்டின் சுதந்தரம் பாழாய்ப்போனதுக்கு எப்படி மகிழ்ந்துகொண்டாயோ, அப்படியுனக்குச் செய்வோம், சேயீர் பருவதமே, எதோமே நீ முழுதும் பாழாவாய், அப்படியே நாங் கர்த்தரென்று அறிந்துகொள்ளுவார்களென்றுரைத்தாரென்று சொல்லு.

## ௩௬. அதிகாரம்.

இஸ்ரவேலர் இரட்சிக்கப்படுவார்களென்று பராபரன் கிருபையாய் வாக்குத்தத்தம் பண்ணினது.

இப்போதும், மனுஷபுத்திரனே, நீ *இஸ்ரவேலின் பருவதங்களை நோக்கித் தீர்க்கதெரிசனமுரைத்துச் சொல்லவேண்டியதாவது: இஸ்ரவேலின் பருவதங்களே, கர்த்தருடைய வார்த்தையைக் கேளுங்கோள். * ௬: ௨.

௨. கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது: பகைஞன் உங்களைக் குறித்து, * ஆகாவென்றும், நித்திய மேடுகளெங்கள் வசமான சுதந்தரமாச்சுதென்றுஞ் சொல்லுகிறபடியினாலே,
* ௨௫: ௩.

௩. நீ தீர்க்கதெரிசனமுரைத்துச் சொல்லவேண்டியதாவது: கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறதேதெனில், நீங்கள் குறைச்சாதிகளின் வசமான சுதந்தரமாயிருக்கும்படிக்கு அவர்கள் உங்களைப் பாழாக்கி, உங்களைச் சுற்றிலுமிருந்து விழுங்கினபடியினாலும், நீங்கள் பேசுகிறவர்களுடைய உதடுகளின் பேச்சுஞ் சனத்தின் அவதூறுமாகக் கப்பட்டபடியினாலும்,

௪. இஸ்ரவேலின் பருவதங்களாகிய நீங்கள் கர்த்தராகிய ஆண்டவருடைய வார்த்தையைக் கேளுங்கோள், பருவதங்களுக்கும் மேடுகளுக்கும் ஆறுகளுக்கும் பள்ளத்தாக்குகளுக்கும், பாழ்க்கடிக்கப்பட்ட அவாந்தரைகளுக்கும் வெறுமையாய்விடப்பட்ட பட்டணங்களுக்குங் கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது: சுற்றிலுமிருக்கிற குறைச்சாதிகளுக்கு நீங்கள் கொள்ளையும் பரியாசமுமாய்ப் போனபடியினாலே,

௫. கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதேதெனில், நம்முடைய தேசத்தைச் சூறையிட்டு வெளியாக்கும்படிக்கு, அதை முழுவிருதயத்தின் சந்தோஷத்தோடும், நிஷ்காரமான மனதோடுந் தங்களுக்குச் சுதந்தரமாக நேமித்துக்கொண்ட குறைச்சாதிகளுக்கு விரோதமாகவும் நம்முடைய அக்கினியான எரிச்சலினாலே பேசினோமென்று சத்தியமாகச் சொல்லுகிறோம்.

௬. ஆகையால் நீ இஸ்ரவேல் தேசத்தைக் குறித்துத் தீர்க்கதெரிசனமுரைத்து, பருவதங்களுக்கும் மேடுகளுக்கும் ஆறுகளுக்கும் பள்ளத்தாக்குகளுக்குஞ் சொல்லவேண்டியதாவது: கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறதேதென்றால், இதோ, நீங்கள் சாதிகளின் இலச்சையைச் சுமந்தபடியினாலே, நாம் நம்முடைய எரிச்சலினாலும் நம்முடைய உக்கிரத்தினாலும் பேசினோம்.

௭. ஆனதுகொண்டு கர்த்தராகிய ஆண்டவராயிருக்கிற நாம், * நமதுகரத்தையேறெடுத்துச் சொல்லுகிறதேதென்றால், உங்களைச் சுற்றிலுமிருக்கிற சாதிகளே தங்களுடைய இலச்சையைச் சுமப்பார்கள். * ௨௰: ௫.

௮. இஸ்ரவேலின் பருவதங்களாகிய நீங்களோவென்றால், உங்கள் கொப்புகளைவிட்டு, நமதுசனமாகிய இஸ்ரவேலுக்கு உங்கள் கனிகளைக் கொடுப்பீர்கள், ஏனெனில் இவர்கள் வரச்சமீபமாயிருக்கிறார்கள்.

௯. ஏனெனில் இதோ, நாம் உங்களுக்காக விசாரிப்பாயிருந்து, உங்களண்டைக்கு நம்முகத்தைத் திருப்புவோம், நீங்கள் பண்படுத்தப்பட்டு விதைக்கப்படுவீர்கள்.

௰. நாம் உங்கள் மேலெல்லாம் இஸ்ரவேலுடைய வீட்டாரனைத்தின் மனுஷரை வர்த்திக்கப்பண்ணுவோம், பட்டணங்கள் குடியேற்றப்பட்டு அவாந்தரையானதலங்கள் கட்டிவிக்கப்படும்.

௰௧. உங்கள் மேலே மனுஷரையும் மிருகசீவனங்களையும் பெருகிப் பலுகும்படிக்கு வர்த்திக்கப்பண்ணுவோம், உங்கள் பூருவநாளக்களில் நீங்கள் இருந்த இருப்பாக நாம் உங்களை ஸ்தாபித்து, உங்கள் முந்தின நாளக்களைப் பார்க்கிலும் நற்சிருண்டாக்குவோம், அப்படியே நாங் கர்த்தரென்றறிந்துகொள்ளுவீர்கள்.

௰௨. நாம் உங்கள்மேலே நமது சனமாகிய இஸ்ரவேலின் மனுஷரை நடமாடப்பண்ணுவோம், அவர்கள் உன்னைக் கையாளுவார்கள், அவர்களுக்குச் சுதந்தரமாயிருப்பாய், நீயினிமேல் அவர்களைச் சாகக்கொடுப்பதில்லை.

௰௩. கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது: உங்களை நீ மனுஷரைப்பட்சிக்கிறதேசமென்றும், நீயுன்சாதிகளைச் சாகக்கொடுக்கிறதேசமென்றும் மனுஷர் சொல்லுகிறபடியினாலே,

௰௪. நீயினிமேல் மனுஷரைப் பட்சிப்பதுமில்லையென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.

௰௫. நாம் இனிமேல் புறச்சாதிகளின் இலச்சையையுனனிடத்தில் கேளக்கப்பண்ணுவதுமில்லை, நீசனசதளங்களின் நிந்தையை யினிமேல் சுமப்பதுமில்லை, நீயினிமேல் உன்சாதிகளைச்



தாக

சாகக்கொடுப்பதுமில்லையென்று கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறாரென்று சொல்லென்றார்.

௰௬. பின்னையுங் கர்த்தருடைய வார்த்தையெனக்குண்டாகி, அவர் சொன்னதாவது:

௰௭. மனுஷபுத்திரனே, இஸ்ரவேல்வீட்டார் தங்கள் சீமையிலே குடியிருக்கக்கொள்ள, அதைத் தங்கள் மார்க்கத்தினாலுந் தங்கள் செய்கைகளினாலுந் தீட்டுப்படுத்தினார்கள், அவர்களுடைய மார்க்கம் நம்முடைய முகத்துக்குமுன்பாகத் *தூரஸ்திரீயின் தீட்டத்தைப்போலிருந்தது.

* ௩. மோசே. ௰௫: ௰௯. மீ. எசா. ௬௪: ௬.

௰௮. ஆகையினாலே தேசத்திலே அவர்கள் சிந்தின இரத்தத்தினிமித்தியமும், அதையவர்கள் தங்கள் நரகலான தேவர்களால் தீட்டுப்படுத்தினதினிமித்தியமும் நாம் நம்முடைய உக்கிரத்தையவர்கள் மேலூற்றி,

௰௯. அவர்களைப் புறச்சாதிகளுக்குள் சிதறவடித்தோம், தேசங்களில் தூற்றிப்போடப்பட்டார்கள், அவர்களுடைய மார்க்கத்தின்படியேயும் அவர்களுடைய செய்கையின்படியேயும் அவர்களை நியாயந்தீர்த்தோம்.

௨௰. தாங்கள் போன புறச்சாதிகளிடத்திலே அவர்கள் வந்தபோது: இவர்களோ கர்த்தருடைய சனமென்றும், தங்கள் தேசத்திலிருந்து புறப்பட்டார்களென்றும், தங்களுக்குச் சொல்லப்பட்டதினால் *அவர்கள் நம்முடைய பரிசுத்தநாமத்தைப் பரிசுத்தக்குலைச்சலாக்கினார்கள்.

* எசாயா. ௫௨: ௫. ரோம. ௨: ௨௪.

௨௧. ஆகையால், இஸ்ரவேல்வீட்டார் தாங்கள் வந்து சேர்ந்த புறச்சாதிகளிடத்திலே பரிசுத்தக்குலைச்சலாக்கின *நம்முடைய பரிசுத்தநாமத்தினிமித்தியமாகவேயிரங்குகிறோம்.

* ௨௰: ௰௯. ௪. மோசே. ௰௪: ௰௪. மீ.

௨௨. ஆனதுகொண்டு நீ இஸ்ரவேல்வீட்டாருக்குச் சொல்லவேண்டியதாவது: கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறதேதெனில், இஸ்ரவேல்வீட்டாரே, உங்கள் நிமித்தியமல்ல நீங்கள் வந்து சேர்ந்த புறச்சாதிகளிடத்திலே பரிசுத்தக்குலைச்சலாக்கின நம்முடைய பரிசுத்தநாமத்தினிமித்தியமே நாமிப்படிச் செய்கிறோம்.

௨௩. புறச்சாதிகளின் நடுவே நீங்கள் பரிசுத்தக்குலைச்சலாக்கினதினாலே அவர்களுக்குள் பரிசுத்தமற்றுப்போன நம்முடைய பெரியநாமத்தை நாம் பரிசுத்தம்பண்ணுவோம், அப்போது புறச்சாதிகள் தங்கள் கண்களுக்கு முன்பாக நாம் உங்களுக்குள் பரிசுத்தம்பண்ணப்படுகையில், நாங் கர்த்தரென்பதை யறிந்து கொள்ளுவார்களென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.

௨௪. நாம் உங்களைப் புறச்சாதிகளிடத்திலிருந்து அழைத்து, உங்களைச் சகல தேசங்களிலுமிருந்து கூட்டிக்கொண்டு, உங்களை யுங்கள் தேசத்திலே வரப்பண்ணி,

௨௫. நீங்கள் சுத்தமாகும்படிக்கு* உங்கள் பேரிலே சுத்தமான தண்ணீரைத் தெளிப்போம், நாம் உங்களுடைய எல்லா அசுத்தங்களையும் உங்களுடைய எல்லா நரகலான தேவர்களையுமீக்கி யுங்களைச் சுத்தமாக்கி,

* எசாயா. ௪௪: ௩. சகரி. ௰௩: ௧.

௨௬. *உங்களுக்குநவமான இருதயத்தைக் கொடுத்து, உங்கள் உள்ளத்திலே புதிதான ஆவியைக்கட்டளையிட்டு, கல்லான இருதயத்தை யுங்கள் மாங்கிஷத்திலிருந்தெடுத்துப்போட்டு, சதையான இருதயத்தை யுங்களுக்குக்கொடுத்து,

* ௰௧: ௰௯.

௨௭. உங்கள் உள்ளத்திலே *நம்முடைய ஆவியைத்தந்து, உங்களை நமது **கட்டளைகளில் நடக்கவும், நமது நியாயங்களைக் கைக்கொள்ளவும் அதுகளின்படி செய்யவும் பண்ணுவோம்.

* தீத்து. ௩: ௪—௭. ** ௩௭: ௨௪.

௨௮. உங்கள் பிதாக்களுக்கு நாங் கொடுத்த தேசத்திலே நீங்கள் குடியிருந்து, *நமக்குச் சனமாயிருப்பீர்கள், நாம் உங்களுக்குப் பராபரனாயிருந்து, *யெரே. ௩௧: ௩௩. ௩௨: ௩௮.

௨௯. உங்கள் அசுத்தங்களையெல்லாம் நீக்கி, உங்களை யிரட்சித்து, உங்கள் பேரிலே பஞ்சத்தைக் கட்டளையிடாமல், கோதும்பையை வரவழைத்து, அதை வெகுத்தமாக்கி,

௩௰. நீங்கள் இனிமேல் சாதிகளுக்குள்ளே பஞ்சத்தின் நிந்தையையடையாதபடிக்கு, விருட்சங்களின் கனிகளையும் வயலின் பலனையும் வெகுத்தமாக்குவோம்.

௩௧. * அப்போது நீங்கள் உங்கள் பொல்லாத மார்க்கங்களையும், நல்லதல்லாதிருந்த உங்கள் கிரியைகளையும் நினைத்து, உங்கள் அக்கிரமங்களினிமித்தியமும் உங்கள் அருவருப்புகளினிமித்தியமும் உங்களைத்தானே அரோசிப்பீர்கள்.

* ௰௬: ௬௧. மீ. ௨௰: ௪௩. மீ.

௩௨. உங்கள் நிமித்தியமாக நாமதைச் செய்யோமென்று, கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார், இது வுங்களுக்கும் அறியப்படுக்கக்கடவது.

டவது, இஸ்ரவேல் வீட்டாரே, உங்கள் மார்க்கங்களினிமித்தியம் வெட்கி நாணுங்கோள்.

௩௩. கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது: நாம் உங்களை அக்கிரமங்களெல்லாம் நீக்கியுங்களைச் சுத்தமாக்குங் காலத்திலே பட்டணங்களைக் குடியேற்றுவிப்போம், அவாந்தரையான தலங்களுங் கட்டுவிக்கப்படும்.

௩௪. பாழான நிலம் கடக்கிற யாவருடைய பார்வைக்குப் பாழாய்க் கிடந்ததுக்கு வதிலாக, பயிரிடப்படும்.

௩௫. பாழாய்க்கிடந்த இந்தத் தேசமே ஏதேன் தோட்டத்தைப்போலாச்சுதென்றும், அவாந்தரையும் பாழும் நிர்மூலமுமாயிருந்த பட்டணங்கள் அரணிப்பானதுகளுங் குடியேறினதுகளுமாயிருக்குதென்றுஞ் சொல்லுவார்கள்.

௩௬. * கர்த்தராகிய நாம் நிர்மூலமானதுகளைக் கட்டுகிறோமென்றும், பாழானதைப் பயிர்நிலமாக்கிறோமென்றும், அப்போதுங்களைச் சுற்றிலும் மீதியான சாதிகள் அறிந்து கொள்ளும் * * கர்த்தராகிய நாம் இதைச் சொன்னோம், இதைச் செய்கிறவருமாயிருப்போம்.

* ஓசே. ௬: ௧. * * மள: ௨௧.

௩௭. கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது: இன்னம் இஸ்ரவேல் வீட்டார் நாந்தங்களுக்குக் கட்டளையிட, நம்மைக் கேட்கும் விண்ணப்பத்தை நாம் அங்கிகரித்து, மனுஷமந்தையைப்போல் அவர்களைப் பெருகப்பண்ணுவோம்.

௩௮. பரிசுத்தம் பண்ணப்பட்ட ஆடுகளும் * யெருசலேமிலே அதின் பண்டிகைகளில் வருகிற ஆடுகளும் எப்படித் திரளாயிருக்குதோ, அப்படி அவாந்தரையாயிருந்த பட்டணங்கள் மனுஷரின் மந்தையால் நிரம்பியிருக்கும், அப்படி நான் கர்த்தரென்பதையறிந்துகொள்ளுவார்களென்று சொல்லென்றார்.

## ௩௭. அதிகாரம்.

மூந்தின அதிகாரத்தில் எழுதியிருக்கிற வாக்குத்தத்தத்தைப்பரப்பான. உயிர்த்த எலும்புகளின் தெரிசனத்தாலும், யூதா இஸ்ரவேல் என்ற இரண்டு இராச்சியங்களின் கோல்கள் ஒரே கோலாக இணைக்கப்பட்ட அடையாளத்தினாலுந் திடப்படுத்தினது.

**க**ர்த்தருடைய கையென்மேல் வந்து, கர்த்தர் என்னை ஆவிக்குள் வெளியே கொண்டு போய், எலும்புகளால் நிறைந்த ஒரு பள்ளத்தாக்கின் நடுமையத்திலென்னை நிறுத்தி,

௨. என்னை அதுகளின் ஓரமாய்ச் சுற்றிலுஞ் சட்கப் பண்ணினார். இதோ, பள்ளத்தாக்கின் வெட்டவெளியிலே அதுகள் மகா திரளாகக் கிடந்தது, இதோ, மெத்த உலர்ந்ததுமாயிருந்தது.

௩. மனுஷபுத்திரனே, இந்த எலும்புகள் உயிர்க்குமோவென்று அவர் என்னைக் கேட்டார். அதுக்கு நான்: கர்த்தராகிய ஆண்டவரே, தேவரீர் அதையறிவீரென்றேன்.

௪. அப்போதவர் என்னோடே சொன்னதாவது: நீயிந்த எலும்புகளைக் குறித்துத் தீர்க்கதெரிசனமுரைத்து, அதுகளைப் பார்த்துச் சொல்லவேண்டியதாவது: உலர்ந்த எலும்புகளே, கர்த்தருடைய வார்த்தையைக் கேளுங்கோள்.

௫. கர்த்தராகிய ஆண்டவர் இந்த எலும்புகளுக்குச் சொல்லுகிறதாவது: இதோ, நாம் உங்களில் ஆவியைப் பிரவேசிக்கப் பண்ணுவோம், அப்போதுயிர்ப்பீர்கள்.

௬. நாம் உங்கள் பேரிலே நரம்புகளைக் கட்டிவிட்டு, உங்கள் பேரிலே மாங்கிஷம் மேற்றி, உங்கள் பேரிலே தோலைப் போர்த்தி, உங்களில் ஆவியைக் கட்டளையிடுவோம், அப்போதுயிர்த்து நாங் கர்த்தரென்றறிந்து கொள்ளுவீர்களென்றுரைக்கிறோமென்று சொல்லென்றார்.

௭. எனக்குக் கற்பிக்கப்பட்டபடி நான் தீர்க்கதெரிசனமுரைத்தேன், அப்போது நான் தீர்க்கதெரிசனமுரைக்கையில், இரைச்சலுண்டாச்சுது, இதோ, அசைவுண்டாகி, எலும்புகள் ஒவ்வொன்று தன்தன் எலும்போடே சேர்ந்துகொண்டது.

௮. இதோ, அதுகள் பேரிலே நரம்புகளும் மாங்கிஷமும் எறிற்றென்றும், அதுகளின் பேரிலே மேற்புறமெங்கும் தோலைப் போர்த்தினதென்றுங் கண்டேன், ஆனால் அதுகளில் ஆவியில்லாதிருக்குது.

௯. அப்போதவர் என்னோடே சொன்னதாவது: ஆவியை நோக்கித் தீர்க்கதெரிசனமுரை மனுஷபுத்திரனே, நீ தீர்க்கதெரிசனமுரைத்து, ஆவியை நோக்கிச் சொல்லவேண்டியதாவது: கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறதேதெனில், ஆவியே, நீ நாற் காற்றுத் திசைகளிலுமிருந்து வந்து, கொல்லுண்ட இவர்கள் உயிர்க்கும்படிக்கு இவர்களில் ஊதென்கிறோமென்று சொல்லென்றார்.

௰.

௰. எனக்குக் கற்பிக்கப்பட்டபடி நான் தீர்க்கதெரிசனமுரைத்தேன்; அப்பொழுது ஆவி அவர்களுக்குள் பிறவேசித்தது, அவர்கள் உயிர்த்து தங்கள் கால்களின்மேல் நின்றார்கள், மகா திரள்ச்சேனையாயிருந்தது.

௰௧. அப்பொழுதவர் என்னோடே சொன்னதாவது: மனுஷபுத்திரனே, இந்த எலும்புகள் இஸ்றுவேல்வீட்டார் அனைவருந்தானே. இதோ, எங்கள் எலும்புகள் உலர்ந்தது, எங்கள் நம்பிக்கை யழிந்தது, நாங்கள் அறுப்புண்டோமென்கிறார்கள்.

௰௨. ஆகையால் நீ தீர்க்கதெரிசனமுரைத்து அவர்களோடே சொல்லவேண்டியதாவது: கற்தராகிய ஆண்டவர் உரைக்கிறதேதெனில், இதோ நம்முடைய சனமே, நாம் உங்கள் பிரேதக்குழிகளைத் திறந்து, உங்களை யுங்கள் பிரேதக்குழிகளிலிருந்தேறவும், உங்களை இஸ்றுவேலச்சீமைக்குவரவும் பண்ணுவோம்.

௰௩. நம்முடைய சனமே, நாம் உங்கள் பிரேதக்குழிகளைத் திறந்து, உங்களை யுங்கள் பிரேதக்குழிகளிலிருந்தேறப்பண்ணும்போது, நாங் கற்தரென்றறிந்துகொள்ளுவீர்கள்.

௰௪. நம்முடைய ஆவியை யுங்களுக்குள்க் கொடுப்போம், அதனால் உயிர்ப்பீர்கள், நாம் உங்களை யுங்கள் சீர்மையிலும் வைப்போம், அப்பொழுது நாங் கற்தரென்றறிந்து கொள்ளுவீர்கள், இதைச் சொன்னேம், இதைச் செய்கிறவருமாயிருப்போமென்று கற்தர் உரைக்கிறாரென்று சொல்லென்றார்.

௰௫. பின்னையுங் கற்தருடைய வாற்தையென்னக்குண்டாகி, அவர் சொன்னதாவது:

௰௬. இப்பொழுதும், மனுஷபுத்திரனே, நீயொரு கோலை வாங்கிக்கொண்டு, அதிலே: யூதாவுக்கும் அதைச்சேர்ந்த இஸ்றுவேல்புத்திரருக்கும் அடுத்ததென்றெழுதி, பின்னொரு கோலை வாங்கிக்கொண்டு, அதிலே: எப்பிறயீமுக்கும் அதைச்சேர்ந்த இஸ்றுவேல் வீட்டாரனைவருக்கும் அடுத்தயோசேப்பின் கோலென்றெழுதி,

௰௭. அதுகள் உன் கையில் ஒன்றும்படிக்கு அதுகளையுன் கொருகோலாக ஒன்றேடொன்றிசை.

௰௮. இதுகள் உனக்கென்ன அற்த்தங்கொள்ளுமென்பதை யெங்களுக்கறிவியாயோ, வென்று உன் சனத்தின் புத்திரர் உன்னைக்கேட்டால்,

௰௯. நீயவர்களோடே சொல்லவேண்டியதாவது: கற்தராகிய ஆண்டவர் உரைக்கிறதேதெனில், இதோ, எப்பிறயீமுக்கும் அதைச்சேர்ந்த இஸ்றுவேல் கோத்திரங்களுக்கும் அடுத்தயோசேப்பின் கோலை வாங்கி, இதுகளை யதோடுங் கூட யூதாவின் கோலோடே சேர்த்து, அதுகளை ஒரே கோலாக்குவோம், அதுகள் நமது கையில் ஒன்றுமென்கிறாரென்று சொல்லு.

௨௰. சொல்லுகையில், நீ யெழுதின கோல்கள் அவர்களுடைய கண்களுக்கு முன்பாக வுன் கையிலிருக்கவேணும்.

௨௧. நீயவர்களோடே சொல்லவேண்டியதாவது: கற்தராகிய ஆண்டவர் உரைக்கிறதேதெனில், இதோ, * நாம் இஸ்றுவேல் புத்திரரை யவர்கள் போய்ச்சேர்ந்த சாதிகளிடத்திலிருந்தழைத்து, சுற்றிலுமிருந்து அவர்களைச்சேர்த்து, அவர்களை யவர்கள் சீமையிலே வரப்பண்ணி,

* ௩௬: அதி. ௨௪.

௨௨. அவர்களை இஸ்றுவேலின் பருவதங்களாகிய தேசத்திலே * ஒரே சாதியாக்குவோம், ஒரே இராசா அவர்களெல்லாருக்கும் இராசாவாகவிருப்பார், அவர்கள் இனிரண்டு சாதிகளாயிருப்பதில்லை, அவர்கள் இனிமேலுக்கு இரண்டிராச்சியங்களாகப் பிரிவதுமில்லை.

* ஓசெ. ௧: அதி. ௰௧.

௨௩. அவர்கள் இனித் தங்கள் நரகலான தேவர்களினாலுந் தங்கள் அருவருப்புகளினாலுந் தங்களுடைய சகல மீறுதல்களினாலுந் தங்களைத் தீட்டுப்படுத்துவதுமில்லை, அவர்கள் பாவஞ்செய்த அவர்களுடைய சகல வாசஸ்தலங்களுக்குமநாம அவர்களை நீங்கலாக்கிரட்சித்து, அவர்களைச் சுத்தம் பண்ணுவோம், அப்பொழுது * நமக்குச்சனமாகவிருப்பார்கள், நாம் அவர்களுக்குப் பராபரனுமாகவிருப்போம். * ௩௬: அதி. ௨௮.

௨௪. * நம்முடைய தாசனாகிய தாவீது அவர்கள் மேல் இராசாவாகவிருப்பார், ஒரே மேய்ப்பர் அவர்களெல்லாருக்கு மிருப்பார், * * அப்பொழுதவர்கள் நமது நியாயங்களில் நடந்து, நமது கட்டளைகளைக்கொண்டு அதுகளின்படியே செய்து, * ௩௪: ௨௩. ௨௪. யோவா. ௰: ௰௬.

* * ௩௬: அதி. ௨௭.

௨௫. நாம் நம்முடைய தாசனாகிய யாக்கோபுக்குக்கொடுத்ததும் உங்கள் பிதாக்கள் குடியிருந்ததுமான தேசத்திலே குடியிருப்பார்கள், அவர்களும் அவர்கள் பிள்ளைகளும், அவர்களுடைய பிள்ளைகளின் பிள்ளைகளும் அதிலேயென்றென்றைக்

றைக்

றக்குக் குடியிருப்பார்கள், நம்முடைய தாசனாகிய தாவீது என்றென்றைக்கும் அவர்களுக்குப் பிரபுவாயிருப்பார்.

௨௬. *நாம் அவர்களோடே சமாதானத்தின் உடன்படிக்கையைப் பண்ணுவோம், அது அவர்களுக்கு நித்திய உடன்படிக்கையாயிருக்கும், நாம் அவர்களை நிலைப்படுத்தி, அவர்களைவர்த்திக்கப்பண்ணி, அவர்கள் நடுவிலே நம்முடைய பரிசுத்தஸ்தலத்தை யென்றென்றைக்கும் வைத்திருப்போம். * ௩௪: ௨௫.

௨௭. * நம்முடைய கூடாரம் அவர்களிடத்திலிருக்கும், நாம் அவர்களுக்குப் பராபரனாகவிருப்போம், அவர்கள் நமக்குச் சனமாகவிருப்பார்கள். * ௨. கொரி. ௬: ௰௬. அறி. ௨௧: ௩.

௨௮. அப்படியே நம்முடைய பரிசுத்தஸ்தலம் அவர்கள் நடுவிலே யென்றென்றைக்கும் இருக்கக்கொள்ள, நாம் இஸ்ரவேலைப் பரிசுத்தம் பண்ணுகிறகர்த்தரென்று *சாதிகள் அறிந்துகொள்ளுமென்கிறாரென்று சொல்லென்றார்.
* ௩௬: அதி. ௩௬.

## ௩௮. அதிகாரம்.

கோகும் அவனுடைய திரளான கூட்டமும் பராபரனுடைய சனத்தைக் கொள்ளையிட வந்து அடையும் பயங்கரமான ஆக்கினையின் தீர்க்கதெரிசனம்.

கர்த்தருடைய வார்த்தை யெனக்குண்டாகி, அவர் சொன்னதாவது:

௨. மனுஷபுத்திரனே, மேசெக்கு தூபால் சாதிகளின் தலையான பிரபுவாயிருக்கிற மாகோகு தேசத்தானாகிய * கோகுக்கெதிராக நீ யுன் முகத்தைத் திருப்பி, அவனுக்கு விரோதமாகத் தீர்க்கதெரிசனமுரைத்து, * ௩௯: ௧. மிடை அறிவி. ௨௰: ௮.

௩. சொல்லவேண்டியதாவது: கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறதேதெனில், மேசெக்கு தூபால் சாதிகளின் தலையான பிரபுவாகிய கோகே, இதோ, நாம் உனக்கு விரோதமாக வருவோம்.

௪. நாம் உன்னைத் திருப்பி,* உன் தாடைகளில் துறடுகளைப் போட்டு, உன்னையும் உன்னுடைய வெல்லாச் சேனையையுங் குதிரைகளையும், எல்லாருமாய்க் குறையற்ற முஸ்திதாகவுடுத்திருக்கிற குதிரைக்காறரையும், பரிசையுங் கேடையமுமுள்ள திரளான கூட்டத்தையும் புறப்படப்பண்ணுவோம், அவர்களெல்லாரும் பட்டயங்களைப் பிடித்திருப்பவர்கள். * ௨ ௯: அதி. ௪. ௩௯: அதி. ௨.

௫. அவர்களுடனே கூட பெர்சியரும் எத்தியோப்பியரும் பூத்தியருமிருப்பார்கள், அவர்களெல்லாருங் கேடையம்பிடித்து தலைச்சீராட்டு தரித்துக்கொண்டிருப்பவர்கள்.

௬. கோமேயரும் அதினுடைய எல்லா இராணுவங்களும், வடபுறங்களிலுள்ள தோகர்மா வீட்டாரும் அவர்களுடைய வெல்லா இராணுவங்களுமாகிய திரளான சனசதளங்கள் உன்னுடனே கூடவிருப்பார்கள்.

௭. நீயும், உன்னுடனே கூடின உன்னுடைய எல்லாக்கூட்டமுமாய், * ஆயித்தப்பட்டு முஸ்தீதுபண்ணிக்கொண்டு, நீயவர்களுக்குக் காவல்க்காறனாயிரு. * எசாயா. ௮: அதி. ௯.

௮. அனேகநாளுக்குப் பிற்பாடு விசாரிக்கப்படுவாய், பட்டயத்துக்கு நீங்கித் திரும்பி, அனேகசனசதளங்களிலிருந்து சேர்த்துக்கொள்ளப்பட்டவர்களின் தேசத்திலே நீ* வருஷங்களின் முடிவிலே வருவாய், எப்போதும் பாழ்க்கடிப்புக்குள்ளாயிருந்து, பிற்பாடோ வெளிச் சனசதளங்களிலிருந்து புறப்படப்பண்ணப்பட்டவர்கள் எல்லாருமாய்ச் சுகத்தோடே குடியிருக்கும் இஸ்ரவேலுடைய பருவதங்களுக்குவிரோதமாய்த்தானே. அவர்களெல்லாருமாய் அசங்காமல்க் குடியிருக்கும்போது, * அறி. ௨௰: ௭—௯.

௯. பாழ்க்கடிக்கிற கொந்தளிப்பைப்போல ஏறிவருவாய், தேசத்தை மூடும் மப்புக்குச் சமானமாயிருப்பாய், நீயும் உன்னுடைய எல்லா இராணுவங்களும், உன்னோடே கூடவிருக்குந் திரளான சனசதளங்களுந்தானே.

௰. கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது: அந்நாளிலே சம்பவிப்பதேதெனில், பாழாய்க்கிடந்து திரும்பக் குடியேற்றி விக்கப்பட்ட தலங்களுக்குவிரோதமாகவும், சாதிகளிடத்திலிருந்து சேர்க்கப்பட்டதும், ஆடுகளையும் மாடுகளையும் ஆஸ்தியையுஞ் சம்பாதித்து நடுதேசத்திலே குடியிருக்கிறதுமான சனத்துக்குவிரோதமாகவும், நீயுன் கையைத் திருப்பும்படிக்கு,

௰௧. உன்னிருதயத்தில யோசனைகள் கிளம்பும், நீ பொல்லாத நினைவை நினைப்பாய்.

௰௨. நான் கொள்ளையிடவும், சூறையாட வுங் கிராமங்களாகிய தேசத்துக்குவிரோதமாய்
பம்பா

ப்போயேறுவேன், சாங்கோபாங்கத்தோடே சுகமாய்க் குடியிருக்கிறவர்களின் மேலே வருவேன், அவர்களெல்லாரும் அலங்கமில்லாமல்க் குடியிருக்கிறார்கள், அவர்களுக்குத் தாப்பாளுமில்லை, கதவுகளுமில்லையென்பாய்.

௰௩. சேபாதேசத்தாரும், தேதானதேசத்தாரும், தற்சீசின் வர்த்தகரும் அதினுடைய இளஞ்சிங்கங்களான அனைவரும் உன்னுடனே: நீ கொள்ளையிட வல்லோ வருகிறாயென்றும், நீ சூறையாடி, வெள்ளியையும் பொன்னையும் எடுத்துக் கொள்ளுகிறதுக்கும், ஆடுகளையும் மாடுகளையும் ஆஸ்தியையும் பிடிக்கிறதுக்கும், மெத்த வுங் கொள்ளையிடுகிறதுக்கும் அல்லோ வுன்னுடைய கூட்டத்தைக் கூட்டினாயென்றுஞ் சொல்லுவார்கள்.

௰௪. ஆகையால், மனுஷபுத்திரனே, நீ தீர்க்கதெரிசனமுரைத்து, கோகுக்குச் சொல்லவேண்டியதாவது: கர்த்தராகிய ஆண்டவருரைக்கிற தேதெனில், நம்முடைய சனமாகிய இஸ்றவேல் சுகமாய்க் குடியிருக்கிற அக்காலத்திலே நீயல்லோவதையறிந்து,

௰௫. வடபுறங்களிலுள்ள உன் தானத்திலிருந்து வருவாய், நீயும் உன்னுடனே கூட்டத்திரளான சனங்களுந்தானே. அவர்கள் பெரிய கூட்டமும் திரளான சேனையுமாயிருந்து, எல்லாருங் குதிரைகளின் மேலேறுகிறவர்கள்.

௰௬. நீ தேசத்தை மூடும் மப்புக்குச் சமானமாய் நம்முடைய சனமாகிய இஸ்றவேலுக்கு விரோதமாகவேறிவருவாய், வருஷங்களின் முடிவிலே இதுசம்பவிக்கும். கோகே! சாதிகளின் கண்களுக்குமுன்பாக வுன்னிடத்தில் நாம் பரிசுத்தம் விளங்கப்படுகிறதினாலே அதுகள் நம்மையறியும் படிக்குன்னை நம்முடைய தேசத்துக்கு விரோதமாக வரப்பண்ணுவோம்.

௰௭. உன்னையவர்களுக்கு விரோதமாகவரப்பண்ணுவோமென்று, பூருவநாள்களில் வருஷங்களைக் குறித்துத் தீர்க்கதெரிசனமுரைத்து இஸ்றவேலின் தீர்க்கதெரிசிகளாகிய நம்முடைய ஊழியக்காரரைக்கொண்டு நாம் அந்நாள்களிலே சொன்னவன் நீயல்லவோவென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.

௰௮. இஸ்றவேல் தேசத்துக்கு விரோதமாகக் கோகு வரும் நாளாகிய அன்றைக்குச் சம்பவிப்பதேதெனில், நம்முடைய உக்கிரம் நம்முடைய நாசியிலேறுமென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.

௰௯. அந்நாளிலே இஸ்றவேல் தேசத்திற் பெரிய அதிர்த்தலுண்டாகி,

௨௰. நம்முடைய பிரசன்னத்தினால் சமுத்திரத்து மச்சங்களும், ஆகாசத்துப் பறவைகளும் வெளியின் மிருகங்களும், தரையில் ஊருகிற சகல ஊர்வனங்களும், தேசமெங்குமுள்ள சகலமானிடர்களும் அதிரும், பருவதங்களிடியும், செங்குத்தான துகள் விழும், எல்லா மதில்களுந் தரையிலே விழுந்து போமென்று நம்முடைய எரிச்சலினும் நம்முடைய சினத்தின் அக்கினியினும் சத்தியப்பிரமாணமாய்ச் சொல்லுகிறோம்.

௨௧. நம்முடைய எல்லாப் பருவதங்களிலும் பட்டையத்தையவனுக்கு விரோதமாக வரவழைப்போமென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார், அவனவன் பட்டையம் அவனவனுடைய சகோதரனுக்கு விரோதமாயிருக்கும்.

௨௨. பெருவாரிக்காச்சலும் இரத்தமும் வழங்கும்படியாக நாம் அவனோடே நியாயத்துக்குட் பிரவேசித்து, அவன் மேலும் அவன் இராணுவங்களின் மேலும் அவனோடிருக்குந் திரளான சனசதளங்களின் மேலும் வெள்ளமாயடிக்கும் மழையையும், பருங்கன் மழையின் கல்லுகளையும் *அக்கினியையுங் கெந்தகத்தையும் வருஷிக்கப்பண்ணுவோம். * சங்கீ. ௰௧: அதி. ௬.
அறிவி. ௨௰: ௯.

௨௩. அப்படியே நாம் அனேக சாதிகளின் கண்களுக்கு முன்பாக நம்முடைய மகத்துவத்தையும் நம்முடைய பரிசுத்தத்தையும் விளங்கப்பண்ணி, அறியப்படுவோம், அப்போது நாங் கர்த்தரென்றறிந்து கொள்ளுவார்கள்.

## ௩௯. அதிகாரம்.

அப்பாலுங் கோகின் பேரிலும் மாகோகின் பேரிலும் பராபரன் இறங்கப்பண்ணும் ஆக்கினைகளின் தீர்க்கதெரிசனம்.

இப்போதும், மனுஷபுத்திரனே, *நீ கோகுக்கு விரோதமாகத் தீர்க்கதெரிசனமுரைத்து, சொல்லவேண்டியதாவது: கர்த்தராகிய ஆண்டவருரைக்கிறதேதெனில், மேசேக் தூபால் சாதிகளின் தலையான பிரபுவாகிய கோகே, இதோ, நாம் உனக்கு விரோதமாக வருகிறோம்.
* ௩௮: அதி. ௨. வச.

௨. நாமுன்னைத் திருப்பி, உன்னை ஆறுதோ

றட்டுக்கொள்ளவிழுத்து, உன்னை வடபுறங்களிலிருந்தெழும்பவும், இஸ்றவேலுடைய பருவதங்களில வரவும்பண்ணி,

௩. உன் இடதுகையிலிருக்கிற உன் வில்லையுனிட துகையிலிருந்து போக்கடித்து, உன அம்புகளை யுன வலதுகையிலிருந்து விழப்பண்ணுவேம.

௪. இஸ்றவேலுடைய பருவதங்களில விழுவாய, நீயும உன்னுடைய வெல்லாராணுக்களும உன்னோடிருக்கிற சனசதனங்களுந்தானே. சகலவிதச்செட்டைகளுமுள்ள உராசுகிறபட்சிகளுக்கும, வெளியின மிருகங்களுக்கும உன்னையிரையாகக்கொடுப்போம.

௫. வெளியின விசாலத்திலேவிழுவாய, ஏனெனில நாம அதைச்சொன்னோமென்றுகறதராகிய ஆண்டவருரைக்கிறார்.

௬. நாம மாகோகிடத்திலும, தீவுகளில்ச்சுகமாய்க்குடியிருக்கிற வர்களிடத்திலும ஆக்கினியையனுப்புவோம, அப்போது நாங்கறதரென்றறிந்துகொள்ளுவார்கள.

௭. இப்படிநாமநமது சனமாகிய இஸ்றவேலினநடுவிலேநமமுடைய பரிசுத்தநாமத்தையறியப்பண்ணுவோம, நமமுடைய பரிசுத்தநாமத்தையினி பரிசுத்த குலைச்சலாக்க வொட்டோம, அப்படியே புறசாதிகளநாம இஸ்றவேலில்ப் பரிசுத்தராகியகறதரென்றறிந்துகொள்ளும.

௮. இதோ, அதுவந்தது, அதுசமபவித்ததென்றுகறதராகிய ஆண்டவர் சொல்லுகிறார், நாஞ்சொன்னநாளிதுதானே.

௯. இஸ்றவேலுடையபட்டணங்களின்குடிகளவெளியே போய, * ஆயுதங்களிலுங,கேடையங்களிலும பரிசைகளிலும, விலலுகளிலும அம்புகளிலும, வளைதடிகளிலும ஈட்டிகளிலுமஎடுத்தெரிப்பார்கள, ஏழுவருஷம அதுகளில எடுத்தெரிப்பார்கள. * சங்கீ. ௪௬: ௯.

௰. அவர்கள வெளியிலிருந்து விறகுகொண்டுவராமலும, காடுகளிலவெட்டாமலும, ஆயுதங்களிலெடுத்தெரிப்பார்கள. அவர்கள தங்களைக்கொள்ளையிட்டவர்களைக்கொள்ளையிட்டு, தங்களைச்சூறையாடினவர்களை சூறையாடுவார்களென்றுகறதராகியஆண்டவர்சொல்லுகிறார்.

௰௧. அந்நாளில்ச்சமபவிப்பதேதெனறால், அங்கேஇஸ்றவேல தேசத்திலேகோகு புதைக்கப்படுகிறஒருதலத்தை கொடுப்போம, சமுத்திரத்துக்குக்கிழக்கேவழிப்போகிறவர்களின பள்ளத்தாக்கைத்தானே, அதுகடந்து போகிறவர்களின மூக்கைப்பொத்திக்கொண்டு போகப்பண்ணும, அங்கேகோகையும அவனுடைய வெல்லாசசேவனையும்புதைத்து, அதைக்கோகுடையசேவனையின பள்ளத்தாக்கென்பார்கள.

௰௨. இஸ்றவேல்வீட்டார், தேசத்தைச்சுத்தமபண்ணும்படிக்கு அவர்களை புதைத்துத்தீரவேழுமாதஞ்செல்லும.

௰௩. தேசத்தின சனமெல்லாமபுதைத்துக்கொண்டிருப்பார்கள, நாம மகிமைப்படும அந்நாளிலே அது அவர்களுக்குக்கீறத்தியாக இருக்குமென்றுகறதராகியஆண்டவர்சொல்லுகிறார்.

௰௪. தேசத்தினை விசாலத்தைச்சுத்தமபண்ணி, அதில்கிடக்குமுறைப்பிரேதங்களை புதைக்கும்படிக்கு, நித்தவேலையாய த்தேசத்தில்ச்சுற்றித்திரியும் மனுஷரையும, சுற்றித்திரிகிறவர்களோடேகூட புதைக்கிறவர்களையும்பிறித்தெடுப்பார்கள. ஏழுமாதங்கள முடிந்தபிறபாடுஇவர்களதேடிவிசாரிப்பார்கள.

௰௫. தேசத்தில்ச்சுற்றித்திரிகிறவர்கள திரியார்கள,மனுஷனின எலும்பை அவர்களில ஒருத்தன காணும்போது, புதைக்கிறவர்கள அதைக்கோகுடையசேவனையின பள்ளத்தாக்கிலே புதைக்குமட்டும அதினண்டையிலே ஒருகுறிப்படையாளத்தை நாட்டுவான.

௰௬. அங்கேஊரினபேருமண்டாய, அதுசேவனைப்புரமென்னப்படும. இப்படியேதேசத்தைச்சுத்தமபண்ணுவார்கள.

௰௭. இப்போதும, மனுபுத்திரனே, கறதராகியஆண்டவர்சொல்லுகிறதாவது: * நீசகலவித இறகுமுள்ள பட்சிகளுக்கும வெளியிலிருக்கிற சகலமிருகங்களுக்குஞ்சொல்ல வேண்டியதேதென்றால, நீங்கள கூடிக்கொண்டு, இஸ்றவேலின பருவதங்களிலநாம உங்களுக்காக அடிக்கும் பெரியபெலியடிப்பாகிய நமமுடைய பெலியடிப்புக்குச்சுற்றிலுமிருந்துவந்துசேர்ந்து மாமிஷந்தின்று, இரத்தங்குடியுங்கோள.

* அறிவி. ௰௯: அதி. ௰௭. ௰௮.

௰௮. நீங்களபராக்கிறமசாலிகளின மாம்ஷத்தைத்தின்று, பூமியினுடைய பிரபுக்களினிரத்தத்தை குடிப்பீர்கள, அவர்களெல்லாரும பாசானிலே கொழுத்துப்போன ஆட்டுக்கடாய்களுக்கும ஆட்டுக்குட்டிகளுக்கும, வெள்ளாட்டுக்கடாய்களுக்குங் காளையெருதுகளுக்குஞ் சமானமானவர்கள.

௰௯. நாம உங்களுக்காக அடிக்கும் நமமுடைய பெலி

பெலியடிப்பினாலே நீங்கள் திர்ப்தியாகக் கொழுப்பைத்தின்று, வெறியாக இரத்தங்குடித்து,

௨௰. நமது பந்தியிலே குதிரைகளையும் வாகனங்களையும், பராக்கிரமசாலிகளையுஞ் சகல யுத்த ஆட்களையுந் தின்று திர்ப்தியாவீர்களென்று கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறாரென்பதைச் சொல்லு.

௨௧. * இப்படி நமது மகிமையைப் புறச்சாதிகளுக்குள்ளே விளங்கப்பண்ணுவோம், நாஞ் செய்த நமது நியாயத்தையும் அவர்கள் மேல் நாம் போட்ட நமது கையையும் எல்லாச் சாதிகளுங் காணும். * சங்கீ. ௪௯: ௯.

௨௨. அன்று முதற்கொண்டு நாளதுவரையிலே நாந்தங்கள் பராபரனாகிய கர்த்தரென்று இஸ்ரவேல் வீட்டார் அறிந்துகொள்ளுவார்கள்.

௨௩. இஸ்ரவேல் வீட்டார் தங்கள் அக்கிரமத்தின் நிமித்தியமே சிறையிருப்பிலே கொண்டுபோகப்பட்டார்களென்பதை அப்போது புறச்சாதிகள் அறிந்துகொள்ளும்; ஏனெனில் அவர்கள் நமக்கு விரோதமாய்த் துரோகம் பண்ணின படியினாலே, நாம் நமது முகத்தை யவர்களுக்கு மறைத்து, அவர்களை யவர்கள் சத்துருக்களின் கையிலொப்புக்கொடுத்தோம், அவர்களனைவரும் பட்டயத்தாலும் விழுந்தார்கள்.

௨௪. அவர்களுடைய அசுத்தத்துக்குத் தக்கதாகவும், அவர்கள் மீறுதல்களுக்குத் தக்கதாகவும் நாம் அவர்களை நடப்பித்து நமது முகத்தை யவர்களுக்கு மறைத்தோம்.

௨௫. ஆனதுகொண்டு கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது:

௨௬. அவர்கள் தங்கள் இலச்சையையும், தாங்கள் சமாதானமாய்த் தங்களைப் பயப்படுத்துவாரில்லாமல் தங்கள் சீமையிலே குடியிருக்கையில் நமக்கு விரோதமாய்ப் பண்ணின தங்களுடைய எல்லாத் துரோகத்தையுஞ் சுமந்துவந்த பிறபாடு, நாம் யாக்கோபின் சிறையிருப்பைத் திருப்பி, * இஸ்ரவேல் வீட்டினத்துக்கும் இரங்கி, நமது பரிசுத்த நாமத்துக்காகப் பத்திவைராக்கியமாயிருப்போம்.

* ரோமர். ௰௧: ௨௬.

௨௭. நாம் அவர்களைச் சனசதளங்களிலிருந்து திரும்பிவரப்பண்ணி, அவர்களை யவர்களுடைய பகைஞரின் தேசங்களிலிருந்து கூட்டிக்கொண்டுவந்து, திரளான சாதிகளுடைய கண்களுக்கு முன்பாக அவர்களில் மகிமைவிளங்கையில்,

௨௮. அப்போது தங்களைப் புறச்சாதிகளிடத்திலச் சிறையாகக் கொண்டுபோகப்பண்ணின நாந்தங்களில் ஒருத்தனையும் அங்கே அப்புறம் வைக்காமல், தங்களைத் தங்கள் சீமையிலே திரும்பக் கூட்டிக்கொண்டுவந்தோமென்பதினாலே, நாந்தங்கள் பராபரனாகிய கர்த்தரென்றறிந்து கொள்ளுவார்கள்.

௨௯. * நாம் இஸ்ரவேல் வீட்டாரின் மேல் நமதுடைய ஆவியை ஊற்றினபோது, நமது முகத்தை இனியவர்களுக்கு மறையோமென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.

* ௩௬: ௨௫. யோவேல. ௩: ௧.

## ௪௰. அதிகாரம்.

எசேக்கியேலுக்குத் தெரிசனையிலே காண்பிக்கப்பட்ட தேவாலயத்தினுடைய முத்தங்கள் கட்டியிருந்தவிவரம்.

நாங்கள் சிறையிருப்பிலே கொண்டுவரப்பட்டிருந்த இருபத்தைந்தாம் வருஷத்தின் துவக்கமான முதலாம் மாதம் பத்தாந்தேதியாகிய அன்றே கர்த்தருடைய கையென்மேல் வந்து, அவரென்னை யவ்விடத்துக்குக் கொண்டுபோனார், * பட்டணம் அழிக்கப்பட்டது அப்போது பதினாலு வருஷமாச்சுது. * ௩௩: ௨௧.

௨. தேவதெரிசனைகளில் அவரென்னை இஸ்ரவேல் தேசத்துக்குக் கொண்டுபோய், என்னை மகா உயர்த்தியான ஒரு பருவதத்தின் மேல் நிறுத்தினார், அதின் மேலத் தெற்காக ஒரு பட்டணங் கட்டியிருக்கிறதுபோலக் காணப்பட்டது.

௩. அவரென்னை யங்கே கொண்டுபோனார்; இதோ, அங்கே ஒரு புருஷனிருந்தார், அவருடைய ரூபு வெண்கல ரூபாகவிருந்தது. அவர் கையில் சணல்க்கயிறும் ஒரு அளவுகோலுமிருந்தது, அவர் வாசலிலே நின்றார்.

௪. அந்தப் புருஷன் என்னோடே சொன்னதாவது: மனுஷபுத்திரனே: * நீ கண்ணாரப் பார்த்து, காதாரக் கேட்டு, நாம் உனக்குக் காண்பிப்பதெல்லாத்தின் பேரிலும் உன் மனதை வை, ஏனெனில் உனக்கதைக் காண்பிக்கும்படிக்கு இங்கே கொண்டுவரப்பட்டாய், நீ காண்பதையெல்லாம் இஸ்ரவேல் வீட்டாருக்கு அறிவியென்றார். * ௪௪: ௫.

௫. இதோ, வீட்டுக்குப் புறம்பே சுற்றிலும் ஒரு மதிலிருந்தது, அந்தப் புருஷன் கையிலோவென்றால் ஆறுமுழ நீளமான அளவுகோலிருந்தது,

ஒவ

ஒவ்வொரு முழம் முழத்திலும் நாலுவிரல்க்கடை அதிகமானது, அவர் அதுகட்டியிருந்த அசலத்தை ஒருகோலாகவும் உயர்த்தியை ஒருகோலாகவும் அளந்தார்.

௬. பிற்பாடவர் கீழ்த்திசைக்கெதிரான ஒலிமுகவாசலுக்குவந்து அதின் படிகளின் மேலேறி, வாசல்ப்படியை ஒருகோல் அகலமாகவும் மறுவாசல்ப்படியை ஒருகோல் அகலமாகவும் அளந்தார்.

௭. ஒவ்வொரு அறை ஒருகோல் நீளமும் ஒருகோல் அகலமுமாயிருந்தது, அறைவீடுகளுக்கு நடுவே ஐந்துமுழம் விட்டிருந்தது, வாசலின் சாலியருகே உள்வாசல்ப்படி ஒருகோலாயிருந்தது.

௮. வாசலின் சாலியையும் உள்ளே ஒருகோலாக அளந்தார்.

௯. பிறகுவாசலின் சாலியை யெட்டு முழமாகவும், அதின் தூணுதாரங்களை யிரண்டு முழமாகவும் அளந்தார், வாசலின் உள்ச்சாலியிது தானே.

௰. கீழ்த்திசைக்கெதிரான வாசலின் அறைகள் இந்தண்டை மூன்றும் அந்தண்டை மூன்றுமாயிருந்தது, அதுகள் மூன்றுக்கும் ஒருஅளவும் இந்தண்டையும் அந்தண்டையுமிருந்த தூணுதாரங்களுக்கொரு அளவுந்தானே.

௰௧. பிறகுவாசலுடைய நடையின் அகலத்தைப் பத்துமுழமாகவும் வாசலின் நீளத்தைப் பதின்மூன்றுமுழமாகவும் அளந்தார்.

௰௨. அறைகளுக்கு முன்னே இந்தண்டையொருமுழ எல்லையும் அந்தண்டையொருமுழ எல்லையுமிருந்தது, ஒவ்வொரு அறையிந்தண்டைக்காறுமுழமும் அந்தண்டைக்காறுமுழமுமாயிருந்தது.

௰௩. பிற்பாடு வாசலிலிருந்த அறையின் மெத்தையைத் துவக்கி அந்த அறையின் மெத்தைமட்டுக்கும் இருபத்தைந்துமுழமாக அளந்தார், சதவுகடெதிரேகதவிருந்தது.

௰௪. தூணுதாரங்களையோ அறுபதுமுழமாக அளவிட்டார், இந்தத் தூணுதாரங்களருகே சுற்றிலும் ஒலிமுகவாசலின் முற்றமிருந்தது.

௰௫. உட்ப்பிரவேசிக்கிற ஒலிமுகவாசலின் முகப்பைத் துவக்கி, உட்ப்புறவாசலுடைய சாலியின் முகப்புமட்டுக்கும் ஐம்பதுமுழமிருந்தது.

௰௬. வாசலுக்குள்ப்புறமாகச் சுற்றிலும் அறைகளுக்கும் அதுகளின் தூணுதாரங்களுக்கும் ஒடுக்கமான பலகணிகளிருந்தது, சாலிகளிலும் அப்படித்தானே, உட்ப்புறமாய்ச் சுற்றிலும் அந்தப்பலகணிகளுந் தூணுதாரங்களில் பேரீச்சுகளுமிருந்தது.

௰௭. பிற்பாடென்னை வெளி முற்றத்துக்கழைத்துப்போனார், இதோ அறைவீடுகளும், முற்றத்தின் சுற்றிலும் படுத்திருக்கிற தளவரிசையுமிருந்தது, முப்பது அறைவீடுகள் அந்தத்தளவரிசையிலிருந்தது.

௰௮. வாசலுக்குப்பக்கமும் வாசல்களின் நீளத்துக்கெதிருமான அந்தத்தளவரிசை தாழ்வான தளவரிசையாயிருந்தது.

௰௯. தாழ்வான வாசலின் முகப்பு துவக்கி உள் முற்றத்தினுடைய புறமுகப்புமட்டுமுள்ள விசாலத்தை யாவென்றால் கிழக்கேயும் வடக்கேயும் நூறு நூறுமுழமாக அளந்தார்.

௨௰. வெளிமுற்றத்துக்கடுத்த வடதிசைக்கெதிரான வாசலின் நீளத்தையும் அகலத்தையும் அளந்தார்.

௨௰௧. இந்தண்டை மூன்றும் அந்தண்டை மூன்றுமாகிய அதின் அறைகளும் அதின் தூணுதாரங்களும் அதின் சாலிகளும் முந்தின வாசலின் அளவுக்குச் சரியாயிருந்தது, அதின் நீளம் ஐம்பதுமுழமும் அகலம் இருபத்தைந்துமுழமுமானது.

௨௰௨. அதின் பலகணிகளும் அதின் சாலிகளும் அதின் பேரீச்சுகளும் கீழ்த்திசைக்கெதிரான வாசலின் அளவுக்குச்சரியாயிருந்தது, ஏழுபடிகளால் அதுக்கேறுகிறது, அதின் சாலிகள் அதுகளுக்கு முன்னாகவிருந்தது.

௨௰௩. வடதிசையுங் கீழ்த்திசையுமான ஒவ்வொருவாசலுக்கெதிராக உள்முற்றத்துக்கும் வாசலிருந்தது, ஒருவாசல்த்துவக்கி மறுவாசல்மட்டும் நூறுமுழமாக அளந்தார்.

௨௰௪. பிறகென்னைத் தென்திசைக்கழைத்துக்கொண்டுப்போனார், இதோ தென்திசைக்கெதிரான வாசலுமிருந்தது, இதின் தூணுதாரங்களையும் இதின் சாலிகளையும் அந்த அளவுகளுக்குச்சரியாக அளந்தார்.

௨௰௫. அந்தப்பலகணிகளுக்குச்சரியாக இதுக்கும் இதின் சாலிகளுக்கும் பலகணிகள் சுற்றிலுமிருந்தது, நீளம் ஐம்பதுமுழமும் அகலம் இருபத்தைந்துமுழமுமிருந்தது.

௨௰௬. அதில் ஏறுகிறதுக்கு ஏழுபடியும் அதுகளுக்கு முன்னாக அதின் சாலிகளுமிருந்தது, அ

தின் தூணாதாரங்களில் அதுக்குப் பேரீச்சுகளும் ஒன்று இந்தண்டையும் ஒன்று அந்தண்டையுமாயிருந்தது.

௨௭. உள்முற்றத்துக்கும் ஒருவாசல் தென்திசைக்கெதிராக இருந்தது, தென்திசைக்கு ஒரு வாசல் துவக்கி மற்றவாசல்மட்டாக நூறுமுழமாக அளந்தார்.

௨௮. பிறகு அவர் தெற்குவாசலால் என்னை உள்முற்றத்துக்கழைத்துப்போய்த் தெற்குவாசலையந்த அளவுக்குச்சரியாக அளந்தார்.

௨௯. இதின் அறைகளும், இதின் தூணாதாரங்களும் இதின் சாலைகளும் அந்த அளவுக்குச்சரியாகவிருந்தது, இதுக்கும் இதின் சாலைகளுக்கும் பலகணிகள் சுற்றிலுமிருந்தது, நீளம் ஐம்பது முழமும் அகலம் இருபத்தைந்து முழமுமாயிருந்தது.

௩௰. இருபத்தைந்து முழ நீளமும் ஐந்து முழ அகலமுமான சாலைகள் சுற்றிலுமிருந்தது.

௩௧. அதின் சாலைகள் வெளிமுற்றத்திலிருந்தது, அதின் தூணாதாரங்களில் பேரீச்சுகளுமிருந்தது, அதில் ஏறுகிறபடிகள் எட்டு.

௩௨. பிற்பாடு அவர் கீழ்த்திசை வழியாலே என்னை உள்முற்றத்துக்கழைத்துப்போய், இந்த வாசலையந்த அளவுக்குச்சரியாக அளந்தார்.

௩௩. இதின் அறைகளும் இதின் தூணாதாரங்களும் இதின் சாலைகளும் அந்த அளவுகளுக்குச்சரியாகவிருந்தது, இதுக்கும் இதின் சாலைகளுக்கும் பலகணிகள் சுற்றிலுமிருந்தது, நீளம் ஐம்பது முழமும் அகலம் இருபத்தைந்து முழமுமாயிருந்தது.

௩௪. அதின் சாலைகள் வெளிமுற்றத்திலிருந்தது, அதின் தூணாதாரங்களில் இந்தண்டையும் அந்தண்டையும் பேரீச்சுகளுமிருந்தது, அதிலேறுகிறபடிகள் எட்டு.

௩௫. பிற்பாடவர் என்னை வடக்குவாசலுக்கழைத்துப்போய், அந்த அளவுக்குச்சரியாக அளந்தார்.

௩௬. இதின் அறைகளும் இதின் தூணாதாரங்களும் இதின் சாலைகளும் அப்படித்தான். இதுக்குப் பலகணிகளும் சுற்றிலுமிருந்தது, நீளம் ஐம்பது முழமும் அகலம் இருபத்தைந்து முழமுமாயிருந்தது.

௩௭. அதின் தூணாதாரங்கள் வெளிமுற்றத்திலிருந்தது, அதின் தூணாதாரங்களில் இந்தண்டையும் அந்தண்டையும் பேரீச்சுகளுமிருந்தது, அதிலேறுகிறபடிகள் எட்டு.

௩௮. அதின் அறைகளும் அதின் கதவுகளும் வாசல்களின் தூணாதாரங்களுக்குள்ளேயிருந்தது அங்கே தகனப்பலியைக் கழுவுவார்கள்.

௩௯. வாசலின் சாலையிலோவென்றால் இந்தண்டை இரண்டு பீடங்களும் அந்தண்டை இரண்டு பீடங்களும் அதுகளின் மேல் தகனப்பலியையும் பாவம்போக்கும் பலியையும் குற்றம்போக்கும் பலியையும் அடிப்பதற்காகவிருந்தது.

௪௰. வடக்குவாசலுக்குள் பிறவேசிக்கிறதற்கு ஏறிப்போகிற வெளிப்புறத்திலே இரண்டு பீடங்களும், வாசலின் சாலையிடத்தினுள்ள மறுபுறத்திலே இரண்டு பீடங்களுமிருந்தது.

௪௧. வாசலின் புறமாய் இந்தண்டை நாலு பீடங்களும் அந்தண்டை நாலு பீடங்களும் ஆக எட்டுப்பீடங்கள் இருந்தது, அதுகளின் மேல் பலிகளையடிப்பார்கள்.

௪௨. தகனப்பலிக்கடுத்த நாலு பீடங்கள் வெட்டின கல்லாயிருந்தது, ஒன்றரை முழ நீளமும், ஒன்றரை முழ அகலமும் ஒரு முழ உயரமுமாயிருந்தது, அதுகளின் மேல் தகனப்பலிகளையும் மற்றப் பலிகளையும், அடிக்கிற ஆயுதங்களையும் வைப்பார்கள்.

௪௩. நாலு விரற்கடையான மூலைகள் உள்ளே சுற்றிலும் வரிசையாயடிக்கப்பட்டிருந்தது, செலுத்தும் பலிகளின் மாம்சமோ பீடங்களின் மேல் வைக்கப்படும்.

௪௪. உள்முற்றத்திலே உள்வாசலுக்குப் புறம்பாகப் பாடுவோர்களின் அறைவீடுகளிருந்தது, அதுகளில் வடக்கு வாசலின் பக்கமாகவிருந்தது கள் தென்திசைக்கெதிராகவும் கிழக்குவாசலின் பக்கமாகவிருந்த வேறொரு வரிசை வடதிசைக்கெதிராகவுமிருந்தது.

௪௫. அவர் என்னோடே சொன்னதாவது: தென்திசைக்கெதிராயிருக்கிற இந்த அறைவீடு ஆலயத்தின் காவலைக் காக்கிற ஆசாரியர்களுடையது.

௪௬. வடதிசைக்கெதிராகவிருக்கிற அறைகளோவென்றால் பலிபீடத்தின் காவலைக் காக்கிற ஆசாரியர்களுடையது, இவர்கள் லேவியின் புத்திரரில் கர்த்தருடைய சந்நிதானத்திலே அவருக்கு ஆராதனை செய்வதற்காகச் சேருகிற சாதோக்கின் புத்திரர் என்றார்.

௪௭. அவர் முற்றத்தை நூறுமுழ நீளமாகவும் நூறுமுழ அகலமாகவும் அளந்தார், அது சதுரமானது, பலிபீடமோ வெளிவீட்டுக்கு முன்னேயிருந்தது.

௪௮. பிற்பாடவரென்னை வீட்டின் சாலைக்கழைத்துப்போய், சாலையின் தூணுதாரத்தை இந்தண்டை ஐந்துமுழமும் அந்தண்டை ஐந்துமுழமுமாக அளந்தார். வாசலின் அகலம் இந்தண்டை மூன்றுமுழமும் அந்தண்டை மூன்றுமுழமுமாயிருந்தது.

௪௯. சாலையின் நீளம் இருபதுமுழமும் அகலம் பதினொரு முழமுந்தானே, ஏறிப்போகிற படிகள் அதற்கிருந்தது, தூணுதாரங்களிலே இந்தண்டை ஒரு தூணும் அந்தண்டை ஒரு தூணுமிருந்தது.

## ௪௧. அதிகாரம்.

### தேவாலயங் கட்டியிருந்த விவரம்.

பிற்பாடவரென்னைத் தேவாலயத்துக் கழைத்துப்போய், தூணுதாரங்களை இந்தண்டை ஆறுமுழ அகலமும், அந்தண்டை ஆறுமுழ அகலமுமாக அளந்தார், அது கூடாரத்தின் அகலம்.

௨. வாசல்நடையின் அகலம் பத்துமுழமும் வாசல்நடையின் பக்கங்கள் இந்தண்டை ஐந்துமுழமும் அந்தண்டை ஐந்து முழமுமாயிருந்தது, அதின் நீளத்தை நாற்பது முழமும் அகலத்தை இருபது முழமுமாக அளந்தார்.

௩. பிற்பாடவர் உள்ளுக்குப்போய், வாசல்நடையின் தூணுதாரங்களை இரண்டு முழமாகவும், வாசல்நடையை ஆறுமுழமாகவும் வாசல்நடையின் அகலத்தை யேழுமுழமாகவும் அளந்தார்.

௪. பிறகு அவர் தேவாலயத்தின் தரையிலே அதின் நீளத்தையிருபது முழமும், அதின் அகலத்தை இருபது முழமுமாக அளந்து, என்னுடனே: இது பரிசுத்தத்துக்கும் பரிசுத்தஸ்தலமென்றார்.

௫. பிற்பாடவர் வீட்டின் சுவரை ஆறுமுழமாகவும், வீட்டைச் சுற்றிலுமிருந்த பக்கக்கட்டினுடைய அகலத்தை நாலு முழமாகவும் அளந்தார்.

௬. இந்தப் பக்கக்கட்டுகளோவென்றால் பக்கக்கட்டின் மேற்பக்கக்கட்டான வரிசைகளாய் முப்பத்துமூன்றிருந்தது, அதுகள் வீட்டின் சுவருக்குள்ளூன்றியிராமல், பக்கக்கட்டுகளுக்காகச் சுற்றிலும், அதுகளூன்றும்படிக்கு வீட்டுக்கடுத்திருந்த ஒட்டுச்சுவரிலே பாய்ந்தது.

௭. உயரவுயரச் சுற்றிலும் பக்கக்கட்டுகளுக்கு அகலமுண்டாயிருந்தது, ஏனெனில் வீட்டைச் சுற்றிலும் உயரவுயர வீட்டினுடைய சுற்றிருந்தது, ஆனதுகொண்டு உயர அதிக அகலமுள்ளேயிருந்தது, இப்படியே கீழ்நிலையிலிருந்து நடுநிலைவழியாய் மேல்நிலைக்கேறுகிறது.

௮. மாளிகைக்கிருந்த உயரத்தையுஞ் சுற்றிலும் பார்த்தேன், பக்கக்கட்டுகளின் அஸ்திவாரங்கள் ஆறுபெரிய முழமாகிற ஒருமுழக்கோலின் உயர்த்தியாயிருந்தது.

௯. புறம்பே பக்கக்கட்டுக்கிருந்த சுவரின் அகலம் ஐந்துமுழமானது, வீட்டுக்கிருக்கும் பக்கக்கட்டுகளின் மாளிகையிலே வெறுமையாய் விட்டிருந்த இடங்களும்படித்தான.

௰. வீட்டைச்சுற்றிலும் அறைவீடுகளுக்கு நடுவாகவிருந்த விசாலம் இருபது முழமாயிருந்தது.

௰௧. பக்கக்கட்டினுடைய வாசல்நடைகள் வெறுமையாய் விட்டிருந்த இடங்களிலிருந்து, ஒருவாசல்நடை வடக்கேயும் ஒருவாசல்நடை தெற்கேயுமிருந்தது, வெறுமையாய் விட்டிருந்த இடங்களின் விசாலஞ் சுற்றிலும் ஐந்துமுழங்களாயிருந்தது.

௰௨. மேற்றிசைத்திக்கிலே வகுப்பின் முன்னிருந்த மாளிகை மட்டும் அகலம் எழுபது முழமும், மாளிகையினுடைய சுவரின் அகலஞ் சுற்றிலுமைந்து முழமும், அதினுடைய நீளந்தொண்ணூறு முழமுமாயிருந்தது.

௰௩. அவர் வீட்டை நூறுமுழ நீளமாகவும், வகுப்பையும் மாளிகையையும் அதின் சுவர்களையும் நூறுமுழ நீளமாகவும் அளந்தார்.

௰௪. வீட்டின் முற்புறமுங் கிழக்குக்கெதிரான வகுப்புமிருந்த அகலம் நூறுமுழமாயிருந்தது.

௰௫. வகுப்பின் பிற்புறமாக அதுக்கெதிரேயிருந்த மாளிகையின் நீளத்தையும், அதுக்கு இந்தண்டையும் அந்தண்டையுமிருந்த நடைகாவனங்களையும் அளந்தார், உள்ளான தேவாலயமும் முற்றத்தின் சாலைகளுமுட்பட அது நூறுமுழமாயிருந்தது.

௰௬. வாசற்படிகளும், ஒடுக்கமான பலகணிகளும் மூன்று பக்கங்களிற் சுற்றிலும் வாசல்களுக்கெதிரான நடைகாவனங்களுஞ் சுற்றிலுந் தரைதுவக்கிப் பலகணிகள் மட்டாகப் பலகையடித்திருந்தது, பலகணிகள் மட்டாக மூடப்பட்டிருந்தது.

௰௭. வாசலின்மேலே துவக்கி வீட்டின் உள்

ப்புறமும் வெளிப்புறமுமுள்ள சுற்றிலும் சுவரின் உள்ப்புறமும் வெளிப்புறமும் மெல்லாம் அளவிட்டிருந்தது.

௰௮. கேருபீன்களும் பேரீச்சுகளும் தீர்ப்பட்டிருந்தது, கேருபீனுக்கும் கேருபீனுக்கும் நடுவாக ஒவ்வொரு பேரீச்சும் * ஒவ்வொரு கேருபீனுக்கு இரண்டுமுகங்களிருந்தது. * ௰: ௰௪.

௰௯. மனுஷமுகம் இந்தண்டையிருந்த பேரீச்சுக்கெதிராகவும், சிங்கமுகம் அந்தண்டையிருந்த பேரீச்சுக்கெதிராகவும் இருந்தது.

௨௰. *தரை துவக்கி வாசலின் மேல்ப்புறமட்டாகவும், தேவாலயத்தின் சுவரிலுங் கேருபீன்களும் பேரீச்சுகளுந் தீர்ப்பட்டிருந்தது.

* ௧. இராசா. ௬: ௨௯.

௨௧. தேவாலயத்தின் கதவு நிலைகள் சதுரமும் பரிசுத்த ஸ்தலத்தினுடைய முகப்பினுருப்பு அந்தருபுக்குச் சரியுமாயிருந்தது,

௨௨. மரமான பலிபீடத்தின் உயரம் மூன்று முழமும், அதின் நீளம் இரண்டு முழமுமாயிருந்தது, அதுக்கு அதின் கோடிகளிருந்தது, அதின் நீளமும் அதின் பக்கங்களும் மரமானது, அவர் என்னுடனே: இது கர்த்தருக்கு முன்பாக இருக்கிற பீடமென்றார்.

௨௩. தேவாலயத்துக்கும் பரிசுத்த ஸ்தலத்துக்கும் இரண்டு வாசல்களும்,

௨௪. வாசல்களுக்கு மடக்குக் கதவுகளாகிய இரட்டைக் கதவுகளுமிருந்தது, ஒரு வாசலுக்கு இரண்டும் மற்ற வாசலுக்கு இரண்டு கதவுகளுந்தானே.

௨௫. சுவர்களிலத் தீர்ப்பட்டிருந்தது போலே தேவாலயத்தினுடைய அந்தக் கதவுகளில் கேருபீன்களும் பேரீச்சுகளுந் தீர்ப்பட்டிருந்தது, புறம்பே சாலையின் முன்பாக உத்திரங்களிருந்தது.

௨௬. சாலையின் பக்கங்களில் இந்தண்டையிலும் அந்தண்டையிலும், வீட்டினுடைய பக்கக்கட்டுகளிலும் ஒடுக்கமான பலகணிகளிலும் பேரீச்சுகளும் உத்திரங்களுமிருந்தது.

௪௨. அதிகாரம்.

வெளிமுற்றமும் வெளிமதிலுங் கட்டியிருந்த விவரம்.

பிறபாடவர் என்னை வடதிசையான வழியாய் வெளிமுற்றத்திலே புறப்படப்பண்ணி, வருப்புக்கெதிராகவும் மாளிகைக்கெதிராகவும் வடக்கேயிருந்த அறைவீடுகளுக்கென்னையழைத்துப்போனார்.

௨. நூறுமுழ நீளத்துக்கு முன்னாக வடக்கு வாசலிருந்தது, அவ்விடத்து அகலம் ஐம்பது முழம்.

௩. உள் முற்றத்திலிருந்த இருபது முழங்களுக்கெதிராகவும் வெளி முற்றத்திலிருந்த தளவரிசைக்கெதிராகவும், ஒன்று க்கொன்றெதிரான மூன்று நிலைகளுள்ள நடைசாவணங்களிருந்தது.

௪. உள்ப்புறத்திலே அறைவீடுகளின் முன்பாகப் பத்துமுழ அகலமான வழியும், ஒருமுழ அடிப்பாடுமிருந்தது, அதுகளின் வாசல்கள் வடக்காயிருந்தது.

௫. உயரவிருந்த அறைவீடுகள் அகலக்கட்டையாயிருந்தது, ஏனெனில் நடைசாவணங்கள் கீழேயிருக்கிற அறைவீடுகளுக்கும் நடுவேயிருக்கிறதுகளுக்குமின்னும் உயர்த்தியான மாளிகையாயிருந்தது.

௬. ஏனெனில் அதுகள் மூன்றுநிலையானதுகள், அதுகளுக்கு முற்றங்களின் தூண்களுக்கொத்த தூண்களுமில்லை, ஆகையாலத் தரையிலிருந்து அதுகள் கீழேயும் நடுவேயுமிருக்கிறதுகளைப்பார்க்க அகலக்கட்டையாயிருந்தது.

௭. புறம்பே அறைவீடுகளுக்கெதிரே வெளிமுற்றத்துத் திசையில் அறைவீடுகளுக்கு முன்பாகவிருந்த மதிலின் நீளம் ஐம்பது முழம்.

௮. ஏனெனில் வெளிமுற்றத்திலுள்ள அறைவீடுகளின் நீளம் ஐம்பது முழந்தானே, ஆனாலிதோ, தேவாலயத்துக்கு முன்னானது நூறுமுழமாயிருந்தது.

௯. கிழக்கே வெளிமுற்றத்திலிருந்து அந்த அறைவீடுகளுக்குள் பிரவேசிக்கிற நடை அதுகளின் கீழே இருந்தது.

௰. கீழ்த்திசையான முற்றத்து மதிலின் அகலத்திலே வருப்புக்கு முன்பாகவும் மாளிகைக்கு முன்பாகவும் அறைவீடுகளுமிருந்தது.

௰௧. அதுகளுக்கு முன்னான வழியிலே அதுகள் தங்கள் நீளத்திலுந் தங்கள் அகலத்திலும், தங்களுடைய வெல்லா வாசல்ப்படிகளிலும், தங்கள் திட்டங்களிலுந் தங்கள் வாசல் நடைகளிலும் வடதிசையான அறைவீடுகளின் சாயலாயிருந்தது.

௰௨. தென்றிசையான அறைவீடுகளின் வாசல் நடைக்கொப்பாக ஒரு வாசல் நடை வழியின் முகப்பிலிருந்தது. கீழ்த்திசையில் அதுகளுக்குப்

பிறவே

பிறவேசிககுமிடததிலேசெமமையானமதிலின முனனேயிருநதவழியினமுகபபிலேதானே.

௰௩. அவர் எனனோடேசொனனதாவது:வ ருபபுககு முனனிருககிற வடபுறமான அறைவீ டுகளுந்தென்புறமான அறைவீடுகளும பரிசுதத அறைவீடுகளாயிருககுது,கறதனணடைககுசசே ருகிறஆசாரியர்அஙகேபரிசுததததுககுபபரிசுத தமானதையும, காணிககையையுமபாவமபோக கும பெலியையும, குறறமபோககும பெலியை யும வைபபார்கள,ஏனெனில அநதஸதலமபரிசு ததமாயிருககுது.

௰௪. ஆசாரியர் உள்பபிறவேசிததபோது, அவர்களபரிசுததஸதலததிலிருநதுவெள்முறறத துககுபபுறபபடாததுககு முனனே, அஙகே தாஙகளஆராதனை செயது, உடுததியிருநதவஸ திரஙகளை ககழறறி வைபபார்கள, ஏனெனில அதுகளபரிசுததமானதுகள, வேறேவஸதிரங களையுடுததிககொணடுசனததின முறறததிலே சேருவார்களெனறார்.

௰௫. அவர்உள்வீடடையளநதுதீர்நதபிறபாடு கீழ்த்திசைககெதிரானவாசல வழியாயெனனை வெளியேயழைததுககொணடுபோய, அதைச சுறறிலும அளநதார்.

௰௬. கீழ்ககாறறுபபககததையளவுகோலா லேயளநதார். அது அளவுகோலினபடியேசுற றிலும அநநூறுகோலகளாயிருநதது

௰௭. வடகாறறு பபககததை யளவு கோலா லேசுறறிலும அநநூறுகோலகளாயளநதார்.

௰௮. தெனகாறறுபபககததையளவுகோலா லே அநநூறுகோலகளாயளநதார்.

௰௯. மேல்க்காறறுபபககததுககுததிருமபி ககொணடுஅளவுகோலாலே அநநூறு கோலக ளாயளநதார்.

௨௰. நாலு காறறுபபககஙகளிலும அதைய ளநதார், *பரிசுததமானதுககுமபரிசுததமலலாத துககும விததியாசமபணணும்படிககு, அதுக கு அநநூறு கோலநீளமும அநநூறுகோல்அக லமுமான மதிலசசுறறிலுமிருநதது,

௪௩. அதிகாரம.

தேவாலயஙகறததருடையமகிமையினாலேநி ரபபபபடட தெரிசனை.

அபபோது அவனெனனை ககீழ்த்திசைக கெதிர்வாசலாகியவாசலுககழைததுபோ னார்.

௨. இதோ, இஸருவேலுடையபராபரனின மகிமைகீழத்திசையிலிருநது வநதது. * அவரு டைய சததநதிரளானதணணீர்களின இரைசசலை ப்போலிருநதது. அவருடைய மகிமையினாலே பூமிவெளிசசமாசசுது. * ௧: அதி. ௨௪.

அறிவி. ௧: அதி. ௰௫.

௩. நானகணட இநதத்தெரிசனை *நானபடட ணததை அழிபபுககு வநதபோது கணட தெரிசனை யினசாயலாயிருநதது. இநததெரிசனைகள ** கேபார்நதியணடையிலேநானகணடிருநததெரி சனையைப்போலுமிருநதது, நானமுகஙகுப்புற விழுநதேன. * அ: அதி. ௪. ** ௧:அதி.௩மி.

௪. கறதருடையமகிமைககீழ்த்திசைககெதிரா னவாசல வழியாயவீடடுககுள்பபிறவேசிததது.

௫. அபபோது ஆவியெனனையெடுதது,எ னனையுள்முறறததிலேககொணடுபோயவிடடது. இதோ, * கறததருடைய மகிமைவீடடைநிரபபி றறு. * ௨. மோசே. ௪௰; ௩௪.

௧. இராசா. ௮: அதி. ௰. ௰௧.

௬. அவர்வீடடிலிருநது எனனுடனே பே சுகிறதைககேடடேன, புருஷன எனனணடை யிலேநினறிருநதார்.

௭. அவர்எனனோடேசொனனதாவது:மனு பபுததிரனே, இது நாம எனறெனறைககும இ ஸருவேலின புததிரரினநடுவே வாசமபணணப போகிற நமமுடையஆசனததின தானமுமநம முடைய உளளங காலகளின தானமுமாயிருககு து,இனிஇஸருவேலவீடடாருமஅவர்களுடைய இராசாககளுமநமது பரிசுததநாமததைத்தஙகள மேடைகளிலே தஙகள வேசிததனததினாலுந தங கள இராசாககளின *பிரேதஙகளினாலுந்தீடடுப படுததுவதிலலை. * யெரேமி. ௰௬: ௰௮.

௮. அவர்களநமககுந்தஙகளுககும நடுவே* ஒருசுவரேயிருககும்படியாக, தஙகளவாசல பப டியை நமமுடைய வாசலபபடி யணடையிலுந் தஙகளவாசல்நிலைகளை நமமுடைய வாசலநிலை களணடையிலுஞ்சேர்தது, நமது பரிசுதத நாமத தைத்தாஙகள்செயத அருவருபபுகளினாலேதீடடு பபடுததினார்கள. ஆகையால நமமுடைய கோபத தினாலே அவர்களை நாசமாககினோம.

௯. இபபோது அவர்களதஙகள வேசிததன ததையுந்தஙகள இராசாககளின பிரேதஙகளையும நமககுததூரபபடுததககடவார்கள, அபபோது நா மெனறெனறைககும அவர்களநடுவே வாசமாயி ருபபோம.

௰. மனுப்புத்திரனே, இஸ்ரவேல் வீட்டார் * தங்கள் அக்கிரமங்களின் நிமித்தியம் நாணும்படிக்கு, நீ அவர்களுக்கு இந்த வீட்டைக் காண்பி, அதின் மாதிரியை அளக்கக்கடவார்கள்.

* ௰௬: ௬௧. ௬௩. ௩௬: ௩௨.

௰௧. அவர்கள் செய்ததெல்லாத்தின் நிமித்தியமும் நாணிக்கொண்டிருந்தால், அப்போ இந்த வீட்டின் உருபத்தையும் அதின் நிலையையும் அதின் வாசல்படிகளையும் அதின் உள் நடைகளையும் அதினுடைய எல்லா ரூபங்களையும் அதினுடைய எல்லாக் கட்டுகளையும் அதினுடைய எல்லா விதங்களையும் அதினுடைய எல்லா நியாயங்களையும் அவர்களுக்குத் தெரியப்படுத்தி, அவர்கள் அதினுடைய எல்லா விதங்களையும் அதினுடைய எல்லாக் கட்டுகளையுங் கைக்கொண்டு அதுகளின்படி செய்யும்படிக்கு அதையவர்கள் கண்களுக்கு முன்பாக எழுதிவை. * ௪௪: அதி. ௫.

௰௨. வீட்டினுடைய நியாயமாவது: பருவதத்தின் சிகரத்திலே அதின் எல்லையெல்லாஞ் சுற்றிலும் பரிசுத்தத்துக்குப் பரிசுத்தமாயிருக்கும், இதோ, இது வீட்டினுடைய நியாயம்.

## தகனப்பலிப்பீடத்தினுடைய அளவுகளுங் கட்டளைகளும்.

௰௩. முழங்களின்படி அளக்கும் பலிபீடத்தின் அளவுகளாவது: ஒவ்வொரு முழத்தை முழத்திலும் நாலுவிரற்கடை நீளமாயிருக்கிறதாகப் பார்த்தால், சுற்றுதாரம் ஒருமுழ உயரமும் ஒருமுழ அகலமும் அதினுடைய ஓரத்தில் சுற்றும், அதின் எல்லையொருசாணுமாயிருக்கும். இது பலிபீடத்தைச் சுமக்கும்.

௰௪. தரையிலிருக்கிற ஆதாரத்தைத் துவக்கிக் கீழ்நிலைமட்டும் இரண்டுமுழமும், அகலம் ஒருமுழமும், சின்ன நிலைத் துவக்கிப் பெரிய நிலைமட்டும் நாலுமுழமும், அகலம் ஒருமுழமுமாயிருக்கும்.

௰௫. தேவபீடத்தின் சிகரம் நாலுமுழ உயரமாயிருப்பது, தேவபீடத்தின் சிகரத்துக்குயர நாலுகொம்புமிருக்கும்.

௰௬. தேவபீடத்தின் சிகரம் பனிரண்டுமுழ நீளமும், பனிரண்டுமுழ அகலமுமாய்த் தன்னுடைய நாலுபக்கங்களிலும் நாற்சதுரமாயிருக்கும்.

௰௭. அதின் நாலுபக்கங்களிலுள்ள சட்டம் நீளம் பதினாலுமுழமும், அகலம் பதினாலுமுழமும் அதைச் சுற்றிலுமிருக்கிற எல்லை அரைமுழமும், அதுக்காதாரமானது சுற்றிலும் ஒருமுழமுமாயிருக்கும், அதின் படிகள் கிழக்குக்கெதிராயிருப்பதென்றார்.

௰௮. அவரென்னோடே சொன்னதாவது: மனுப்புத்திரனே, கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறதேதென்றால், பலிபீடத்தைப் பண்ணின நாளிலே அதின் மேல் தகனப்பலி யிடுகிறதுக்கும் அதின் மேல் இரத்தந் தெளிக்கிறதுக்குமான அதினுடைய கட்டளைகளாவது:

௰௯. நமக்காராதனை செய்கிறதுக்கு நம்மண்டை சேருகிற * சாதோக்கின் வித்தான லேவிகோத்திரத்தாராகிய ஆசாரியர்களுக்கு நீ பாவம்போக்கும் பலியாக ஒருகாளைக் கன்றைக் கொடுப்பாயாகவென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார். * ௪௰: அதி. ௪௬.

௨௰. இதின் இரத்தத்தில் அள்ளி, அதினுடைய நாலு கொம்புகளிலும், சட்டத்தின் நாலு கோடிகளிலும், சுற்றியிருக்கிற எல்லையிலும் பூசி, அதைப் பாவமறத்தாக்கி,

௨௧. பிறபாடு * பாவம்போக்குதலின் காளைக்கன்றையெடுத்து, அதை வீட்டிலேயதுக்குக் குறிக்கப்பட்ட பரிசுத்தஸ்தலத்துக்குப் புறம்பான இடத்திலே சுட்டெரிக்கட்டும்.

* ௩. மோசே. ௰௬: ௨௭.

௨௨. இரண்டாம் நாளிலே ஊனமில்லாத ஒருவெள்ளாட்டுக்கடாயைப் பாவம்போக்குதலுக்காகப் பலியிடுவாயாக. அதினாலே பலிபீடத்தைக் காளைக்கன்றினாலே செய்ததுபோலே, பாவமறத்தாக்கக்கடவார்கள்.

௨௩. நீ பாவம்போக்குதலை முடித்துத் தீர்ந்த பிறபாடு, ஊனமில்லாத ஒருகாளைக் கன்றையும் ஊனமில்லாத ஒருஆட்டுக்கடாயையும் பலியிடுவாயாக.

௨௪. அதுகளைக் கர்த்தருக்கு முன்பாகப் பலியிடுவாயாக, ஆசாரியர்கள் அதுகளுக்கு உப்புப்போட்டு, அதுகளைக் கர்த்தருக்குத் தகனப்பலியிடக்கடவார்கள்.

௨௫. ஏழுநாளாய்த் தினம் பாவம்போக்குதலுக்காக ஒருவெள்ளாட்டுக்கடாயைப் படைப்பாயாக, ஊனமில்லாததுகளான காளைக்கன்றையும் ஆட்டுக்கடாயையும் படைப்பார்களாக.

௨௬. ஏழுநாள் பலிபீடத்தைப் பாவமறத்தாக்கி, அதைச் சுத்திகரித்து, அதின் கைகளை நிரப்பிவைக்கக்கடவார்கள்.

தக,

